# தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம்

தொகுதி மூன்று (ஞ - ப)

# Biographical Dictionary of Tamil Men of Letters

ஆசிரியர்கள்

டாக்டர் வெ. பழநியப்பன்

உ. பழநி




அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

1989

வைரவிழா ஆண்டு

# தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம்

தொகுதி மூன்று (ஞ - ப)

(Biographical Dictionary of Tamil Men of Letters)



வைரவிழா வெளியீடு
1929 - 1989

ஆசிரியர்கள்:

டாக்டர் வெ. பழநியப்பன்
உ. பழநி




அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
1989

# முன்னுரை

தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியத்தின் மூன்றாம் தொகுதியான இவ்வெளியீடு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் சாதனைகளுள் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். ''களஞ்சியம்'' என்ற பெயரில் பல்வேறு பொருள்கள் தொகுக்கப்பட்டு வருகின்றன. மேலை நாடுகளில் பெரிதும் வளர்ந்து வரும் இக்கலை இப் பொழுது நம் பாரதத்திலும் தமிழ் நாட்டிலும் வேக மாக வளர்ந்து வருகிறது. தேசிய மொழிகளில் முதன் முதலில் கலைக் களஞ்சியம் வெளியிட்ட பெருமை தமிழ் நாட்டைச் சேர்ந்தது.

அவ்வகையில் தமிழகத்தில் வாழ்ந்த ஆயிரக்கணக் கான புலவர்களின் வரலாறுகளில் சில புலவர்களின் வாழ்க்கையை மட்டும் பல்வேறு பதிப்பகத்தார்களும் நிறுவனங்களும் கதை போலவும் வரலாற்றினைப் போல வும் வெளியிட்டுள்ளனர். ஆராய்ச்சிகளைச் செம்மை யாகவும் செம்பதிப்பாகவும் கொண்டு வருவதில் அக்கறை கொண்ட அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தமிழகத் தில் வாழ்ந்த புலவர்களில் 1970-க்கு முன் வாழ்ந்த புலவர்களின் வரலாற்றினை ஆறாயிரமாகக் கணக்கிட்டு அவர்தம் வரலாற்றினை வாழ்ந்த நூற்றாண்டு, வேறு பெயர்கள், தந்தை, தாய், எழுதிய நூல்கள் என்ற பாகு பாட்டில் வகுத்துக் கொண்டு தொகுத்து வந்தனர். இவ்வகையில் முகிழ்த்ததே இம் மூன்றாவது வரலாற்றுக் களஞ்சியம். டாக்டர் வ. சுப. மாணிக்கம் தமிழ்த்துறை யின் தலைமைப் பொறுப்பேற்றகாலை இப்பணிக்குப் புத்துயிர் அளிக்கப்பெற்று இதன் முதல் தொகுதி (அ–ஔ) அச்சிட்டு வெளியிடப்பட்டது. இக் களஞ்சியத் தின் இரண்டாவது தொகுதியினைப் பல்கலைக்கழகம்

கொண்டு வந்ததுடன் இம் மூன்றாம் தொகுதியும் சிறப்புடன் வெளிவரத் துணை நின்றுள்ளது. இக் களஞ்சியத்தின் இறுதித் தொகுதியாகிய நான்காம் தொகுதியும் விரைவில் வெளிவர இருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

குடத்தில் இட்ட விளக்குபோல அடக்கத்துடன் தொண்டாற்றிய தமிழ்ப் பெருமக்கள் ஆயிரம், ஆயிரம் பேர் உள்ளனர். இவர்களின் தமிழ்ப் பணியினையும் நாட்டு மக்கள் நன்கு அறிந்து போற்ற இது போன்ற வரலாற்றுக் களஞ்சியங்கள் பெருந்துணை புரியும் என்பதில் ஐயமில்லை.

சங்கப் புலவர்கள், காப்பியப் புலவர்கள், பதினெண் கீழ்க்கணக்கு யாத்த புலவர்கள், பிரபந்தம் பாடிய புலவர்கள் என்ற இத்தகைய புலவர்களின் பெயர்களையும் அவர்தம் சிறப்புக்களையுமே அறிந்து வந்த சிலர், தமிழுக்குத் தொண்டு செய்த புலவர்களின் பேரெண்ணிக்கையை இந்நூற்களில் பார்க்கும் பொழுதும் படிக்கும் பொழுதும் வியந்தும் மலைத்தும் போவார்கள். தமிழுக்குத் தொண்டு செய்வோர் சாவதில்லை என்ற வாசகத்தை மெய்மைப்படுத்திக்காட்டி, பல்கலைக்கழகத்தின் வைரவிழா ஆண்டில் வெளிவரும் இவ்வரலாற்றுக் களஞ்சியத்தினை வெளிக் கொணர்ந்த தமிழ்த்துறை ஆசிரியர்களையும், பல்கலைக்கழக நூல் வெளியீட்டுத் துறையையும் பாராட்டி மகிழ்கின்றேன்.

தமிழ் கூறும் நல்லுலகம் இந்நற்றொண்டினை வரவேற்றுப் போற்றும் என்பதில் ஐயமில்லை.

அண்ணாமலைநகர்
1—11—1989

**ராம. சேதுநாராயணன்,**
துணை வேந்தர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

# பதிப்புரை

ஈராயிரம் ஆண்டுத் தமிழ்ப் புலவர்களின் வரலாற்றை ஓரிடத்தில் தொகுத்தும் வகுத்தும் பார்க்கும் வரலாறும், படிக்கும் வரலாறும் சுவையானதும் பயன் உடையதும் ஆகும். தமிழ் வரலாற்றில் தேக்கமாகவும் ஏக்கமாகவும் இருந்த புலவர் வரலாறுகளை நுணுகி ஆய்ந்து வெளியிட்டு இருப்பது தமிழ்மொழி வரலாற்றில் என்றும் நிலைக்கத்தக்கதும் நினைக்கத்தக்கதும் ஆகும். பல்கலைக்கழக மானியக்குழு நிதி உதவி அளிக்க முன் வந்ததால் பிறந்ததே இத் தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியமாகும்.

தமிழ்த்துறை ஆசிரியப் பெருமக்கள் அனைவரும் தம் கடின உழைப்பால் 1058 அரும்பெரும் புலவர்களின் வரலாறுகளை (அ-ஔ) எழுதிட அது முதல் தொகுதி யாக வெளிவந்துள்ளது. இரண்டாம் தொகுதியில் 1857 அருந்தமிழ்ப் புலவர்களின் (க-கௌ) வரலாறுகள் இடம் பெற்றுள்ளன. இப்பொழுது வெளிவரும் இம் மூன்றாம் தொகுதியில் 1223 புலவர் பெருமக்களின் (ஞ-பௌ) வரலாறுகள் இடம் பெற்றுள்ளன. எனவே இம்மூன்று தொகுதிகளிலும் தமிழ் நலமும் வளமும் பேணிய 4138 அரும்பெரும் புலவர்களின் வரலாறுகள் தமிழ் கூறும் நல்லுலகம் ஒருசேர அறியத் தரப் பட்டுள்ளன. 1970 ஆம் ஆண்டிற்கு முன் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களின் வரலாறுகளைத் தொகுக்க வேண்டும் என்ற அடிப்படைக் குறிக்கோளுடன் தொடங்கப்பட்ட இத்திட்டத்தில் எஞ்சியுள்ள இறுதித் தொகுதியில் ஏறத்தாழ 1200 புலவர்கள் வரலாறு இடம் பெறவுள்ளது. இத் தொகுதியும் விரைவில் அச்சிட்டு வெளிவரும் நிலையில் உள்ளது.

இப்புலவர் வரலாற்றுக் களஞ்சியத்தின் சிறப்பு என்ன என்று எண்ணுவது இயற்கையே. தமிழ்த் தொண்டு செய்ததால் காலம் கடந்து வாழும் புலவரேறு களின் பாடுபுகழ் மிக்க வரலாறுகள் ஓரிடத்தில் பதிவு செய்யப்பட்டு விட்டன. மேலும் புலவர்கள் என்றால் சங்ககாலப் புலவர்கள், காப்பியப் புலவர்கள், சிற்றிலக் கியப் புலவர்கள் என்றே எண்ணி வந்த பலருக்கு இத் தொகுதியைக் கற்றுணரும்போது எண்ணிலடங்காப் புலவர்கள் தமிழ்த்தொண்டுகளைப் பயன் கருதாது செய்துள்ளனர் என்ற செய்தி மலைக்கத்தக்கது மட்டு மல்ல நாமும் உழைக்கவேண்டும், தமிழுக்குப் பெருமை சேர்க்கவேண்டும் என்ற வேட்கை மனதில் தோன்ற வழிசெய்யும் என்பதில் ஐயமில்லை. ஒரு நூல் எழுதி யிருந்தாலும், ஓராயிரம் பாட்டுக்கள் எழுதியிருந்தாலும் ஒரு நூலுக்குச் சிறப்புப் பாயிரம் மட்டும் எழுதியிருந் தாலும் அவர்கள் புலவர்களாகப் போற்றப்பட்டு இக் களஞ்சியத்தில் இடம்பெறுகின்றனர்.

நாட்டிற்காகவும் இனத்திற்காகவும் தொண்டுகள் செய்த அரசியல்வாதிகள் என்று நாம் கருதக்கூடிய சத்யமூர்த்தி, ஆர். கே. சண்முகம் செட்டியார், டி. ஏ. சொக்கலிங்கம், வ. உ. சிதம்பரனார் முதலியோர் நற்றமிழ்த் தொண்டாற்றியுள்ளனர் என்றச் செய்தியினை இக்களஞ்சியங்களைப் படிப்போர் உணர்வர். அதுபோல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவர்களாகவும் தமிழாசிரியர்களாகவும் பணி யாற்றிய டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார், டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார், சதாசிவ பண்டாரத்தார், சர்க்கரைப் புலவர் முதலியோர் வரலாறுகளை அறியவும், இவர்களையே அன்றி நாடக ஆசிரியர்கள் கல்வெட்டுக்களால் அறியப்படும் புலவர் கள் மற்றும் தமிழ்த்தொண்டு ஆற்றிய அனைவரின் வரலாறுகளுடன், ஈழத்தமிழ்ப் புலவர்களின் வரலாறு களையும் இத் தொகுதிகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

இவ்வாறு பல்வேறு சிறப்புக்களைப்பெற்ற இக் களஞ்சியங்களை ஊன்றிப் படிப்போருக்குத் தமிழுக்குத் தொண்டு செய்வோர் வாழ்வர் என்ற உண்மை உணர்த்தப்படுகிறது.

இத்தகைய நல்ல தமிழாக்கப் பணிகள் உருவாவ தற்குத் தோன்றாத் துணையாக இருந்து வரும் மாண்பமை இணைவேந்தர் புரவலர் டாக்டர் எம்.ஏ.எம். இராமசாமி அவர்களுக்கும், இத்தகைய பல நல்ல தமிழாக்கப் பணிகள் வெளிவரப் பல்லாற்றானும் உதவிவரும் துணைவேந்தர் பேராசிரியர் ராம. சேதுநாராயணன் அவர்களுக்கும், வெளியீட்டுக் குழுவினருக்கும் நெஞ்சார்ந்த நன்றி சொல்லக் கடமைப் பட்டுள்ளேன். இவர்கள்தம் பேராதரவால் நான்காம் தொகுதியும் விரைவில் வெளிவரும் என்று நம்பு கின்றேன்.

களஞ்சியப் பணியைக் கண் போல் கருதிக் கருத்து டன் எழுதி முடித்த, தமிழியல்துறை இணைப் பேராசிரியர் டாக்டர் வெ. பழநியப்பன் அவர்களும், இத்துறையைச் சார்ந்த முன்னாள் ஆசிரியர் திரு. உ. பழநி அவர்களும் பெரிதும் பாராட்டுக்குரியவர்கள். இக்களஞ்சியத்தினை வனப்புடன் அச்சிட்ட இலக்குமி அச்சகத்தாரும் வாழ்த்துக்குரியவராவர்.

டாக்டர். **ஆறு. அழகப்பன்,**
தமிழியல் துறைத் தலைவர்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

அண்ணாமலைநகர்
1—11—1989

# தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம்

தொகுதி - 3

## ஞானக்கூத்த சிவப்பிரகாச தேசிகர் (17 - நூ)

**வாழ்விடம்:** சிவன்பாக்கம்.

இவர் சைவத்துறவி; துறையூர் சிவப்பிரகாச தேசிகர் ஆதினத்தில் இரண்டாவது பட்டம் பெற்றவரென்பர். இலக்கண இலக்கியங்களில் தேர்ச்சி பெற்றவர்.

**நூல்:** விருத்தாசலப் புராணம்; திருவிடைமருதூர்ப் புராணம்.

**விருத்தாசலப்புராணம்:** விருத்தாசலம் என்னும் பழமலையின் பெருமையை விளக்குவது; 435 செய்யுட்கள் உள்ளன.

## ஞானக் கூத்தர் (16 - நூ)

**ஊர்:** தொண்டைநாட்டில் வெண்பாக்கம்; வீரசைவர்.

இவர் நிரம்பவழகிய தேசிகரின் மாணவர்களுள் ஒருவர்.

**நூல்:** திருவையாற்றுப் புராணம், செப்பேசர் புராணம்.

**திருவையாற்றுப்புராணம்:** இந்நூல் பஞ்சநதிப்புராணம் எனவும் அழைக்கப்பெறும். இந்நூல் ஐயாற்றுப் புராணத்தின் வேறுயது. பாயிரம் தவிர 12 விருத்தங்களைக் கொண்டது. பாயிரம் உட்பட 437 திருவிருத்தங்கள்.

## ஞான சம்பந்த உபாத்தியாயர் (20 - நூ)

**பிறப்பிடம்:** ஈழ நாட்டில் சுழிபுரம்; **வாழ்விடம்:** திருநெல்வேலி;

**தந்தை:** செல்வநாயகச் செட்டியார்; சைவர்.

இவர் ஆறுமுகநாவலரின் மாணவர்; கந்தபுராணம், பெரிய புராணம் முதலிய நூல்களை நன்கு கற்றுப் பலருக்குப் பாடஞ் சொல்லி வந்தார்; சொற்பொழிவாற்றுவதிலும் கவிபாடுவதிலும் வல்லவர்.

**நூல்:** மாணிக்கப் பிள்ளையார் திருவருட்பா, கதிர்காம வேலர் திருவருட்பா, தனிப்பாடல்கள்.

## ஞானசம்பந்த சாமிகள் ( )

**நூல்:** சிவபோகசாரம், சொக்கநாத வெண்பா.

## ஞானசம்பந்தப் பிள்ளை (20 - நூ)

**வாழ்விடம்:** ஈழநாட்டில் நல்லூர்; வேளாளர்.

இவர் நாவலர், பொன்னம்பலம்பிள்ளை ஆகியோரின் மாணவர். இலக்கியம், இலக்கணம், தருக்கநூல் மற்றும் சித்தாந்த சாத்திரம் கற்றவர். தர்க்க சாத்திர ஆராய்ச்சி மற்றும் தர்க்க வாதம் செய்வதில் மிக்க விருப்பமுடையவர். கும்பகோணம், சிதம்பரம் ஆகிய நகரங்களில் பல நாட்கள் தங்கிப் பலருக்குப் பாடஞ் சொல்லியுள்ளார்.

**நூல்:** தர்க்காமிர்தம் (மொழியாக்கம்), அரிகர தாரதம்மியம், வேதாகமவாத தீபிகை, நாராயண பரத்துவ நிரசனம்.

## ஞானசம்பந்தம் பிள்ளை ( )

**நூல்:** பேரூர்ப்புராணச் சுருக்க வசனம்.

## ஞான சிகாமணிப் பிள்ளை (19 - நூ)

**ஊர்:** தஞ்சாவூர்.

**நூல்:** இரு சமய சம்பந்தம்.

## ஞானசித்த சாமிகள் (19 - நூ)

**வாழ்விடம்:** திருக்குருகூர்.

**நூல்:** சாத்திரக்கோவை, சேத்திரக்கோவை, பட்டீச்சுரப் பதிகம், அகஸ்திய ரகவல், இரத்தினகிரி பதிகம், கடம்பன் துறைப் பதிகம், காயநின் மலேசுரர் பதிகம், கூவம் கீழ்ச்சேரி சாமளவல்லி பதிகம், சடாதர விளக்க மென்னும் திருமந்திரம் இருநூறு, தபோதனம், திரு வரங்கத்துத் திருமாலை, திருவீங்கோய்மலைப் பதிகங்கள், திருவொற்றியூர் திருவிற்கோலம், திருவாலங்காட்டுத் திருப்பதிகம், புவனும்பிகை கலைஞான தீபம், கன்னியா குமரிப் பகவதி அந்தாதி.

**சாத்திரக்கோவை:** இந்நூலில் அத்துவிதாந்தம், ஞான பாஸ்கர உதயம், கலைஞானதீபம், இரத்தினச் சுருக்கம், சடாதர விளக்கம் என்பன அடங்கி உள்ளன.

## ஞானசித்த மூர்த்தி சாமிகள் (20 – நூ)

**நூல்:** செங்கழுநீர் விநாயகர் பதிகம் (1906) திருச்சிராப் பள்ளி பதிகங்கள், திருவெண்காட்டடிகள் பதிகம் (1906).

## ஞானசிவ தேசிகர் (20 - நூ)

**பிறப்பிடம்:** கொடுமுடி என்று வழங்கும் திருபாண்டிக் கொடுமுடி.

இவர் கச்சியப்ப முனிவருடைய வழிமுறையினர்

**நூல்:** 'மும்மணிக்கோவை', 'இரட்டை மணிமாலை'

இந்நூல்கள் கொடுமுடியில் எழுந்தருளியுள்ள இறைவன் மீது பாடப் பெற்றவை.

## ஞான சுந்தர ஐயர் (      )

**வாழ்விடம்:** காயாறு.

**நூல்:** ஆளுடைய நம்பி கலி விண்ணப்பம்; ஆளுடைய பிள்ளையார் இரட்டை மணிமாலை; ஆளுடைய பிள்ளையார் தசகமாலை; சால்பு முல்லைத் தொடை; மயிலாசலம் சிவஞான சுவாமிகள் மும்மணிக்கோவை.

## ஞான சுப்பிரமணியக் குருக்கள் (20 - நூ)

**பிறப்பிடம்:** ஈழ நாட்டில் வட்டுக் கோட்டை;

**தந்தை:** சிவசுப்பிரமணிய சிவாச்சாரியார்.

**நூல்:** தம் தந்தையார் சிவசுப்பிரமணிய சிவாச்சாரியார் இயற்றிய ஏகாதசிப் புராணம், கந்த சஷ்டிப் புராணம், திருத்தென்கோயிற் புராணம் முதலிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## ஞான தேசிகப் பிள்ளை (19 - நூ)

**ஊர்:** பாண்டிநாடு, திருநெல்வேலி.

இவர் திருநெல்வேலித் தாலுகா மேல நத்தம் என்னும் சிற்றூரில் கணக்கராகப் பணிபுரிந்திருந்தார். இலக்கிய இலக்கணப் புலமை பெற்றிருந்த இவர் நால்வகைப் பாக்களை யும் பாடும் திறம் பெற்றிருந்தார்.

**நூல்:** திருநெல்வேலி சிந்து பூந்துறை தாம்பிரவர்ணி பாலப் புகழ்ச்சி.

சிந்து பூந்துறையில் பர்க்கிள் துறை என்பார் பாலங்கட்டி முடித்தமை குறித்துப் பாடப்பெறும் புகழ்ச்சிப் பாமாலை.

## ஞான தேசிகம் பிள்ளை, இரா. (20 - நூ)

**பிறப்பிடம்:** மதுரை மாவட்டம் பெரியகுளம் பகுதி உப்பார் பட்டி.

**தந்தை:** இராமலிங்கம் பிள்ளை; வேளாளர்.

**வாழ்ந்த காலம்:** கி. பி. 1894 - 1957.

இவர் தம் இல்லத்திலேயே புலவர் பெருமக்களைக் கொண்டு கல்விகற்ருர்; திருமலைவேற் கவிராயர் என்பவர் பால் இலக்கண நூல்களைக் கற்ருர். திருமலைவேற் கவி ராயரின் புதல்வராகிய சங்குப் புலவரின் நட்பும் இவருக்குக் கிடைத்தது.

இவர் இல்வாழ்வில் இரு தாரங் கொண்டார். தம் முடைய சொந்த ஊரில் பெருஞ் செல்வாக்குடன் விளங் கிஞர். திருமால் கோயில் திருப்பணி ஒன்றினையும் செய்து முடித்தார்.

**நூல்:** திருப்பணிமாலை, கதிர்வேலன் காதற்பாமாலை.

## ஞான தேசிகன் (      )

**வாழ்விடம்:** திருவாரூர்.

**நூல்:** தந்திவன புராணம்.

இந்நூல் திருவானைக்காவின் சிறப்பைக் கூறுவது. திரு வானைக்கா புராணம் என்னும் பெயரில் கச்சியப்ப சுவாமிகள் ஒரு புராணம் இயற்றியுள்ளார். தந்திவன புராணம் அதனினின்றும் வேருனது. திருவானைக்காவிற்குத் தந்திவனம் என்பது மற்ருெரு பெயர்.

## ஞானப்பிரகாச சாமிகள் (20 - நூ)

**வே பெ.:** வைத்திலிங்கம்

**ஊர்:** யாழ்ப்பாணத்திலுள்ள மானிப்பாய்.

**தந்தை:** இராசசிங்கம் சுவாமிநாதபிள்ளை; **தாய்:** தங்கமுத்து அம்மையார்.

**வாழ்ந்த காலம்:** 30-8-1875 — 1947.

இவருக்குத் தந்தையாரிட்ட பெயர் வைத்திலிங்கம். இவர் கிறித்துவராகி ஞானப்பிரகாசரானூர். இவர் கல்லூரிப் படிப்பை முடித்து புகைவண்டி நிலையத் தலைவராகப் பணி புரிந்தார். பிறகு மதபோதகராகப் பயிற்சி பெற்று 1901-ல் கிறித்துவசமய குருவானூர். நல்லூர் முதலிய இடங்களில் அரிய சேவை செய்தார். மானிப்பாயில் ஒரு கோயில் கட்டினூர். இவர் தமிழ்நாட்டில் பல இடங்களுக்கும் சென்று தமிழின் சொல்லமைப்பைப் பற்றிப் பல சொற்பொழிவுகள் ஆற்றினூர்.

**நூல்:** தமிழ்ச் சொற்பிறப்பு ஒப்பியல் அகராதி, தமிழின் பூர்வ சரித்திரமும் சமயமும், யாழ்ப்பாணச் சரித்திர ஆராய்ச்சி, தமிழ் அமைப்புற்ற வரலாறு, தருக்கம், துறவி ஞானம், கிறிஸ்து நாதர் சரித்திர ஆராய்ச்சி, கத்தோலிக்கத் திருச்சபையும் அதன் போதகங்களும், தேவ ஆராதனை முறை, ஆண்டவர் சரித்திரம், யாழ்ப்பாண அரசர், பண்டைய இந்திய சரிதையும் ஆண்டு வரிசையும், தமிழரின் சாதி உற்பத்தி பல கட்டுரைகள், குடும்ப வாசகம்.

**தமிழ்ச் சொற்பிறப்பு ஒப்பியல் அகராதி:** இந்த அகராதியில் மேல்நாட்டு மொழிகளிலும் வடமொழியிலுஞ் சென்று உருத்தெரியாமல் வழங்கும் தமிழ்ச் சொற்களும் அவற்றின் மூலங்களும் ஆராயப் பெற்றுள்ளன.

**கட்டுரைகள்:** இவருடைய கட்டுரைகள் லோகோபகாரி, சத்திய நேசன், ஈழகேசரி, சத்திய வேதபாதுகாவலன், சர்வவியாபி ஆகிய தமிழிதழ்களில் வெளிவந்தன. யாழ்ப்பாண அரசர், பண்டைய இந்திய சரிதையும் ஆண்டுவரிசையும், தமிழரின் சாதி உற்பத்தி இம்மூன்று நூல்களும் ஆங்கிலத்தில் எழுதப்பட்டவை.

**குடும்ப வாசகம்:** இது சமய வளர்ச்சி கருதி நடத்தப்பட்ட இதழ்.

## ஞானப்பிர்காச சுவாமிகள், தே. மரி ( )

**நூல்:** *தாவிதுராசாவின் நூற்றைம்பது சங்கீதங்கள் (1882). இந்நூல் ஒரு மொழிபெயர்ப்பு நூல்; உரைநடையில் அமைந்தது. சங்கீதங்கள் அவதாரிகைக் குறிப்புடன் தெளிவாக அமைக்கப் பெற்றுள்ளன.*

## ஞானப்பிரகாச தேசிகர் - 1 ( )

**நூல்:** *சங்கற்ப நிராகரணம் - உரை*

*இந்நூல் மாயாவாதம், ஐக்கியவாதம், பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சங்கிராந்த வாதம், ஈசுவர அவிகார வாதம், நிமித்த காரண பரிணும வாதம், சைவ வாதம் என்னும் ஒன்பதையும் மறுப்பது. இந்நூலுக்கு ஞானப்பிரகாச தேசிகர் எழுதிய உரை அரிய உரையாகும்.*

## ஞானப்பிரகாச தேசிகர் (17 – நூ. பிற்.)

**ஊர்:** *யாழ்ப்பாணத்திலுள்ள திருநெல்வேலி.*

*இவர் போர்த்துகீசரின் சமய நெருக்குதலால் இளமையில் தென்னிந்தியா சென்று பல அறிஞர்களிடம் தமிழ் இலக்கண இலக்கியம் கற்ருர். வடமொழி ஆகமங்களைப் படித்தறியும் பொருட்டுக் கௌடநாடு சென்ருர்; அங்கு வடமொழி பயின்ருர். இவர் திருவண்ணுமலை சைவமடத் தம்பிரானுக இருந்து பல நூல்கள் எழுதினுர். சிதம்பரத்தில் இவர் வெட்டுவித்த குளம் இவர் பெயரால் இன்றும் வழங்குகிறது.*

**நூல்:** *சிவஞான சுபக்கத்திற்கு உரை, சிவஞான போத விருத்தி, சித்தாந்த சிகாமணி, பிரமாண தீபிகா விருத்தி, சிவயோக ரத்நம், சிவயோகசாரம், பிரசாத தீபிகை, அக்ஞான விவேசனம், சிவ சமாதி மகான்மிய சங்கிரகம் – இந்நூல்கள் வடமொழியில் எழுதப்பட்டுள்ளன.*

## ஞானப் பிரகாச நாதசாமி (    )

**வாழ்விடம்**: இராயபுரம்.

**நூல்:** 'மரியாயி வல்லபம் என்னும் கிருபை தயாப மந்திரத்தின் வியாக்கியானம்' (1876).

இந்நூல் ஒரு மொழி பெயர்ப்பு நூல்; உரைநடையில் அமைந்தது; பத்து அதிகாரங்களாகப் பாகுபாடு செய்யப் பெற்றுள்ளது.

## ஞானப்பிரகாச பட்டாரகர் (    )

**வாழ்விடம்:** திருவாரூர்; சைவ வேளாளர்.

**நூல்:** புட்ப விதி.

இந்நூலில் 57 செய்யுட்கள் உள்ளன; மலர்களின் வகை, தன்மை, அவற்றின் பயன் ஆகியவற்றை எடுத்துரைப்பது.

## ஞானப்பிரகாசம் பிள்ளை (19 - நூ)

இவர் மாயூரம் வேதநாயகம் பிள்ளையின் தம்பி. மாயூரம் முன்சீபு நீதிமன்றத்திலும், தரங்கம்பாடி முன்சீபு நீதி மன்றத்திலும் எழுத்தராகப் பணிபுரிந்தார். பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடம் தமிழ் நூல்களைப் பாடங் கேட்டார்.

**நூல்:** வேதநாயக விற்பன்னர் சரித்திரம், நீதிநூல் - உரை.

**வேதநாயக விற்பன்னர் சரித்திரம்:**

இந்நூலில் வேதநாயகம் பிள்ளை வரலாறும், அவராலும் அவர்மீது பல புலவர்களாலும் இயற்றப்பெற்ற பல பாடல் களும் இதில் அடங்கியுள்ளன. 5 அதிகாரங்களாக இந்நூல் பாகுபாடு செய்யப் பெற்றுள்ளது.

**நீதிநூல் - உரை:**

நீதிநூல் வேதநாயகம் பிள்ளையால் இயற்றப் பெற்றது. இந்நூலுக்கு ஞானப்பிரகாசம் பிள்ளை 1885-ஆம் ஆண்டில் உரை எழுதினார். இவ்வுரை 1892-ஆம் ஆண்டில் மூலமும் உரையுமாக அச்சிடப் பெற்றுள்ளது.

## ஞானப் பிரகாசம் பிள்ளை எம். ஜே. (19 - நூ)

**நூல்:** நூதன அர்ச். இஸ்தாக்கியார் நாடகம்.

## ஞானப் பிரகாச முதலியார் ( )

**நூல்:** வானவன் விடுதூது.

## ஞானப் பிரகாச முனிவர் ( )

**நூல்:** 'செங்குந்தர் பிள்ளைத் தமிழ்', சிவஞான சித்தியார் - உரை.

'செங்குந்தர் பிள்ளைத்தமிழ்' காப்புப் பருவம் முதலாகச் சிறு தேர்ப்பருவம் ஈறாகப் பத்துப் பருவங்களைக் கொண்டது, வீரவாகு தேவர் முதலிய ஒன்பதின்மர், சுப்பிரமணியக் கடவுள் ஆகியோர் மரபில் வந்தவர்கள் செங்குந்தர் என்ற செய்தி இந்நூலில் கூறப்பட்டுள்ளது.

## ஞானப் பிரகாசர் - 1 (15 - நூ)

**வே. பெ:** ஞானப்பிரகாச முனிவர், ஞானப்பிரகாச பண்டாரம்.

**வாழ்விடம்:** களந்தை.

மெய்கண்டார் காலத்திற்குப் பின்னர் ஞானப்பிரகாசர் என்ற பெயரில் சைவத்துறவிகள் பலர் வாழ்ந்தனர். இவர்களுள் ஞானப் பிரகாச பண்டாரமும் ஒருவராவர். தத்துவ விளக்கம் செய்த சம்பந்த சரணாலயரிடத்தில் இளமையில்

கல்வி கற்றவர். இவருடைய ஞாஞசிரியர் சத்தியஞானர். இவருடைய மாணுக்கர் களந்தை - மறைஞான பண்டாரம் என்பவராவர்.

**நூல்:** சந்தான அகவல், தசகாரியம், சகலாகம சாரம், அளவை, அட்டாங்க யோகக் குறள்.

**சந்தான அகவல்:** மெய்கண்ட சித்தாந்த சாத்திரங்கள் வந்த சந்தான வரலாற்றை அகவற்பாவால் கூறுவது.

**தசகாரியம்:** தசகாரியம் என்ற பெயரில் பல நூல்கள் உள்ளன. இந் நூல்களுள் இதுவே அளவால் மிகவும் பெரியது; 302 செய்யுட்கள் உள்ளன. உண்மைநெறி விளக்கம் என்ற நூலினை யடுத்த பழமையான நூல். இந் நூலில் தேசகால பாத்திர இலக்கணம், சற்குரு இலக்கணம், அசற்குரு இலக்கணம், தீட்சை என்பனவற்றைக் கூறி யுள்ளார்.

**சகலாகம சாரம்:** இந்நூல் குறட்பாவால் ஆனது; சில மேற்கோள் பாடல்கள் மட்டுமே கிடைக்கின்றன; முழு நூலும் கிடைக்கவில்லை. 'சகலாகம சார சங்கிரகம்' என்ற வடமொழி நூலின்.மொழி பெயர்ப்பாக இந்நூல் இருக்கக் கூடும் என்ற கருத்தும் உண்டு.

**அளவை:** அளவை கூறுவதற்கென்றே எழுந்த தனி நூல் களுள் அளவை விளக்கமும் ஒன்ருகும். இந்நூல் இப்போது கிடைப்பதாகத் தெரியவில்லை. இந்நூலின் ஆசிரியர் பெயரை மறைஞான சம்பந்தர் குறிப்பிடவில்லை யெனினும், இதனைக் களந்தை ஞானப் பிரகாசர் செய்தாரென்று வெள்ளியம்பலவாணத் தம்பிரான் உரையால் அறிய முடிகின்றது.

**அட்டாங்க யோகக் குறள்:** இந்நூல், ஆசிரியர் பெயரின்றி 1923-ஆம் ஆண்டில் சேற்றூர் சுப்பிரமணியக் கவிராயரால் 'வருத்தமற உய்யும் வழி' என்ற நூலுடன் சேர்த்து மதுரைத் தமிழ்ச் சங்கச் செந்தமிழ் வெளியீடாக அச்சிடப் பெற்றுள்ளது; ஆசிரியர் பெயர் இல்லையெனினும், இப்

பொழுது இந்நூல் களந்தை ஞானப் பிரகாசரால் இயற்றப் பெற்றது என்று கருதப் பெறுகின்றது.

அட்டாங்க யோகம் என்பது எட்டு அங்கங்களை உடைய யோகமாகும். எட்டும் எட்டுப்படிகள் போல்வன. இந்நூல் 65 குறட்பாக்களை உடையது; பாயிரம் 6 பாடல். பின்னர் இயமம், நியமம், ஆசனம், பிராணா யாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்ற எட்டு உறுப்புகளையும் முறையே கூறுகிறது.

## ஞானப் பிரகாசர் - 2 (16 - நூ)

**ஊர்:** சேந்தை.

இவர் பிறப்பு வளர்ப்பு இளமை முதலியவை பற்றி ஒன்றுந் தெரியவில்லை. இவர் கமலை ஞானப் பிரகாசருடைய மாணவர்; ஞானங் கைவந்த பின்னர்த் திருவொற்றியூரில் வாழ்ந்த காரணத்தால் திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் எனப்பட்டார்.

**நூல்:** திருவொற்றியூர்ப் புராணம், சிவஞான சித்தியார் பரபக்கவுரை, சங்கற்ப நிராகரண உரை.

**திருவொற்றியூர்ப் புராணம்:**

இது திருவொற்றியூரில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானுடைய திருவிளையாட்டினைக் கூறுவது. இந்நூல் பாயிரம் உட்படப் பதினாறு சருக்கங்களையும் 568 திருவிருத்தங்களையும் உடையது. இத்தலத்தின் மகிமையை இவ்வாசிரியர் பதும புராணத்தும் பிரமாண்ட புராணத்தும் கண்டபடி தமிழிற் பாடியுள்ளார். இப்புராணம் தம் ஆசிரியரான கமலை ஞானப் பிரகாசரது கட்டளையை மேற்கொண்டு இயற்றப்பெற்றதாகும்.

**சிவஞான சித்தியார் பரபக்கவுரை:**

சிவஞான சித்தியார், பரபக்கம், சுபக்கம் என இருபிரிவுகளையுடையது. பரபக்கத்திற்கு இவர் உரை பொழிப்புரையாக

இருப்பினும் கருத்துக்களைச் செவ்வனே விளக்கிச் செல்கின்றது.

**சங்கற்ப நிராகரண உரை:**

இந்த உரையின்றேல் சங்கற்ப நிராகரணத்தை விளங்கிக் கொள்வது எளிதன்று.

## ஞானப் பிரகாசர் - 3 (16 - நூ)

**வே. பெ.** தத்துவப் பிரகாச ஞானப்பிரகாசர்.

**வாழ்விடம்:** காஞ்சி.

இவர் காஞ்சியிலுள்ள ஞானப்பிரகாசர் மடத்தின் தலைவராக இருந்தார் ஆதலின் கச்சி ஞானப்பிரகாசர் என்று அழைக்கப்படுவாராயினர். இவர் கல்வி கேள்விகளில் சிறந்தவர். சிதம்பர புராணம் இயற்றிய புராணத் திருமலைநாதர், அவர் மகனாகிய பரஞ் சோதியார் போன்ற பெரியோர்கள் இவரிடம் சைவ தீட்சை பெற்றவராவர். இவர் விசய நகரத்தை யாண்ட கிருஷ்ண தேவராயர் காலத்தில் விளங்கியவராதலின் பதினாறும் நூற்றாண்டினராவர்.

**நூல்:** கிருஷ்ண தேவராயர் மேல் மஞ்சரிப்பா, ஏகம்பர நாதர் மீது கலம்பகம்.

**கிருஷ்ண தேவராயர் மேல் மஞ்சரிப்பா;**

இது புறத்திணையும் அகத்திணையும் விரவிவந்த செய்யுட்களைக் கொண்டது. இந்நூல் இப்போது கிடைக்கவில்லை.

இந்த இரு நூல்களையும் பாடியதற்காகக் கிருஷ்ண தேவராயர் பதினெண் வாத்தியமும், தங்கச் சீவிகை, சிங்கமுகச் சுருட்டி முதலான விருதுகளும் கொடுத்தாரென்பது ''நீடாழி உலகத்தில் கரிகால சோழன் முதல் நிகழ் தொண்டைமண்டலத்து'' எனத் தொடங்கும் செய்யுளால் அறியப்படுகின்றது.

## ஞானப் பிரகாசர் - 4 (16 - நூ)

**வே. பெ.** திருவாரூர் ஞானப்பிரகாசர், கமலை ஞானப் பிரகாசர், தேசிகர், பட்டாரகர்.

**ஊர்:** திருவாரூர்.

**தந்தை:** செட்டித்தெரு ஞானப்பிரகாசர்.

இவருக்குப் பெற்றோரிட்ட பெயர் சிதம்பரநாதன். இவர் கல்வி கற்றுத் தேர்ச்சியடைந்து மணமாகித் தந்தையின் தொழிலாகிய சைவாசாரியத் தொழிலை நடத்தி வந்தார். இவர் தந்தையிடம் உபதேசமும், ஆசாரிய அபிடேகமும் பெற்றார். இவரிடத்தில் மாணவர் பலர் இருந்தனர். இவர் தியாகேசர் கோயில் காரியங்களைக் கவனித்து வந்தார். விசய நகரத்தை ஆண்ட அரசரால் இவருக்குப் பல மானியங்கள் அளிக்கப் பெற்றன. இவர் இறைவன் திருவருளால் பல அற்புதங்கள் செய்தார் என்று கதைகள் வழங்குகின்றன. தருமபுரத்தில் மடம் அமைத்து ஆதீனம் நிறுவிய குருஞானசம்பந்தர் இவருடைய மாணவராவர். இவர் காலத்தில் வாழ்ந்த உலக நாதபண்டிதரென்பவர் உலக நீதி என வழங்கும் சிறு நூலைச் செய்தவராவர்.

**நூல்:** அநுட்டான அகவல், புட்பவிதி, பூமாலை, சிவபூசை அகவல், பிராசாத மாலை, அத்துவிதசாரம், சிவானந்த போதம், அத்துவாக் கட்டளை, அண்ணாமலைக் கோவை, தியாகராசர் கழிநெடில், சாதிநூல், திருமழுவாடிப் புராணம், திரு ஆனைக்காப்புராணம்.

**அநுட்டான அகவல்:** அநுட்டானத்தில் செய்யவேண்டிய கிரியைகள் ஒவ்வொன்றும் முறையாக மந்திரத்தோடு செய்வதற்கு உதவியாக இந்நூல் செய்யப்பட்டது. இது 118 அடி கொண்ட ஆசிரியப்பாவாகும்.

**புட்பவிதி:** காப்பு வெண்பா ஒன்றும் 54 விருத்தங்களும் கொண்டது.

**சிவபூசை அகவல்:** இது 444 அடி கொண்ட ஆசிரியப் பாவாலமைந்தது. இது சிவபூசை செய்யும் முறையினை விளக்குவது.

**பிராசாத மாலை:** இது 11 எண்சீர் விருத்தங்களும் காப்புச் செய்யுளுமுடையது. இது சைவத்தில் சொல்லப்படுகின்ற பிரசாத யோகத்தை விளக்குவது.

**அத்துவித சாரம்:** இது சாத்திர நூல்; காப்பு வெண்பா ஒன்றும் 60 விருத்தப்பாக்களும் கொண்டது. நூல் முழு மையும் மாணுக்கன் கேள்வி கேட்பதாயும் குரு விடை கூறு வதாயுமுள்ள வினுவிடை முறையில் அமைந்தது.

**தியாகராசர் கழிநெடில்:** இது தியாகராசர் மீது 10 பாடல் கொண்ட பன்னிரு சீர்க் கழி நெடிலடி ஆசிரியவிருத்தப் பதிகம். பாடல்களில் தியாகராசருடைய விசேடச் சின்னங் கள், திருவந்திக் காப்பு, வீரசோழியம் என்ற சிங்காதனம், அசபாநடனம், பங்குனித் தேர்விழா, கமலாலயம் முதலியன குறிப்பிடப் பெற்றுள்ளன.

**சாதிநூல்:** இது விருத்தப்பாவாலியன்றது; 104 பாடல் களைக் கொண்டது. 81 சாதிகள் இந்நூலில் சொல்லப் பட்டுள்ளன. சாதி பற்றி இவர் ஒரு தனி நூல் செய்வதற் கான சூழ்நிலை விளங்கவில்லை.

**திருமழுவாடிப் புராணம்:** திருமழுவாடி என்பது கொள்ளி டத்தின் வடகரையிலுள்ள திருமழுவாடியைக் குறிக்கும். இந்நூல் திருமழுவாடியில் எழுந்தருளியிருக்கும் வயிரத் தூணரது திருவிளையாடலைக் கூறும்; பாயிரம், தலச்சருக்கம், மழுவாடிச் சருக்கம், சிவகங்கைச் சருக்கம், வைத்தியநாதச் சருக்கம், தேவாதிச் சருக்கம், வசிட்டச் சருக்கம், அகத்தியச் சருக்கம் என்ற ஏழு சருக்கங்களையுடையது; 570 செய்யுட் களைக் கொண்டது.

**திருஆனைக்கா புராணம்:** இத்தலபுராணம் இப்பொழுது அருகி வழங்குகிறது.

## ஞானப்பிரகாசர் - 5 (16 - நூ)

**வாழ்விடம்:** திருவொற்றியூர்.

இவர் திருவாரூர் ஞானப்பிரகாசரிடம் அருளுரை பெற்றவர்.

**நூல்:** திருவொற்றியூர்ப் புராணம், சிவஞான சித்தியார் பரபக்க உரை, சங்கற்ப நிராகரண உரை.

**திருவொற்றியூர்ப் புராணம்:**

இந்நூல் திருவொற்றியூரின் சிறப்பையும் அத்தலத்தில் சிவபெருமான் நிகழ்த்திய திருவிளையாடல்களையும் கூறுவது. 16 படலங்களும் 568 செய்யுட்களும் உள்ளன.

## ஞானப்பிரகாசர் - 6 (15 - நூ)

**வாழ்விடம்:** மதுரை.

சிவஞானிகளில் பலர் ஞானப் பிரகாசர் என்ற பெயருடன் காணப்படுகின்றனர். அவர்களில் இவர் சிற்றம்பல நாடிகள் மரபில் காவை - அம்பலநாதத் தம்பிரான் வழியில் வந்த சத்தியஞான பண்டாரத்தின் மாணாக்கராவர்.

**நூல்:** சிவப்பிரகாசம் - உரை.

சிவப்பிரகாசம் உமாபதி சிவாச்சாரியாரால் எழுதப் பெற்றது. இந்நூலுக்கு ஞானப்பிரகாசர் எழுதிய உரையினை நோக்க இவர் ஒரு துறவி என்பதும், அவருடைய அடியார் பலர் இருந்தனர் என்பதும் தெரியவருகின்றது. இவருடைய மாணாக்கர் சிவப்பிரகாசர் என்பவராவர். சிவப்பிரகாசர் தம் ஆசிரியர் ஞானப் பிரகாசர் எழுதிய பொழிப்புரையை விரித்துப் பேருரையாக எழுதினார்.

## ஞானமணி நாடார் (19 - நூ)

**நூல்:** தமிழ் இலக்கண சிந்தாமணி (1893)

## ஞானவரோதய பண்டாரம் (14 - நூ)

**வாழ்விடம்:** சோழ மண்டலத்திலுள்ள வயலூர்.

இவர் தாம் இயற்றிய உபதேசகாண்டத்தில் கச்சியப்ப சிவாச்சாரியாருக்கு வாழ்த்துக் கூறுவதாலும், 'வயலூரில் எந்தைக்கு எங்கணும் புகழ உபதேசம் செய்து' என்ற தொடரில் அருணகிரி நாதரை எந்தை எனக் குறிப்பிடுவ தாலும் அவர்களுக்குப் பிற்பட்டவரென்றும், அருணகிரி நாதரை ஞானாசிரியராகக் கொண்டவரென்றும் துணியலாம். இவர் மதுரைக்குச் சென்றிருந்த போது காளமேகப் புலவர் 'மதுரைக்கு நீ சென்ற தெவ்வாறு ஞானவரோதயனே' என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பியதாகப் பழஞ் செய்திகள் கூறுகின்றன.

**நூல்:** உபதேசகாண்டம்.

இது கந்த புராணத்தின் ஏழாவது காண்டமாகும். முதல் ஆறு காண்டங்களைக் கச்சியப்ப சிவாசாரியார் இயற்றினர். அவருடைய மாணவரான கோனேரியப்ப நாவலர் ஏழாவது காண்டமாகிய உபதேச காண்டத்தை இயற்றினர். இவை பன்னிரண்டாம் நூற்றூண்டில் இயற்றப் பெற்றன. பிறகு ஞானவரோதயர் உபதேசகாண்டத்தினை இரண்டாம் முறை யாகப் பாடினர்.

## ஞானாநந்தா நந்தேந்திர சரசுவதி (20 - நூ)

**வாழ்விடம்:** சோழநாடு.

இவர் இலக்கண இலக்கியப் பயிற்சியோடு மருத்துவப் பயிற்சியும் பெற்றிருந்தார்.

**நூல்:** 'சித்தகுரு நடராசர் பதிகம்'.

## ஞானாமிர்தாசாரியார் (13 - நூ)

**வே. பெ.** வாகீச முனிவர்.

இப்புலவர் பற்றிய வரலாறு நூல்கள் வழியாகத் தெரிய வில்லை. திருநெல்வேலி மாவட்டம் திருவாலீசுரம் என்ற ஊரிலுள்ள சிவாலயத் திருமதில்களில் ஜடாவர்மன் திரிபுவன சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவனது மூன்றுவது ஆட்சி ஆண்டில் அமைந்த சாசனங்களில் ஒன்றில் இவரைப் பற்றியக் குறிப்புக் காணப்படுகிறது. ''அச்சிவாலயத்தே திருஞானம் விண்ணப்பம் செய்வதற்குச் சிவப்பிராமணர் எண்மர் கோளமடத்து ஞானமிர்தாசாரிய சந்தானத்தைச் சார்ந்த புகலிப் பெருமாள் என்பாருடன் உடன்படிக்கையின் மேல் நிலம் பெற்றனர்'' என்று காணப்படுகிறது. எனவே இவர் சந்தானசாரியத் தலைவர் என்பதும், ஞானமிர்தம் என்ற நூலை இயற்றிப் புகழ் படைத்திருந்தமை பற்றியே ஞானமிர்தாசாரியார் என வழங்கப் பெற்றுர் என்பதும் புலனுகின்றன.

**நூல்:** ஞானமிருதம்.

இந்நூல் பதி, பசு, பாச இயல்புகளையும் பிற சமய உண்மைகளையும் தெரிவிக்கும் சைவசாத்திரமாகும். சிவ ஞானமுனிவர் முதலியோரால் திராவிடமாபாடியத்தில் மேற்கோளாகக் காட்டப்பட்ட சமய சாத்திரங்களுள் இதுவும் ஒன்றுகும்.

## ஞானனந்த சாமி ( )

**நூல்:** அஞ்செழுத்துண்மை என்னும் ஸ்ரீபஞ்சாட்சர ரகசியம், மதுரை மீனுட்சியம்மை ஊஞ்சல், மதுரை மீனுட்சி யம்மை தரிசனுனந்த மாலை, தத்துவதீபிகை.

## ஞானனந்த மணவாள சாமிகள் (20 - நூ)

**ஊர்:** தொண்டை நாட்டில் காஞ்சிபுரத்திற்கு அண்மையில் உள்ள படுவூர்.

**தந்தை:** வீராசாமி; தாய்: நாகம்மாள்; வேளாளர்.

இவர் சென்னை தண்டையார் பேட்டையை தமது வாழ்விடமாகக் கொண்டார்; சாது நாராயண தேசிகர் என்ற பெரியாரிடத்தில் அருளுரை பெற்று அவரது மடத்திலேயே தலைவராகத் திகழ்ந்தார். சுவாமி அருணகிரிநாதர் முதலியோர் இவருடைய மாணவர்.

**நூல்:** 'தேசிக நாராயணர் திருவந்தாதி'.

இந்நூல் நூலாசிரியரின் ஆசிரியர் மீது பாடப்பெற்ற அந்தாதி நூல்.

## ஞானியார் சாயபு (    )

**ஊர்:** கோட்டாறு.

**தந்தை:** சைகு அபூபக்கர் சாயபு.

**தாய்:** சையிது மீரான் பீவி.

இப்புலவரின் குழந்தைப் பெயர் சைகு மொகியித்தீன் மலுக்கு முதலியார். இவரே ஞானியார் சாயபு என்று அழைக்கப் பெற்றவர். இவர் சையிது ஜமாலுல் மிஹுபரிய்யி என்ற துறவியை அடைந்து அவர் அறிவுரைகளைக் கேட்டு, காடுகளுக்குச் சென்று நிஷ்டையிலிருந்தார். இந் நாட்களில் இல்லம் திரும்புவதும் உண்டு. இவர் பல சித்துக்களையும் செய்து காட்டும் இயல்பினராகத் திகழ்ந்தார்.

**நூல்:** கமுதியிலிருந்தபோது பாடிய மெய்ஞ்ஞானப் பாடல்கள்.

## ஞானியாரடிகள் (20 - நூ)

**வே. பெ.** சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள்.

**ஊர்:** திருநாகேச்சுவரம்.

**தந்தை:** அண்ணாமலை ஐயர்; **தாய்:** பார்வதியம்மையார்.

**வாழ்ந்த காலம்: 17-5-1873 — 31-1-1942.**

இவருடைய பெற்றோர் இட்ட பெயர் பழநி. இவர் தெலுங்கு மொழியை நான்காண்டுகளும் ஆங்கில மொழியை ஏழாண்டுகளும் வடமொழி தென்மொழி ஆகியவற்றைப் பதினைந்தாண்டுகளும் கற்றுத் தெளிந்தார். இவர்தம் பதினேழாம் வயதில் ஞானியார் மடாலயத்தின் தலைவராகப் பட்டஞ்சூட்டப் பெற்றார். கி.பி. 1900 இல் தம் மடாலயத்தில் "வாணி விலாச சபை" என ஒரு சபை நிறுவி, ஞாயிறு மாலை தோறும் சொற்பொழிவாற்றி வந்தார். பாண்டித்துரைத் தேவரவர்களைக் கொண்டு 24—5—1901 இல் மதுரையில் தமிழ்ச் சங்கத்தை நிறுவச் செய்தார். ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை, சதாசிவம் பிள்ளை, மறைமலையடிகள் ஆகியவர்களின் உதவி கொண்டு மடாலயத்தில் தம் தலைமையிலேயே 7—7—1905 - இல் சைவ சித்தாந்த மகா சமாஜம் என்னும் சமாஜத்தைத் தொடங்கி வைத்தார். திருப்பனந்தாள் மடாதிபதிகளாக எழுந்தருளியிருந்த சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகளுக்குத் தமிழ் மொழியில் அளவு கடந்த ஆர்வமுறச் செய்தவர்கள் இவர்களேயாவர்.

அடிகளார் நாடுதோறும் தமிழ்ப் பாடஞ் சொல்லுதலை ஒரு கடமையாகக் கொண்டிருந்தார். அதனால் அடிகளாரிடம் தமிழ் பயின்று தேர்ச்சியுற்ற மாணவர்கள் தமிழ்நாடு முழுவதும் நிரம்பியுள்ளனர். அடிகளார் சைவத்தில் ஆழ்ந்த பற்றுடையவ ராயினும் எல்லா மதத்தவரும் தம் சொற்பொழிவை விரும்பிக் கேட்கும் வண்ணம் சமரச மனப்பான்மையுடையவராக விளங்கினார். அடிகளார் மூன்று மணிக்கு மேல் விடாமல் அவையினருக்கு ஊக்கம் குன்றாமல் சொற்பொழிவாற்றும் வன்மையுடையவர். வடமொழிக் கருத்துக்களைத் தென் மொழியிலுள்ள கருத்துக்களோடு இணைத்துக் காட்டும் அழகு வடமொழி வல்லாராலும் போற்றத் தக்கதாகும்.

**நூல்:** ஞானதேசிக மாலை, திலகவதி அம்மை துதி.

அடிகளாருடைய சொற்பொழிவுகளின் ஒரு பகுதி "கந்தர் சட்டிச் சொற்பொழிவுகள்" என்ற தலைப்பில் புலவர் திரு. அரசங்கண்ணனாரால் தொகுத்து வெளியிடப் பெற்றுள்ளது.

## ஞானுப்பிள்ளை எம். என். (19 - நூ)

**நூல்:** சற்குருவின் மரண சாதனம் (1898).

இந்நூல் உரைநடையில் அமைந்தது; இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டபோது திருவாய் மொழிந்த ஏழு திருவார்த்தைகளைத் தியானிக்கும் சொற்பொழிவுகள் அமைந்துள்ளன.

## டன் சாமிகள் (19 - நூ)

**ஊர்:** இலங்கை யாழ்ப்பாணம்.

இவர் யாழ்ப்பாணத்தில் சம்பத்திரிசியார் கல்லூரியில் நீண்டகாலம் தலைவராகப் பணியாற்றினார். அக்கல்லூரித் தமிழாசிரியர் சுபவாக்கியம் பிள்ளையிடம் தமிழ்மொழியினைக் கற்றார். அவர் துணையுடன் ஆங்கிலத் தமிழ் அகராதி ஒன்றினையும் எழுதினார். அவ்வகராதி 1900 ஆம் ஆண்டில் வெளியிடப் பெற்றுள்ளது. தமிழ்மொழிக்கான சுருக்கெழுத்து முறை ஒன்றினையும் இவர் வகுத்தமைத்து 'தீவிர லிகிதம்' என்ற பெயருடன் வெளியிட்டுள்ளார்.

**நூல்:** ஆங்கிலம் - தமிழ்அகராதி, 'தமிழ்த் தீவிர லிகிதம்'.

## டாட்ரிட்ஜ் (19 - நூ)

**நூல்:** மெய்ஞ்ஞானோதய விருத்தி (1893)

இந்நூல் ஆங்கில மொழியிலிருந்து மொழிப் பெயர்க்கப் பெற்றது. இந்நூல் எளிதாக வாசித்துப் பயன்பெறத்தக்க வகையில் அமைக்கப் பெற்றுள்ளது.

## டேவிட் டி. (     )

**நூல்:** சிறுவர் சொல் இலக்கணம்.

இந்நூல் உரைநடையில் அமைந்தது; எடுத்துக்காட்டுப் பயிற்சிகளுடன் இயற்றப் பெற்றது.

## டேவிட் ஜோசப் (     )

**நூல்:** ஆதியாகம வியாக்கியானம்.

இந்நூல் உரைநடையிலமைந்தது. ஆங்கில மொழியில் எழுதப்பட்ட பற்பல வியாக்கியானங்களைப் பார்வையிட்டு அவைகளின் கருத்துக்களைத் திரட்டி அச்சிடப்பெற்றது.

## தங்கசாமி (20 - நூ)

**ஊர்:** சென்னை; கிறித்துவர்.

**பிறப்பு:** 18—12—1880.

இவர் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் படித்து பி. ஏ. பட்டம் பெற்றூர். பட்டம் பெற்றபின் 1904-ஆம் ஆண்டில் அக்கவுண்டன்ட் சனரல் என்னும் கணக்கர் நிலையத்தில் அலுவல் பார்க்கத் தொடங்கினூர். உரிய காலத்தில் மேற் பார்வையாளராக உயர்ந்தார். 1934-இல் ஓய்வு பெற்றூர்.

ஓய்வு நேரங்களில் சிறந்த ஆங்கில நூல்களையும் தமிழிலக்கியங்களையும் நன்கு கற்றூர். இவருடைய ஆராய்ச்சிகளுக்குத் துணையாகப் பேராசிரியர் இரத்தினசாமி விளங்கினூர். இவர் ஆங்கில நூல்களின் சிறந்த கருத்துக்களைத் தமிழில் மொழி பெயர்த்துத் தமிழ்ப் பத்திரிகைகளில் வெளியிட்டு வந்தார்.

**நூல்:** திருக்குறள் (ஆங்கில மொழியாக்கம்) திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால் (ஆங்கில உரைநடை)

திருக்குறள் (ஆங்கில மொழியாக்கம்) என்பது திருக்குறளின் இருபத்தேழு அதிகாரங்கள் செய்யுளில் மொழியாக்கம் செய்யப்பட்டது.

## தங்கமுத்துப் புலவர் (19 - நா)

**வே. பெ.** தங்கமுத்துக் கவிராயர்.

**ஊர்:** கொங்குநாடு, அவிநாசி.

இவர் வாக்குப் பலிதமுள்ள புலவராகக் கருதப்பட்டார்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## தங்கவேலையர் ப. மு. (19 - நா)

**நூல்:** இலக்ஷண விருத்திப் பதிகம் (1875)

இந்நூற்பாடல்கள் சச்சிதானந்த சுவாமிகளைத் துதிக்கும் பாடல்கள்.

## தங்கவேலுச்சாமித் தேவர் வீ. (19 - நா)

**ஊர்:** இராமநாதபுரம்.

இவர் இராமநாதபுரத்தில் அரசராக விளங்கிய முத்து விசயரகுநாத பாஸ்கர சேதுபதிக்கு மைத்துனர்; இலக்கண இலக்கியப் பயிற்சி மிக்கவர்; பாடும் ஆற்றல் பெற்றவர்.

**நூல்:** கந்தபுராணச் சுருக்கம்(வசனம்); கீதாமிர்தம்.

கீதாமிர்தம் உள்ளத்தை உருக்கும் இசைப்பாடல்களைக் கொண்டது.

## தங்கவேலுப்பிள்ளை - அ. (19 - நா)

**ஊர்:** அரன்வாயில்.

**தந்தை:** அப்புப்பிள்ளை.

**நூல்:** திருக்குருகூர் ஞானசித்தர் புகழ்நூல், நெஞ்சறிவுறுத்தல் என்னும் நூலுக்குச் சிறப்புப்பாயிரம், வடபழநி வண்ண மஞ்சரி என்னும் நூலுக்கு வண்ணப் பாவினாலேயே சிறப்புப்பாயிரம்.

நெஞ்சறிவுறுத்தல் என்னும் நூல் அப்பாவுப் புலவர் என்பவரால் இயற்றப் பெற்றது.

## தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார்

**இ. பெ.** செங்கண்ணனார் (சங்ககாலம்)

**ஊர்:** தங்கால்; அந்தணர்.

இவர் உறுப்பால் பெயர்பெற்ற புலவர்களுள் ஒருவர் என்று கூறுவர். செங்கண்ணன் எனப் பலர் உளராதலின் இவரை வேறுபடுத்திக் காட்ட ஊருங் குலமுங் கூட்டித் தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார் என வழங்கப் பட்டார்.

இவர் பெயரோடு இணைந்துள்ள 'ஆத்திரேயன்' என்னுஞ் சொல், இவர் ஆத்திரேய கோத்திரத்தவரென்பதைக் காட்டும். எனவே இவர் அந்தணராவர்.

தங்கால் என்பது இளங்கோவடிகளால் சிறப்பிக்கப்பட்ட ஊர் இப்போது இவ்வூர் 'திருத்தண்கால்' என்று வழங்கப் படுகிறது. கல்வெட்டுக்கள் இவ்வூரை 'இராசராசப் பாண்டி நாட்டு மதுராந்தக வள நாட்டுக் கருநீலக்குடி நாட்டுத் திருத்தங்கால்' எனக் கூறுகின்றன. இது பாண்டிய நாட்டில் திரு வில்லிப்புத்தூருக்கு அருகேயுள்ள திருத்தலம்.

**நூல்:** நற்றிணை 386.

## தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் (சங்க காலம்)

**இ. பெ.** வெண்ணாகனார்.

**ஊர்:** தங்கால்.

இவருடைய பெயரில் பொற்கொல்லன் என்று வருவதால் இவர் தொழிலும் குலமும் புலப்படும்.

இவர் பிறந்த ஊர் திருவில்லிப்புத்தூருக்கு அண்மையி லுள்ள திருத்தங்கால்.

இவருடைய பெயர் தங்கால் பொற்கொல்லனார், தங்கால் முடக் கோவலனார், தங்கால் பூட் கொல்லனார், தங்கால் பூட் கோவலனார், தங்கால் தாட் கோவனார், தங்கால் முடக் கொற்றனார், தங்கால் முடக் கொல்லனார், தண்காற் பூட் கொல்லனார், தங்கால் தாட்கோலனார், தணகாற் பொற் கொல்லனார், முடக்கொல்லனார், தங்கால் நாட் கோவலனார், முடிக்கோவலனார் எனப் பல பதிப்புக்களில் பல வேறுபாடுகளுடன் காணப்படுகிறது. இத்தனை வேறு பாடுகளுக்கிடையேயும் 'தங்கால்' 'தண்கால்' என்னும் இருவகையில் மட்டுமே ஊர்ப்பெயர் சிதையாமல், பெயருடன் இணைந்து வருவது நோக்கத்தக்கது. எனவே இவர் பிறந்த ஊர் 'தங்கால்' என்பது தெளிவாகிறது.

இவர் பெயரோடு இணைந்த பொற்கொல்லன் என்ற தொடராலும், நற்றிணை (313) பாட்டுக் குறிப்பாலும், இவர் பொன்னால் அணிகலன் செய்யும் தொழிலை மேற்கொண்டவ ரென்பது தெரிகிறது.

**நூல்:** அகம் 48, 108, 355; குறுந்தொகை 217; நற்றிணை 313, புறம் 326.

## தட்சணாமூர்த்தித் தம்பிரான் (20 - நூ)

இவர் சூரியனார்கோயில் ஆதினத்தைச் சேர்ந்தவர்.

**நூல்:** 'புண்ணியராற்றுப்படை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'புண்ணியராற்றுப்படை' என்ற நூல் ரா. சு. சுப்பிரமணிய பிள்ளை என்பவரால் இயற்றப்பெற்றது.

## தட்சிணாமூர்த்தி - 1 ( )

**நூல்:** தட்சிணாமூர்த்திகாலம், தட்சிணாமூர்த்தி வாக்கியம், தட்சிணாமூர்த்தி விநோதம், மெய்ச்சுருக்கம் 50, பரிபாடை 500, பூரண காவியம் 1500.

இந்நூல்களுள் பூரணகாவியம் 1500-இல் அஷ்டகர்ம மந்திரங்களும் பற்பல தியான மந்திரங்களும் தீட்சை விவரமும் யோக மார்க்கமும் கூறப்பட்டுள்ளன; 290 செய்யுட்களே உள்ளன.

## தட்சிணாமூர்த்தி - 2 ( )

**நூல்:** அகஸ்தியர் ஜால சூத்திரத் திரட்டு, மெய்ஞ்ஞானம், தீரமந்திரம் - 1500.

## தட்சிணாமூர்த்தி ஐயர் - 1 ( )

**நூல்:** உபதேசப் பஃறொடை.

இது பண்டார சாத்திரங்களுள் ஒன்று.

## தட்சிணாமூர்த்தி ஐயர் - 2 ( )

**நூல்:** தசகாரியம், தசகாரிய அநுபூதி.

## தட்சிணாமூர்த்தி தேசிகர் - 1 ( )

**ஊர்:-** தென்காசி.

இவர் வாழ்ந்த ஆதீனம் சிவந்த பாதமுருடைய தேசிகர் ஆதீனம் என வழங்கப் பெறுகின்றது.

**நூல்:** "ஆகம சார சங்கரகம் என்னும் சந்தியாகரும தீவிகை – உரைநடை".

## தட்சிணாமூர்த்தி தேசிகர் - 2 (15 - நூ)

இவர் திருவாவடுதுறை ஆதீனத்தில் சின்னப் பட்டத்தி லிருந்தவர்; நமச்சிவாயத் தம்பிரானின் மாணவர்.

**நூல்:** தசகாரியம், உபதேசப் பஃறொடை வெண்பா.

## தண்டபாணி தீட்சிதர் - சிவ (20 - நூ)

**நூல்:** கிருட்டிணமூர்த்தி ஐயர் இயற்றிய 'மகாபாரத சதகம்' என்னும் நூலைப் பாராட்டி அளித்த சிறப்புப் பாயிரம்.

## தண்டபாணி தேசிகர் - வி. (20 - நூ)

**ஊர்:** சோழநாடு, மாயூரம்.

இவர் கிருட்டிணையர் என்னும் கிருட்டிணானந்த யோகி களிடத்தில் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை எய்தினார்.

**நூல்:** மயிலைச் சிலேடை வெண்பாவுக்குச் சிறப்புப் பாயிரம்.

மயிலைச் சிலேடை வெண்பா கிருட்டிணையரால் இயற்றப் பெற்றது.

## தண்டபாணிப்பிள்ளை நா. வை. (20 - நூ)

**ஊர்:** தஞ்சாவூர், நாகப்பட்டினம்.

**தந்தை:** சொக்கலிங்கம் பிள்ளை; **தாய்:** சுந்தரத்தம்மை.

**வாழ்ந்த காலம்:** 1891 — 1922.

இவர் நாகப்பட்டினத்தில் வெஸ்லியன் மிஷன் கல்லூரியில் கல்வி பயின்றார். இளம் வயதிலேயே பர்மா, மலாயா முதலிய நாடுகளுக்குச் சென்றார். மலாயாவில் பினாங்கில் ஓர் ஐரோப்பியர் நடத்திய கல்விக் கூடத்தில் ஆசிரியராக இருந்தார். 1911 - ஆம் ஆண்டில் இவருடைய திருமணம் நடை பெற்றது. பின்னர் அவர் மலாயா செல்லவில்லை. புதுக் கதைகள் பலவற்றை எழுதி வெளியிட்டார். மறை மலையடிகளை நெருங்கித் தமிழ் நூல்களைப் பாடங் கேட்டார். பின்னர்ப் பவானந்தர் கழகத்தில் சேர்ந்து ஆசிரியராக இருந்து யாப்பருங்கல விருத்தி, தொல்காப்பியப் பொரு ளதிகாரம், இறையனாரகப் பொருள், நன்னூல் உரை,

திருவாசகம், திருக்கோவையார் முதலிய நூல்கள் வெளி வருவதற்குத் துணை செய்தார்.

**நூல்:** திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி உரை, திருக்குறள் அறத்துப்பால் — விருத்தியுரை, சதாநந்தர், ஏகம்பஞ்சநதம், கலாசுந்தரி, மாயாவதி, கௌதமபுத்தர்.

## தண்டபாணியடிகள் (19 - நூ)

**வே. பெ:** சங்கரலிங்கம்.

**சி. பெயர்:** திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள், மகான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.

**ஊர்:** பாண்டிநாடு, திருநெல்வேலி.

**தாய்:** பேய்ச்சிமுத்து அம்மையார், **தந்தை:** செந்தில் நாயகம் பிள்ளை.

**வாழ்ந்த காலம்:** 1839 — 1898.

இவருடைய தந்தை ஆறும் வயதில் இறந்தபின் சீதாராம நாயகர் என்பவர் இவரை வளர்த்து வந்தார். இவர் இளம் வயதிலேயே செய்யுளியற்றும் திறமை பெற்று விளங்கினார். இவருடைய முருக வழிபாடு அன்பு முதலிய பெருமைகளை உணர்ந்த உலகினர் இவருக்கு முருகதாசர் என்ற பெயரை வழங்கினர். இவர் திருப்புகழ்ச் சந்தம் அமைந்த பல பாடல்களைப் பாடியபடியால் திருப்புகழ்ச் சுவாமிகள் என்று பெயருண்டாகியது; உடல் முழுதும் திருநீற்றைப் பூசிக் காவியாடை உடுத்து விளங்கியமையின் தண்டபாணி அடிகள் என்று அழைக்கப்பெற்றார். வண்ணப் பாட்டுக்களை மிக விரைவாகவும், வியக்கத்தக்கவாறும் பாடியமையால் 'வண்ணச் சரபம்' என்ற பெயருண்டாகியது. இராமலிங்க அடிகள், ஆறுமுக நாவலர், மாப்பழக்கவிச்சிங்க நாவலர், மகாவித்துவான் காஞ்சிபுரம் சபாபதி முதலியார், அவருடைய மாணவர் அட்டாவதானம் சபாபதி முதலியார்,

ஆகியோர் இவர் காலத்தில் விளங்கிய புலவர் பெரு மக்களாவர்.

கடவுளுக்கு உயிர்ப்பலி கொடுத்தலாகிய மூடப் பழக்கத்தைக் கைவிடும்படி மக்களுக்கு அறிவுறுத்தினூர்.

எண்பத்திரண்டுக்கும் மேற்பட்ட தமிழ் நூல்கள் இயற்றித் தமிழுக்குச் சிறந்த தொண்டாற்றினூர்.

**நூல்:** சென்னைப் பிள்ளைத்தமிழ், சென்னைக் கந்தர் இதழகலந்தாதி, சென்னைத் திருப்புகழ், திருவொற்றியூர்ப் பதிகம், அறுவகை இலக்கணம், வண்ணத்தியல்பு, தமிழலங்காரம், தமிழ்த்துதிப்பதிகம், திருச்செந்தில் வெண்பாவந்தாதி, திருச்செந்தில் சிலேடை வெண்பா, திருச்செந்தில் திருவந்தாதி, திருச்செந்தில் யமகவந்தாதி, திருச்செந்தில் பதிற்றுப் பத்தந்தாதி, திருச்செந்தில் செந்தில் நாயக சதகம், திருச்செந்தில் உலா, திருச்செந்தில் நவரச மஞ்சரி, திருச்செந்தில் அகப்பொருட்கோவை, திருச்செந்தில் தசாங்க வகுப்பு, திருச்செந்தில் சந்தமாலிகைத் திருப்புகழ், கௌமார விஜயம், குஞ்சரிமாலை, வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ், வாள் அலங்காரம், வண்ணப் பதிகம், புதுவை முருகன் அலங்கார பஞ்சகம், புதுவைப் பிள்ளைத்தமிழ், புதுவைக் கலம்பகம், புதுவை பாதாதிகேசம், புதுவைப் பதிற்றுப் பத்தந்தாதி, பத்மநாபப் பெருமாள் யமகவந்தாதி, திருப்புகழ்ப் பதிகம், தேவகோட்டைத் திருப்புகழ், தேவகோட்டைத் திருவந்தாதி, தேவகோட்டைப் பதிகம், அருணகிரிநாதர் புராணம், கௌமாரமுறைமை, நானிலைச் சதகம், ஞானவந்தாதி, சதகவுந்தி, தியாஞுநுபூதி, நெல்லைக் கலம்பகம், சத்தி விசயம், திருவருள் நாட்டம், சென்னைக் கலம்பகம், சென்னை ஒருபா ஒருபஃது, திருவல்லிக்கேணி எழு கூற்றிருக்கை, அணிற்காத்த பதிகம், சூரிய மாலை, திருச்சிற்றம்பல வெண்பாமாலை, திருநடனமாலை, ஆநந்த தாண்டவமாலை, அலங்கார பஞ்சகம், தில்லைத் திருப்புகழ், தில்லை வகுப்புகள், மண்டலத் திருப்புகழ், ஏழாயிரப் பிரபந்தம், திருவரங்கத் திருவாயிரம், திருவாமாத்தூர்ப் புராணம், மயிலாசலக்

கலம்பகம், வேலலங்காரம், மயிலலங்காரம், ஆறெழுத் தலங்காரம், புலவர் புராணம், பழநி வெண்பாமாலை, பழநி வெண்பாவந்தாதி, பழநி அலங்காரம், பழநியமகவந்தாதி, பழநிதிரிவு மஞ்சரி, பழநி குருபரமாலை, பழநிப் பதிற்றுப் பத்தந்தாதி, பழநிப் பிள்ளைக்கவி, பழநிக் கலம்பகம், பழநி ஒருபா ஒருபஃது, பழநி நவமணிமாலை, பழநிநவரசம், பழநிசித்திமாலை, பழநி நடுவொலியலந்தாதி, பழநிகலவி மகிழ்தல் வண்ணம், பழநி வகுப்புகள், பழநி முருகாநந்த லகரி, பழநி தெய்வத் துணைப்பதிகம்.

**சென்னைப் பிள்ளைத்தமிழ்:** இது கந்த கோட்டத்திலுள்ள முருகப்பெருமான் மீது பாடப் பெற்றது. இந்நூலரங்கேற் றத்தின்போது காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார் சில மறுப்புரைகளை எழுப்பினர். அடிகள் அவற்றிற்குத் தக்கவாறு பதிலுரைத்தனர். அட்டா வதானம் சபாபதி முதலியார் இப்பிள்ளைத் தமிழைப் பெரிதும் பாராட்டியுள்ளார்.

**அறுவகை இலக்கணம்:** தமிழ் மொழிக்குரிய இலக்கணங்க ளைந்துடன் புலமை இலக்கணம் என்பதனையும் சேர்த்து அறுவகை இலக்கணம் என்னும் பெயருடன் செய்யப்பட்டது. இந்நூலில் 786 நூற்பாக்களுள்ளன. முன்னோர் இலக்கண நூல்களில் விளங்காத சில விதிமுறைகள் இந்நூலில் காணப் படுகின்றன.

**வண்ணத்தியல்பு:** இந்நூல் சந்தப்பாட்டின் பகுதியாகிய மாறுபாடுகளை உவமானங்களுடன் விளக்குகின்றது. நூறு நூற்பாக்கள் கொண்டது.

**புலவர் புராணம்:** இது அறிஞர்களின் வரலாறுகள் பல வற்றைக் கொண்டது. அகத்திய மகாமுனிவச் சருக்கம் முதலாகக் கண் கண்டபுலவர் சருக்கம் ஈறாக எழுபத்திரண்டு சருக்கங்களையும் மூவாயிரத்து மூன்று விருத்தப்பாக்களையும் உடையது. இந்நூலாசிரியர் பாண்டி நாட்டினராதலின் அந்நாட்டில் வழங்கும் திசைச் சொற்கள் பல இந்நூலுள் காணப்படுகின்றன. இந்நூலில் சையது மொய்தீன்,

உமறுப்புலவர், சவ்வாதுப் புலவர் ஆகிய மூன்று இசுலாமியப் புலவர்களின் வரலாறுகளும் உள்ளன.

## தண்டாச்சியா பிள்ளை ( )

**நூல்:** அரிச்சந்திர நாடகம்.

## தண்டி (12 - நூ)

வடமொழியில் காவியாதரிசம் என்னும் அணி இலக்கண நூலை எழுதியவர் வடமொழித் தண்டி. அந்நூலைத் தமிழில் ‘தண்டியலங்காரம்’ என்னும் பெயருடன் மொழி பெயர்த்தவர் இவர். வடமொழித் தண்டி எழுதிய இலக்கண நூலை மொழி பெயர்த்ததனால் இவர் தண்டி எனச் சிறப்புப் பெயர் பெற்றிருக்கவும் கூடும்.

**நூல்:** தண்டியலங்காரம்.

இந்நூல் பொதுவியல், பொருளணியியல், சொல்லணியியல் என மூன்று பிரிவுகளையுடையது. பொதுவியல் பெருங் காப்பிய சிறு காப்பிய இலக்கணங்களையும், செய்யுள் நடையையும் பற்றிய பொதுவிலக்கணங்களைக் கூறுவது. பொருளணியியல் தன்மையணி முதல் பாவக அணி ஈறாக முப்பத்தைந்து அணிகளை எடுத்துக் காட்டுகளுடன் கூறுகிறது. சொல்லணியியல் செய்யுளைச் சொல்லழகு பெற எவ்வெவ் வாறு இயற்றலாம் என்று கூறுகிறது. பலவகை மடக்குகள், பன்னிரண்டு வகைச் சித்திரக்கவிகள் முதலியன இதிற் கூறப்படுகின்றன.

இதனையடுத்துப் பல அணியிலக்கணங்கள் தோன்றியிருந் தாலும் இதன் சுருக்கம், எளிமை, தெளிவு காரணமாக இதுவே யாவராலும் பாராட்டிப் பயிலப்பட்டு வந்துள்ளது. இலக்கண விளக்கத்து அணியியலில் தண்டியலங்கார நூற் பாக்கள் அப்படியே எடுத்தாளப்பட்டுள்ளன. வீரமா முனிவரின் தொன்னூல், அணியிலக்கணத்திற்குத் தண்டி யலங்காரத்தையே பின்பற்றியிருக்கிறது. இதற்கு மிகப்

பழமையான உரை ஒன்று உண்டு. புதிய உரைகளுந் தோன்றியுள்ளன.

## தணிகாசல முதலியார் (20 - நூ)

**ஊர்:** சென்னை மயிலாப்பூர்.

இவர் திரு. வி. கலியாண சுந்தர முதலியாரின் தமிழாசிரியர்களில் ஒருவர். மகாவித்துவான் என்று சிறப்பிக்கப் படுபவர். திரு. வி. க. இவரிடம் சைவ சிந்தாந்த நூல்களையும் கற்றார். இவர் சைவ சமய நூல்களைப் பலருக்கும் கற்பித்துள்ளார். பதினெண் புராணங்களையும் சொற் பொழிவு செய்யும் ஆற்றல் பெற்றவர்.

## தணிகை ராய நாவலர் ( )

**நூல்:** கஜேந்திர மோக்ஷ கீர்த்தனம்.

## தணிகைராய முதலியார் - செ. (20 - நூ)

இவர் சொர்க்கபுர ஆதீனம் சுப்பிரமணியத் தம்பிரானிடம், இலக்கண இலக்கியங்களையும் சைவ சித்தாந்த நூல்களையும் பாடங் கேட்டார்.

**நூல்:** சுப்பிரமணியத் தம்பிரான் மீது இரட்டைமணிமாலை, சுந்தர சாமிகள் தோத்திரமாலை, சுந்தர சாமிகள் நான் மணிமாலை.

## தத்துவ தேசிக நாயனார் (16 - நூ)

**பார்க்க:** தத்துவராயர்.

## தத்துவ நாதன் (16 - நூ)

இவர் தத்துவராயரின் மாணவர்.

**நூல்:** உண்மை நெறி விளக்கம்.

## தத்துவப் பிரகாசர் - 1 (16 - நூ.)

**ஊர்:** சிவபுரம்; சைவவேளாளர்.

**வாழ்விடம்:** திருவாரூர்.

இவர் தியாகேசப் பெருமானுடைய கோயிற் காரியங்களைக் கவனித்து வந்தவர்; கல்வி கேள்விகளிற் சிறப்புற்றவர்; சீர்காழியிலே சிற்றம்பலநாடிகளிடம் ஞானோபதேசம் பெற்றவர். இவர் கிருட்டின தேவராயர் காலத்தவர். திருவாரூர்த் திருக்கோயிலிலே வழிபாடு செய்யும் குருக்கள் மார் ஒழுங்காக வழிபாடு நடத்தவில்லை என்ற காரணத்தால் ஒருமுறை திருவிழா முடிவிலே கொடியிறக்க வேண்டா மென்று கிருட்டினதேவராயர், அவர் பிரதிநிதியான வட மலையப்பர், தியாகராசப் பெருமான் ஆகியோர் மீது ஆணை யிட்டு ஒரு செய்யுள் பாடினார் என்பர். அதனைக் கேட்ட இராயர் திருவாரூர்க் கோயிற் பட்டர்களில் தலைவராயும், தவறிழைத்தவராயுமிருந்த பட்டரை மாற்றிக் கோயிற் காரியங்கள் குறைவற நடந்து வரும்படி செய்தார் என்பர். தத்துவப் பிரகாசர் அடிக்கடி கோயிற் காரியங்களின் பொருட்டும் வேறு காரியங்களின் பொருட்டும் அரசனிடமும் அவனது பிரதிநிதிகளிடமும் சென்று வந்தாரென்பது அவருடைய பல தனிப்பாடல்களால் விளங்குகிறது.

**நூல்:** தத்துவப்பிரகாசம்.

இந்நூல், சரியை முதல் நான்கு பாதங்களையும் ஒவ்வொன் றினும் நான்காய்ப் பதினாறு பாதமாக விரித்துக் கூறுகின்றது; 337 திருவிருத்தங்களாலாகியது.

## தத்துவப் பிரகாசர் - 2 (16 - நூ)

இவர் திருவொற்றியூர் ஞானப்பிரகாசரின் மாணவர்.

**நூல்:** சிவஞான சித்தியார் பரபக்க உரை.

## தத்துவ போதகர் (17 - றா)

**வே. பெ.** ராபர்ட்-டி-நொபிலி.

**ஊர்:** இத்தாலி நாடு - தஸ்கனி மாகாணம்.

**வாழ்ந்த காலம்:** 1577 — 16-2-1656.

இவர் தம் தாய் மொழியாகிய இத்தாலி மொழியை நன்கு கற்றுத் தேர்ந்தார்; இந்தியாவில் சமயத் தொண்டு புரிய விரும்பினார்; ஆதலின் நேபிள்ஸ் நகரத்திலிருந்த ஏசுவின் சபையிற் சேர்ந்து சமயக் கல்வி பயின்றார். இவர் 1606-இல் தமிழ்நாட்டிற்கு வந்தார்; சமயத் தொண்டிற்கு மதுரை சிறந்த இடமென்று கருதி அங்குத் தங்கினார்: தம்முடைய பெயரைத் தத்துவ போதகர் என மாற்றி அமைத்துக் கொண்டார்; சைவ உணவுண்டு நெற்றியிற் சந்தனத்துடனும் மார்பிற் பூணூலுடனும் விளங்கினார். வடமொழி, தமிழ் இரண்டையுங் கற்றுத் தேர்ந்து செய்யுளியற்றவும் வல்லவராக விளங்கினார். துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள் இவரைச் சொற்போரில் தோற்கடித்தார்; உரைநடை வடிவில் இவர் பல நூல்களை ஓலைச் சுவடியில் எழுதினார். அந்நாளில் இந்தியாவில் அச்சுக்கூடம் ஏற்படவில்லையாகையால் இவருடைய நூல்களெல்லாம் அச்சாகவில்லை. இவர் மயிலாப்பூரில் காலமானார்.

**நூல்:** மந்திரமாலை, ஆத்துமநிர்ணயம், ஞானோபதேச காண்டம், தூடணதிக்காரம், சத்தியவேத லட்சணம், பரமசூட்சுமாபிப்பிராயம், சகுண நிவாரணம், பிரபஞ்ச விரோத வித்தியாசம், தமிழ் போர்ச்சுகீசு அகராதி, அநித்திய நித்தியவித்தியாசம், தவசுச் சதம், ஞானதீபிகை, நீதிச்சொல், கடவுள் நிருணயம், புனர்சென்ம ஆட்சேபம், நித்திய சீவன் சல்லாபம், தத்துவக் கண்ணாடி, ஏசுநாதர் சரித்திரம்.

இந்நூல்களுள் சிலவே இப்பொழுது இருப்பனவாகத் தெரிகின்றன.

## தத்துவ போதசாமி ( )

**நூல்:** ஞானோபதேசம்.

இந்நூல் உரைநடையிலமைந்தது.

## தத்துவராயர் (16 - நூ)

**ஊர்:** சோழநாட்டிலுள்ள வீரை; வேதியர்.

இப் பெரியார் 16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென்ற கருத்தும் உண்டு. இவருடன் கல்வி பயின்றவர். இவருடைய மாமனாகிய சொரூபானந்தர். இவ்விருவரும் தகுதி வாய்ந்த ஞானாசிரியரை அடைய விரும்பித் தத்துவராயர் வடநாட்டிலும் சொரூபானந்தர் தென்னாட்டிலும் அலைந்து திரிந்தனர். சொரூபானந்தர் கோவத்தம் என்ற ஊரில் சிவப்பிரகாச அடிகளைக் கண்டு அருளுரை பெற்றார். எனவே தத்துவராயர் சொரூபானந்தரையே தமது ஆசிரியராகக் கொண்டார்.

**நூல்:** சிவப்பிரகாச வெண்பா, தத்துவாமிர்தம், திருத்தாலாட்டு, பிள்ளைத் திருநாமம், வெண்பாவந்தாதி, கலித்துறை அந்தாதி, சின்னப்பூ வெண்பா, தசாங்கம், இரட்டைமணிமாலை, மும்மணிக்கோவை, நான்மணிமாலை, திருவடிமாலை, ஞானவினோதன் கலம்பகம், உலா, சிலேடை உலா, நெஞ்சுவிடு தூது, அஞ்ஞைவதைப்பரணி, மோகவதைப் பரணி, அமிர்தசார வெண்பா, சசிவன்னபோதம், பெருந்திரட்டு, குறுந்திரட்டு, பாடுதுறை, ஈசுரகீதை, பிரமகீதை.

## தத்துவலிங்க சாமிகள் (19 - நூ)

**நூல்:** தத்துவ நிசானு போதகசாரம்.

இந்நூல் வேதச் சிறப்பு, ஆகமச் சிறப்பு, பிராமணன் க்ஷத்திரியன் சூத்திரன் பிரமசாரி வரலாறு. இல்லறத்தான் வரலாறு, வானப்பிரத்தன், சந்நியாசி வரலாறு, உடல்

இழிவு, குடும்ப'இழிவு, போகஇழிவு, மகளிர்இழிவு, பொருள் இழிவு முதலியவற்றைக் கூறுவது.

## தத்துவலிங்க தேவரின் சீடர் (      )

**நூல்:** தத்துவ நிசாநு போதம்.

## தம்பா உபாத்தியாயர் (19 - நூ)

**ஊர்:** பாண்டிய நாட்டில் கடகாநல்லூர்ப் பேட்டை.

**தந்தை:** சங்கரலிங்க உபாத்தியாயர்.

இவர் தம் தந்தையாரிடமே தமிழ் நூல்களைக் கற்றூர்.

**நூல்:** திருக்கமலேசர் செந்தமிழ் மணிமாலை, அருண சலேசர் தோத்திரப் பாமாலை, ஜெகதீசுவரி சந்தக் கொம்மைப் பாடல்.

## தம்பாபிள்ளை (      )

**ஊர்:** ஈழ நாட்டில் யாழ்ப்பாணம்.

இவர் ஜோர்ஜ் சிதம்பரம் பிள்ளை என்றும் அழைக்கப் பெற்றூர்.

**நூல்:** இலங்கைப் பூமிசாத்திரம்.

## தம்பி முத்துப்பிள்ளை எஸ். (20 - நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம் அச்சுவேலி.

இவர் ஈழநாட்டில் முதல் புதினத்தை எழுதியவர் என்று போற்றப்படுபவர்.

**நூல்:** எஸ்தாக்கியர் நாடகம், பாலியக் கும்மி, சம்சோன் கதை, அழகவல்லி, சுந்தரன் செய்த தந்திரம், ஊசோன் பாலந்தை கதை.

இவற்றுள் இறுதி நூலே ஈழ நாட்டின் முதல் தமிழ்ப் புதினமென்று போற்றப்படுவது.

## தம்பியப்ப செட்டியார், நா. (20 - நூ)

**ஊர்:** சோழநாடு, தில்லையாடி.

**தந்தை:** நாராயண செட்டியார்.

**நூல்:** திருவிடைக்கழி முருகக் கடவுள் மீது அந்தாதி, பல தனிப்பாடல்கள்.

இந்த அந்தாதியைப் பாராட்டிப் பலர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## தம்பிரான் ( )

**நூல்:** தம்பிரான்படி.

## தம்பிரான் சாமிகள் (19 - நூ)

**வாழ்விடம்:** திருவாவடுதுறை.

இவர் தொண்டர் சீர்பரபுவார் என அழைக்கப் பெற்றார்.

**நூல்:** 'தோத்திரப்பாமாலை' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'தோத்திரப்பாமாலை' என்னும் நூல் சேவு. பழ. பழநியப்ப ஐயா என்பவரால் இயற்றப்பெற்றது.

## தம்பிரான் தோழர் மானக்கஞ்சாறர் ( )

இவர் சாசனத்தால் அறியப்படும் புலவர்களுள் ஒருவர். தென்னார்க்காடு மாவட்டத்தில் தற்போது ஸ்ரீமுஷ்ணம் என்று வழங்கும் தலத்தில் சிவாலயக் கோபுரத்திலுள்ள படிவமொன்றில் "இஃது இவ்வாலயத்திற்குத் திருப்பதியம்

விண்ணப்பம் செய்து விடைபெற்ற தம்பிரான் தோழன் மானக் கஞ்சாறனது உருவம்'' என்ற பொருளில் குறிப்புக் காணப்படுகிறது.

ஸ்ரீ முஷ்ணம் இக்காலத்தில் திருமால் கோயிலாகப் பெயர் பெற்று விளங்குகிறது. எனினும் முற்காலத்தில் இத்தலம் சிவன் கோயிலாலும் சிறப்பு வாய்ந்திருந்தது. முதலாம் குலோத்துங்க சோழனது ஆட்சியில் இவ்வூர் திருமால் தலம் ஆதிவராகநல்லூர் என்றும், சிவத்தலம் முடிகொண்ட சோழநல்லூர் என்றும் வழங்கப்பட்டுவந்தன. இவற்றுள் பின்னதில் கோயில்கொண்ட "திருமுட்டமுடைய மகாதேவர்" நித்தியேசுரர் என இக்காலத்தாரால் வழங்கப் பெறுவர். இக்கோயில் கோபுரத்தில் தான் தம்பிரான் தோழர் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

மானக்கஞ்சாறர் என்பது இயற்பெயரென்றும் தம்பிரான் தோழர் என்பது சிறப்புப் பெயரென்றும் கருதுகின்றனர். மானக் கஞ்சாறர் என்பதனுல் சிவனடிமைத் திறமும் தமிழ் புலமையுங் கொண்டு விளங்கிய இவர், கஞ்சாற நகரினர் என்று கருதப்படுகிருர். இது இந்நாளில் கஞ்சா நகர் என வழங்கப்படுகிறது. இந்நகர் திருவிந்தளூர் நாட்டைச் சார்ந்ததென்று கல்வெட்டாலறியப்படுகிறது.

திருப்பதியம் விண்ணப்பித்து விடைபெற்றவரெனப் படுதலால் திருமுட்டமுடைய சிவபிரான்மேல் பதிகம் டாடிய சில காலத்தில் இவர் சிவகதி அடைந்தாரென்பதும் பெறப் படுகிறது.

இவர் பாடிய பாடல்கள் இன்னவெனத் தெரியவில்லை. எனினும் இவரது திருப்பதியம் முட்டத்துச் சிவபிரான் திருமுன்பே நெடுங்காலம் ஓதப்பட்டு வந்ததாக வேண்டும்.

தம்பிரான் தோழர் என்ற சிறப்புப் பெயர் சுந்தரமூர்த்தி நாயனுருக்கு உரியதென்பது பலரும் அறிந்த செய்தி. அப்பெயரை இப்பெரியாரும் பெற்றிருத்தலால் அந்நாயனு ரோடு இவர் தொடர்புடையவரோ என்றும், அதனுல்

திருத்தொண்டத் தொகையில் சிறப்பிக்கப் பெற்ற "மலை மலிந்த தோள்வள்ளல் மானக்கஞ்சாறர்" என்பவர் இவர் தாமோ என்றும் அறிஞர்கள் ஐயுறலாம். தம்பிரான் தோழர் என்ற பெயர் மானக்கஞ்சாறர்க்கு உண்டென்றோ. திருமுட்டத்திற்குத் திருப்பதிகம் பாடியவர் அவர் என்றோ சேக்கிழார் அந்நாயனார் புராணத்தில் குறிப்பிடவில்லை. எனவே இதனை ஒருதலையாகச் சொல்வதற்கில்லை. இந் நிலையில் இவர் மானக்கஞ்சாறர் மரபில் தோன்றியவர் என்றோ, அந்நாயனார் பெயரைக் கொண்ட பிற்காலத்து அடியாரென்றோ கொள்ளலாம்.

## தம்பிரான்மார் ( )

**நூல்:** கண்ணிநுண் சிறுத்தாம்பு உரை.

கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற வைணவப் பிரபந்தம் மதுரகவியாழ்வாரால் செய்யப்பெற்றது. இது 11 செய்யுட்களைக் கொண்டது. இந்நூலுக்கு எழுதப்பட்டதே தம்பிரான்மார் உரையாகும்.

## தம்புசாமி நாயகர், நா. மு. ( )

**நூல்:** திருமேனித் தியான மஞ்சரி, (1894) பஞ்சகாயத் திருமணி மாலை (1894).

**திருமேனித் தியான மஞ்சரி:** இந்நூலில் ஆனந்தக் களிப்பும் திருமேனியைக் குறித்த கண்ணிகளும் நவமணிமாலை என்னும் துதிமாலையும் அமைந்துள்ளன.

**பஞ்சகாயத் திருமணிமாலை:** இது வெண்பாவினால் அமைந்த துதிமாலை.

## தம்புசாமிப்பிள்ளை (19 - நூ)

**நூல்:** 'சோதிட சிகாமணி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'சோதிட சிகாமணி' என்னும் நூல் கா. இராமசாமிப் பிள்ளை என்பவரால் இயற்றப் பெற்றது.

## தம்புச்சாமி முதலியார் (19 - நூ)

**ஊர்:** பவழை.

**நூல்:** மதுரைப்பிள்ளை என்பவர் மீது இயற்றப் பெற்ற 'மும்மணிமாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'மும்மணிமாலை' என்னும் நூல் த. செய்யப்ப முதலியார் என்பவரால் இயற்றப் பெற்றது.

## தம்பையா உபாத்தியாயர் (        )

**ஊர்:** இலங்கை, யாழ்ப்பாணம்.

**நூல்:** பிரலாப கவிதை.

## தம்பையா ஐசக் (20 - நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம்.

**வாழ்ந்த காலம்:** 1869 — 1941.

இவர் கொழும்பிலுள்ள புனித தாமஸ் கல்லூரியிலே பயின்றார். இவர் 1893 ஆம் ஆண்டில் சிலோன் ரிவியூ என்ற பெயருடன் ஓர் ஆங்கிலத்திங்களிதழைத் தோற்றுவித்து அதில் இலங்கையில் தோன்றிய பெரியார் பலருடைய வரலாறுகளை முறையாக எழுதிக்கொண்டு வந்தார். இரண்டு ஆண்டுகளின் பின்னர் 'பீரியடு' என்ற பத்திரிகையைத் தொடங்கி நடத்தினார். 1912இல் இங்கிலாந்துக்குச் சென்று கிரேய்ஸ் இன் என்னும் சட்டக் கல்லூரியில் பாரிஸ்டர் பட்டம் பெற்றார். 1913-ஆம் ஆண்டில் மலாயாவுக்குச் சென்று அங்கே நீதிபதியாகப் பணியாற்றியபொழுது கிறித்துவ சமய சாத்திரத்தில் இவருக்கு டாக்டர் பட்டம்

கிடைத்தது. இவர் இலங்கைக்குத் திரும்பி வந்தபோது 1924ஆம் ஆண்டிலே சமய குருவாக நியமிக்கப் பெற்றார்.

**நூல்:** இவர் எழுதிய ஆங்கில நூல்கள்: Psalms of a Saiva Saint, A Tamil Mystic, Forgleams of God, Erangelism in Ceylon, The Salt of the Earth, In the Days of Sambasiva, Golden Verse Collection of Ceylon.

Psalms of a Saiva Saint: தாயுமான சுவாமிகளின் சமரசக் கொள்கைகளை ஆங்கில மக்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்னும் நோக்கத்துடன் இத்தலைப்பில் அவர் பாடல்கள் ஆங்கிலத்தில் பெயர்க்கப்பட்டுள்ளன.

## தம்பையாபிள்ளை, எஸ். (19 - நூ)

**நூல்:** திருமரியாயிபேரில் தோத்திரப் பதிகம் (1888)

## தமரானந்தர் ( )

**நூல்:** தமரானந்த சூத்திரம் 16.

## தமிழறியும் பெருமாள், ஏலக்குழலி ( )

ஔவையாரையும் நக்கீரரையும் இயைபுப்படுத்தித் தமிழறியும் பெருமாள் கதை என ஒரு நூல் வழங்குகிறது. இஃது உண்மையல்லாத கற்பனைக் கதையைக் கூறுவது.

**நூல்:** இந்நூலிற் காணப்படும் வெண்பா யாப்பருங்கல விருத்தியில் வந்துள்ளது.

## தமிழாகர முனிவர் ( )

**ஊர்:** திருநெல்வேலி; சைவவேளாளர்.

இவர் தருமையாதீனத்தைச் சேர்ந்த திருஞானசம்பந்த தேசிகரிடம் தமது முதுமைப் பருவத்தில் தீட்சைபெற்றார்.

பின்னர் அவ்வாதீனத்தையே சேர்ந்தார். சிதம்பரம் குகை மடத்தைச் சார்ந்த ஞானப்பிரகாசரை ஞானகுருவாகவும், ஆசிரியராகவும் ஏற்றுப் புலமை பெற்றார். தென்தேசத் தலப் பயணத்தை மேற்கொண்டு சிந்து பூந்துறை சென்று அங்கு மடத்தில் தங்கியிருந்த திருஞான சம்பந்த தேசிகரைக் கண்டு அவரிடம் ஈடுபாடு கொண்டு அவருடைய தொண்டரானார்.

**நூல்:** ஞானசம்பந்த குருராயவட்டகம், சந்திர கலாமாலை, நெல்லையப்பர் நான்மணிமாலை, நெல்லை காவலமாலை, திருப்பணிமாலை, கலைமகள் இரட்டை மணிமாலை, நீதிசாரம், ஆசௌசதீபிகை, பிராயச் சித்தசமுச்சயம்.

**நீதி சாரம்:** இது வடமொழி நீதி சாரத்தின் தமிழாக்கம்; 100 செய்யுட்கள்.

**ஆசௌச தீபிகை:** இது சைவநன்மக்கட்குரியது. பிறப்பு சிறப்புக்களாலுண்டாகும் விலக்குகளை விளக்குவது. யாழ்ப்பாணம் மா. வைத்தியலிங்கம் பிள்ளை இதனை அச்சிட்டுள்ளார்.

**பிராயச் சித்த சமுச்சயம்:** இது மக்கட்குரிய கழுவாய்களைக் கூறுவது; 302 விருத்தங்கள் உள்ளன. நல்லூர் த. கைலாச பிள்ளை இதனை அச்சிட்டுள்ளார்.

## தர்க்க குடார தாலுதாரி (19 - நூ)

**வே. பெ.** திருஞான சம்பந்தப்பிள்ளை.

**ஊர்:** இலங்கை, யாழ்ப்பாணம்.

இவர் ஆறுமுக நாவலரின் மருகரும் மாணாக்கருமாவர்; ஞானப்பிரகாச அடிகளின் வழிமுறையினர். சிதம்பரம் சைவப்பிரகாச வித்தியாசாலையில் தலைமையாசிரியராகப் பணியாற்றியுள்ளார்.

**நூல்:** அரிகரதாரதம்மியம் (தமிழாக்கம்), வேதாகம நாம வாததீபிகை, நாராயண பரத்துவ நிரசனம், தருக்காமிர்தம், அட்டநேத்திர புராணம்.

## தருக்க வேதாந்தப் போதகாசிரியர் (20 - நூ)

**நூல்:** 'சிலையெழுபது - உரையினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'சிலையெழுபது' என்னும் நூல் கம்பரால் இயற்றப் பெற்றது. இந்நூலுக்கு, பேழைக்குடி துரைசாமி நாயகர் என்பவர் உரை வரைந்துள்ளார்.

## தருமசிவ முதலியார்

**நூல்:** மயிலம் சுப்பிரமணியர் தோத்திரப் பாமாலை.

இது விருத்தப்பாவினாலமைந்த பதிகப் பாமாலை.

## தருமதாசுப் பிள்ளை, தி. (19 - நூ)

**வாழ்விடம்:** திரிசிரபுரம்.

இவர் பழங்கால முறைப்படி கல்வி கற்றவர்; வித்துவான் என்ற சிறப்புப் பெயரும் பெற்றார்.

**நூல்:** அங்காளம்மன் பதிகம்.

## தரும்புத்திரன் கவிராயர் ( )

**ஊர்:** பாண்டிவளநாடு, ஆயாபட்டி.

**நூல்:** வாளெழுபது.

## தருமர் ( )

இவர் திருக்குறளுக்கு உரை கண்ட பழைய உரையாசிரியர்கள் பதின்மருள் ஒருவர். கி. பி. 13ஆம் நூற்றாண்டினரென்று கருதப்படும் பரிமேலழகருக்கு முற்பட்டவர்.

பழைய உரையாசிரியர் பதின்மருள் இன்று பரிமேலழகர், மணக்குடவர், பரிப்பெருமாள், காலிங்கர் ஆகிய ஐவர் இயற்றிய உரைகளே கிடைத்து அச்சில் வந்துள்ளன.

தருமர் உரை கிடைக்காத உரையுள் ஒன்று. கடவுள் வாழ்த்தில் 5, 6 ஆகிய இரண்டு குறள்களுக்கு மட்டும் இவருடைய உரை கிடைத்துள்ளது. நாலடியாருக்கு இவர் இயற்றிய உரை அச்சாகி வெளிவந்துள்ளது.

## தருமலிங்கக் கவிராயர் ( )

**ஊர்:** பொன்னூரர்.

**நூல்:** சாரங்கதரவிலாசம்.

இந்நாடகம் பழங்காலப் போக்கை ஒட்டி அமைந்துள்ளது. இந்நூலைப் பாராட்டித் திருத்தணிகை விசாகப்பெருமாளையர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## தருமலிங்கம் பிள்ளை (19 - நூ)

**ஊர்:** தஞ்சாவூர் மாவட்டம், பூண்டி.

இவர் தமது ஊரில் பள்ளி ஒன்றை ஏற்படுத்தி மாணவர்களுக்குக் கல்வி கற்பிக்கும் பணியை மேற்கொண்டார்.

**நூல்:** நாராயணசுவாமிகள் பேரில் கீர்த்தனைகள், பதிகம்.

நாராயண சுவாமிகள், தஞ்சாவூர் சதாசிவராயர் தோட்டத்தில் வாழ்ந்தவர். பால் சுவாமிகள் என்றும் பாபவிநாசர் சுவாமிகள் என்றும் காரணப்பெயர் பெற்றார். சித்துக்களில் வல்லவர்.

## தருமலிங்கம் பிள்ளை, தி, (19 - நூ)

**ஊர்:** திரிசிரபுரம்.

**நூல்:** திருவெள்ளறை இரட்டை மணிமாலை.

இந்நூலைப் புகழ்ந்து கோவிந்தபிள்ளை, இராமாநுசநாயகர் ஆகியோர் சாத்துக்கவி பாடியுள்ளனர்.

## தருமலிங்க முதலியார் (19 - நூ)

**ஊர்:** காஞ்சிபுரம்.

**நூல்:** 'சுப்பிரமணியர் தோத்திரப்பா' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'சுப்பிரமணியர் தோத்திரப்பா' என்னும் நூல் அ. சுப்ப ராயச் செட்டியார் என்பவரால் இயற்றப்பெற்றது.

## தலைமலை கண்டதேவர் (18 - நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம் காடடர்ந்தகுடி; மறவர் குலம்.

இவர் அந்தகராக இருந்தார். ஆனால் கல்வியில் நன்கு தேர்வு பெற்று விளங்கினர். இவர் மறவராயினும் குலத் தொழிலை மேற்கொள்ளாமல் இளமை முதலே சிவசிந்தனை உடையவராகத் திகழ்ந்தார்.

**நூல்:** மருதூர்யமகவந்தாதி.

இந்நூல் திருப்புடைமருதூரில் எழுந்தருளியுள்ள சிவ பெருமான் மீது இயற்றப்பெற்றது.

## தவப்பிரகாசர் மாணவர் ( )

**நூல்:** தவப்பிரகாசர் துதி.

## தன்வந்திரி ( )

**தந்தை:** தீர்க்கதர்மர்; சித்தர் வகுப்பினர்.

வடநாட்டில் கி. பி. ஐந்தாம் நூற்றுண்டில் புகழ் பெற்று விளங்கிய தன்வந்திரி என்ற மருத்துவரினும் வேருனவர்

இவர். தென்னுட்டில் இவர் சிறந்து விளங்கியதாகவும், தென்னுட்டிலேயே இவர் அடங்கியதாகவும் பழம் பாடலொன்று கூறுகின்றது. இவரும் ஆயுள் வேத நூலினைக் கரை கண்டவராகத் திகழ்ந்துள்ளார்.

**நூல்:** தன்வந்திரி நிகண்டு, செயநீர், வாகடம், வைத்திய சிந்தாமணி, சிமிட்டு ரத்தினச்சுருக்கம், கலைஞானம், தன்வந்திரி பச்சைவெட்டு.

## தனபால பதுமாவதி அம்மையார் (20 – நூ)

**ஊர்:** தொண்டைநாடு – சென்னை.

**தாய்:** காமாட்சி. **தந்தை:** புட்பால அப்பாயி நாயுடு.

இவர் 1896-ஆம் ஆண்டில் பிறந்தார். செந்தமிழ் இரத்திஞகரம் சண்முக சுந்தர முதலியாரிடம் தமிழிலக்கிய நூல்கள் பலவற்றைப் பாடங் கேட்டுத் தெளிந்தார். 1912-ஆம் ஆண்டில் அரங்கசாமி நாயுடு என்பவரைத் திருமணம் புரிந்து கொண்டு இல்வாழ்க்கையை மேற்கொண்டார். இவருக்கு மூன்று பெண்மக்களும் இரண்டு ஆண்மக்களும் தோன்றினர்.

இவர் தமக்கையாராகிய கிருட்டிணவேணி அம்மையாரோடு தமிழ்நாட்டில் பல இடங்களுக்கும் சென்று சொற்பொழிவாற்றிப் பெருஞ் சிறப்புப் பெற்ருர். சாரதா வித்தியாலயம் என்னும் பள்ளியில் ஊதியமின்றிக் கல்வி கற்பித்தார்.

**நூல்:** பெரியாழ்வார் பிள்ளைத்தமிழ், வசந்தையார், மாதவியார், மலையாநாடு, இசைச் செல்வியார், அறச் செல்வியார், ஆண்டாள்.

'பெரியாழ்வார் பிள்ளைத் தமிழ்' என்பது பெரியாழ்வார் இயற்றிய பிள்ளைத் தமிழைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி நூல்.

'வசந்தையார்' என்பது ஒரு புதிய நூல். இவர் இறைவனிடத்துத் தலைசிறந்த அன்பர். செங்கோலரசரின்

செப்பமும் அமைச்சரின் மனப்போக்கும் அரசியார் குடிகளிடம் காட்டும் அருளும் அவர் இறைவனிடத்துக் கொண்ட அன்பும் அன்பர்களிடத்து இறைவன் அருள் செய்யும் முறைமையும் இந்நூலில் நன்கு விளக்கப் பட்டுள்ளன.

'மாதவியார்' என்பது கோவலன் காதற் கிழத்தியான மாதவியின் வரலாற்றைக் கூறுவது.

'மலையாநாடு' என்பது மலாயா நாட்டைப் பற்றியும் அந்நாட்டிற்குச் சென்ற கடற் செலவைப் பற்றியும் கூறுவது.

இசைச் செல்வியார் என்பது சீவகசிந்தாமணியிற் கூறப் பட்ட ஒரு பெண்மணியைப் பற்றியது.

இவர் இயற்றிய தனிப்பாடல்கள் பல.

## தனிமகனார் (சங்ககாலம்)

இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. தனிமகனார் என்பது, இவர் இயற்றியுள்ள நற்றிணை 153-ஆம் பாடலில் வரும் "பாழ் காத்திருந்த தனிமகன் போன்றே" என்ற தொடரால் வந்த சிறப்புப் பெயராகும். இவருடைய ஊர், குலம், தொழில் முதலிய பிறவிவரங்கள் தெரியவில்லை.

**நூல்:** நற்றிணை 153.

## தாசரதிச் செட்டியார் (19 - நூ)

**ஊர்:** திருப்புத்தூர்.

**நூல்:** 'திருப்புத்தூர் புராணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'திருப்புத்தூர் புராணம்' க. குமாரசாமி என்பவரால் இயற்றப் பெற்றது.

## தாசிபெரிய குப்பு (19 - நூ)

**ஊர்:** சோழநாடு, மாயூரம்.

இவள் இலக்கிய இலக்கணங்களை நன்குணர்ந்து சிறந்த புலமையுடையவளாக விளங்கினாள். இவளுடைய புலமைச் சிறப்பால் இவளிடம் பலர் சிறப்புப் பாயிரம் பெற்றனர்.

**நூல்:** மனுச் சோழச் சக்கரவர்த்தி சரித்திரப்பா என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## தாண்டவ சாத்திரி ( )

**நூல்:** பாகவத சாரம்.

## தாண்டவராய அடிகள் (20 - நூ)

**ஊர்:** கானிலப்பாடி.

**நூல்:** 'சிவயோக சாரம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'சிவயோக சாரம்' என்னும் நூல் பூரணாநந்த அடிகள் என்பவரால் இயற்றப்பெற்றது.

## தாண்டவராயக் கவிராயர் ( )

**ஊர்.** சென்னை மயிலாப்பூர்.

இவர் பூம்பாவை வேலப்ப முதலியாரின் ஆதரவில் வாழ்ந்திருந்தவர்.

**நூல்:** 'திருமயிலை இறைவன்மீது யமக அந்தாதி'.

## தாண்டவராய சாமிகள் ( )

**ஊர்:** நன்னிலம்.

இவருடைய ஆசிரியர் நாராயணகுரு. தாண்டவராய சாமிகள் வேதாந்த நூல்களில் மிகுந்த பயிற்சி பெற்றவர்; வடமொழி தென்மொழி இரண்டினும் வல்லவர்.

**நூல்:** கைவல்லிய நவநீதம்.

இந்நூல் தத்துவ விளக்கப்படலம், சந்தேகந்தெளிதற் படலம் என்ற இருபிரிவினையுடையதாக அமைந்திருக்கின்றது. இந்நூலுக்குப் பிறைசை அருணசல அடிகள், ஈசூர் சச்சிதா நந்த அடிகள், சிதம்பரம் பொன்னம்பல அடிகள் ஆகியோர் உரை இயற்றி இருக்கின்றனர். இவ்வுரைகளிலெல்லாம் பொன்னம்பல அடிகளாருடைய உரையே மிகச் சிறந்ததாக இக்காலத்தில் வழங்குகிறது.

## தாண்டவராய செட்டியார் ( )

**நூல்:** திருமயிலை செங்கழுநீர் விநாயகர் பதிகம்.

## தாண்டவராயத் தம்பிரான் (19 - நூ)

**ஊர்:** தஞ்சை மாவட்டம், திருவிடைமருதூர்; சைவ வேளாளர்.

இவர் வேலூர் சுப்பிரமணிய தேசிகரிடம் தீக்கை பெற்றுத் தாண்டவராயத் தம்பிரான் என்ற தீக்கைப் பெயரினைப் பெற்றார். திருவாவடுதுறை ஆதீனத்தில் சைவ சித்தாந்த நூல்களைக் கற்றார். சென்னைத் திருவாவடுதுறை ஆதீன மடத்தில் சில ஆண்டுகள் தங்கிப் பெரும்புலவர் சபாபதி முதலியாரிடம் நூற்கல்வியில் ஏற்பட்ட சில ஐயங்களைக் கேட்டறிந்தார். பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யிடமும் இவருக்குத் தொடர்புண்டு. மேலகரம் சுப்பிரமணிய தேசிகருக்கு இவர் பல நூல்களைக் கற்பித்துள்ளார்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## தாண்டவராய நாவலர் (18 - நூ)

**வே. பெ.** தாண்டவராயக் கவிராயர்.

**ஊர்:** தொண்டைநாடு.

**நூல்:** திருமயிலையமகவந்தாதி, சிங்காரவேலர் வெண்பா, சிங்காரவேலவர் பிள்ளைத்தமிழ்.

இந்நூல்களை இவர் மயிலாப்பூரில் வாழ்ந்த பூம்பாவை வேலப்ப முதலியாரின் வேண்டுகோளின்பேரில் இயற்றினரென்று தெரியவருகின்றது.

## தாண்டவராய பிள்ளை, (19 - நூ)

**ஊர்:** சாணிப்பூண்டி.

**நூல்:** வேடீசுவரப் பதிகம் (1898)

இது அணிமுனூர் மங்கலத்தில் எழுந்தருளிய வேடியப்பரைக் குறித்த துதிமாலை; பதினன்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தத்தாலாகியது.

## தாண்டவராய முதலியார் - 1 (19 - நூ)

**ஊர்:** சென்னையை அடுத்த வில்லிவாக்கம்.

**மறைவு:** 1850.

இவர் ஆங்கிலம், தெலுங்கு, கன்னடம், இந்துஸ்தானி, மராட்டி, வடமொழி முதலிய மொழிகளைக் கற்றவர். உழலூர் வேலப்ப தேசிகர், தொல்காப்பியம் வரதப்ப முதலியார், சீகாழி வடுகநாதத் தம்பிரான் முதலியோரிடம் தமிழ் பயின்ருர். இவர் இயற்றமிழாசிரியர் இராமாநுசக் கவிராயர், அவருடைய மாணவர் சரவணப் பெருமாளையர் முதலியோரை அடுத்து இலக்கண இலக்கிய வாதங்களை நிகழ்த்தியுள்ளார்.

சென்னைக் கல்விச் சங்கத்தின் தலைமைத் தமிழ்ப் புலவராக விளங்கிய இவர், அச்சங்கம் கலைக்கப்பட்ட பின் 1843இல் செங்கற்பட்டு நீதிமன்றத்தின் நடுவரானார். நூலாசிரியராகத் திகழ்ந்த இவர், வீரமா முனிவரின் சதுரகராதியினை மூன்று பாகங்களாக 1824இல் பதிப்பித்துள்ளார். இலக்கணப் பஞ்சகம் என்ற நூலை 1835இல் பதிப்பித்துள்ளார். இதில் நன்னூல், அகப்பொருள், புறப்பொருள் வெண்பாமாலை முதலிய நூல்களின் மூலப்பகுதிகள் தொகுக்கப்பெற்றுள்ளன. சூடாமணி நிகண்டு முதல் பத்துப் பகுதிகளையும் சேந்தன் திவாகரம் முதல் எட்டுப் பகுதிகளையும் பதிப்பித்துள்ளார்.

**நூல்:** இலக்கண வினாவிடை (1820), பஞ்சதந்திரக்கதை (மராட்டிய மூலத்திலிருந்து தமிழாக்கம் 1826) கதாமஞ்சரி (1826) திருத்தணிகை மாலை, திருப்போரூர்ப் பதிகம்.

## தாண்டவராய முதலியார் - 2 (19 - நூ)

**வாழ்விடம்:** சென்னை.

இவர் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாரின் ஆசிரியர். 1839 ஆம் ஆண்டு வரை சென்னைக் கல்விச் சங்கத்தின் தலைமைப் புலவராக விளங்கினார். இவர் நாலடியாரையும் திவாகரம் முதல் எட்டுத் தொகுதிகளையும் ஆய்ந்து பதிப்பிக்கக் கருதியதாகக் கூறுவர்.

**நூல்:** இலக்கண வினாவிடை (1926).

## தாண்டவராய முனிவர் (19 - நூ)

**ஊர்:** பாளையங்கோட்டை என வழங்கும் தென்னபுரி.

இவர் கடம்பூர்ச் சுயம்பிரகாச தேசிகரிடம் அருளுரை பெற்றுத் துறவியானார்; புலமையாளராகவும் திகழ்ந்தார்.

**நூல்:** வேதாந்த சங்கற்ப நிராகரணம், வைராக்கிய சதகத் தோத்திர உரை, சுயம்பிரகாச தேசிகர் பிள்ளைத் தமிழ், திருத்தொண்டர் போற்றிக் கலிவெண்பா, விளாகம்

நிருத்த விநாயகர் பதிகம், திருத்தொண்ட ரந்தாதி, க்ஷேத்திரக் கலிவெண்பா, சிவ சந்நிதான முறை.

இந்நூல்களுள் 'சிவசந்நிதான முறை' என்ற நூலில் புலியூ ரந்தாதி, அன்புறுமாலை, வண்ணப் பதிகம், கவி சங்கரம், பல சந்தமாலை, நவரத்தினமாலை, திரிபந்தாதி, தட்சிணு மூர்த்தி வெண்பா, திருவருள் வியப்பு, திருவருட்பஞ்சகம், திருவளர்பதிகம். சச்சிதானந்த வாழ்வு, காப்பியக் கலித் துறை, சங்கீர்த்தன பஞ்சகம், வேண்டுதல் புலம்பல், முறையீடு முதலியன உள்ளன. 416 செய்யுட்கள் காணப் படுகின்றன.

## தாண்டவராயர் ( )

**நூல்:** திருமயிலைக் கோவை.

## தாண்ட வேசர் ( )

**நூல்:** 'பாகவத சாரம்'.

இந்நூல் கருப்பைநகர் என்னும் ஊரில் வாழ்ந்த பெரி யாண்டித்துரை என்பவர் விருப்பப்படி பாடப் பெற்றது.

## தாணுச் செட்டியார் (20 - நூ)

**ஊர்:** பறக்கை.

**நூல்:** 'திருச்செந்தில் பதிற்றுப் பத்தந்தாதி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'திருச்செந்தில் பதிற்றுப் பத்தந்தாதி' என்னும் நூல் தா. மாணிக்கவாசகம் பிள்ளை என்பவரால் இயற்றப் பெற்றது.

## தாத தேசிக தாதாசாரியார் (20 - நூ)

**நூல்:** வால்மீகி ராமாயண வசனம் (தமிழாக்கம் - 1902)

## தாம்பரப் புலவர் (19 - நூ)

**நூல்:** மறைசைக் கலம்பகம், மறைசைத் திருப்புகழ், நீர்வை வெண்பா, வல்லிபுரநாதர் பதிகம்.

## தாமத்தர் ( )

இவர் திருக்குறளுக்கு உரைகண்ட பழைய உரையாசிரியர் பதின்மருள் ஒருவர். பரிமேலழகருக்குக் காலத்தால் முற்பட்டவர். இவர் இயற்றிய உரை இன்று கிடைக்கவில்லை. கடவுள் வாழ்த்தில் 5, 6ஆம் குறட்பாக்களுக்கு மட்டும் இவருடைய உரை கிடைத்துள்ளது. இவரைப் பற்றி வேறு எந்தச் செய்தியும் தெரியவில்லை.

## தாமப்பல் கண்ணனார் (சங்ககாலம்)

**இ. பெ:** பல்கண்ணனார்.

**ஊர்:** தாமல்; அந்தணர்.

பல் கண்ணனார் என்பது இந்திரனுக்குரிய 'ஆயிரங் கண்ணோன்' என்பது போன்ற பெயராக இருக்கலாம். சிலர் 'பல்கண்ணனார்' என்பது உறுப்பால் பெற்ற பெயரென்றுங் கூறுவர்.

இவர் பிறந்த ஊர் தொண்டைநாட்டில் காஞ்சிபுரத்திற்கு அருகில் மேற்குத் திசையில் அமைந்தது. இடைக்காலச் சோழராட்சியில் சிறப்புற்றிருந்த இவ்வூரைத் தாமர் என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. புலவர் பெயர் 'தாமர்ப் பல்கண்ணனார்' என்றிருந்து 'தாமற் பல் கண்ணனார்' என மாறியிருக்கலாம் என்பது ஒருசாரார் கருத்து. 'தாமல் பல் கண்ணனார்' என்பது தாமப் பல் கண்ணனார் என மாறியிருக்க வேண்டுமென்பது மற்றொரு சாரார் கருத்து. தற்காலத்தில் இவ்வூரின் பெயர் தாமல் என வழங்குகிறது.

இவர் இயற்றிய புறநானூற்றுப் பாடலில் (43) 'நின் முன்னோரெல்லாம் பார்ப்பார் நோவன செய்யலர்' என்று

குறிப்பிடுதலைக் கொண்டு இவரை அந்தண ரென்பர். இவருடைய பாடலிலிருந்து இவருக்கும் சோழன் நலங் கிள்ளியின் தம்பியான மாவளத்தானுக்கும் இடையே இருந்த நட்புப் புலப்படுகின்றது.

**நூல்:** புறம் 43.

## தாமஸ் சேசுதாசக் கவிராயர் (19 - நூ)

**நூல்:** வாக்கிய லக்ஷணம். (1897)

வாக்கிய இலக்கணம் வகுத்துரைப்பது; சொற்றொடர்களைப் பற்றி நன்னூல் முதலிய நூல்களில் சில விதிகள் கூறப் பெற்றிருப்பினும் அவை நிரம்பிய இலக்கணம் ஆகா. அக் குறையை நிறைவு செய்தற்பொருட்டு இயற்றப் பெற்றது. இந்நூல்.

## தாமோதரம் பிள்ளை (19 - நூ)

**ஊர்:** ஈழநாட்டில் வதிரி.

இவர் இந்தியநாட்டில் சாஸ்திரியார் ஒருவரிடம் வேதாந்த, சித்தாந்த நூல்களைப் பாடங் கேட்டவர். இந்தியாவிலும், யாழ்ப்பாணத்திலும் சைவசித்தாந்தச் சொற்பொழிவுகள் பல நிகழ்த்தியுள்ளார்.

**நூல்:** 'ஞானசித்தி'.

இது ஒரு தமிழிதழ்; சைவசித்தாந்தக் கருத்துக்களை எடுத்துரைப்பது.

## தாமோதரம் பிள்ளை, க. (19 - நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம், சிறுக்குளம்.

**தந்தை:** கற்பகம்பிள்ளை.

**நூல்:** சாத்தூர்ச் சிலேடைவெண்பா, சிறுக்குளம் விநாயகர் அந்தாதி.

## தாமோதரம் பிள்ளை சி. (20 - நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம் வண்ணார் பண்ணை

**தந்தை:** சின்னத்தம்பியார்; **தாய்:** அன்னம்மையார்.

**வாழ்ந்த காலம்:** 1883 – 1921.

இவர் செந்திநாதையர், இளையதம்பி உபாத்தியாயர் முதலியோரிடம் தமிழ் நூல்களைப் பாடங் கேட்டார். வண்ணார் பண்ணை வைத்தீசுவரன் கோயில் வசந்தமன்றத்திலும், சைவப்பிரகாசப் பாடசாலையிலும் வாரந்தோறும் நடைபெற்ற சைவசமயச் சொற்பொழிவுகளைக் கேட்டு சமய அறிவு வாய்க்கப் பெற்றார். 1879ஆம் ஆண்டில் சிதம்பரம் சென்று அங்கு ஒரு பள்ளியில் ஆசிரியராகப் பணி புரிந்தார். உடையூர் கிராமத்தில் சொந்தமாக ஒரு பள்ளியை நிறுவி நடத்தினார். சபாபதி நாவலர் சென்னையில் தொடங்கிய ''ஞானாமிர்தம்'' என்ற இதழின் ஆசிரியராகவு மிருந்தார். பின்னர் ''இந்துலகுலேக சங்கம்'' என்ற அமைப்பில் சேர்ந்து சென்னை தொடங்கித் திருநெல்வேலி வரையுள்ள ஊர்களில் சமயச் சொற்பொழிவுகள் செய்தார். இவர் பணியாற்றிய அமைப்புச் சைவ சமயத்தை வளர்க்கவும் கிறித்தவ சமயம் பரவாமல் தடுக்கவும் அமைக்கப்பெற்றது. ''விசயத்துவசம்'' என்ற இதழையும் இவர் துவங்கி நடத்தினார். செட்டி நாட்டுத் தேவ கோட்டையில் தங்கிப் பலருக்குச் சிவஞானபோதம் முதலிய நூல்களைப் பாடம் சொன்னார். இலங்கைக்குத் திரும்பிய பின் விவேகாநந்த சபையின் பொற்பொழிவாளராக இருந்து சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். சைவசமய வளர்ச்சி கருதி ''ஞானசித்தி'' என்ற இதழையும் தொடங்கினார்.

**நூல்:** சந்தியாவந்தன ரகசியம், சைவசிராார்த்த ரகசியம், கதிர்காமபுராண வசனம், சைவ சித்தாந்த சாரமான மரபு, கடம்பவனம் இரத்தினசலம் மரகதாசலம் தலமான்மியங்கள்.

சிவஞான சித்தியாருக்கு இவர் எழுதிய உரை ஒன்று இருப்பதாகத் தெரிகிறது. ஆனால் அவ்வுரை அச்சேற வில்லை.

## தாமோதரம் பிள்ளை, சி. வை. (19 - நூ)

**ஊர்:** ஈழநாட்டில் சிறுப்பிட்டி.

**தந்தை:** வைரவநாதபிள்ளை; **தாய்:** பெருந்தேவி அம்மாள்.

**வாழ்ந்த காலம்:** 1832 — 1901.

சிறந்த தமிழ்த் தொண்டராகிய இவர், தமிழ் மொழியைப் புறக்கணிப்போரைக் கண்டிக்கும் இயல்பினர். இளமைக் காலத்தில் முதலில் தம் தந்தையாரிடம் நீதி நூல்களைக் கற்றார். சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவரின் பாட்டனார் முத்துக்குமாரக் கவிராயரிடம் இலக்கண நூலைக் கற்றார். தெல்லிப் பழை, அமெரிக்க மிஷன் பள்ளியில் ஆங்கிலம் கற்றார். செமினாரி என வழங்கும் சாத்திரக் கலா சாலையில் 1844-ஆம் ஆண்டில் சேர்ந்து எட்டாண்டுகள் கல்வி பயின்றார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் பி. ஏ. பட்டமும், பி. எல். பட்டமும் பெற்றார். முதலில் கோப்பாய் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் ஆசிரியராகவும் பின்னர் 'தினவர்த்தமானி' என்ற இதழின் ஆசிரியராகவும், 1857இல் கள்ளிக்கோட்டை அரசினர் கல்லூரியில் தலைமையாசிரியராகவும் பின்னர் சென்னை அரசியல் வரவுசெலவுக் கணக்கு நிலையத் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். சிறிது காலம் இவர் வழக் குரைஞராகத் தொண்டாற்றியுள்ளார் 1887 முதல் புதுக் கோட்டை உயர்நிலை நீதிமன்ற நீதித் தலைவராயிருந்து தொண்டாற்றியுள்ளார்.

இவரது தமிழ்த் தொண்டுகளில் தலையாய தமிழ்த் தொண்டு தமிழ் நூல்களைப் பதிப்பித்தமையேயாகும். இவருடைய பதிப்புக்கள் ஏடுகளை ஒப்பு நோக்கிப் பாட வேறுபாடுகளுடன் பதிப்பிக்கப்பட்டவை என்பது குறிப்பிடத் தக்கது. இவருடைய பதிப்புக்களில் ஆராய்ச்சி முன்னுரைகள் அடங்கியுள்ளன.

**பதிப்பு நூல்கள்:** *நீதிநெறிவிளக்கவுரை, வீரசோழியம் (1881) தணிகைப் புராணம் (1883), இறையனாரகப் பொருள் (1883), தொல்காப்பியப் பொருளதிகாரம் (1885), கலித்தொகை (1887), இலக்கண விளக்கம், சூளாமணி (1900), தொல் காப்பியச் சொல்லதிகாரம் (1900), தொல்காப்பியம் (எழுத்ததிகாரம் - நச்சினார்க்கினியம்).*

**நூல்:** *சூளாமணி வசனம், சைவமகத்துவம், நட்சத்திர மாலை, ஆதிஆகம கீர்த்தனம், கட்டளைக் கலித்துறை.*

## தாமோதரனார் (சங்ககாலம்)

**இ. பெ.** *தாமோதரன்.*

இவர் தெய்வத்தால் பெயர் பெற்றவரென்று குறிப்பிடப் பெறுகின்றார். தாமோதரன் என்பது திருமாலின் பன்னிரு திருநாமங்களுள் ஒன்று. அப்பெயருடன் 'ஆர்' விகுதி சேர்க்கப் பெற்றுத் தாமோதரனார் என வழங்கப்படுகின்றார். இவர் திருமாலின் திருநாமங்களுள் ஒன்றைத் தம் பெயராகக் கொண்டுள்ளமையால் வைணவராக இருக்கலாமென்று கருதுகின்றனர்.

குறுந்தொகையில் 92-ஆம் பாடல் இவர் பாடியது சிலர் குறுந்தொகை 195-ஆம் பாடலும் இவருடையதென்று கருதுகின்றனர்.

**நூல்:** குறுந்தொகை 92.

## தாயங் கண்ணனார் (சங்க காலம்)

**இ. பெ.** *கண்ணன்.*

**ஊர்:** *எருக்காட்டூர்; அந்தணர்.*

இவர் தெய்வத்தால் பெயர் பெற்ற புலவருள் ஒருவர். இவர் பெயர் தாயம் கண்ணனார், கண்தயங் கண்ணனார், இதையங்கண்ணனார், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்,

எருக்காட்டூர்த் தாயம் கண்ணனார், ஏர்க்காட்டூர்த் தாயங் கண்ணனார் என்ற வேறுபாடுகளுடன் வழங்கப் பெறுகின்றது.

இப் பெயர்களுக்கு உரியவரை ஒரே புலவராகவும், தாயங்கண்ணனார், எருக்காட்டூர் தாயங்கண்ணனார் என இருவராகவும், தாயங்கண்ணனார், கதையங்கண்ணனார், என இருவராகவும், தாயங்கண்ணனார், தாயங்கண்ணன், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் என மூவராகவும் ஆராய்ச்சியாளர்கள் பலவாறாகக் கருதுகின்றனர்.

எருக்காட்டூர் இவருடைய ஊர். இது இவருடைய பிறந்த ஊரா அல்லது தாயமாகப் பெற்ற ஊரா என்பது ஆராய்தற்குரியது. இவ்வூர் சோழநாட்டில் நன்னிலம் கோட்டத்தில் கவலக்குடிக்குக் கிழக்கிலும் குளிக்கரைப் புகைவண்டி நிலையத்திற்கு மேற்கிலும் உள்ள தென்பர். இது திருவாரூருக்குத் தென்மேற்கில் மூன்று நாழிகை வழித் தொலையில் உள்ளது என்று கூறுவர். இவ்வூரை அடுத்துள்ள மணற்குன்று என்னும் ஊரினை 'எருக்காட்டூர்ச் சேரிக்குப் பிடாகையான மணற்குன்று' எனத் திருக்கடவூர் கல் வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

**நூல்:** அகம் 105, 132, 149, 213, 237, 319, 357; குறுந் தொகை 319; நற்றிணை 219; புறம், 356, 397.

## தாயங் கண்ணியார் (சங்ககாலம்)

இ. பெ. கண்ணி.

பெயரொற்றுமையைக் கொண்டு தாயங்கண்ணனார் என்னும் புலவரோடு இவருக்கு ஏதோ ஒருவகையில் தொடர்பு இருந்திருக்க வேண்டுமென்று கொண்டோ மானால் அவருக்குக் 'கண்ணன்' என்று இயற்பெயர் அமைந்தது போல இவருக்குக் 'கண்ணி' என்பது இயற் பெயராயிற்று என்று கொள்ளலாம்.

காடுவாழ்த்துப் பாடிய ஒரே புலவராகத் தாயங்கண்ணனார் திகழ்வதையும் தாபத நிலையைப் பாடிக் கைம்மை நோன்

பினைப்பற்றித் தாயங்கண்ணியார் மிக உருக்கமாகக் கூறி வருந்துவதையுங் கண்டால் இவ்விருவரும் உறவினராக இருந்திருக்கவேண்டுமென்றும் இருவருக்கும் பொதுவான துயரத்தை விளைவிக்கும் வகையில் இவர்கள் அன்பிற்குரியோர் மறைந்திருக்க வேண்டுமென்று கருதுவதில் தவறில்லை.

**நூல்:** புறம் 250.

## தாயினல்ல பெருமாள் முனையதரையன் (13 – நூ)

இவர் கல்வெட்டுக்களால் அறியப் பெறும் புலவர்களிலொருவர். சிதம்பரம் தெற்குக் கோபுரத்தெதிரில் உள்ள நந்தி மண்டபத்தே வரையப்பெற்ற சாசனமொன்று, ஆறு பாடல்கள் உடையதாக அமைந்துள்ளது. அவற்றுள் ஐந்து செய்யுட்கள், பாண்டியன் பொருட்டுச் சோழனுடன் தில்லைப்பக்கத்துப் போர்புரிந்த 'பனைசையாறுடையான் முனையன் ஆதித்தன் வல்லையன்' என்ற படைத்தலைவனது வெற்றித் திறத்தைப் புகழ்ந்துரைப்பன. இவை பாடிய புலவர், புவனேகவீரத் தொண்டைமானான தாயினல்ல பெருமாள் முனையதரையன் என்பார் என்று அச்சாசனங் கூறுகின்றது.

'புவனேக வீரன்' என்ற சிறப்புப்பெயர் மாறவர்மன் விக்கிரம பாண்டியனுக்கும் (கி. பி. 1283) பெருவழக்காகும். எனவே இப்பெயரைக் கொண்டுள்ள தாயினல்ல பெருமாள் விக்கிரம பாண்டியன் காலத்தவரென்றும், அப்பாண்டியன் படைத்தலைவனே இவரால் புகழப்பட்டவனென்றும் கருதப் பெறுகின்றது.

தாயிலுநல்ல சோளீசுர முடையார் என்பது சேலம் மாவட்டம் ஆறகலூர்ச் சிவபெருமான் திருப்பெயராகும். மூன்றும் குலோத்துங்கன் காலத்தும் தாயிலு நல்ல பெருமாள் என்ற தலைவனொருவன் அப்பக்கத்தவனாகக் காணப் பெறுகின்றான். இவற்றை நோக்கின் இப்புலவரும் அப்பகுதியைச் சேர்ந்தவரென்று கருதலாம்.

## தாயுமான சாமிகள் (18 - நூ)

**ஊர்:** வேதாரணியம் என்று வழங்கும் திருமறைக்காடு.

**தந்தை:** கேடிலியப்பப்பிள்ளை; **தாய்:** கசவல்லி அம்மை; வேளாளர்.

**வாழ்ந்த காலம்:** 1705 — 1742.

திருச்சிராப்பள்ளியில் கோயில் கொண்டுள்ள தாயுமான வரைத் தொழுது இவரைப் பெற்றமையால் இவருக்குத் தாய் தந்தையர் தாயுமானவர் என்று பெயர் வைத்தனர். இவருடைய தந்தையார் திருச்சிராப்பள்ளியில் ஆட்சி செய்துகொண்டிருந்த விசயரங்க சொக்கநாதரிடம் அமைச்சராக இருந்தார். தாயுமானவர் கல்வி கற்றுத் தமிழிலும் வடமொழியிலும் சிறந்த புலமை பெற்ருர். தந்தையார் இறந்தபின் அரசர் வேண்டுகோளுக்கிணங்கி அமைச்சர் பதவியை இவர் ஏற்றுக் கொண்டார். ஆயினும் உலகியலில் இவர் மனம் ஈடுபடவில்லை.

இவர் திருச்சிராப்பள்ளியில் மௌனகுரு என்னும் குரு மூர்த்தியைக் கண்டு வணங்கி அவருடைய மாணவராகித் தீட்சைபெற விரும்பினர். ஆனல் மௌனகுரு எதுவுங் கூருமல் மௌனமாகவே இருந்தார். தீட்சையருள வேண்டும் என்று மீண்டும் வேண்டிக் கொண்டபொழுது 'சும்மா இரு' என்று மட்டுமே கூறி வந்தார். இதனையே தாயுமானவர் தம் குரு அருளிய அறிவுரையாகப் பல பாடல்களிற் குறிப் பிடுகின்ருர்.

இவர் மட்டுவார் குழலி என்னும் மங்கையை மணஞ் செய்துகொண்டு இல்லறம் நிகழ்த்திக் கனகசபாபதி என்னும் மகனைப் பெற்ருர். தம்மனைவி இறந்தவுடன் துறவுபூண்டார்.

தாயுமானவர் பல தலங்களுக்குச் செல்லுவதிலும் பாடல்கள் இயற்றுவதிலும் தம் மாணவர்களுக்கு அறிவுரை கூறுவதிலும் காலத்தைக் கழித்து வந்தார். இறுதியில் இராமநாதபுரத்தில் 1742-இல் சிவபதம் அடைந்தார்.

தாயுமானவருடைய பாடல்களில் சைவ சித்தாந்த நுட்பங்கள் தெளிவாகக் காணப்படுகின்றன. இவருடைய சமயக் கருத்துக்களின் சாரம் முழுவதையும் இவருடைய 'ஆநந்தக் களிப்பு' என்னும் பாடலில் காணலாம். இந்த ஆநந்தக் களிப்பில் ஆன்மாவைக் காதலியாகவும் ஆண்டவனைக் காதலனாகவும் பாடுகின்றார். இந்தப் பாடலில் பத்தியோகமும், ஞானயோகமும் சேர்ந்து ஒன்றுவதும் இறைவனைக் குருவாக அடைந்து இன்பவாழ்வு பெறும் ஆன்மாவின் வரலாறும் சித்தரிக்கப்பட்டுள்ளன. வேதாந்த சித்தாந்தக் கொள்கையும் இந்தப் பாடலில் வற்புறுத்தப்பட்டுள்ளது. சித்தர் கணம் என்னும் பாடலில் சித்தர்களை "வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற வித்தகச் சித்தர் கணமே' எனப் போற்றுகின்றார். எல்லா மதங்களையும் ஒன்றுபோற் கருதியது தாயுமானவரிடம் காணப்படும் சிறந்த குணங்களில் ஒன்றாகும்.

**நூல்:** தாயுமானவர் திருப்பாடற்றிரட்டு.

இந்நூலில் **1451** செய்யுட்கள் உள்ளன.

## தாயுமான முதலியார் (      )

**ஊர்:** அத்திப்பேடு.

**நூல்:** சிவதல மான்மியச் சுருக்கம் என்னும் நூலுக்குச் சிறப்புப்பாயிரம்.

இந்நூல் முருகேச முதலியார் என்பவரால் இயற்றப் பெற்றது

## தாவீதுநாத சாமி (19 - நூ)

**நூல்:** தேம்பாவணிக் கீர்த்தனையைப் பாராட்டிப் பாடிய சிறப்புப்பாயிரம்.

தேம்பாவணிக் கீர்த்தனை பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் சென்னைப் பெரிய மேட்டில் வாழ்ந்திருந்த

ஆரோக்கிய நாயகரால் இயற்றப் பெற்றது. இந்நூலைப் பாராட்டித் திருத்தணிகை விசாகப் பெருமாளையர், அட்டாவதானம் வீராசாமிச் செட்டியார், யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம் பிள்ளை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## தாவீது யோசேப்பு உபாத்தியாயர் (19 - நூ)

இவர் கிறித்தவர்; ஆறுமுக நாவலரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றூர். பெரும்புலவர் மீனுட்சிசுந்தரம் பிள்ளை, வடலூர் இராமலிங்க அடிகள் ஆகியோருடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். ஆசிரியராகவும், பள்ளிக் கூடங்களின் ஆய்வாளராகவும் தொழில்புரிந்தார்.

**நூல்:** தமிழ் இலக்கணத் தெளிவு.

இந்நூல் இலக்கணத்தை எளியமுறையில் பயில்வதற்கு ஏற்ற முறையில் எழுதப் பெற்றுள்ளது.

## தாவூத்ஷா, பி. (20 - நூ)

**நூல்:** அம்மயத்ஜுஜ். அல்ஹம்து தப்சீர், பாத்திஹாசூரா, அபூபக்கர் சித்தீக், இயேசுவின் இரகசியம், இஸ்லாம் இணையிலாச் சாந்தி, இஸ்லாமிய ஞானபோதம், ஈமான், இஸ்லாம், கௌஹர் ஜான் காதல், ஹாத்திம் தாயி, ஹஜ்ரத் அலி, உதுமான், உமரெ பாரூக், ஜீவவசிய பரம ரஹஸ்யம், ஜவாஹிருல் புர்கான், குத்பாபிரசங்கம், லோகாதிசய விளக்கம், முஸ்லிம் கிலாபத், மகேந்திர ஜாலம், மணவாழ்க்கையின் மர்மங்கள், மஹான் முஹம்மத் நபி(சல்) நூர்ஜஹான், நாயகவாக்கியம், நபிகள் நாயக மான்மியம், நாயகத்தின் நற்குணங்கள், பண்டிதை மெஸ் மெரிஸா, பிரார்த்தனைகள்.

அம்மயத் ஜுஜ் — குரானின் ஒருபகுதி மொழிபெயர்ப்பு.

## தானியேல் பிள்ளை (19 - நூ)

**வாழ்விடம்:** தரங்கம்பாடி, கிறித்தவர்.

இவர் தரங்கம்பாடியில் ஒல்லாந்து அரசாங்கத்தின் மொழி பெயர்ப்பாளராக இருந்தார். நாள்தோறும் ஒருமணியாவது கிறித்தவ சமயம் தொடர்பான நூல் எழுதுவது என்று உறுதிகொண்டு அதன்படி நாற்பது ஆண்டுகள் எழுதி வந்தார்.

**நூல்:** 'பரமண்டலங்களில் தங்கள் பொக்கிஷம் உண்டென்றிருக்கிற பராபரனுடைய பிள்ளைகளின் ஆபரணப் பெட்டி, (1800), சன்மார்க்க விளக்கம், ஏசுநாதர் பாடுபட்ட சரித்திரத் தியானம், ஞானமுசிப்பாறு நேரம், ஞான உபதேச விளக்கம், பக்திமஞ்சரி.

## தானியேல் பிள்ளை முதலியார் ( )

**நூல்:** விசுவாசிகள் ஜெபமஞ்சரி.

## தானியேல் சேசுதாசு (20 - நூ)

**ஊர்:** கரூர்.

இவர் வெஸ்லியன் மிஷன் துவக்கப் பள்ளி யொன்றில் தலைமையாசிரியராகப் பணிபுரிந்தவர்; இலக்கணப் புலமை மிக்கவர்.

**நூல்:** தமிழாசிரியன் என்னும் இலக்கண நூல்.

இந்நூல் இலக்கண விதிகளை எளிய முறையில் விளக்கிச் செல்கிறது.

## தானியேல் யோன் ( )

**ஊர்:** யாழ்ப்பாணத்தைச் சார்ந்த உடுவில்.

**தந்தை:** சங்கரப்பிள்ளை யோன்.

இவர் புல்தானையில் மருத்துவராகப் பணியாற்றினர்; தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமை வாய்ந்த இவர் இலங்கை வரலாற்றில் பெரிதும் ஈடுபாடுடையவராக விளங்கினர். இந்தியாவிலும் இலங்கையிலும் நடைபெற்றுவந்த ஆங்கிலத் தமிழ்ப் பத்திரிகைகளில் சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி வந்தார்.

**நூல்:** கந்தபுராண மறைபொருள், 'Garden of Eden'.

## திப்புத் தோளார் (சங்க காலம்)

இவருடைய ஊர், குலம், பெற்றோர் முதலிய பிற செய்திகள் தெரியவில்லை. திப்புத் தோளார் என்பது சிறப்புப் பெயராகப் புலப்படுகிறது. இவருடைய இயற் பெயர் இன்னதென்று தெரியவில்லை. இப்புலவர் உறுப்பால் பெயர் பெற்றவராகக் கருதப்படுகின்றார். சில ஏடுகளில் இவர் பெயர் 'தீப்புத் தோளார்' என காணப்படுகின்றது.

**நூல்:** குறுந்தொகை 1.

## திம்மப்ப அந்தணனர் (20 - நா)

**ஊர்:** சமயசங்கிலி.

இவர் சங்க இலக்கியங்களையும், இலக்கண இலக்கியங்களையும் நன்கு கற்றுப் புலமை நிரம்பியவர்; சேலம் கல்லூரியின் தலைமைத் தமிழாசிரியராகத் தொண்டு செய்தவர்.

**நூல்:** திருவேங்கடமும்மணிக்கோவை.

இந்நூலைப் பாராட்டிச் சென்னை வரகவி அ. சுப்பிரமணிய பாரதியார். சேலம் கிருட்டினசாமி ஐயர், அ. வரதநஞ்சைய பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## திம்மப்ப ஐயர் (      )

**நூல்:** அருச்சுனன் தீர்த்த யாத்திரை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

இந்நூல் அரங்கநாதக் கவிராயர், தே. ர. என்பவரால் இயற்றப்பெற்றது; முப்பது சருக்கங்களும் 1437 பாடல்களும் கொண்டது. இந்நூலைப் புகழ்ந்து பாராட்டி உ. வே. சாமிநாதையர், தோரமங்கலம் அ. வரதநஞ்சையபிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## தியாகப்ப தாசன், வீ. (19 - நூ)

**நூல்:** இராமாநுஜ மிட்டாய் சிந்து (1868)

இந்நூற் பாடல், அடிகள் தோறும் மிட்டாய் என்று முடிவு பெறுகின்றது. இந்நூலிலுள்ள முகப்பில் 'பன்னித் திரியாழ்வார்களுண்ணும் இராமாநுஜ மிட்டாய் சிந்து' என்று பெயர் தரப்பட்டிருக்கிறது.

## தியாகராச ஐயர் - ஆ. (20 - நூ)

இவர் காரைக்காலில் பள்ளியொன்றில் தமிழாசிரியராக இருந்தவர்.

**நூல்:** காரைக்கால் அம்மையார் புராணம் - சிறப்புப் பாயிரம்.

காரைக்கால் அம்மையார் புராணம் என்னும் நூல் தம்பி - புருடோத்தம பிள்ளை என்பவரால் தொகுக்கப் பெற்றது.

## தியாகராசக் கவிராயர் (19 - நூ)

**ஊர்:** தென்னார்க்காடு மாவட்டம், விருத்தாசலம்.

**தந்தை:** வேலாயுதச் செட்டியார்; வேளாளர்.

**நூல்:** மயூராசல புராணம், திருவாலங்காட்டுப் புராணம் – உரை.

இந்நூல் சிவஞான பாலைய தேசிகரின் வேண்டுகோளுக்கு ஏற்ப இயற்றப் பெற்றது. 10 படலங்களும் 630 செய்யுட்களும் உள்ளன.

## தியாகராச கவிராச தேசிகர் (        )

**ஊர்:** திருவாரூர்.

**நூல்:** திருப்புனவாயிற் புராணம்.

இப்புராணம் இருபத்திரண்டு சருக்கங்களையும் தொள்ளாயிரத்து இருபத்தெட்டுச் செய்யுட்களையும் உடையது.

## தியாகராசசாமி மாடிக் ராவ் சாகேப் (19-நூ)

**நூல்:** அநுமார் விரத மான்மியம் (மொழியாக்கம்)(1897)

உரைநடையிலமைந்த இந்நூல் அனுமார் விரதம் பற்றிக் கூறுவது. பிராகிருத மொழியிலிருந்து தமிழில் உரைநடையாக மொழிபெயர்க்கப் பெற்றது; ஒன்பது பகுதிகளை உடையது. பாண்டவர்கள் வனத்திலிருக்கும்போது அவர்களுக்கு வியாச பகவானல் சொல்லப்பெற்றது என்று குறிக்கப் பெற்றுள்ளது.

## தியாகராச சிவயோகியார் (20-நூ)

இவர் ஏகாம்பர சிவயோகியாருடைய மாணவர்.

**நூல்:** பஞ்சீகரண பௌதிக விவேக விளக்கம் என்னும் நூலுக்குச் சிறப்புப் பாயிரம்.

பஞ்சீகரண பௌதிக விவேக விளக்கம் பெங்களூர் நாகரத்தினம்மாள் இயற்றியதாகும்.

## தியாகராசச் செட்டியார் (19-நூ)

**நூல்:** உமையாம்பிகை பிள்ளைத்தமிழ்.

## தியாசராசச் செட்டியார், சி. (19-நூ)

**ஊர்:** திருச்சிராப்பள்ளியை அடுத்த பூவாளூர்.

**தந்தை:** சிதம்பரம் செட்டியார்.

**வாழ்ந்த காலம்:** 1826 — 1888.

இவர் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையின் மாணவர். ஆசிரியர் வீட்டிலேயே தங்கிக் கல்வி கற்ற இவர், ஆசிரியர் வழிபாடாக நூறு செய்யுட்கள் இயற்றியுள்ளார். திருச்சிராப்பள்ளியில் ஒரு பள்ளியிலும், கும்பகோணம் அரசினர் கல்லூரியிலும் தமிழ்ப் பேராசிரிய ராகப் பணியாற்றியவர். சிறந்த நூல்களுக்குச் சிறப்புக் கவி அளிப்பது என்ற பழக்கத்தினையும் குற்றங் கண்ட விடத்துக் கண்டிப்பதையும் தம் வாழ்நாளில் மேற் கொண்டார். சுருக்கங்கருதி, ஒருவர் நன்னூலை விளக்க மின்றிப் பதிப்பித்தபோது அதனைக் கண்டித்தார். எதுகை மோனைகளுக்காகத் திருக்குறளைப் பதிப்பிக்கவந்த ஆங்கிலப் பாதிரியார் ஒருவரையும் இவர் கண்டித்த செயல் இவரது வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க செயல்களுள் ஒன்று. நண்ப ரொருவர் திருவாசகத்திற்கு உரை எழுதும்படி வேண்ட இவர் அத்தகுதி தமக்கு இல்லை என்று மறுத்து விட்டார். ஆசிரியர் மீனுட்சி சுந்தரம்பிள்ளையின் நூல்கள் அரங்கேற்றப் பட்ட இடங்களுக்கெல்லாஞ் சென்று அந்நூல்களின் பெருமைகளை விளக்குவார்.

**நூல்:** மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையைக் குறித்த வழிபாட்டுச் செய்யுட்கள்.

## தியாகராச தேசிகர்-1 (18-நூ)

**ஊர்:** சோழநாடு, திருவாரூர்.

**தந்தை:** தியாகராசதேசிகர்.

இவர் இராமநாதபுரம் சமத்தானத்திலே அமைச்சராக இருந்த தாமோதரம் பிள்ளையால் சூரியங்கோட்டை என்ற சிற்றூரும், விசய அருணசல வணங்காமுடி என்பவரால் தண்டிகை வரிசையும், மறவனேந்தல் முதல் மூன்று சிற்றூர் களும் பரிசு பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்திருந்தவர்.

**நூல்:** தேவையந்தாதி, காழியந்தாதி, திருக்கூட்டச் சதகம், அன்பர் போற்றிக் கலிவெண்பா.

## தியாகராச தேசிகர்-2 (17-நூ)

**ஊர்:** திருவாரூர்.

**தந்தை:** இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகர்.

**நூல்:** இலக்கண விளக்கத்தில், பாட்டியல் இவர் செய்த தாகக் கருதப்படுகிறது.

## தியாகராச தேசிகர்-3 (20-நூ)

**ஊர்:** கோயம்புத்தூர் மாவட்டம், பொள்ளாச்சி.

**நூல்:** ஆனந்தரங்கன்கோவை.

## தியாகராச தேசிகர், க. (20-நூ)

**ஊர்:** சோழநாட்டில் கூறைநாடு.

**தந்தை:** சித்தாந்தரத்னகரம், அ. கந்தசாமி தேசிகர்.

இவர் தம் தந்தையாரிடம் கல்வி கற்று இசைப்பாடல்கள் இயற்றுவதில் வல்லவராக விளங்கினர்.

**நூல்:** பெற்றான் சாம்பான் சரித்திரக் கீர்த்தனம், மயிலை அபயாம்பிகை சோடசமாலை, கலியுகாக்கியானம், மாயூரம் காவடிச்சிந்து, இராம கிருட்டிணச் சிந்து, மங்கை மதிச் சிந்து, நள சரித்திரம், சசிரேகாபரிணயம், காரைக்காலம்மை யார் சரித்திரக் கீர்த்தனம்.

பெற்றான் சாம்பான் சரித்திரக் கீர்த்தனையில் விருத்தம் உரைநடை முதலியவைகளும் விரவியுள்ளன. இந்நூலுக்குத் தருமபுர ஆதீனம் சண்முகத் தம்பிரான், தண்டபாணி தேசிகர், மூவலூர் ப. சிங்காரவேற் புலவர் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## தியாகராச நாவலர் (          )

**ஊர்:** சோழநாடு, உடையூர்.

இவர் இயலிசை நாடகம் என்னும் முத்தமிழையும் நன்கு பயின்று இலக்கண இலக்கியங்களில் வல்லவராய் விளங்கினர்.

**நூல்:** காந்த மகா சங்கிரகம்.

இந்நூல் கந்தபுராணத்தின் சுருக்கமாகப் பாடப்பெற்றது.

## தியாகராசப் பிள்ளை - 1 ( ? )

**ஊர்:** யாழ்ப்பாணத்து நல்லூர்.

**நூல்:** அண்ணுமலையார் வண்ணம்.

## தியாகராசப் பிள்ளை - 2 (20-நூ)

**ஊர்:** திரிசிரபுரம்.

**நூல்:** செண்பகவல்லி என்னும் பவளக்கொடி நாடகம், பொன்னர் சங்கர் நாடகம்.

## தியாகராசபிள்ளை, மு. ( )

**ஊர்:** சோழநாடு, திருச்சிராப்பள்ளி.

**தந்தை:** முத்துலோகம் பிள்ளை.

இவர் இலக்கண இலக்கியப் புலவராகவும் காலக் கணிதப் புலவராகவும் விளங்கியவர்.

**நூல்:** தியாகராச சோதிட ஆநந்தக் களிப்பு.

இது ஒரு சோதிட நூல்.

## தியாகன் ( )

**ஊர்:** நல்லூர்.

**நூல்:** திருச்செங்காட்டங்குடி யமகவந்தாதி.

இந்நூல் திருச்செங்காட்டங்குடியிலெழுந்தருளியுள்ள இறைவன்மீது பாடப்பெற்றது.

## தியாகேச முதலியார், இரா. (19-நூ)

**ஊர்:** தொண்டைநாடு, மாமண்டூர்.

**தந்தை:** இராமசாமி முதலியார். வேளாளர்.

இவர் ஆறுமுக நாவலரிடத்தில் இலக்கிய இலக்கணங்களைக் கற்றுப்புலமை எய்தினர்.

**நூல்:** சிதம்பர வெண்பாவந்தாதி, சிதம்பரக் கலித்துறை அந்தாதி, கோயில் மும்மணிக் கோவை, சிதம்பர நான்மணி மாலை, திருக்கழுக்குன்றத்திரட்டைமணிமாலை, தலவெண்பா, திருவொற்றியூர் வடிவுடையம்மன் அந்தாதி.

தியாகையர் (20 - நூ)

**தந்தை:** குப்பையர்.

**வாழ்ந்த காலம்:** கி. பி. 1845 — 1917.

இவர் தம் தந்தையிடத்திலேயே இசைபயின்றார்; இசையிலும்; தெலுங்கு மொழியில் பாடல் இயற்றுவதிலும் தேர்வு பெற்றார். தாளவர்ணங்களையும் கிருதிகளையும் இராக மாலிகைகளையும் இவர் இயற்றியுள்ளார். சாரதாபரணம், ஹம்ச நாராயணி, லோகரஞ்சனி, சேஷநாதம் போன்ற அபூர்வராகங்களிலும் இவர் கிருதிகள் பல இயற்றியுள்ளார். இவருடைய பாடல்கள் இசைச் சிறப்புடையன.

**நூல்:** சங்கீதரத்தினவளி, பல்லவிஸ்வர கல்பவல்லி.

திரவிய சங்கர நாராயணக் கவிராசர் - வீ. (19-நூ)

**சி. பெ:** வரகவி.

**ஊர்:** பாண்டிநாடு, சம்புலிங்கபுரம்.

**தந்தை:** வீரராகவக் கவிராசர்.

**நூல்:** கோமதியந்தாதி என்னும் நூலுக்குச் சிறப்புப் பாயிரம்.

இந்நூல் திருவண்ணநரத்க் கவிராயர் என்பவரால் இயற்றப் பெற்றது. இவர் திரவிய சங்கர நாராயணக் கவிராசரின் உடன்பிறந்தாராவர்.

## திரவிய நாடார் ( )

**ஊர்:** நரையன் குடியிருப்பு.

**நூல்:** திருமணிக்கும்மி.

இந்நூல் அடியாருக்கு மணி ஈந்தவகை பற்றிக் கூறுவது.

## திரவியம் பிள்ளை (19-நூ)

**ஊர்:** கழுகுமலை.

**நூல்:** 'கரையேறவிட்ட நகர்ப் புராணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'கரையேறவிட்ட நகர்ப் புராணம்' என்னும் நூல் க. ரா. சிவசிதம்பர முதலியார் என்பவரால் இயற்றப் பெற்றது.

## திரிகூடசுந்தரம் பிள்ளை (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம், சிந்துபூந்துறை.

இவர் எம்.ஏ. தேர்வில் பல்கலைக் கழகத் தங்கப் பதக்கம் பெற்றவர். தமிழ் 'ஹரிஜன்' ஆசிரியராக 1946-47லும் தமிழ்க் கலைக் களஞ்சியத்தின் கூட்டாசிரியராக 1949-62 லும் பணியாற்றினர். இவர் வழக்கறிஞர் தொழிலைத் துறந்து ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டு நாடு விடுதலை பெற 25 ஆண்டுகள் பணிபுரிந்தார்.

**நூல்:** ஆங்கிலக் கவிதை மலர்கள் (1938), அண்ணனும், தங்கையும் (1953), அப்பாவும் மகனும் (1947), அறிவுக் கனிகள் (1952), எனது பூங்கா (1938-57 வெற்றியாருக்கு என்ற தலைப்புடன்). இதய உணர்ச்சி (1938), ஜவஹர் கதை (1948), கேள்வியும் பதிலும் (1946), கொக்கோக விளக்கம் (1953), குழந்தை எப்படிப் பிறக்கிறது? (1946), குழந்தைகள் 'கேள்வியும் பதிலும் (1947), பாஞ்சாலி சபதம் (1951), பொழுது புலர்ந்தது (1947), சைவ உணவு எது? (1938), சமஸ்தானப் பிரச்சினை (1947), சத்தியாக்கிரகம் (1914), தந்தையும் மகளும் (1953), தாசியின் காதல் (1953), விஞ்ஞானம் எதற்கு(1952), விஞ்ஞானப் பெரியார்கள்(1947)

விவாகமானவர்களுக்கு ஒரு யோசனை (1945), போரும் காதலும் (1952).

**ஆங்கிலக் கவிதை மலர்கள்:** 50 ஆங்கிலப் பாடல்களின் மொழிபெயர்ப்பு: பேராசிரியர் ஆர். பி. சேதுப்பிள்ளையவர்களின் முகவுரையுடன் கூடியது.

**அண்ணனும் தங்கையும்:** வினவும் விடையுங் கொண்ட குழந்தை இலக்கியம்.

**அப்பாவும் மகனும்:** வினவும் விடையுங் கொண்ட குழந்தை இலக்கியம், சென்னை அரசியலாரால் முதற் பரிசளிக்கப் பெற்றது. கல்கி ஆசிரியர் கிருஷ்ணமூர்த்தியின் முன்னுரையுடன் கூடியது

**அறிவுக் கனிகள்:** மேற்கோள்களைக் கொண்ட நூல். முன்னாள் கல்வியமைச்சர் அவிநாசிலிங்கம் முன்னுரையுடன் கூடியது.

**எனது பூங்கா:** தமிழ்க் கட்டுரைகளடங்கிய நூல். வையாபுரிப்பிள்ளையின் முன்னுரையுடன் கூடியது.

**இதய உணர்ச்சி:** மார்க்கஸ். அரேலியரின் எண்ணங்களைப் பற்றிய நூல்.

**ஜவஹர் கதை:** 10 வயதுக் குழந்தைக்குச் சொல்லுவது போன்றமைந்த கதை. சென்னை அரசினரின் முதற்பரிசு பெற்றது.

**கேள்வியும் பதிலும்:** விஞ்ஞான உண்மைகளைக் குழந்தைகளுக்கு எளிய தமிழில் விளக்கிச் சொல்வது.

**கொக்கோக விளக்கம்:** 17-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த அதிவீரராம பாண்டியனால் இயற்றப் பெற்ற கொக்கோகத்திற்குக் குறிப்புக்களுடன் கூடிய பதிப்பு.

**குழந்தை எப்படிப் பிறக்கிறது?:** பாலினக் கல்வி பற்றிய நூல்; சென்னை அரசினரால் முதற்பரிசு பெற்றது.

**குழந்தைகள் கேள்வியும் பதிலும்:** வினவிடைகள் கொண்ட குழந்தை இலக்கியம்.

**பாஞ்சாலி சபதம்:** இலக்கியக் கட்டுரைகள் கொண்ட நூல்.

**பொழுது புலர்ந்தது:** விடுதலைக்காகப் போராடிய காங்கிரஸ் இயக்கத்தின் வரலாறு.

**சமஸ்தானப் பிரச்சினை:** மாநிலங்களின் பிரச்சினை குறித்துக் காந்தியடிகள் எழுதிய கட்டுரைகளின் மொழிபெயர்ப்பு.

**சத்தியாக் கிரகம்:** சத்தியாக்கிரகக் கொள்கைகளைப் பற்றி விளக்கும் நூல்.

**தந்தையும் மகளும்:** குழந்தைகளுக்கு விஞ்ஞான உண்மைகளை விளக்கும் நூல்.

**தாசியின் காதல்:** 17-ஆம் நூற்றுண்டுச் சீனக் கதைகளைக் கொண்ட நூல்.

**வெற்றி யாருக்கு:** பல கட்டுரைகளைக் கொண்ட நூல்.

**விஞ்ஞானம் எதற்கு?:** விஞ்ஞானம் எதற்கிருக்கின்றது என்பதை விளக்கும் நூல்.

**விஞ்ஞானப் பெரியார்கள்:** பத்து அறிவியல் அறிஞர்களின் வாழ்க்கை வரலாறு.

**விவாகமானவர்களுக்கு ஒரு யோசனை:** குடும்பக் கட்டுப் பாட்டைப் பற்றிய நூல். தமிழ் அகடமியின் தகுதிச் சான்றிதழ் பெற்றுள்ள நூல். டாக்டர் டி.எஸ். திருமூர்த்தி அவர்களின் முன்னுரையுடன் கூடியது.

**போருங் காதலும்:** "போரும் சமாதானமும்" என்ற லியோ டால்ஸ்டாய் எழுதிய நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு.

## திரிகூடராசப்பக் கவிராயர் (18-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம் தென்காசியை அடுத்த மேலகரம்; சைவவேளாளர்.

இவரது கவிச் சுவையை உணர்ந்த விசயரங்க சொக்கநாத நாயக்கர் (1706-1732) கேட்டுக் கொண்டதற் கிணங்க இவர்

திருக்குற்றாலக் குறவஞ்சியை இயற்றி அரங்கேற்றினார் என்பதால் இவர் வாழ்ந்த காலம் கி. பி. 18 ஆம் நூற்றாண்டு என்று துணியலாம்.

இவர் திருக்குற்றாலக் குறவஞ்சியைப் பாடியதறிந்து அரசன் இவருக்கு நிலம் வழங்கினான். இந்நிலம் இப்பொழுது 'குறவஞ்சி மேடு' என வழங்கப் பெறுகிறது. இவர் மரபினர் இன்றும் திருக்குற்றாலத்தில் திருக்குற்றாலநாதரின் சந்நிதிப் புலவர்களாக அமர்ந்து மரியாதை பெற்று வருகின்றனர் என்பது குறிப்பிடத் தக்கது. புலவருக்கு வழங்கப் பட்ட நிலத்திற்குச் சான்றாகக் கி. பி. 1715 இல் தாமரப் பட்டயம் ஒன்று வழங்கப் பெற்று, அப்பட்டயம் இன்றும் புலவர் மரபினரிடம் இருந்து வருவதாகத் தெரிய வருகிறது.

**நூல்:** திருக்குற்றாலக் குறவஞ்சி. திருக்குற்றாலமாலை, திருக் குற்றாலச் சிலேடை வெண்பா யமகஅந்தாதி, திருக்குற்றால உலா, திருக்குற்றால ஊடல், திருக்குற்றாலப் பரம்பொருள் மாலை, திருக்குற்றாலக் கோவை, குழல்வாய் மொழிகலிப்பா, கோமளமாலை, குற்றால வெண்பா அந்தாதி, குற்றாலப் பிள்ளைத் தமிழ், குற்றால நன்னகர் வெண்பா என்பனவும் இவர் இயற்றியன என்றும், ஆனால் அச்சிடப் படாமல் கை எழுத்து வடிவில் உள்ளன வென்றும் திரு. எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை குறிப்பிட்டுள்ளார்.

திருக்குற்றாலக் குறவஞ்சி, நாடக அமைப்பினது; குற்றால வளமும் மலைவாணரின் பழக்க ஒழுக்கங்களும் அங்குக் கோயில் கொண்டுள்ள குற்றால நாதரின் சிறப்புக்களும் இந்நூலில் விரித்துரைக்கப் பட்டுள்ளன, இந்நூலே பிற்காலக் குற வஞ்சிகளுக்கெல்லாம் வழிகாட்டியாக அமைந்ததென்பது குறிப்பிடத்தக்கது.

## திரிபுராந்தக முதலியார், ம. (20-நூ)

**நூல்:** 'வடபழநியாண்டவர் 'மும்மணி மாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'வடபழநி யாண்டவர் மும்மணிமாலை' என்னும் நூல் கூ. வே. சிங்கார வேலு முதலியார் என்பவரால் இயற்றப் பெற்றது.

## திரிலோசந சிவாசர்ரியார் ( )

இவர் சிவாகமங்களை ஆராயச் சிவமூர்த்தியை வேண்டி மூன்று கண்கள் பெற்று இப்பெயர் பெற்றார் என்பர். இவர் சைவ ஆமர்த்தக மடத்தைச் சேர்ந்த சம்புசிவாசாரியாரின் மாணாக்கர்.

**நூல்:** 'சித்தாந்த சாராவளி என்னும் சிவாகமபத்ததி'.

## திருக்கச்சி நம்பி ( )

**நூல்:** திருக்கச்சி நம்பி ஆறுவார்த்தை.

## திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார்

**பார்க்க:** உய்யவந்த தேவநாயனார்.

## திருக்கண்ணபுரம் தாசி ( )

இவளுடைய இயற்பெயர் தெரியவில்லை. இவள் திருக் கண்ணபுரத்தைச் சார்ந்தவள். இவள் விலைமகள் குலத்தைச் சேர்ந்தவளாக இருந்தும் கல்வியறிவில் தேர்ச்சியுற்றுச் செய்யுள் பாடும் ஆற்றல் பெற்றாள். இவளது அறிவையும் அழகையும் அறிந்த முனையதரையன் என்ற குறுநில மன்னன் இவளைத் தன் ஆசைநாயகியாகக் கொண்டான். இவளும் அவன்மீது உண்மையான பற்றுக் கொண்டாள். ஒரு பொழுது அவன் பலநாட்கள் வாராமல் இருந்த பொழுது செய்யுளொன்று பாடியுள்ளாள். இச்செய்யுட் தனிச் செய்யுட் சிந்தாமணியில் காணப்படுகின்றது.

**நூல்:** "இன்றுவரில் என்னுயிரை நீ பெறுவை இன்றைக்கு" என்று தொடங்கும் தனிப்பாடல்.

## திருக்கமலப் புலவர் ( )

**வே. பெ.** திருக்கமலக் கவிராயர்.

**ஊர்:** பாண்டிநாடு, புளியங்குடி.

இவர் இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றுச் சிறந்த புலவராகத் திகழ்ந்தார். ஊற்றுமலை சமீத்தானப் புலவராக விளங்கினார்.

**நூல்:** கோமதியம்பிகை சதகநூல்.

இந்நூல் சங்கர நாராயணர் கோயில் கோமதியம்பிகை மீது பாடப்பெற்றது.

## திருக்காளத்தியப்பக் கவிராயர் (20-நூ)

**ஊர்:** பாண்டிநாடு, புளியங்குடி.

இவர் புளியங்குடியிலிருந்த முத்துவீரக் கவிராயரிடம் கல்வி கற்றுப் புலமை எய்தியவர்.

**நூல்:** அருணாசல ஆச்சாரியார் பாடிய 'புதுவை வண்ண மஞ்சரி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## திருக்காளத்தியப்ப முதலியார் (20-நூ)

இவர் புளியங்குடி முத்து வீரப்பக் கவிராயரின் மாணவர்.

**நூல்:** 'சங்கரநயினார் கோயில் அலங்காரச் சிந்து' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'சங்கர நயினார் கோயில் அலங்காரச் சிந்து' என்னும் நூல் முத்தையா முதலியார் என்பவரால் இயற்றப் பெற்றது.

## திருக்குருகூர்ச்சிறிய இரத்தினக் கவிராயர் ( )

**பார்க்க:** இரத்தினக் கவிராயர் - 2.

## திருக்குருகூர்ப் பெருமாள் கவிராயர்

**பார்க்க:** குருகைப் பெருமாள் கவிராயர்.

## திருக்குருகூரார் (        )

**நூல்:** விட்டுணு புராண வசனம்.

## திருக்குருகைப் பிரான் பிள்ளான் (13-நூ)

**தந்தை:** பெரிய திருமலை நம்பி

**வாழ்விடம்:** திருவரங்கம்.

இவர் இராமநுசருடைய மாணவர். பிள்ளான் என்பது இவருடைய இயற்பெயர். திருக்குருகைப் பிரான் என்பது நம்மாழ்வார் பெயர். அப்பெயரை அவருடைய நினைவாக இராமாநுசர் இவருக்கு வழங்கினார். இவர் 74 சிம்மாசனாதி பதிகளுள் ஒருவர்.

**நூல்:** ஆறாயிரப்படி வியாக்கியானம்.

இது திருவாய் மொழிக்கு எழுதப்பட்ட வியாக்கியானம்.

## திருக்குருகைப் பெருமாள் கவிராயர் (        )

**பார்க்க:** குருகைப் பெருமாள் கவிராயர்.

## திருக்குறுங்குடி நம்பி (17-நூ)

**ஊர்:** திருநெல்வேலிக்கு அண்மையிலுள்ள திருக்குறுங்குடி; அந்தணர்.

இவர் படிக்காசுப்புலவர் காலத்தவரென்று கருதப்படுவதால் 17-ஆம் நூற்றுண்டினர் என்று துணியலாம். இவர் திருக்குறுங்குடியிலிருந்து தொண்டைநாடு சென்று அங்கிருந்த காளத்தி முதலியாரைப் பாடிப் பரிசு பெற்றுர் என்ற செய்தி தொண்டைமண்டல சதகத்தால் தெரிய வருகின்றது.

**நூல்:** காளத்தி முதலியாரைப் புகழ்ந்து பாடிய பாடல்கள்.

## திருக்கைவேல் பண்டிதர் (19-நூ)

**ஊர்:** மதுரைமாவட்டம், பழனி.

**நூல்:** *பழனியங்கிரி அறுமுகவர் திருநீற்றுப் பதிகம் (1875).*

இந்நூல் அறுமுகப் பெருமான் மேனி மேல் விளங்கும் திருநீற்றின் பெருமையை விளக்குவது; "அடியவர்க் கருள் கிருபைமொழி பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே" என்னும் முடிவைப் பெறுவன இப்பதிகப் பாடல்கள்; 12 செய்யுட்கள்.

## திருக்கோட்டி நம்பி (12-நூ)

**நூல்:** *சூடாமணி உள்ளமுடையான், நட்சத்திரமாலை, மரண கண்டிகை.*

இந்நூல்களுள் சூடாமணி உள்ளமுடையானென்னும் நூல் ஒரு காலக்கணித நூல். இதனை மண்டலபுருடர் இயற்றினா ரென்றும் ஒரு கருத்து உண்டு,

திருக்கோட்டி நம்பி இரகசியம், திருக்கோட்டி நம்பி வார்த்தை, திருக்குருகை இரத்தினம், விசயாந்தர் சுக்குநீரம் என்னும் நூல்களும் திருக்கோட்டி நம்பியால் இயற்றப் பெற்றன என்று கருதப்படுகின்றன.

## திருக்கோளூர் பெண்பிள்ளை (        )

**நூல்:** *திருக்கோளூர் பெண்பிள்ளை ரகசியம்.*

## திருக்கோனேரி தாஸ்யை (        )

**நூல்:** *திருவாய் மொழி வாசகமாலை என்னும் விவரண சதகம்.*

இந்நூல் திருவாய்மொழியின் தொடக்கத்திலுள்ள "உயர்வற" என்ற பாட்டின் விவரணமே மற்ற ஆயிரம் பாடல்களும் என்று கூறி அதற்குத்தக ஒவ்வொருபாடற்கும் பொருள் பொருந்தக் கூறுவது; மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்டது.

## திருச்சிற்றம்பலக் கவிராயர் (       )

**வே. பெ:** மாம்பாக்கம் உபாத்தியாயர்.

**நூல்:** அண்ணுமலை சதகம்.

## திருச்சிற்றம்பல ஞானியார் (20-நூ)

இவர் சுவர்க்கபுரம் சிவலிங்க சுவாமிகள் என்னும் பெரியாரிடத்தில் இலக்கண இலக்கியங்களையும் சமய நூல்களையும் கற்ருர். இலக்கணப் புலமை மிக்கவர். சமய உணர்ச்சி கொண்டவராக விளங்கியமையால் 'ஞானியார்' என்று அழைக்கப் பெற்ருர்.

**நூல்:** 'ஞான சித்த மும்மணிக் கோவை – சிறப்புப்பாயிரம்'.

## திருச்சிற்றம்பல ஞானியார், கா (19-நூ)

**ஊர்:** காஞ்சிபுரம்.

இவர் இலக்கண, இலக்கியப் பயிற்சி மிக்கவர்.

**நூல்:** 'காசிரகசியம் - உரை'.

'காசிரகசியம்' என்னும் நூல் பெரும்புலவர் மீனுட்சி சுந்தரம் பிள்ளையால் இயற்றப் பெற்றது.

## திருச்சிற்றம்பல சாமிகள் (19-நூ)

இவர் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்தவர். குலசேகரன் பட்டினத்து மடத்தின் தலைவராக இருந்தார்.

**நூல்:** குலசைநகர் மாலை, குலசைநகரகவல், குலசை நகர் மாலை; குலசைநகர் இறைவனைத் துதிக்கும் பாமாலை; 30 செய்யுட்கள்.

## திருச்சிற்றம்பலத் தம்பிரான் சாமிகள் (       )

**நூல்:** நெஞ்சராற்றுப்படை.

இந்நூல் மதுரைத் திருஞான சம்பந்த சாமிகளாதீன மகாசந்நிதானத்தின்பால் தமது நெஞ்சையே தூதாக

அனுப்புவதுபோல் அமைந்தது; ஆசிரியரின் குருபக்தியை விளக்குவது.

## திருச்சிற்றம்பல தேசிகர் (19-நூ)

இவர் மதுரைத் தமிழ்ச் சங்க உறுப்பினராக இருந்திருக்கலாமென்பது இவர் பெயருக்கு முன் அமைந்துள்ள "தமிழ்ச் சங்கத் தலைமைப் புலமை" என்ற சிறப்புச் சொல்லால் அறியப்படுகிறது.

**நூல்:** கம்பராமாயண வசனம்; உத்தரகாண்ட வசனம்.

எழுத்து சொல் அடங்கிய இலக்கண நூலொன்றும் இவரால் உரைநடையில் இயற்றப் பெற்றுள்ளது.

## திருச்சிற்றம்பல நாடிகள் (        )

**நூல்:** திருச்செந்தூர் அகவல்.

## திருச்சிற்றம்பலம் பிள்ளை-1 (20-நூ)

**ஊர்:** கோயம்புத்தூர்.

**தந்தை:** சந்திரசேகரன் பிள்ளை; **தாய்:** பார்வதி அம்மையார்; கார்காத்த வேளாளர்.

**மறைவு:** 1904.

இவர் தம் தந்தையின் மாணவர் கந்தசாமி முதலியாரிடம் இலக்கண இலக்கியங்களைப் பயின்றார். கோயம்புத்தூர் இலண்டன் கிறித்துவ சங்க உயர்நிலைப்பள்ளியிலும் ரோமன் கத்தோலிக்க உயர்நிலைப்பள்ளியிலும் தமிழாசிரியராக வேலை பார்த்தார். இவருடைய ஆசிரியர் மகனாகிய சிவக்கவிமணி சுப்பிரமணிய முதலியாருக்கும் இவர் கல்வி கற்பித்துள்ளார். சொற்பொழிவாற்றும் திறன் பெற்ற இவர் 1898-ஆம் ஆண்டில் சென்னை மாநிலக் கல்லூரியில் மாணிக்கவாசகரைக் குறித்து ஆராய்ச்சிச் சொற்பொழிவு ஒன்று நிகழ்த்தினார். இவர்தாம் சங்ககாலக் கல்லாடர் வேறு, கல்லாடம் இயற்றிய கல்லாடர் வேறு என்று முதல் முதல் முடிவு செய்தவர்.

நூலியற்றும் பணியில் பக்கிம் சந்திரசட்டர்ஜி எழுதிய ஆனந்தமடம், சந்திரசேகரர், பனங்குளம் என்ற கதைகளை மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார்.

**நூல்:** இராமச்சந்திரர், எட்வர்டு அரசர்.

முதல் நூல் அன்னிபெசண்டு அம்மையார் இராமாயணச் சுருக்கமாகச் செய்த எட்டுச் சொற்பொழிவுகளின் மொழி பெயர்ப்பு.

## திருச்சிற்றம்பலம் பிள்ளை, - 2 ( )

**ஊர்:** கோயின்மாநகர்

**நூல்:** அப்பாவுப் புலவர் இயற்றிய 'கோயிலூர் முத்து ராமலிங்க ஞானதேசிகர் நெஞ்சறிவுறுத்தல்' என்னும் நூலினைப் பாராட்டிச் சிறப்புப் பாயிரம்பாடிய பலருள் ஒருவர்.

## திருச்சிற்றம்பலம் பிள்ளை, ச (19-நூ)

**வே. பெ:** திருச்சிற்றம்பல முனிவர்

**ஊர்:** சோழநாட்டில் திருமறைக்காடு.

இவர் வடமொழி தென்மொழிப் புலமை மிக்கவர்.

**நூல்:** காவேரிப் புராணம் (தமிழாக்கம்)

இந்நூல் வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப் பெற்றது; 36 அதிகாரங்கள்; 1474 பாடல்கள்.

## திருஞான சண்முகம் பிள்ளை (19-நூ)

**ஊர்:** குழந்தாபுரி.

**நூல்:** 'அன்னதான மகத்துவபுராணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'அன்னதான மகத்துவபுராணம்' என்னும் நூல் பெரிய சுப்பா ரெட்டியார் என்பவரால் இயற்றப் பெற்றது.

## திருஞானசம்பந்த உபாத்தியாயர் (20-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணத்தில் சுளிபுரம்.

**மறைவு:** 1906.

இவர் ஆறுமுக நாவலரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். கந்தபுராணம் பெரிய புராணம் பாரதம் ஆகிய நூல்களில் மிகுந்த பயிற்சி பெற்று விரிவுரையாற்றும் வன்மையும் கவியியற்றும் சிறப்பும் பெற்றார்.

**நூல்:** மாணிக்கப் பிள்ளையார் திருவருட்பா, கதிர்காம வேலவர் திருவருட்பா.

## திருஞானசம்பந்த சாமிகள் (19-நூ)

**ஊர்:** தொண்டைநாட்டில் பேறை.

**நூல்:** மெய்ஞ் ஞான சாரம்.

## திருஞான சம்பந்த சாமிப்பிள்ளை, கு. (19-நூ)

**ஊர்:** திரிசிரபுரம்.

**தந்தை:** குமாரசாமிப் பிள்ளை.

இவர் திரிசிரபுரத்தில் சைவசித்தாந்த சபை ஒன்றினை ஏற்படுத்தினார்.

**நூல்:** சித்தாந்த சைவ-வினாவிடை.

இந்நூல் தருமபுர ஆதீனத்தாரால் அச்சிடப்பட்டு வெளி வந்துள்ளது.

## திருஞான சம்பந்த தேசிகர் ( )

**ஊர்:** தருமபுரம்.

இவர் திருவொற்றியூர் ஞானப்பிரகாசரின் மாணவர்.

**நூல்:** சிவபோக சாரம்.

## திருஞானசம்பந்தப் பிள்ளை (20-நூ)

**சி. பெ:** தருக்ககுடாரதாலுதாரி.

**ஊர்:** யாழ்ப்பாணம் நல்லூர்.

**வாழ்ந்த காலம்:** 1849-1911.

இவர் ஆறுமுக நாவலரிடத்திலும் வித்துவ சிரோன்மணி பொன்னம்பலம் பிள்ளையிடமும் தமிழ் இலக்கண இலக்கியங் களும் சித்தாந்த நூல்களும் தருக்க சாத்திரங்களும் கற்ருர். தருக்கஞ் செய்வதில் வல்லவராக விளங்கியமையால் தருக்க குடார தாலுதாரி என்ற சிறப்புப் பெயர் பெற்ருர். இவர் சிதம்பரத்தில் காலமானார்.

**நூல்:** அரிகரதாரதம்மியம், தர்க்காமிர்தம் (மொழியாக்கம்) நாராயண பரத்துவ நிரசனம், வேதாகம வாததீபிகை.

## திருஞானசம்பந்த முதலியார் (19-நூ)

**ஊர்:** பாக்கம்.

இவர் திருத்தணிகை விசாகப் பெருமாளையரிடம் கற்றுச் சிறந்த புலமை பெற்ருர். சென்னையிலுள்ள இலண்டன் மிஷன் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி புரிந்தார்.

**நூல்:** சிறிய நூல்கள் சில செய்துள்ளார். கடவுள் மாலை என்னும் நூலுக்குச் சாற்றுக்கவி வழங்கியுள்ளார்.

## திருஞானசம்பந்த முதலியார் - 2 (19-நூ)

**ஊர்:** தொண்டைமண்டலத்தில் படிந்தமங்கலம்.

**தந்தை:** சோமு முதலியார்; துளுவ வேளாளர்.

**பிறப்பு:** 18[illegible]8.

இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தமிழாசிரியராகப் பணிபுரிந்துள்ளார். சித்தருடைய நூல்களில் இவருக்குப் பயிற்சி மிகுதி.

**நூல்:** உருத்திர கோடிக்கோவை, ஆரணச்சைவரலங்கார பஞ்சகம். உருத்திர கோடிக்கோவை; திருக்கழுக்குன்றத் திறைவன் மீது பாடப் பெற்றது.

## திருஞான சம்பந்தர் (7-நூ)

**வே. பெ.** ஆளுடைய பிள்ளையார், முத்தமிழ் விரகர்.

**ஊர்:** சீர்காழி.

**தந்தை:** சிவபாத இருதயர்; **தாய்:** பகவதியம்மையார்.

இவர் தமது மூன்றாவது ஆண்டில் பார்வதி தேவியார் ஞானங் குழைத்துப் பாலமுதைத் தரவுண்டு, சிவஞானம் பெற்றுத் 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடினார். திருக்கோலக்கா என்னும் தலத்தில் இறைவனால் பொன் தாளங்கள் தரப்பெற்றார். திருநனி பள்ளியில் பாலை நிலத்தை நெய்தல் நிலம் ஆக்கினார். திருநெல்வாயில் அரத்துறையீசரால் முத்துச் சிவிகையும் முத்துக் குடையும் பொற் சின்னமும் தரப்பெற்றார். பட்டீச் சுரத்துக்குப் போகும்போது முத்துப்பந்தர் தரப்பெற்றார். திருவாவடுதுறையில் தந்தையார் செய்ய விரும்பிய வேள்விக்காக இறைவனால் ஆயிரம் பொன் பெற்றார். திருமருகலில் பாம்பு கடித்ததால் இறந்த ஒரு வணிகனை உயிர்ப்பித்தார். திருவீழிமிழலையில் படிக்காசு தரப் பெற்றார். திருமறைக் காட்டில் வேதங்களால் அடைக்கப் பட்ட கதவை அப்பர் பதிகம் பாடித் திறப்பிக்க, இவர் பதிகம் பாடி அடைப்பித்தார். பாண்டியன் தேவி மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச் சிறையாரும் அழைக்கப் பாண்டிநாடு சென்று சமணரை வாதில் வென்று பாண்டியனது கூனை நிமிர்த்துக் கூன்பாண்டியனாகிய அவனை நெடுமாறனாக்கினார். மயிலாப்பூரில் சிவநேசச் செட்டியார் மகள்

பூம்பாவை பாம்புக்கடியால் இறக்க, அவளது எலும்பினின்றும் சாம்பலினின்றும் அந்தப் பெண் உருப்பெற்று எழும்படி செய்தார். தமக்கு நல்லூர்ப் பெருமணம் என்னுந் தலத்தில் திருமணம் நடைபெற்றபோது "நல்லூர்ப் பெருமணம் என்னும் பதிகம் பாடி இறைவனை வேண்ட அப்போது திருக்கோயிலில் சோதி ஒன்று தோன்றிற்று. சம்பந்தர் "காதலாசி" என்னும் நமச்சிவாயப் பதிகத்தைப் பாடி திருமணத்திற்கு வந்தோர் யாவரையும் அச்சோதியுட் செல்லப் பணித்துத் தாமும் மனைவியுமாகத் தம் பதினாறுவது வயதில் அச் சோதியுட் புகுந்து சிவத்தொடு கலந்தனர். இவர் காலத்தில் விளங்கியவரே அப்பரும், சிறுத் தொண்டரும்.

**நூல்:** 384 தேவாரப் பதிகங்கள்.

இந்த 384 பதிகங்களும் முதல் மூன்று திருமுறைகளாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. சீகாழிக்கும் திருவீழிமிழலைக்கும் இவர் பாடிய பதிகங்கள் மிகுதியாக இருத்தலினால் 'காழி பாதி வீழி பாதி' என்று ஒரு பழமொழியும் வழங்கு கிறது. சம்பந்தர் பாடிய திருப்பதிகங்கள் ஒவ்வொன்றும் பதினொரு பாடல்களையுடையது. பன்னிரண்டு பாடல்களை யுடைய பதிகங்களும் சில உண்டு. பதினோராம் பாட்டாகிய திருக்கடைக்காப்பில் சம்பந்தர் தம்முடைய சிறப்புக்களை எடுத்துரைப்பார். இதனாலேதான் 'சம்பந்தன் தன்னைப் பாடுவன்' என்ற பழமொழி ஒன்று வழங்குகிறது. சிவ பெருமானுடைய திருவுருவ வருணனை, தலங்களின் தோற்றம், செடி கொடி விலங்குகளின் இயல்பு ஆகியவை இவருடைய பாடல்களில் தெளிவாக விளக்கம் பெறுகின்றன.

## திருஞானசம்பந்தர், ம. க. வே. (        )

**ஊர்:** இலங்கை, யாழ்ப்பாணம்.

**தந்தை:** ம. க. வேற்பிள்ளை.

இவர் யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராகவும், "இந்து சாதனம்" என்ற இதழின் ஆசிரியராகவும் நீண்ட காலம் பணியாற்றியவர்; நாடக ஆசிரியராகவும் உரையாசிரியராகவும் விளங்கியவர்,

**நூல்:** கோபால — நேசரத்தினம், காசிநாதன் — நேசமலர்.

இவ்விரண்டு நூல்களும் புதினங்களாகும். இவை "உலகம் பலவிதம்" என்ற வரிசையில் வெளிவந்தவை.

## திருஞானசம்பந்த மூர்த்தி (        )

**நூல்:** தோத்திரக் கொத்து

## திருஞான சம்பந்தன், மு (20-நூ)

**ஊர்:** திருமயிலை.

**சி. பெ:** சித்தாந்தப் பேராசிரியர் பல்கலைக் கிழவர். சதாவதானி,

**நூல்:** ஏழின் தத்துவார்த்த விளக்கம்.

இந்நூலுக்கு மறைமலையடிகள் சிறப்புரை எழுதியுள்ளார். இந்நூலில் தமிழ் எழுத்துக்களைச் சித்தாந்த முறைப்படி ஆராய்ச்சி செய்து காட்டியிருக்கின்றார்.

## திருத்தக்க தேவர் (9-நூ)

**வே. பெ.** திருத்தகுமுனிவர், திருத்தகு மகாமுனிவர், திருத் தக்கமா முனிவர், தேவர்.

**வாழ்விடம்:** சோழநாடு; சமணர்.

இவர் சோழகுலத்திலே பிறந்து தமிழிலும் வடமொழி யிலும் புலமை பெற்றார்; ஆருகத சமண உண்மைகளை ஓதி

யுணர்ந்தார். இளமையிலேயே துறவு பூண்டு தம் ஆசிரியருடன் மதுரைக்கு வந்து அங்குச் சிலகாலம் தங்கித் தமிழ்ப் புலவர்களின் பாராட்டினைப் பெற்ருர் என்பது சமணர்களிடையே வழங்கும் செவிவழிச் செய்தியாலறியப்படுகிறது. இவருடைய காலம், இடம், இவரை ஆதரித்த பெரியவர் முதலிய செய்திகள் குறித்துத் தமிழ் நூல்களால் அறிய இயலவில்லை. சீவக சிந்தாமணிக்கு நச்சினர்க்கினியர் எழுதும் உரையில் "இத்தொடர்நிலைச் செய்யுளைத் தேவர் செய்கின்ற காலத்தில் நூல் அகத்தியமும் தொல்காப்பியமும்" என்று குறிப்பிடுவதால் இவரது காலத்தை ஒருவாறு உணரலாம்.

"முந்நீர் வலம்புரி" என்ற சிந்தாமணிச் செய்யுளிலே" சோழ குலமாகிய கடலிலே பிறந்தவலம்புரி" என்று நச்சினர்க்கினியர் இவரைக் குறிப்பிடுவதால் இவர் சோழர் குலத்தவரென்றும், உரைச் சிறப்புப் பாயிரத்தில் "வண்பெரு வஞ்சிப் பொய்யாமொழி புகழ்மையறு கீர்த்தித் திருத்தகு முனிவன்" என்று கூறுவதால் வஞ்சி என்ற ஊரிலிருந்த பொய்யாமொழி என்பவரால் புகழப் பெற்றவரென்று தெரிகிறது. மேலும் இவர், இவருடைய ஆசிரியரால் பெரிதும் மதிக்கப்பெற்றவ ரென்பது நச்சினர்க்கினியர் கூற்ருல் அறியப்படுகின்றது.

**நூல்:** சீவகசிந்தாமணி, நரிவிருத்தம்.

சீவக சிந்தாமணி தமிழில் வழங்கும் ஐம் பெருங்காப்பியங்களுள் ஒன்று: சிலப்பதிகாரத்திற்கும் மணிமேகலைக்கும் பிற்பட்டது இப் பெருங்காப்பியமே. தமிழ் மொழியில் முதன் முதல் விருத்தப்பாவாலியற்றப் பெற்றது. கம்பராமாயணம் முதலிய நூல்களுக்கு வழிகாட்டியாக அமைந்தது. சிந்தாமணி என்பது இந்நூலுக்குத் தன்மையால் வந்த பெயர். பிறந்தவுடன் சீவகனை விசயை, 'சிந்தாமணி' என்று பாராட்டியமையால் முதலில் அவனுக்குப் பெயராகிப் பின்னர் அவன் வரலாறு கூறும் நூலுக்குப் பெயராயிற்று என்பர். "முந்நீர் வலம்புரி" (3143) என்ற சிந்தாமணிச்

செய்யுளில் இந்நூல் சிந்தாமணி என்ற பெயரால் வழங்கப் பட்டிருத்தலை அறியலாம். சிந்தாமணி என்ற பெயரில் வேறு சிலநூல்கள் தமிழில் இருத்தலின் 'சீவக' என்ற அடையினைச் சேர்த்துச் சீவக சிந்தாமணி என வழங்கப் பட்டதாக அறிகிறோம். எனினும் உரையாசிரியர்கள் பெரும் பாலும் சிந்தாமணி என்றே வழங்கக் காண்கிறோம். புலவர் சிந்தித்தவற்றை யெல்லாம் தருதலின் இது சிந்தாமணி என்று பெயர் பெற்ற தென்று சொல்லுவதுண்டு. சீவகன் காந்தர்வதத்தை முதலிய மகளிர் எண்மரைத் தனித்தனி மணஞ்செய்து கொண்டமையால் மணநூல் என்ற பெயரும் இதற்கு வழங்குகின்றது.

இந்நூல் 13 இலம்பகமும் 3154 செய்யுட்களும் கொண்டது. இவற்றுள் 2700 செய்யுட்கள் தேவரால் இயற்றப் பெற்ற தென்றும் பிற பிற்காலத்தால் எழுதிச் சேர்க்கப்பட்டன என்றும் இரண்டு பாடல்கள் இவ்வாசிரியரால் இயற்றப் பட்டன என்றும் ஒரு கருத்துண்டு.

இந்நூலின் பெரும்பகுதி இலம்பகமெனப் பெயர் பெற் றுள்ளது. நாமகளிலம்பகம், கோவிந்தையாரிலம்பகம், காந்தர்வதத்தையாரிலம்பகம், குணமாலை யாரிலம்பகம், பதுமையாரிலம்பகம், கேமசரியாரிலம்பகம், கனகமாலையாரி லம்பகம், விமலையாரிலம்பகம், சுரமஞ்சரியாரிலம்பகம், மண்மகளிலம்பகம், பூமகளிலம்பகம், இலக்கணையாரிலம்பகம், முத்தியிலிம்பகம் என்ற 13 பகுதிகள் உள்ளன. கோவிந்தை யாரொழிந்த காந்தர்வ தந்தையார் முதலிய எண்மரைச் சீவகன் மணப்பதே இந்நூல் நுவலும் செய்தி.

இந்நூலுக்கு நச்சினார்க்கினியர் விரிவான உரையொன்று இயற்றியுள்ளார். இவர் தம் உரையில் சில இடங்களில் வேறொரு உரையைச் சுட்டிக்காட்டி உள்ளமையால் பழைய உரையொன்று இருந்திருக்கவேண்டுமென்று அறிகிறோம்.

**நரி விருத்தம்:** இது 50 பாடல்களைக் கொண்டது. இந்நூல் ஆசிரியரின் ஆணை பெற்றுப் பாடப்பெற்றதென்றும் சிந்தா

மணி பாடுவதற்கு முன்னே ஆசிரியர் இந்நூலை இயற்றித் தம் திறமையை வெளிப்படுத்தினாரென்றும் கூறுவர். இது நிலையாமையை வலியுறுத்தவது.

## திருத்தாமனார் (சங்ககாலம்)

**இ.பெ:** திருத்தாமன்.

இவர் 'ஆர்' விருது பெற்றுத் திருத்தாமனார் என அழைக்கப் பெற்றார். சிலர் தாமன் என்பது இயற்பெயரென்றும். திரு என்பது அவரது சிறப்பைப் குறித்து நிற்பது என்றும் கொள்வார். இவர் சேரமான் வஞ்சன் என்பவரைப் பாடியுள்ளார்.

**நூல்:** புறம். 398.

## திருத்தேவர் பழநியப்பக் கவுண்டர் (20-நூ)

**ஊர்:** கொங்குநாடு, வேடசெந்தூர்.

இவர் வடமொழியையும் தென்மொழியையும் நன்கு கற்றுச் சிறந்த புலமை பெற்று விளங்கினார். இவர் வேதாந்த நூல்களிலும் சிறந்த பயிற்சி பெற்றிருந்தார்; சொற்பொழிவாற்றுவதில் சிறந்து விளங்கினார்.

**நூல்:** பரமாத்துவித சித்தாந்தம், மனித இயல்பு, முதற் குறளும் முதற் பொருளும், இறைவனும் எழுத்தைந்தும், கோவில் யானை' போராசிரியன், தனித்தமிழ் மந்திரம்.

## திருத்தோணியப்பர் (16-நூ)

**ஊர்:** சீர்காழி.

இவர் தமிழ் இலக்கண இலக்கியத்திலும் சைவசித்தாந் தத்திலும் பயிற்சி மிக்கவர். தத்துவப் பிரகாசரின் மாணவர்.

இவர் தம் ஆசிரியரோடு அக்காலத்திலே கிருஷ்ண தேவராயரது பிரதிநிதியாக அரச காரியங்களை நடத்தி வந்த சாளுவ நாயக்கரைக் காணச் சென்றபோது, அவர்

ஆசிரியருக்குப் பாழடைந்த வீடு ஒன்றினைக் கொடுக்க அதனை இழிவாகக் கருதி அவர்மீது "ஆயிரவர் புலவோரில்" என்று தொடங்கும் தனிப்பாடலைப் பாடினார்.

**நூல்:** தனிப்பாடல்.

## திருதீய பிரமதந்திர ஸ்வதந்திர சாமி (        )

**நூல்:** குருபரம் பராப்ரபாவம்.

இந்நூல் ஆழ்வார் ஆசாரியர்களின் வரலாறு பற்றி ஆராய்ந்து கூறுவது; உரைநடையில் 155 பக்கங்களில் அமைந்தது.

## திருநகரிப்பிள்ளை (        )

**நூல்:** திருநகரிப்பிள்ளை வார்த்தை.

## திருநயம் அப்பாவையர் (        )

**பார்க்க:** அப்பாவையர் - 2.

## திருநாகந்தையர் (19-நூ)

**ஊர்:** கச்சித் தலைச் செங்கோட்டம்.

**தந்தை:** உறுவனார்.

**நூல்:** கம்பரால் பாடப்பெற்ற ஏரெழுபது என்னும் நூலுக்கு விளக்கவுரை எழுதியுள்ளார்.

இவ்வுரையைப் பாராட்டித் திருத்துருத்தி பொன்னிகுடி கிழார் என்பவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## திருநாகேசுவர முதலியார், வே. (        )

**ஊர்:** தொழுவூர்.

**தந்தை:** வேலாயுத முதலியார்.

**நூல்:** இவர் தம் தந்தையார் வரலாற்றை எழுதி வெளியிட்டார். அவர் இயற்றிய நூல்களையும் ஆராய்ந்து வெளியிட்டார்.

## திருநாராயண ஐயங்கார் (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம்; எதிர்க்கோட்டை.

**தந்தை:** அப்பனையங்கார்; **தாய்:** செங்கமலவல்லி; அந்தணர்

**வாழ்ந்த காலம்:** 13-10-1861 — 29-7-1947.

இவர் இராமநாதபுரத்தில் சதாவதானம் முத்துச்சாமி ஐயங்கார் என்பவரிடம் தமிழ்க் கல்வி கற்ருர். இராமநாதபுரம் அரசர் பாற்கர சேதுபதி, பாண்டித்துரைத் தேவர், கோட்டைச்சாமித் தேவர் முதலியோர்கள் இவரது கல்வி வளர்ச்சிக்கு உதவி செய்தனர். பந்தல்குடி உப. வே. வித்துவான் வேங்கடாச் சாரியாரிடம் வடமொழி வியாகரணம் முதலியவற்றையும் சீனிவாசாச்சாரியாரிடம் ஸ்ரீபாஷ்யம், பகவத் விஜயம் முதலிய வைணவ சயம நூல்களைக் கற்றுத் தேறினர். மந்திரம், மருத்துவம், காலக் கணிதம் தருக்கம் முதலிய எல்லாக் கலைகளையும் இவர் கற்ருர். இவரது புலமை நலத்தை அறிந்த பாலவனந்தம், பாண்டித்துரை தேவர் இவரைத் தம்முடைய அவைக்களப் புலவராக ஏற்றுக் கொண்டார். சாதவ சந்திரிகை என்ற வடமொழிக் காலக்கணித நூலைத் தமிழில் பெயர்த்து இவர் பாண்டித்துரைத் தேவரின் பாராட்டினைப் பெற்றுள்ளார். பன்னூற்றிரட்டு என்ற நூல் வெளிவர இவர் பெருந்துணையாக இருந்தார். 1901–ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் தலைமைப் பொறுப்பினை ஏற்ற இவர் தம் வாழ்நாளின் இறுதிவரை 40 ஆண்டுகள் பணியாற்றினர். இவர் பாண்டித்துரைத் தேவரின் கட்டளைப்படி சில ஆண்டுகள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் மேலாளராகவும், பணியாற்றியுள்ளார். 1910- ஆம் ஆண்டு முதல் செந்தமிழ்ப் பத்திரிகையின் ஆசிரியராகப் பணியேற்றுப் பல கட்டுரைகளை வெளியிட்டுள்ளார். நூற்பதிப்புப் பணியில் அநுமான விளக்கம், பாண்டியம், மாறனலங்காரம், பழமொழி முதல் 200 உரை, அண்டகோள விருந்தி, அமிர்தரஞ்சினி, முதலிய நூல்களைத்தக்கவாறு ஆய்ந்து குறிப்புரை முதலிய சிறப்புரைகளுடன் செந்தமிழ் வெளியீடாக வெளிப் படுத்தியுள்ளார்.

இவரது ஆசிரியப்பணியினையும் தமிழ்ச்சங்கம் மற்றும் செந் தமிழ் இதழ்ப் பணியினையும் பாராட்டும் வகையில் 1922-ம் ஆண்டில் வேல்ஸ் இளவரசர் சென்னைக்கு வந்தபோது சென்னை அரசாங்கம் இரண்டு சால்வைகளையும் சிங்கமுகத் தோடாவினையும் பதக்கத்தினையும் அளித்துச் சிறப்பித்தது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தினர் பணமுடிப்பளித்துச் சிறப் பித்தனர். சண்முகராசேசுவரநாகநாத சேதுபதி தமது 37-ஆவது ஆண்டு நிறைவு விழாவில் பொற்பதக்கமளித்துப் பாராட்டினர்.

## திருநாராயண தாசர் (20-நூ)

**நூல்:** சதுர்வேதி சரித்திர சங்கீர்த்தனை (மொழிபெயர்ப்பு (1900).

## திருநாராயண பண்டிதன் ( )

**சி. பெ.** கவி குமுதசந்திரபண்டிதன்.

இவர் கல்வெட்டாலறியப்படும் புலவர்களுள் ஒருவர்.

**நூல்:** குலோத்துங்க சோழ சரிதை.

இந்நூல் மறைந்துபோன தமிழ் நூல்களுள் ஒன்று.

## திருநாவுக்கரசர் (7 - நூ)

**வே பெ:** அப்பர், மருணீக்கியார், வாகீசர், ஆளுடைய அரசு, தாண்டகவேந்தர்.

**ஊர்:** தென்னார்க்காடு மாவட்டம், திருவாமூர்.

**தந்தை:** புகழனார்; **தாய்:** மாதினியார்; வேளாளர்.

இவர் இளமையிலேயே பெற்றோர்களை இழந்து தமக்கை யார் திலகவதியின் ஆதரவில் வளர்ந்தார். சமண சமயத்திற் சேர்ந்து தருமசேனர் என்று அழைக்கப்பெற்றார். திலகவதி யார் இக்குறை கண்டு வருந்தித் திருவதிகைச் சிவபிரானிடம் விண்ணப்பிக்க, இறைவன் இவரைச் சூலைநோய் கொடுத்துத்

தடுத்தாட்கொண்டார். அப்போது இவர் "கூற்றாயினவாறு" என்ற பதிகம்பாடிச் சூலைநோய் நீங்கப்பெற்றார். இறைவன் இவருக்குத் திருநாவுக்கரசர் என்ற பெயரைச் சூட்டினார். சமயம் மாறிய இவரைச் சமணர்கள் கொல்லக் கருதி நீற்றறையிலிட்டும் நஞ்சூட்டியும் மதயானையை ஏவியும் இவர் இறக்கவில்லை. பின்னர் இவரைக் கல்லொடு கட்டிக் கடலில் எறிந்தனர். அப்போது இவர், "சொற்றுணை வேதியன்" என்ற பதிகத்தைப் பாடக் கல் தெப்பமாக மிதந்து திருப்பாதிரிப்புலியூரில் இவர் கரை சேர்ந்தார். தலயாத்திரையில் இவருக்கு இறைவன் ஆங்காங்கே காட்சி யளித்தானென்று கூறுவர். சீர்காழியில் சம்பந்தர் இவரை அப்பர் என்று அழைத்தார். திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றார். திருமறைக்காட்டில் பதிகம் பாடிக் கதவந் திறந்தார். பழையாறை வடதளியில் சமணர்களால் மூடப் பட்ட இலிங்கத்தை வெளிப்படுத்தினார். அப்பூதியடிகள் மகன் பாம்பு கடித்து இறக்க, அவனைப் பதிகம் பாடி உயிர் பெறச் செய்தார். பாண்டி நாட்டுத் தலயாத்திரைக்குப் பின் சோழநாட்டுத் திருப்புகலூருக்கு வந்து பொன்னாசை பெண்ணாசை என்ற மாயைகளை வென்றவராய்ப் பெருந்தவ நிலையிலிருந்து "உன்னடிக்கே போதுகின்றேன்" என்ற பதிகம் பாடித் தம் எண்பத்தோராம் வயதில் சித்திரைச் சதயத்தில் சிவன்கழல் சேர்ந்தார்.

இவர் பதி பசு பாசம் என்ற முப்பொருள்களையும் விளக்கி யவர். இறைவனை எவ்வுருவில் பாவித்து வணங்குகிறோமோ அவன் அவ்வுருவில் அருள்செய்வான் என்ற சைவ உண்மை யையும் விளக்கியுள்ளார். அன்பே இறைவனை அடையும் வழி என்பது இவரது குறிக்கோள். இறைவனுக்குத் தொண்டு செய்வதையே குறிக்கோளாகக் கொண்டவர். இவர் கொண்ட நற்பணி உழவாரப்பணி.

**நூல்:** தேவாரம்.

சைவத்திருமுறைகளுள் 4, 5, 6 என்னும் மூன்று திரு முறைகளில் இவர் பாடிய தேவாரப் பதிகங்கள் அடங்கி யுள்ளன. நான்காந் திருமுறை 113 பதிகங்கள், 1070

பாடல்கள்; ஐந்தாந் திருமுறை 100 பதிகங்கள், 1015 பாடல்கள்; ஆறுந்திருமுறை 99 பதிகங்கள், 981 பாடல்கள். மொத்தம் 302 பதிகங்கள்; 3066 பாடல்கள்.

நான்காந் திருமுறையிலமைந்த பாடல்கள் பல பண்களையுடையன; கொல்லி, காந்தாரம், பிரபந்தைக் காந்தாரம், சாதாரி, காந்தாரபஞ்சமம், பழந்தக்கராகம், பழம் பஞ்சுரம், இந்தளம், சீகாமரம், குறிஞ்சி என்ற பண்களில் 79 பதிகங்கள் அமைந்துள்ளன.

ஐந்தாந் திருமுறை முழுதும் திருகுறுந்தொகை. ஆறுந் திருமுறை திருத்தாண்டகம்.

நாவுக்கரசர் தேவாரப் பாடல்களில் அவரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் பல அமைந்துள்ளன. அப்பூதி, அமர்நீதி, கணம்புல்லர், கண்ணப்பர், கோச்செங்கட்சோழர், சண்டேசர், சாக்கியர், ஞானசம்பந்தர், நமிநந்தியடிகள் ஆகியோரும் இப்பாடல்களில் குறிக்கப்பட்டுள்ளனர். இவர் இறைவனை நாயகனாகவும் தம்மை நாயகியாகவும் வைத்துப் பல பாடல்களில் பாடியுள்ளார். தம் குறையை நினைந்து நினைந்து இரங்குவதும் இறைவன் பெருங்கருணையை நினைந்து உருகுவதும் இவர் பாடல்களில் இயல்பாகக் காணப் படுகின்றன.

## திருநாவுக்கரசு தேசிகர் ( )

இவர் தருமபுர ஆதீனத்தில் அழகிய சிற்றம்பல தேசிகருக்குப் பின்பு ஒன்பதாவது பட்டத்தில் எழுந்தருளி யிருந்தவர். அருட்செல்வம் கைவரப் பெற்றவர். இவ ரிடத்தில் தான் தென்களந்தைப் படிக்காசுப் புலவர் சைவத் துறவு பெற்றுப் பதினெட்டுக்கத் தம்பிரான்களில் ஒருவராக எழுந்தருளியிருந்தார். இறுதியில் இவர் சிவஞான தேசிகருக்குத் திருவடிசூட்டி வீடுபேற்றை அடைந்தார்.

**நூல்:** ‘சைவசித்தாந்த நிச்சயம்’.

இந்நூல் 97 கட்டளைக் கலித்துறைப் பாக்களால் ஆயது. ஆணவமாகிய மலங்களின் உண்மையையும், உருவத்தையும் விளக்கிச்செல்வது.

## திருநாவுக்கரசு முதலியார் (19-நூ)

**ஊர்:** சென்னை. புழலை

**சி. பெ:** பண்டித ரத்தினம்.

**நூல்:** சிவஞான யோகிகள் மீது மாலை என்னும் நூல் பாடியிருக்கிறார். திருத்தொண்டர் வெண்பா என்னும் நூலை ஆராய்ந்து வெளியிட்டிருக்கிறார்.

## திருநாவுக்கரசு முதலியார், மணி. (20-நூ)

**ஊர்:** செங்கற்பட்டு மாவட்டம், மணிமங்கலம்.

**தந்தை:** சுந்தர முதலியார்; **தாய்:** வேதவல்லி.

**வாழ்ந்த காலம்:** கி.பி. 1888 — 1931.

இவர் செங்கற்பட்டிலும் சென்னைத் தொண்டைமண்டல உயர்நிலைப் பள்ளியிலும் பயின்றார். பூவை கலியாணசுந்தர முதலியாரிடத்திலும், மறைமலை அடிகளிடத்திலும் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். சென்னை எஸ்.பி.ஜி. உயர்நிலைப்பள்ளியில் துணைத் தமிழாசிரியராகவும், முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகவும், பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும் பணியாற்றினர். சென்னை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரை ஊக்குவித்துச் "செந்தமிழ்ச் செல்வி" என்னுந் திங்களிதழை வெளியிடச் செய்தார். "தமிழரசு" என்னும் இதழின் ஆசிரியராக இருந்து பல கட்டுரைகள் எழுதியுள்ளார். தீண்டாமை விலக்கினைச் செயல்முறையில் கைக்கொண்டவர் இவர்.

**நூல்:** அறநெறி விளக்கம், புலவர்கதை, திருக்கண்ணப்பன், குமணன், இராசராசன், சண்பகவல்லி.

## திருநின்றவூரர் ( )

இவரது இயற்பெயர் தெரிந்திலது.

**நூல்:** அரி தசாவதார வாற்சலிய சாரம்.

## திருப்பதி சாமிகள் (20-நூ)

**ஊர்:** கொங்குநாட்டு அரவக்குறிச்சி.

**தந்தை:** சுப்பிரமணியர்; **தாய்:** வெள்ளையம்மை.

**வாழ்ந்த காலம்:** 1873 — 1937.

இவர் தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகியவற்றை நன்கு கற்றுணர்ந்தார். பிறகு அறிவு நூல்களைத் தக்க ஆசிரியரிடம் பாடங் கேட்டுத் தெளிந்தார். துறவுநிலையை மேற்கொண்டு அறிவு நூல்கள் பலவற்றை இயற்றினர்.

**நூல்:** பழமொழிப்போதம், ஞானலோகம் என்னும் உத்தி சாகரம், தட்சிணாமூர்த்தி தோத்திரம், வித்தியாகீதை, பத்தி நெறி, திருநாமமாலை, முத்திநெறி, சிவசூத்திர விமர்சனி, மாதர் விடயம், சதாசிவப்பிரம தோத்திரம், தேவி தோத்திரம், விவேக சித்திரம், தத்தாத்திரேயர் தோத்திரம், மாரியம்மன் தாலாட்டு, சகுந்தலா அல்லது காதல் வெற்றி.

## திருப்பதி சாரச் சாமி (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி குறுக்குத்துறை.

**நூல்:** சிவப்பிரகாசம் விரிவுரை.

## திருப்பதி வேங்கடாசலபதி ஆச்சாரி, சோ. (20-நூ)

**ஊர்:** இராமநாதபுரம் மாவட்டம் குல்லம்பட்டி என்னும் துளசியூர்.

**தந்தை:** சோலைமலையாச்சாரி.

**நூல்:** ஆயிரத்தெட்டுச் சிவக்ஷேத்திரமாலை, நூற்றெட்டுத் திருப்பதிமாலைத் திரட்டு, அறுபத்து நான்கு சுப்பிரமணிய

க்ஷேத்திர மாலைத்திரட்டு, பாண்டி விநாயகமாலை, சிவ க்ஷேத்திரக் காதல் திரட்டு, காவடிச் சிந்து, திவ்யரஞ்சிதக் கீர்த்தனை, நவரசக் கீர்த்தனை, சந்திரவன்னன் அம்மானை, சந்திரவன்னன் கதைநடை, சந்திரவன்னன் புராணம், சந்திரவன்னன் நாடகம், அரிச்சந்திர நாடகம், சிபிச் சக்கர வர்த்தி நாடகம், விசித்திரகலை நாடகம், நாலுமந்திரி நாடகம், மதனகாம நாடகம், மதிசூரநாடகம், மதிசிங்க நாடகம், மதனகேசரி நாடகம், செகதலப்பிரதாப நாடகம், மாணிக்கவல்லி நாடகம், சூதநாடகம், மதனவதி நாடகம், அமிர்தவல்லி நாடகம், காலிங்க நாடகம், சவுரிய நாடகம், ஏகாதசி அம்மானை, பாரத அம்மானை, தருமர் அசுவமேத அம்மானை, சோழன் அம்மானை, ஆமையார் அம்மானை, சுதர்மனம்மானை, காந்தருவன் அம்மானை, திருப்பதி வேங்க டாசலபதி ஆசாரி தரிசித்த சிவஸ்தலங்கள், திருப்பதி வேங்கடாசலபதி ஆசாரி தரிசித்த சுப்பிரமணிய ஸ்தலங்கள், திருப்பதி வேங்கடாசலபதி ஆசாரி தரிசித்த விட்டுணு தலங்கள், திருப்பதி வேங்கடாசலபதி ஆசாரி. வம்சமணி தீபம், வச்சிரபாகு நாடகம்.

## திருப்பாணாழ்வார் (8-நூ)

**வே.பெ.** பாணர்.

**ஊர்:** சோழநாட்டில் உறையூர்.

இவர் கார்த்திகைத் திங்கள் உரோகணி நட்சத்திரத்தில் அவதரித்தவர். பாணர் குலத்தில் தோன்றிப் பஞ்சமரால் வளர்க்கப் பெற்றவர். தாழ்ந்த குலத்திலே பிறந்தமையால் திருவரங்கம் பெரிய கோவிலினுள் செல்ல அஞ்சிக் காவிரிக் கரையிலிருந்து இன்னிசை பாடினார். பின்னர் பெருமாள் கட்டளையின் படி கோயிலருச்சகர் ஆழ்வாரைத் தோள் மேலேற்றிச் சென்று பெருமாள் திருமுன் இறக்கிச் சென்றார். ஆழ்வார் திருமாலைக் கண்ணாரக் கண்டுகளித்து "அமலனாதிப் பிரான்" என்னும் திருப்பாசுரத்தை அருளிச் செய்தார்.

தொண்டரடிப் பொடியாழ்வார் "இழிகுலத்தவர்களேனும் எம்மடியார்களாயின் ......... நின்னெடும்ஒக்க அருளினாய்" என்னுங் குறிப்பு உள்ளதால் அவரோடு ஒத்த காலத்தவ ரென்று கொள்ளலாம்.

**நூல்:** "அமலனாதிப்பிரான்" என்று தொடங்கும் பாசுரம்.

## திருப்பாற்கடல் நாதன் கவிராயர் (19-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம்.

இவர் அம்பலவாணக் கவிராயர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். அந்நாளில் சமயத் தொண்டு செய்யத் திருநெல்வேலிக்கு வந்த இரேனியஸ் ஐயர் இவரிடம் 14 ஆண்டுகள் தமிழ் கற்றார். பாதிரியார் 1838ஆம் ஆண்டில் காலமான போது இவர் அவர்மீது இரங்கற்பா ஒன்று பாடியுள்ளார். இவரது வீட்டில் ஏட்டுச் சுவடிகள் பல இருந்ததாகக் கூறுவர். இவரிடமிருந்தே உ. வே. சாமி நாதையர் பத்துப்பாட்டு, சீவக சிந்தாமணி, கொங்குவேள் மாக்கதை முதலிய ஏட்டுச் சுவடிகளைப் பெற்றுக்கொண்டார். முத்து வீரியம் என்னும் இலக்கண நூலினை எழுதிய முத்து வீரிய உபாத்தியாயர் இவருடைய நண்பர். அந்நூலுக்கு இவர் உரையும் எழுதியுள்ளார்.

**நூல்:** முத்துவீரியம் உரை.

## திருமங்கையாழ்வார் (9-நூ)

**வே. பெ.** நீலன், நாலுகவிப் பெருமாள், திருமங்கை மன்னன்.

**ஊர்:** சோழநாட்டில் திருவாலிநகர்; கள்ளர்.

**தந்தை:** நீலி.

இப் பெரியார் பல்லவர்களுள் சிறந்து விளங்கிய மூன்றாம் நந்திவர்மனது திருப்பணியை "நந்திபணி செய்த" என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் பணிசெய்த என்ற சிறந்த

காலக் குறிப்பால் மூன்றுவது நந்திவர்மன் காலத்திற்குப் பின் இவர் இருந்திருக்க வேண்டுமென்றும், "நீள்முடி வணங்கும் வயிரமேகன்" என்று நிகழ்காலத்தில் கூறுவதால் இவர் அவன் காலத்தவர் என்பர் கா. சுப்பிரமணியப்பிள்ளை. திருவொற்றியூர்க் கல்வெட்டால் வைரமேகன் காலம் கி.பி. 880 என்பது பெறப்படுகிறது. ஆதலின் திருமங்கை யாழ்வார் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றுண்டென்று துணியலாம்.

கள்ளர் குலத்தில் கார்த்திகைத் திங்களில் கார்த்திகை நட்சத்திரத்தில் தோன்றிய இவர், திருவாலி நாட்டிற்கும் திருமங்கை, குறையல் என்ற நகரங்களுக்கும் அரசர்.

இவர் குமுதவல்லி என்ற வைணவப் பெண்ணினை மணஞ் செய்து கொள்ளும் பொருட்டுத் திருநறையூர் நம்பி என்ற ஆசிரியனிடத்துத் திரு இலச்சினை பெற்றுத் திருமால் திரு வருளுக்கு உரியவராஞர். இப்பெரியார் பாகவதர்களை வழிபடுவதில் தம்முடைய பொருளனைத்தையும் செலவு செய்து பின்னர் வழிபாடு செய்வதற்குப் பொருளின்மையால் களவுத்தொழிலை மேற்கொண்டாரென்றும், அப்போதுதான் இறைவன் மந்திரோபதேசம் செய்து பணி கொண்டா ரென்பர். அதுமுதல் இவர் பெருமாள் திருக்கோயில் கொண்ட திவ்விய தேசங்களுக்கெல்லாம் நேரிற் சென்று பரமனை வணங்கிப் பதிகங்கள் பாடினர்.

இவர் திருவரங்கம் பெரியகோயிலின் சுற்றுத் திருமதி லெடுத்தார். நம்மாழ்வார் தன் அடிச் சோதிக்கு எழுந் தருளியபின் அப்பெரியாருக்குத் திருசுத்தியயனேற் சவத்தைச் செய்தார். இவர் 105 ஆண்டுகாலம் இருந்தா ரென்றும், திருக்குறுங்குடியில் சிலகாலம் எழுந்தருளியிருந்து தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினர் என்றும் கூறுவர்.

**நூல்:** சிறிய திருமடல், பெரிய திருமடல், திருக்குறுந் தாண்டகம், திரு நெடுந்தாண்டகம், திருவெழுக் கூற்றிருக் கை, பெரிய திருமொழி.

இவ் ஆறு நூல்களையும் நம்மாழ்வார் இயற்றிய நான்கு திருப்பாடற் றொகையாகிய நான்மறைக்கும் ஆறங்கமாக வைணவர்கள் கருதுவர்.

**சிறிய திருமடல்:** மடலேறுதல் என்னும் அகப்பொருள் துறையில் அமைந்தது. ஒரே பாடலாகவுள்ள இதனை 37 பாடல்களாகக் கொண்டு எண்ணிட்டுக் கணக்கிட்டுள்ளனர்.

**பெரிய திருமடல்:** இந்நூலும் அகப்பொருள் துறையில் அமைந்ததே. இதனை 78 பாடல்களாகக் கொண்டு கணக் கிட்டுள்ளனர்.

**திருக்குறுந் தாண்டகம்:** தாண்டகம் என்பது செய்யுள் வகையுள் ஒன்று. அதன் வகையுள் இது சிறிய அளவுள்ள அடிகளைப் பெற்றிருப்பதால் இது திருக்குறுந்தாண்டகம் ஆயிற்று. இதற்குத் தனியன் இல்லை. இந்நூலுக்குப் பெரிய வாச்சான்பிள்ளை அருளிச் செய்த வியாக்கியானமும் பூர்வா சாரியர்கள் சேர்ந்தருளிய அரும்பத விளக்கமும், வியாக்கி யானங்களைத் தழுவிச் சேர்க்கப்பட்ட பதவுரையும் அமைந் துள்ளன.

**திருநெடுந் தாண்டகம்:** இது தாண்டகச் செய்யுளுள் பெரிய அளவுள்ள பாடல்களைக் கொண்டது. இதற்குத் தனியனில்லை. பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்த வியாக்கியானமும் பூர்வாசாரியர்கள் சேர்த்தருளிய அரும்பத விளக்கமும், வியாக்கியானங்களைத் தழுவிச் சேர்க்கப்பட்ட பதவுரையும் அமைந்துள்ளன.

**திருவெழு கூற்றிருக்கை:** இது சித்திரக் கவிவகையுள் ஒன்று; ஒரே செய்யுளால் ஆனது.

**பெரிய திருமொழி:** இதன்கண் 108 பதிகங்கள் உள்ளன. இவை பதினொரு பத்தாக வகுக்கப் பட்டுள்ளன. ஒருபத்து என்பது பத்துப் பாசுரங்களைக் கொண்டது. பதினோராம் பத்தில் மட்டும் எட்டுப் பாசுரங்களே உள்ளன. 97-ஆம் திருமொழி (10-ஆம் பத்து 7-ஆம் திருமொழி) நீங்கிய மற்றைய திருமொழிகள் ஒவ்வொன்றிலும் பத்துப்

பாசுரங்களே உள்ளன. 97-ஆம் திருமொழியில் மட்டும் பதி ளுன்கு பாசுரங்கள் உள்ளன. ஆதலின் பெரிய திரு மொழியின் மொத்தப் பாசுரங்கள் 1084.

## திருமலாச்சாரியார் (19-நூ)

**ஊர்:** வில்லூர்.

**நூல்:** 'சந்திரகலாமாலே' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'சந்திரகலாமாலே' என்னும் நூல் உ. வே. தேவராச பாரதிகளார் என்பவரால் இயற்றப் பெற்றது.

## திருமலே ஐயங்கார் - 1 (20-நூ)

**ஊர்:** சேலம்.

**நூல்:** 'திருவேங்கட மும்மணிக்கோவை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'திருவேங்கட மும்மணிக்கோவை' என்னும் நூல் திம்மப்ப அந்தணஞர் என்பவரால் இயற்றப்பெற்றது.

## திருமலே ஐயங்கார் - 2 (19-நூ)

**ஊர்:** வீரகேரளம் புதூர்.

**நூல்:** 'சங்கர நாரயணசுவாமி கோயிற்புராணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'சங்கர நாராயண சுவாமி கோயிற்புராணம்' என்னும் நூலின் முன்னூறு சருக்கங்களைப் பாடியவர் முத்துவீரக் கவிராயர் என்பவராவர்.

## திருமலைக் கொழுந்து கவிராயர் (19-நூ)

**ஊர்:** திருநெல்வேலியை அடுத்த சிக்கிலி ஐயன்குளம்; கம்மாளர்.

இவர் மிக விரைவாகப் பாவியற்றும் ஆற்றல் பெற்றமையால் துரிதகவி என்று அழைக்கப்பெற்றார். இவர் மதுக் குடித்தலிலும், வசை பாடுவதிலும் விருப்பமுடையவராக இருந்தார். இவரை வாக்குப் பலிதமுடையவரென்று அஞ்சினர். இவர் தம் காலத்தில் சென்னையில் வாழ்ந்த விநாயக முதலியார் என்ற அறச் செல்வரைப் பாராட்டிப் பல செய்யுட்கள் பாடியுள்ளார்.

**நூல்:** விநாயக முதலியாரைப் பாராட்டிப் பாடிய பாடல்கள், தனிப்பாடல்கள்.

இவருடைய தனிப்பாடல்கள் தனிச் செய்யுட் சிந்தாமணியில் காணப்பெறுகின்றன.

## திருமலைக் கொழுந்து பிள்ளை (19-நூ)

**நூல்:** மாணிக்கவாசகர் காலம்.

## திருமலைதாசர் (     )

**நூல்:** அமணேஸ்பரமாலை.

இந்நூல் உடுமலைப் பேட்டைக் கோட்டம் கஞ்சமாமலையிலெழுந்தருளியுள்ள திரிமூர்த்தி சாமிகளின் மீது பாடப்பெற்றது; 30 செய்யுட்களைக் கொண்டது.

## திருமலை நயினார் சந்திர சேகரர் (     )

இவர் திருவண்ணாமலை மெய்கண்ட சந்தானத்தைச் சேர்ந்த சத்தியஞான தரிசினியின் மாணவர்.

**நூல்:** இறைவானறையூர்ப் புராணம்.

இந்நூல் மறைந்து போன தமிழ் நூல்களுள் ஒன்று. இறைவானறையூர் என்பது தென்னார்க்காடு மாவட்டம்

திருக்கோவலூர்க் கோட்டத்திலுள்ளது. இவ்வூர் இப்போது எலவாநாசூர் என்று வழங்கப் படுகிறது. இப்புராணம் பாடியமைக்காக நூலாசிரியருக்கு வீட்டுமனையும் நிலமும் தானமாக வழங்கப்பட்ட செய்தி சாசனத்தாலறியப் படுகிறது.

## திருமலைநாதர் (16-நூ)

**சி. பெ.** புராணத் திருமலைநாதர்.

**ஊர்:** சிதம்பரம்; சைவவேளாளர்.

இவர் இளமையில் கல்வி கற்றுக் காஞ்சி ஞானப்பிரகாச மடத்து அதிபரிடம் சைவ சமயத் தீட்சை பெற்றார். புராணச் சொற்பொழிவாற்றுவதில் வல்லவராகத் திகழ்ந்த தால் புராணத் திருமலைநாதர் என்ற சிறப்புப் பெயர் பெற்றார்.

**நூல்:** சொக்கநாதர் உலா, சிதம்பர புராணம்.

**சொக்கநாதர் உலா:** ஆசிரியர் மதுரைக்குத் தலயாத்திரை சென்றபோது பாடப் பெற்றது. வீரமாறன் என்ற பாண்டியன் (கி.பி. 1473 — 1506) அவையில் அரங்கேற்றப் பெற்றது. இச்செய்தி அந்நூலின் சிறப்புப் பாயிரத்தால் தெரிய வருகிறது. இந்நூல் 516 கண்ணிகளையுடையது.

**சிதம்பர புராணம்:** இது பாயிரம், மான்மியச் சருக்கம், துன்மதச் சருக்கம், துச்சகச் சருக்கம், நியமச் சருக்கம், சோமநாதச் சருக்கம், தீர்த்தச் சருக்கம், திருச்சிற்றம்பலச் சருக்கம், சமாதிச் சருக்கம், துற்றெறி சனச்சருக்கம் என்ற பத்துச் சருக்கங்களையும் 813 திருவிருத்தங்களையுமுடையது.

## திருமலை முத்துசுவாமி (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம் தென்காசி.

**பிறந்த நாள்:** 28—1—1928.

இவர் எட்டயபுரம் அரசவைக் கவியாக விளங்கிய முத்து சாமிக் கவிராயரின் பெயரர். இவர் எம். ஏ. பட்டம்

பெற்றவர்; பரணி நூல்கள் குறித்து ஆய்வு மேற்கொண்டு எம்.லிட். பட்டம் பெற்றுள்ளார். ஆசிரியப் பயிற்சியும் நூலகர் பயிற்சியும் பெற்றவர். அமெரிக்க அரசினரின் கல்வி, பண்பாட்டுத் திட்டத்தின் கீழ் 1965-ஆம் ஆண்டில் அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் உள்ள நூலகங்களைப் பற்றி அறிந்து வந்தார்.

**நூல்:** 'தமிழ்நாடும் மொழியும்', 'சைவ நன்னெறி', 'உயர் நிலைப் பள்ளி நூலகம்', 'நூலக ஆட்சி', 'நூலக அமைப் பியல்'.

## திருமலை முத்துப் பிள்ளை, (20-நூ)

**ஊர்:** மதுரை.

**நூல்:** வேளாள சூளாமணி என்னும் நூலுக்குச் சிறப்புப் பாயிரமாக ஒருபாடல் பாடியுள்ளார்.

## திருமலையத்தங்கி தாதாரியர் ( )

**ஊர்:** திருநின்றவூர்.

**நூல்:** நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.

இந்நூல் திருமால் எழுந்தருளிய 108 தலங்களை அமைத்து அந்தாதியாகப் பாடப் பெற்றது. கட்டளைக் கலித்துறையில் அமைந்தது. 110 செய்யுட்கள்.

## திருமலையப்ப முதலியார் சி, (20-நூ)

**ஊர்:** சீவில்லிப்புத்தூர்.

**தந்தை:** சிதம்பரநாத முதலியார் .

**நூல்:** சிவதோத்திர அந்தாதி.

இந்நூலினைப் பாராட்டி வெ. ப. சுப்பிரமணிய முதலியார், மு. ரா. அருணாசலக் கயுராயர் முதலாயினோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## திருமலையர் ( )

இவர் திருக்குறளுக்கு உரைகண்ட பழைய உரையாசிரியர்கள் பதின்மருள் ஒருவர். கி. பி. 13-ஆம் நூற்றுண்டினரென்று கருதப்படும் பரிமேலழகருக்கு முற்பட்டவர்.

இவர் இயற்றிய உரை கிடைக்காமையால் அச்சில் வரவில்லை. இவர் சமணராயிருக்கலாமென்று கருதுகின்றனர். திருமலை என்பது வடார்க்காடு மாவட்டத்திலுள்ளது. இது சமணர்க்குரிய இடம்.

## திருமலையாண்டிக் கவிராயர் ( )

**ஊர்:** பாண்டிநாடு, வாசுதேவநல்லூர்.

**நூல்:** இவர் சாற்றுக்கவி ஒன்று பாடியுள்ளார்.

## திருமலை யாழ்வான் ( )

**நூல்:** பகவத் விடய தனியன்கள்.

## திருமலைராய முதலியார், அ (19-நூ)

**நூல்:** 'மும்மணிமாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'மும்மணிமாலை' என்னும் நூல் த. செய்யப்ப முதலியார் என்பவரால் இயற்றப்பெற்றது.

## திருமலைராயன் ( )

இவர் சோழ நாட்டில் அரசு நடத்திய சிற்றரசர்களில் ஒருவர். அதிமதுரகவியை அவைக்களப்புலவராகக் கொண்டிருந்தவர். இவர் தம் அவைக்களப் புலவரிடம் பற்று மிகுதியாகக் கொண்டு காளமேகப் புலவரைப் பாராட்டாமையால் அவருடைய வசைப்பாட்டிற்கு ஆளானவர். காளமேகப் புலவர் எமகண்டம் பாடும்போது "குடத்திலே கங்கை யடங்கும்" என்று ஈற்றடி எடுத்துக் கொடுத்துப் பாடலை நிரப்பச் சொன்னவர்.

## திருமலை வேலு உபாத்தியாயர் (19-நூ)

**நூல்:** 'சங்கர நாராயணசுவாமி கோயிற்புராணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'சங்கர நாராயண சுவாமி கோயிற்புராணம்' என்னும் நூலின் மூன்று சருக்கங்களைப் பாடியவர் முத்துவீரக் கவிராயர் என்பவராவர்.

## திருமழிசையாழ்வார் (7-நூ)

**வே. பெ.** பத்திசாரர்.

**ஊர்:** தொண்டை நாட்டிலுள்ள திருமழிசை.

இப்பெரியார் தைத்திங்களில் மக நட்சத்திரத்தில் அவதரித்தார். இளமையிலேயே பரஞான முதிர்ச்சி கைவரப் பெற்றார். உண்மைத் தத்துவம் இன்னதென ஆராய முயன்று பல மதங்களையும் ஆராய்ந்து இறுதியில் நாராயணனே பரம் பொருள் என்று தெளிந்து, அப்பரமனையே தியானித்துத் திருவல்லிக்கேணி முதலிய பல தலங்களில் பல காலம் எழுந்தருளியிருந்தார். முடிவில் கும்பகோணஞ் சென்று யோகத்தில் எழுந்தருளியிருந்தார். அக்காலத்தில் தான் நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம் என்ற பிரபந்தங்களைப் பாடினார். யாப்பருங்கல விருத்திகாரர் இவரைக் "குடமூக்கிற் பகவர்" என்று குறிப்பிடுகின்றார்.

**நூல்:** நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம்.

இப்பிரபந்தங்கள் தத்துவப் பொருளையே மிகுதியாகப் பேசுகின்றன.

## திருமாலைக் கவி (    )

**நூல்:** சித்திர கூட மகத்துவம்.

## திருமாளிகைச் சௌரிப் பெருமாளரங்கன் (20-நூ)

**ஊர்:** திருக்கண்ணபுரம்.

இவர் சிறந்த தமிழறிஞராக விளங்கிய அரசஞ் சண்முகனாரிடம் தமிழ் பயின்றவர்.

**நூல்:** இவர் குறுந்தொகை நூலின் ஏட்டுப்பிரதிகளைப் பல இடங்களிலுந் தேடி ஆராய்ந்து அதற்கு உரை எழுதி

வெளிப்படுத்தினர். இவர் குறுந்தொகையுரை 1915ஆம் ஆண்டில் வெளிவந்தது.

## திருமாளிகைத் தேவர் (11-நூ)

**ஊர்:** திருவீழிமிழலை.

இவர் திருவாவடுதுறையின் தலமரமாகிய அரசமரத்தின் கீழ் நவகோடிச் சித்தர்களைத் தமக்கு மாணவர்களாகக் கொண்டு விளங்கிய போகநாதர் என்னும் சித்தரிடத்தில் சிவதீக்கை செய்விக்கப் பெற்று அருளுரை பெற்றவர். இவரும் சேந்தனரும் ஒரே காலத்தவர்.

இவர் தில்லைக்குச் சென்று கூத்தப்பிரானுடைய திருக் கூத்தைக் கண்டு மகிழ்ந்தவர். இவர் தம் வாணாளில் சிவ பெருமானிடத்திலும் சிவனடியாரிடத்திலும் அன்பில்லாத வர்களைக் கண்ணெடுத்துப் பாராமல் இருந்து வந்தார். இவர் தில்லையில் இருந்த காலை 1. கோயில் 2. கோயில் — உயர் கொடியாடை. 3. கோயில் — உறவாகிய யோகம். 4. கோயில் — இணங்கிலா வீசன் என்னும் திருப்பதிகங்கள் நான்கைத் திருவாய் மலர்ந்தருளியுள்ளார். இவருடைய திருப்பதிகங்கள் பன்னிரு திருமுறைகளில் ஒன்பதாம் திரு முறையில் சேர்க்கப் பெற்றுள்ளன.

திருமாளிகைத் தேவரும் சேந்தனரும் ஒருவராக இருக்க லாமோ என்ற ஓர் ஐயத்தினைச் சாசனச் செய்தி ஒன்றின் வாயிலாக திரு. மு. இராகவ ஐயங்கார் 'சாசனத் தமிழ்க் கவி சரிதம்' என்று தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

முதல் இராசராசன் ஆட்சிக்காலத்தே திருவீழிமிழலைக் கோயிலுக்குத் திருநந்தா விளக்கொன்று, சிவஞானியும் திருமாளிகைத் தேவர் என்று வழங்கப் பெற்றவருமான ஐயந்தன் என்ற பெரியாரால் அமைக்கப் பட்டதென்று அக்கோயிலிற் கண்ட சாசனங்கள் கூறுவதாக தீ. அ. கோபி நாதராயர் 'செந்தமிழ்- 3ஆம் தொகுதி' கட்டுரையொன்றில் குறிப்பிட்டுள்ளார். இவற்றால் கி.பி. 10, 11-ஆம் நூற்றாண்டு களில் ஐயந்தன் என்ற இயற்பெயரும் திருமாளிகைத்

தேவர் என்ற சிறப்புப்பெயரும் வாய்ந்த சிவனடியார் ஒருவர் வாழ்ந்த செய்தி தெரிய வருவதாக திரு. மு. இராகவ ஐயங்கார் கருதுகின்றார். 'ஜயந்தன்' என்பது தமிழிற் 'சேந்தன்' என்று திரிதல் மரபு. சேந்தனாரும் திருமாளிகைத் தேவரும் வேறு வேறானவர் என்பதே நெடுங்கால வழக்காக வுள்ளதாயினும், திருவிசைப்பாப் பிரபந்தங்கள் பெரும் பாலவுந் தோன்றிய முதல் இராசராச சோழன் காலத்தை யொட்டித் இத்திருவீழிமிழலைச் சாசனங்கள் அமைந்துள்ள மையாலும், அவற்றிற் கண்ட பெரியார் சிவஞானி எனப் படுதலாலும், சாசனமுள்ள அத்திருவீழிமிழலைக்குச் சேந்தனார் பதிகமும் அமைந்திருத்தலாலும் அவ்விருவரும் ஒருவர் போலும் என்ற ஐயம் ஆராய்ச்சியாளர்க்குத் தோன்றுதல் இயல்பேயாகும் என இராகவ ஐயங்கார் கருதுகின்றார். இதற்கேற்பத் திருமாளிகைத் தேவர் பாடியன வாகக் கூறப்பெறும் திருவிசைப்பா பதிகங்கள் நான்கனுள் ஒன்றிலேனும் அப்பெரியார் பெயர் திருக்கடைக் காப்பினுள் அமையாது. அந்நான்குடன் சேந்தனாரது மூன்றுச் சேர்ந்த ஏழு பதிகங்களிலே ஏழாம் பதிகத்திற்றான் சேந்தன் என்ற முத்திரை இடப்பட்டுள்ளது. இதுவும் மேற்கூறிய ஐயத்தை வலியுறுத்துவதாக அவர் மேலுங் கூறுகின்றார்.

**நூல்:** 'திருவிசைப்பா — பதிகங்கள்'.

## திருமுனைப்பாடியார் (13-நூ)

இவர் சமணர். அறநெறிச்சாரம் என்னும் நீதிநூல் பாடியவர். முனைப்பாடியார் என்ற சிறப்புக் கருதித் திரு முனைப் பாடியார் என்று அழைக்கப் பெற்றார்.

**நூல்:** அறநெறிச் சாரம்.

இந்நூல் தீபங்குடியில் விளங்கிய அருங்கலான்வயந்தார் என்பவரால் இயற்றப்பட்ட 'அருங்கலச் செப்பு' என்னும் அறநூலின் அமைப்பைப் பின்பற்றிக் காட்சி, ஒழுக்கம், ஞானம் என்ற முப்பகுதிகளையும் 222 வெண்பாக்களையுங் கொண்டது. இந்நூலில் அருகனைச் சிவனென்று கூறி யுள்ளார்.

## திருமூர்த்தி நயினர் - 1 (        )

**ஊர்:** செய்யூர்.

**தந்தை:** இராமசாமிப் பத்தர்.

**நூல்:** நாலுமந்திரி விலாசம்.

## திருமூர்த்தி நயினர் - 2 (19-நூ)

**ஊர்:** சூளும்பேடு.

**தந்தை:** சோதிடம் இராமசாமிப் பத்தர்;

**நூல்:** நாலுமந்திரி விலாசம்.

இந்நூலை இவர் நாடகக் காப்பியமாக இயற்றியுள்ளார்.

## திருமூல தேவர் (        )

**நூல்:** திருமந்திரமாலை, திருமூல தேவர்பாடல்கள் 103, வாலைப் பஞ்சாக்கர விளக்கம் 20.

## திருமூல நாயனர் (        )

**நூல்:** சிதம்பர ரகசியம், திருமூல நாயனர் நிகண்டு 300, திருமூல நாயனர் வாத சூத்திரம் 300, உடற்கூறு, கருக்கிடை வைத்தியம் 600, ஞானேபதேசம் 30, திருமூல நாயனர் ஞானம், திருமூலர் நாடி அந்தாதி, நாதாந்தக் குறிப்பு, வேதாந்த தத்துவக் கட்டளை.

## திருமூலர் (6-நூ)

இவர் வரலாறு அகத்தியர் வரலாறு போலத் தமிழ் இலக்கிய வரலாற்றில் பல்வேறு விதமாக வழங்குகிறது. திருத்தொண்டர் புராணம், திருமந்திரம் முதலியவற்றில் கிடைக்கும் குறிப்புக்களைக் கொண்டும் பிற குறிப்புக்களைக் கொண்டும் ஓரளவு அறிந்து கொள்ளலாம்.

இவர் திருக்கயிலையிலிருந்து திருவாவடுதுறைக்குப் போந்தவரெனப் பெரிய புராணங் கூறுகின்றது. இங்கு இவர்

மூவாயிரம் ஆண்டுகள் தவங்கிடந்தாரென்றும் அத்தவ முடிவில் ஒருகாலத்தில் செய்யப்பட்டதே திருமந்திர மென்றும் ஒரு கருத்துண்டு. ஆண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் ஆண்டுகளில் மூவாயிரம் பாடல்களை இயற்றினு ரென்றும் மற்றொரு கருத்துண்டு.

இவர் திருக்கயிலையிலிருந்த பொழுது திருநந்தி தேவரிடத்தில் மெய்ப்பொருள் கேட்டு அணிமா முதலிய சித்திகள் பெற்றவ ரென்றும் பொதியமலையில் அகத்தியரைக் காணத் தென்னுடு வந்து இடையே திருவாவடுதுறையில் தங்கினுரென்றும் கருதப்படுகிறது.

மூலன் என்னும் ஆயன் இறக்கப் புலம்பிக் கொண்டிருந்த ஆனிரைகளின் துன்பத்தை அறிந்து, அவ்வாயன் உடம்பிற் புகுந்து துன்பத்தை நீக்கினுர். இக்காரணத்தால் அவர் திருமூலரென்று பெயர் பெற்றுர். மூலன் உடம்பிற் புகுந்த பின்பு தம் உடம்பைத் தேட அது காணப் படாமையின் திருவாவடுதுறைக்குவந்து தவத்தில் அமர்ந்தாரென்பர். பின்னர்தான் ''ஒன்றவன்தானே'' என்று முதலெடுத்து மூவாயிரம் தமிழ் மந்திரங்களால் திருமந்திரம் என்னும் தமிழாகம நூலை அருளிச் செய்தார். இவர் திருமந்திரத்தில் ''சிந்தை செய்தாகமம் செப்பலுற்றேனே'' என்று குறிப் பிடுவதால் திருமந்திரம் அக்காலத்தில் ஆகமம் என வழங்கப் பட்டதென அறிகிறோம்.

தாயுமானவர் ''மூலன் மரபில் வரு மௌனகுருவே'' என்று போற்றுவதால் திருமூலர் மரபு தமிழ் நாட்டில் நிலை பெற்றிருந்ததென்று அறிய முடிகிறது.

திருவாவடுதுறையில் மறைவாக வைக்கப் பட்டிருந்த திருமந்திர நூலை கி.பி. ஏழாம் நூற்றுண்டின் இடையில் வாழ்ந்த திருஞான சம்பந்தர் கண்டெடுத்து வெளிப்படுத் தினுர் என்ற செவிவழிச் செய்தியாலும், கி. பி. எட்டாம் நூற்றுண்டின் இறுதியில் வாழ்ந்த நம்பியாரூரர் ''நம்பிரான் திருமூலன் அடியார்க்குமடியேன்'' என்று போற்றுவதாலும் இவர் திருக்கயிலைக்குச் சென்றது கி.பி. ஏழாம் நூற்றுண்

டிற்குமுன் என்று கருதலாம். எனவே இவர் வாழ்ந்த காலம் ஆறும் நூற்றூண்டாகக் கருதப்படுகிறது.

சனகர், சனந்தனர், சனுதனர், சனற்குமாரர், சிவயோக மாமுனி, பதஞ்சலி, வியாக்கிரமர், திருமூலர் என்ற எண்மரும் ஒருசாலே மாணவரென்றும், திருமூலர் திருமந்திர மெய்ப் பொருளேச் சோமன், பிரமன், உருத்திரன், இந்திரன், மாலாங்கன், கந்துருக் காலாங்கி, கஞ்சமலேயன் என்ற தம் மாணவர் எழுவருக்கும் அறிவுறுத்திஞரென்றும், அவர்கள் தனித்தனியாக மடங்கள் அமைத்துக் கொண்டு தம் குரு நெறியைப் பரப்பிஞரென்றும் திருமந்திரத்தாலறிகின்ரேம்.

**நூல்:** திருமந்திரம்.

இது பாயிரப் பகுதி, தந்திரம் என்ற நூற்பிரிவு அமைப்பினேயுடையது; 3000 திருப்பாடல்கள். இப்பாடல் களின் யாப்பு வெண்பாவிற்கும், விருத்தப்பாவிற்கும் நடு நிலேயாக உள்ளது. நடை தெளிவானது; ஆற்ெெழுக் கானது. சுவைமிக்க உவமை உருவகங்கள் உள்ளன. பொரு ளமைப்பில் திருமந்திரம் ஒரு வாழ்க்கை நூல்போல அமைந் துள்ளது. ஒன்பது தந்திரங்களும் முறையே நல்லொழுக்கம், அறவாழ்க்கை, யோகப்பழக்கம், மந்திர நுட்பம், சமய வொழுக்கம், குருநெறி நிற்றல், அகப்புற உணர்வு, அருள் நுகர்வு, பேராப்பெருவாழ்வு என்னும் பொருள்களே விளக்கு வன. இது தமிழில் எழுந்த முதல் ஞானநூல் என்று போற்றப்படுவது.

## திருமேனி இரத்தினக் கவிராயர் (     )

**பார்க்க:** இரத்தினக் கவிராயர் — 2.

## திருமேனிக் கவிராயர் (17-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம் திருப்பேறை.

**தந்தை:** பெரியகாரி ரத்தினக் கவிராயர்; வேளாண் மரபினர்; வைணவர்.

இவர் காவை வடமலையப்பபிள்ளையின் காலத்தவராதலால் 17-ஆம் நூற்றாண்டினரென்று துணியலாம். தந்தையைப் போலவே கற்றுணர்ந்த புலமையாளர்.

**நூல்:** தென் திருப்பேறைக் குழைக்காதர் திருப்பணிமாலை.

இந்நூல் தனிவெண்பாவால் இயன்றது. காப்பு வாழ்த்தும் சிறப்புப்பாயிரமும் உடையது. சிறப்புப் பாயிரத்தில் காவை வடமலையப்பபிள்ளையையும் திருமலை நாயக்கரையும் நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார்; 161 கண்ணிகள்.

## திருமேனிக் கவிராயர் சீடர் (        )

**நூல்:** மகர நெடுங் குழைக்காதர் பதிகம், மகர நெடுங் குழைக்காதர் பிள்ளைத்தமிழ்.

## திருமேனி திருவேங்கிடக் கவிராயர் சீடர் (        )

**நூல்:** குழைக்காதர் பதிகம்.

## திருவடிக் கவிராசர் ( ? )

**ஊர்:** காயற்பட்டினம்.

**நூல்:** தம் மாணவராகிய காசிம் புலவர் பாடிய சந்தப் பாக்களைப் பாராட்டி ஒருபாடல் பாடியுள்ளார்.

## திருவடி தாசர் (        )

**ஊர்:** தொண்டைநாடு காஞ்சீபுரம்.

**தந்தை:** வேங்கபூபன்.

**நூல்:** கசேந்திர மோட்சம்.

இது முதலை வாயிலகப்பட்ட யானையைத் திருமால் பாதுகாத்து வீடுபேறளித்த கதையைக் கூறுவது; நூற்றுப் பதினெட்டுப் பாடல்களைக் கொண்டது.

## திருவண்ணநாதக் கவிராயர் - வீ. (19-நூ)

**ஊர்:** பாண்டிநாடு, சம்புலிங்கபுரம்.

**தந்தை:** வீரராகவக் கவிராசர்.

**நூல்:** கோமதியந்தாதி, திருச்செந்திற் பதிகம்.

**கோமதியந்தாதி:** இது சங்கரநயினர் கோயிலில் எழுந்தருளியிருக்கும் கோமதியம்பிகை மீது பாடப்பெற்றது.

**திருச்செந்திற் பதிகம்:** இந்நூலில் பத்துப் பதிகங்களில் நூறு பாடல்கள் உள்ளன.

## திருவண்ணுமலை ஐயர் ( )

**நூல்:** தசகாரியம்.

## திருவதிகை மனவாசகங் கடந்தார் ( )

**பார்க்க:** மனவாசகங் கடந்தார்.

## திருவம்பலத் தம்பிரான் ( )

**நூல்:** தருமை ஞானசம்பந்தர் உலா.

இந்நூல் ஞானசம்பந்த தேசிகர் மீது இயற்றப்பெற்றது.

## திருவம்பலனுர் (19-நூ)

**ஊர்:** கொங்குநாடு, பெருமாநல்லூர்.

இவர் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழையும் நன்குகற்றவர்; செந்தமிழிலும் வடமொழியிலும் தெலுங்கு மொழியிலும் சிறந்த புலமை பெற்றிருந்தார். இவர் நாட்டிய மாதர்களுக்கும் ஆடலாசிரியர்களுக்கும் ஆடல் பாடல் அபிநயங்களைக் கற்பிப்பதில் வல்லவராக விளங்கினுர்.

**நூல்:** நூற்றெட்டு மாத்திரைத் தாளக் கலிவெண்பா, நூற்றெட்டுத் தாளவெண்பா அந்தாதி.

## திருவரங்க ஐயங்கார், கி. (20-நூ)

**தந்தை:** கிருட்டினமாச்சாரியார்.

**நூல்:** புதுவைக் கலம்பகம் என்னும் நூலுக்கு அளித்த சிறப்புப் பாயிரம்.

## திருவரங்கத்தமுதனார் (12-நூ)

**சி.பெ.** பெரியநம்பி.

**ஊர்:** சோழநாடு, திருவரங்கம்.

**தந்தை:** அணியரங்கத்தமுதனார்.

இவர் கல்வி கேள்விகளிற் சிறந்து வைணவ நூல்களையெல்லாம் நன்கு கற்றுத் திருவரங்கம் பெரிய கோயிலில் ஆசாரியராய் இருந்தார். முதலில் இவர் இராமாநுசரோடு மாறுபட்டிருந்து இராமாநுசருடைய மாணவர் கூரத்தாழ்வாரால் அவருக்கு அடியவரானார். பெருமாள் முன்னிலையில் பிரபந்தங்களைப் பாடும் பொறுப்பு இராமாநுசரால் இவருக்கு அளிக்கப் பட்டது. இயற்பாசேவிக்கும் நாளில் வரிசைகளுடன் இவரை வீட்டிலே விடுவித்தருளும்படி இராமாநுசர் ஏற்பாடு செய்தருளினார். அச்சிறப்பு அவருடைய வழிமுறையினருக்கு இன்றும் நடைபெற்று வருகின்றது.

**நூல்:** இராமாநுசநூற்றந்தாதி.

இது திருவரங்கத்தமுதனாரால் இராமாநுசர் மீது கலித்துறையில் பாடப்பெற்றது. இது திருவரங்கர் திருமுன்பு அரங்கேறியது; இராமாநுசரையும் ஆழ்வார்களையும் மற்றுஞ் சில ஆசாரியர்களையும் புகழ்ந்து பாடப்பட்டது; சொற்சுவையும் பொருட்பொலிவும் உடையது. வேதப்பிரான் பட்டர் என்பவர் இவ்வந்தாதியைப் புகழ்ந்து பாடியிருக்கின்றார்.

## திருவரங்குளமுடையான் (13-நூ)

**வே பெ:** மறச்சக்கரவர்த்தியா பிள்ளை; மறவர்.

புதுக்கோட்டை மாவட்டம், திருமய்யம் கோட்டம் பொன்னமராவதி என்ற ஊரில் உள்ள சுந்தரராஜப் பெருமாள் கோவில் சாசனம் ஒன்றில் 'பேர்வஞ்சி' என்ற நூலைப் பற்றிய குறிப்புக் காணப் படுகின்றது. இந்நூலை இயற்றிய புலவர் திருவரங்குள முடையான், இந்நூலை அரங்கேற்றக் கேட்டு மகிழ்ந்த வீரர்கள் இப்புலவருக்கு மறச்சக்கரவர்த்திப் பிள்ளை என்ற சிறப்புப் பெயரைக் கொடுத்துத் தூத்துக்குடியில் நன்செய், புன்செய் நிலங்களைப் பரிசாக வழங்கினார்கள் என்றும் இச் சாசனம் கூறுகின்றது.

இச் சாசனத்தில் கூறப்படும் சோணாடு வழங்கிய சுந்தர பாண்டியத் தேவர் என்னும் பாண்டியர் கி.பி. 13 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் அரசாண்டவன் ஆதலால் புலவரது காலமும் 13 ஆம் நூற்றாண்டு என்று கருதப் படுகின்றது,

**நூல்:** பேர்வஞ்சி.

இது மறைந்து போன தமிழ் நூல்களின் ஒன்று. இந்நூல் வரலாற்றுச் செய்திகள் சிலவற்றை அறிவதற்குத் துணையா யிருக்கும் என்று கருதப்படுகிறது.

## திருவழுந்தூர்த்தாசி (        )

**ஊர்:** சோழநாடு திருவழுந்தூர்.

இவள் ஆடல் பாடல்களில் தேர்ச்சி பெற்று விளங்கிய தோடு தமிழ் நூல்களையுங் கற்றுத் தமிழ்ப் புலமையும் அமைந்து விளங்கினாள். சோழ மன்னனைக் கண்டு தனது கலைத் திறத்தைக் காட்டிப் பரிசு பெற்று வரலாமென்று சென்றனள். இவளைக் கண்ட சோழன் "எந்த ஊர்" என்று வினவிய போது "கம்பன் பிறந்த ஊர்" எனத் தொடங்கும் செய்யுளால் தன் ஊர் அழுந்நூர் என விடையிறுத்தாள். இப்பாடல் தனிப் பாடற் திரட்டில் உள்ளது.

## திருவள்ளுவர் (கி.மு. 1-நூ)

**சி.பெ:** நாயனுர், தேவர், முதற்பாவலர், தெய்வப் புலவர், நான்முகனுர், மாதாநுபங்கி, செந்நாப்போதார், பெருநாவலர்.

**ஊர்:** சென்னையிலுள்ள மயிலாப்பூர் என்பர்.

இவர் வாசுகி அம்மையாரை மணந்து இல்லறம் நடத்தினுரென்றும் நெசவுத் தொழில் செய்து வந்தாரென்றும் கூறுவர். இவரைப் பற்றிய வியத்தகு செய்திகள் பல செவி வழியாகக் கேட்கப் பெற்று வருகின்றன. இவற்றின் தொகுப்பை விநோதரசமஞ்சரியிற் காணலாம். இவர் திருக்குறளையியற்றிய பின் அரங்கேற்றத்திற்காக மதுரைக்குச் சென்றுரென்றும் அங்கு எளிதில் அரங்கேற்ற முடியாமையால் இறைவன் துணைகொண்டு சங்கப்பலகை பெற்று அதிலிருந்து திருக்குறளை அரங்கேற்றினுரென்றும் கூறுவார்கள்.

இவர் காலத்தில் பரவியிருந்த சைனபௌத்த மதங்களுடைய கொள்கைகளை ஏற்க மனமில்லாமல் முதற்கண் இல்லறவியலை அமைத்து 'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை' என்ற முடிவையுங் கூறுதலால் இவர் இல்லறத்திற்கு முதன்மை கொடுக்கின்ற தொல்லாசிரியராகக் கருதப் படுகின்றுர்.

இவர் அரசகாரியம் பார்ப்போர் மரபிற் பிறந்த வள்ளுவக் குடியினராகக் கருதப்படுவதால் அரசியல், சமுதாய இயல், போர்மரபு, பொருளாதார அமைப்பு இவற்றைப் பற்றிப் பொருளாதார அறிஞர்களும் வியக்கும் வண்ணம் பொருட் பாலை அமைத்துள்ளார்.

காமத்துப் பாலிலோ எத்தகைய தீய ஒழுக்கமும் கலவாத படி இல்லறத்திற்குரிய இன்ப வாழ்க்கையில் தம் இலக்கணத்தை முடிக்கின்றுர். ஆகவே இல்வாழ்க்கையில் தொடங்கி இன்பப்பாலில் முடிப்பதால் இவர் இல்லறத்தில் உறுதியுடையவர் என்பதை அறிகிறேம்.

இவருடைய வரலாற்றுக் குறிப்புக்களையும் வாழ்வின் நோக்கங்களையும் திருவள்ளுவமாலையால் அறியலாம்.

குஞ்சரம் ஈன்ற களிறெனை இவர் செய்த நூல் ஒன்றே ஒன்றுதான். அது திருக்குறள். வள்ளுவர் ஞானம், ஞான வெட்டியான் என்பனவும் இவர் செய்த நூல்களாகச் சிலர் கூறுவர். செய்யுள் நடையாலும் கருத்தமைதியாலும் அவை இவர் செய்தன அல்ல என்பதைப் பலரும் ஒப்புவர்.

**நூல்:** திருக்குறள்.

இந்நூல் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் முப்பெரும் பிரிவுகளையுடையதாய் 133 அதிகாரங் களைக் கொண்டு விளங்குகிறது. 'எல்லாப் பொருளும் இதன்பாலுள' என்று அறிஞர்கள் போற்றும் சிறப்பினை யுடையது. எல்லா நாட்டவர்களும் ஏற்றுக் கொள்ளும் எல்லாக் காலத்திற்கும் இயைந்த கருத்துக்களையுடையது. இந்நூலில் கடவுட் கொள்கை பற்றிய சொற்கள் யாவும் செந்தமிழிலே அமைந்து நூலின் பொதுத்தன்மையை விளக்கி நிற்கின்றன. இல்லறம் துறவறம் என்று மக்கள் வாழ்வு பிரிக்கப்பட்டதே யொழிய வடநூலிற் கூறும் நால் வகைநிலைபற்றி அப்பகுப்பு அமையவில்லை. அறத்துப்பால் இல்லறவியல் துறவறவியல் ஊழ் என்னும் முப்பகுப்பினை யுடையதாய் முப்பத்தெட்டு அதிகாரங்களைக் கொண்டு விளக்குகிறது.

திருக்குறள் பொருட்பாலில் மானம்பற்றியும் வினைத் தூய்மைபற்றியும் வட நூற்கொள்கையை மறுத்துத் தன் கருத்தை வெளியிடுகின்றார். சங்க நூல்களில் இடம் பெற் றுள்ள கள்ளுண்ணல், புலாலுண்ணல், பரத்தையர் கூட்டம் ஆகியவை திருக்குறளில் கடிந்துரைக்கப் பட்டுள்ளன. பொருட்பாலில் கூறப்படும் அரசியற் கருத்துக்கள் அரசிய லறிவு விரிவடைந்துள்ள இந்நாளிலும் அறிஞர்களால் போற்றி மேற்கொள்ளப்படும் சிறப்பினவாயுள்ளன. பொருட்பால் அரசனைப் பற்றியும் அரசனுக்கு உறுப்பாகிய படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆகியவற்றைப்

பற்றியும் குடியியலைப் பற்றியும் கூறுவதாய் எழுபது அதி காரங்களைக் கொண்டு விளங்குகிறது.

காமத்துப்பால் இருபத்தைந்து அதிகாரங்களைக் கொண் டது; களவியல் கற்பியல் என இருபிரிவுகளையுடையது. ஒருவனும் ஒருத்தியும் இறைவழியேயும் இயற்கை வழியேயும் நின்று முனைப்படங்கி அன்பால் ஒருவராய்க் கணவனும் மனைவியுமாக வாழ்கிற இன்ப வாழ்வினையே காமத்துப்பால் கூறிச் செல்கிறது. ஆண்பாற் கூற்று, பெண்பாற் கூற்று, இருவர் கூற்று என முத்திறப் பகுதியுடையதாய்ச் செல்கிறது. இப்பாலினைக் காதல் காப்பியமாக்கிக் காதலர் கூற்றாக அமையும் நாடக நிலையில் வள்ளுவர் அமைத்துள்ளார். ஒவ்வொரு பாட்டும் ஒவ்வொரு சிறுகதையாய் விரிவது. காமத்துப்பால் இன்ப வாழ்வினைக் குறிக்கோள் வாழ்க்கை யாக விளக்கிச் செல்கிறது.

பல மொழிகளில் மொழி பெயர்க்கப் பெற்ற தமிழ்நூல் ஒன்று உண்டென்றால் அது திருக்குறளே.

அதிகார அமைப்பு எங்கும் ஒன்று போலவே காணப் பெற்றாலும் இயல் அமைப்பு மட்டும் உரையாசிரியர்க்கு உரையாசிரியர் மாறுபடுகின்றது. ஆனால் நூலின் முதற் குறளும் கடைசிக் குறளும் மட்டும் மாறவில்லை. வள்ளுவர் தனிக்குறளாகப் பாடியவற்றை பின்வந்தவர் அதிகாரங் களாகவும் இயல்களாகவும் அமைத்தனர் என்று கொள்வாரும் உண்டு. பத்துப்பத்துக் குறள்களாக அதிகாரங்கள் அமையும் அழகு இயற்கையாகத் தோன்றுவதால் அதிகாரப் பிரிவினைப் பிறரொருவர் புகுத்தினரென்பது நம்புதற்குரியதாக இல்லை.

இதற்கு உரை எழுதினோர் பத்துப் பேர் என்பர். அவற்றில் பல மறைந்து போயின. பரிதியார், காளிங்கர், மணக் குடவர், பரிமேலழகர் ஆகியோர் உரைகள் வெளியாகி யுள்ளன. இவ்வுரைகளுள் பரிமேலழகருரையே மிகச் சிறந்தது எனப் பலரும் கொள்கின்றனர்.

## திருவனந்தலாழ்வான் (        )

**நூல்:** நம்பிமாலை.

இது 108 திருப்பதிகளில் ஒன்றாகிய திருக்குறுங்குடியில் எழுந்தருளியிருக்கும் 'நம்பி' என்னும் பெருமாள் பற்றியது. 26 செய்யுட்கள் கொண்டது.

## திருவாய்மொழிப் பிள்ளை (16-நூ)

**வே.பெ.** சீசைலேசர்.

**தந்தை:** அண்ணர்.

**நூல்:** பேயாழ்வார் பாடல்கள், சீவசனபூஷணம் ஆகியவற்றிற்கு உரை செய்தவர்.

**சீவசனபூஷணம்:** இந்நூல் பிள்ளைலோகாசாரியார் இயற்றிய அட்டாதசரகசியம் என்னும் பதினெட்டுத் தத்துவ நூல்களுள் ஒன்று.

## திருவாரூர் வைத்தியநாததேசிகர் (17-நூ)

**பார்க்க:** வைத்தியநாத தேசிகர், திருவாரூர்.

## திருவாலவாயுடையார் (        )

**நூல்:** திருமுகப்பாசுரம்.

## திருவாலியமுதனார் (        )

**ஊர்:** சோழநாட்டிலுள்ள திரு ஆலி.

திருவிசைப்பாப் பாடிய சைவப் பெரியோர்களில் ஒருவர். இவர் இயற்பெயர் அமுதன் என்பது ஊர்ப்பெயருடன் சேர்ந்து திருவாலியமுதனார் என வழங்கப்பட்டார். இவர் தம்மை "வரை செய்மாமதில் மயிலையர் மன்னவன் மறைவல திரு ஆலி" "அறைசெந் நெல்வான் கரும்பின் அணியாலைகள் சூழ் மயிலை மறைவல வாலி" என்றும் கூறிக்

கொள்வதால் இவர் அந்தணர் என்பதும் மயிலையில் வாழ்ந்தார் என்பதும் அறியக் கிடக்கின்றன. இவர் காலந் தெரியவில்லை.

**நூல்:** நான்கு திருவிசைப்பாப்பதிகங்கள்.

இந்த நான்கு பதிகங்களும் சிதம்பரத்தைப் பற்றியவை. இவரது முதற் திருப்பதிகத்தில் திருவடி முதற் சென்னி வரையுள்ள இறைவனது திருமேனிப் பகுதிகளை முறையே பத்துப்பாட்டிலும் இவர் புகழ்ந்து பாடியிருப்பதால் அதற்குப் பாதாதி கேசம் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. இவரது மூன்றும் பதிகத்துப் பத்தாம் பாடல் சமண் முதலிய புறச் சமயங்களையும் நம்பியாரூரரையும் குறிப்பிடுகின்றது.

## திருவாழி பரப்பினுன் கூத்தன் (13-நூ)

இவர் கல்வெட்டால் அறியப் பெறும் புலவர். திரிபுவனச் சக்கரவர்த்தி மூன்றும் இராச ராச சோழனுடைய 21 ஆம் ஆட்சியாண்டில் காஞ்சீபுரம் வரதராசப் பெருமாள் கோயில் திருமஞ்சன மண்டபத்தில் மேற்குத் திருமதிலில் வரையப் பட்ட கல்வெட்டில் இவரைப் பற்றிய குறிப்பு உள்ளது. அதில், 'திருவாழி பரப்பினுன் கூத்தன் என்பார் பாடிய சிந்துப் பிரபந்தத் திற்காகப் பொத்தப்பிச் சோழன் திருக் காளத்தி தேவன் என்னும் அரசன் வள்ளுவப்பாக்கம் என்ற ஊரை முற்றூட்டாயளித்தான்' என்று காணப்பெறுகிறது. மற்ருெரு கல்வெட்டில், 'திருவாழி பரப்பினுன் சந்தி' என்ற பெயரால் அதே இராசராசன் காலத்தில் மதுராந்தகப் பொத்தப்பிச் சோழனுல் திருநீர் மலைக்குச் சில கட்டளை களுக்காக நிலம் அளிக்கப் பட்டதென்று காணப்பெறுகிறது. திருவாழிபரப்பினுன் என்பது திருமால் சமயத்தைப் பரப்பியவர் என்ற பொருளையுடையது.

**நூல்:** சிந்து.

இந்நூல் கச்சித் திருமாலைப் பற்றியது. இப்போது கிடைக்கவில்லை.

## திருவியலூர் உய்யவந்த தேவநாயனுர் (12-நூ)

இவர் வட நாட்டிலிருந்து சேதுவில் நீராடும் பொருட்டு வந்ததாகவும் நீராடித் திரும்புங்கால் சோழநாட்டிலே திருவியலூரிலே ஆளுடைய தேவநாயனுர் என்பவர் இவரை அணுகி உபதேசம் பெற்றதாகவும் அவருக்காகவே திருவுந்தியார் என்ற சாத்திரத்தை இவர் அருளிச் செய்ததாகவும் பின்னர் வடநாட்டுக்கே சென்றுவிட்டதாகவும் பழைய வரலாறு ஒன்று கூறுகின்றது.

**நூல்:** திருவுந்தியார்.

இது காலத்தால் முற்பட்ட நூலாதலோடு திருவருள் நலமும் செறிந்து விளங்குகின்றமையின் பதினன்கு சாத்திர வரிசையில் முதற்கண் வைக்கப்பட்டுள்ளது. இது 45 தாழிசைகளாலான ஒரு சிறுநூல். தாழிசை ஒவ்வொன்றும் மூன்றடி கொண்டது. இந்த யாப்பு திருவாசகத்தில் வரும் திருவுந்தியாரைப் பின்பற்றியே அமைக்கப்பட்டது. உய்ய வந்தார் உந்தி பறத்தலாகிய ஒரு விளையாட்டமைப்பைத் தம் நூலுக்கு அமைப்பாக எடுத்துக் கொண்டது மிகவும் பெரிய பொருள்களை மிகவும் எளிய முறையில் பாடிக் காட்ட நினைத்தமையாற்போலும். இந்நூலின் பாடல்கள் திருமுறைகளின் சாரமாய்ச் சைவ சித்தாந்த நுண்பொருள்களைச் சுவையாகப் புலப்படுத்துகின்ற மறை மொழிகளாய் விளங்குகின்றன. இந்நூற் கூறும் பொருளில் சமய சங்கேதப் பொருள்களும் சொற்களும் மிகுந்து திருமந்திரம் போலப் பொருள் விளங்கிக் கொள்ளுதற்கு அருமையாயுள்ளன. இவர் தமக்கு இறைவனே அருட்சத்தியோடு குருவாய் வந்து அருள் செய்தான் என்று கூறுகின்றார்.

## திருவிளங்கம், மு. (      )

**ஊர்:** யாழ்ப்பாணத்தைச் சார்ந்த மானிப்பாய்.

இவர் கொழும்பில் வழக்கறிஞராகவும் நொத்தாரிசாகவும் தொழில் புரிந்து வந்தார்; சைவசித்தாந்தத்தில் மிகுந்த புலமையுடையவராக விளங்கினர்.

**நூல்:** சிவஞான சித்தியார் உரை, சிவப்பிரகாச உரை கந்தரலங்கார உரை, திருப்புகழ்த் திரட்டு உரை.

## திருவெண்காட்டடிகள்.

**பார்க்க:** பட்டினத்தடிகள்.

## திருவேங்கடஐயர் (14-நூ)

**ஊர்:** இராமநாதபுரம் மாவட்டம், சீவில்லிப்புத்தூர். அந்தணர்.

**நூல்:** உவமான சங்கிரகம்.

இது மங்கையர் உறுப்புகளுக்கு உவமை கூறும் நூல். இந்நூல் பதினைந்து வெண்பாக்களையுடையது.

## திருவேங்கடசாமி (19-நூ)

**நூல்:** அருளானந்தப் பதிகம். (1875).

இந்நூலில் இரண்டு பதிகங்கள் உள்ளன. தோத்திரப் பாமாலைகளாக அமைந்துள்ளன.

## திருவேங்கடசாமிகள் (19-நூ)

**ஊர்:** மாதை.

**நூல்:** பிரபோதசந்திரோதயம் என்று வழங்கும் மெஞ்ஞான விளக்கம் (1876).

இந்நூல் தத்துவப் பொருளை உருவகமாக்கிக் காவிய முறையில் அமைந்தது. உற்பத்திச் சருக்கம் முதல் பிரபோதன் முடி சூடும் சருக்கம் ஈறுக 48 சருக்கங்களையுடையது நூலின் வரலாறு கூறும் பாயிரமும் இதிலுள்ளது.

## திருவேங்கடசாமி தாசர் க, (19-நூ)

**நூல்:** 'நாலுமந்திரி கதை - நாடகம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'நாலுமந்திரி கதை நாடகம் என்னும் நூலினை இயற்றியவர் திருமூர்த்தி நயினார் என்பவராவர்.

திருவேங்கடசாமி முதலியார் ( )

**நூல்:** பகவத்கீதை சார சங்கிரகம் (1790), சீதர சுவாமி களுடைய சரித்திரம் (1907).

திருவேங்கடத்தா பிள்ளை ( )

**நூல்:** சரபேந்திரர் வைத்தியமுறை.

இந்நூலில் கருக்கொண்ட மாதர்களுக்குண்டாகும் நோய் களும் சிறுவர்களுக்குண்டாகும் நோய்களும் அவைகளைத் தீர்த்தற்குரிய பலவகைப்பட்ட மருந்துகளும் சொல்லப் பட்டிருக்கின்றன.

திருவேங்கடத்தான் கவிராயர் ( )

**நூல்:** காத்தான்பிள்ளை பாங்கிவிடுதூது.

இந்நூல் சேறை நகர் வணிகர் செந்திக்காத்தான் மீது பாடப்பெற்றது.

திருவேங்கடதாசர் (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி, ஆழ்வார் திருநகர்.

**வே பெ:** இராமாயணம் திருவேங்கடதாசர்.

**நூல்:** வேங்கடத் துறைவான் கவிராயர் இயற்றிய 'மாறன் கோவை' என்ற நூலிற்குப் பாடிய சிறப்புப் பாயிரம்.

திருவேங்கடநாதப்பிள்ளை ( )

**நூல்:** சரபேந்திரர் வைத்திய முறை.

திருவேங்கடநாதர் (மாதை) (17-நூ)

**ஊர்:** சோழநாடு, திருவாமாத்தூர்.

**தந்தை:** பெருமாளையர். அந்தணர்.

இவர் இளமைப் பருவத்தில் இலக்கண இலக்கியங்களையும் வேதாந்த நூல்களையும் நன்கு கற்றுணர்ந்தார். தம் தந்தையாரைப் போலவே சீலம் ஒழுக்கம் முதலிய நற் குணங்களுடையவராக விளங்கினர். இவைகளை யறிந்த திருமலை நாயக்கர் இவரைத் தமது காரிய கர்த்தராக்கித் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கயத்தாற்றினை ஆண்டு வரும்படி செய்தார். இவருக்கு ஆண்மக்கள் அறுவரிருந் தனர். இவர் திருவாரூர் வைத்தியநாத தேசிகரை ஆதரித்து வந்தார். அந்தகக் கவி வீரராகவ முதலியாரும் இவரால் ஆதரிக்கப்பட்டவரே. அந்தகக் கவி வீரராகவ முதலியார் இவர்மீது உலா ஒன்று பாடியுள்ளார். அது கயத்தாற்று அரசர் உலா எனப்படும். திருவேங்கடநாதர், திருமலை நாயக்கர், சொக்கநாத நாயக்கர், அரங்க கிருஷ்ணமுத்து வீரப்பநாயக்கர் ஆகிய மூவர் காலங்களிலும் விளங்கியவ ராவர்.

**நூல்:** மெய்ஞ்ஞானவிளக்கம்.

திருவேங்கடநாதருக்கு மெய்ப் பொருளுணர்த்தியவர் இராகவானந்தர் எனப்படுவர். இவர் திருவேங்கடநாதரை ஞான நூலொன்று இயற்றும்படி வேண்டிக்கொள்ள அவ் வேண்டுகோட்கிணங்க மெய்ஞ்ஞான விளக்கம் இயற்றப் பட்டது. இந்நூலைத் திருவேங்கடநாதர் முதலில் வட மொழியிலும் பின்னர்த் தமிழிலுஞ் செய்தாரென்று தெரிகிறது.

## திருவேங்கடநாயுடு (20-நூ)

இவர் பச்சையப்பன் கல்லூரியில் ஆசிரியராகப் பணி ஆற்றியவர்.

**நூல்:** சிவபுராண தோத்திரமஞ்சரி.

## திருவேங்கடநாயுடு, க.வ. (20-நூ)

**நூல்:** மும்மணிக் கோவை.

இது வட திருமுல்லைவாயில் இறைவன் மீது பாடப் பெற்றது. இந்நூல் ஆசிரியப்பா, வெண்பா. கட்டளைக் கலித்துறை ஆகிய மூவகைப் பாக்களால் இயன்றுள்ளது. இந்நூலிலுள்ள ஆசிரியப் பாவை யாழ்ப்பாணத்து நல்லூர் கைலாசப்பிள்ளையும் வெண்பாவை சி. தா. அமிர்தலிங்கம் பிள்ளையும் கட்டளைக் கலித்துறையைத் திருவேங்கடநாயரும் பாடியுள்ளனர்.

## திருவேங்கடப்பிள்ளை (      )

**நூல்:** கட்டுக் கதைகள் (1853)

இந்நூல் ஈசோப் கதைகளின் தமிழாக்கம்

## திருவேங்கடப்பிள்ளை அ. (19-நூா)

**சி.பெ:** முத்தமிழ்க்கவி

**ஊர்:** ஆறைமாநகர்.

**தந்தை:** கவி அரங்கப்பிள்ளை.

இவர் தந்தையாரிடம் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழையும் கற்றுணர்ந்தார்.

**நூல்;** "குசேல விலாசம்" என்னும் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## திருவேங்கடப் பிள்ளை ஆ. (20-நூா)

**ஊர்:** புதுவை.

இவர் ஆனந்தரங்கம் பிள்ளையின் வளர்ப்புப் பிள்ளை.

**நூல்:** பார்த்த சாரதிப் பெருமாள் ஊசற்றிருநாமம்.

## திருவேங்கடப் பிள்ளை - கோ. (19-நூ)

**ஊர்:** திரிசிரபுரம்.•

**தந்தை:** கோவிந்தப்பிள்ளை.

இவர் தந்தையாரிடம் கற்றுச் சிறந்த புலமை எய்தினர்.

**நூல்:** திருக்கோவையார் உரை, சேதுபுராணம், தனிப் பாடற்றிரட்டு ஆகிய நூல்களைப் பற்றி இரண்டு பாடல்கள்.

பொன்னுச் சாமித்தேவர் மேற் குறிப்பிட்ட மூன்று நூல்களையும் அச்சிட்டு வெளிப்படுத்தியபோது திருவேங்கடம் பிள்ளைக்கு அனுப்பினர். அப்பொழுது அவரைப் பாராட்டி இரண்டு பாடல்கள் எழுதி அனுப்பினர்.

## திருவேங்கடப் பிள்ளை, ப (19-நூ)

**ஊர்:** இராயவேலூர்.

**நூல்:** 'வீரட்டேசுரர் பாமாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'வீரட்டேசுரர் பாமாலை' என்னும் நூல் முத்துசாமிப் புலவர் என்பவரால் இயற்றப்பெற்றது.

## திருவேங்கட பாரதி (17-நூ)

**வே.பெ:** பரமானந்த பாரதி.

**ஊர்:** தென்கடம்பை; அந்தணர்.

இவர் துறவியாக வாழ்ந்தவர்.

**நூல்:** பாரதிதீபம்.

இது தமிழ் நிகண்டு நூல்களுள் ஒன்று. இந்நூல் கட்டளைக் கலித்துறையில் அமைந்தது. இது 12 பிரிவுகளை யுடையதென்று பாவலர் சரித்திர தீபம் கூறுகிறது. ஆனல் இன்று நமக்குக் கிடைப்பவை முதற் பத்துப் பிரிவுகளே. இவற்றுள் 737 செய்யுட்கள் உள்ளன. இவற்றிலுள்ள சொற்கள் 13000. இந்நூலிலுள்ள செய்யுட்களின் பெயர்கள் பெரும்பாலும் அடைமொழியின்றிக் காணப் பெறுகின்றன.

## திருவேங்கடப்பிள்ளை (19-நூ)

**ஊர்:** பிரமபுரி

இவர் வேலூர் அமெரிக்கன் மிஷன் பாலிகா பாடசாலையில் தமிழ்ப் புலவராக இருந்தவர்.

**நூல்:** நந்த மண்டலசதகம் உரை, கோலப் புத்தகம்.

நந்தமண்டல சதகம் காஞ்சிபுரம் மாத்ரு பூத ஐயரால் 220 விருத்தங்களில் இயற்றப் பெற்றது.

## திருவேங்கட முதலியார், மணி. (20-நூ)

**ஊர்:** தொண்டைநாடு, மணிமங்கலம்.

இவர் வேதாந்த நூல்களில் சிறந்த ஆராய்ச்சியுடைய வராக விளங்கினார்.

**நூல்:** தத்துவ உபதேச வெண்பா.

இந்நூல் வேதாந்த உண்மைகளை விளக்கும் இருநூற் றைம்பது வெண்பாக்களைக் கொண்டது. இந்நூலைப் பாராட்டிக் காஞ்சிபுரம் நிச்சல இராமானந்த அடிகள், சுப்பராய முதலியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடி யுள்ளனர்.

## திருவேங்கடமுதலியார், வெ. போ. ( )

**நூல்:** நிகம நிச்சயம், விநாயகரனுபூதி.

**நிகம நிச்சயம்:** சைவம் வைணவம் முதலிய பல சமயக் கொள்கைகளை ஆராய்ந்து சர்வமத சம்மதமாய் இந்நூலை இயற்றியதாக ஆசிரியர் கூறுகின்றார். பேறை செகநாத பிள்ளை என்பவர் இந்நூலைத் திருத்திப் புத்துரை செய்துள்ளார்.

## திருவேங்கடமுதலியார், பு. ம. ( )

**நூல்:** 'சொரூப சித்தாந்தமாலை' என்னும் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

'சொருப சித்தாந்தமாலை' 20 ஆம் நூற்றாண்டில் விளங்கிய இராமாநந்த சுவாமிகளால் இயற்றப்பட்டது.

## திருவேங்கட ராமானுச ஐயர் ( )

**நூல்:** எம்பெருமானார் திருமஞ்சனக் கட்டியம், பிரபன்னானுஷ்டானம், ஸ்ரீ வசனபூஷண வியாக்கியான அரும்பத விளக்கம்.

## திருவேங்கட ராமையங்கார், (20-நூ)

**ஊர்:** தில்லையம்பூர்.

**நூல்:** 'வருண தருப்பணம்' என்னும் நூலைப் பாராட்டிச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

வருண தருப்பணம் என்னும் நூல் காஞ்சியில் வாழ்ந்த கா. ஆறுமுக நாயகரால் இயற்றப்பெற்றது. இந்நூல் பலவகையான சாதிச் செய்திகளையும் தகுந்த எடுத்துக் காட்டுகளோடு கூறுகின்றது.

## திருவேங்கட லட்சுமண தாசர் ( )

**நூல்:** மகாபாகவத புராணத்தில் ஏகாதசி புராணமென்று வழங்குகின்ற உருக்குமாங்கதப் படல உரை.

## திருவேங்கடார்ச்சாரி - 1 ( )

இவர் ஒட்டக் கூத்தர் காலத்தில் வாழ்ந்தார் என்பர். இவர் பாடிய 'செல்வன் புதல்வன்' என்று தொடங்கும் தனிப்பாடல் ஒன்று தனிப்பாடற்றிரட்டில் உள்ளது.

## திருவேங்கடாச்சாரி - 2 ( )

**ஊர்:** திருவள்ளூர்.

**நூல்:** வைத்திய அனுபோக சார சங்கிரகம்.

## திருவேங்கடாச்சாரி, சரஸ்வதி ( )

**நூல்:** பிருஹச்சாதகம் (தமிழாக்கம்)

## திருவேங்கடாச்சலக் கவிராயர் (19-நூ)

**ஊர்:** திருவண்ணுமலே

**நூல்:** வல்லாள மகாராாசன் கதை (1879).

## திருவேங்கடாசலப்பிள்ளே-1( )

**நூல்:** திருவேட்டீசுரர் புராணம்.

## திருவேங்கடாசலப்பிள்ளே -2 ( )

**நூல்:** திருநீலகண்டநாயஞர் விலாசம்.

## திருவேங்கடாசல முதலியார் (20-நூ)

**ஊர்:** புதுச்சேரி.

**நூல்:** திருமந்திரப்பத்து, இராமாநுசப்பத்து, வாசுதேவப் பத்து, அத்திகிரி அருளாளர்பத்து, பரமதோத்திரப்பத்து.

பத்து என்பது பிற்காலச் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று. அவ்வமைப்பில் மேற் காட்டிய ஐந்து நூல்களும் பாடப் பெற்றன.

## திருவேங்கடையர் (14-நூ)

**ஊர்:** ஸ்ரீ வில்லிபுத்தூர், அந்தணர் குலம்.

**நூல்:** 'உவமான சங்கிரகம்'.

இந்நூல் 15 வெண்பாக்களேக் கொண்டது. மங்கையர் உறுப்புக்கட்கு உவமை கூறுவது.

## தில்லேநாத நாவலர், ம. (20-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணத்தைச் சார்ந்த தென்புலோலியூர்.

**தந்தை:** மயில்வாகனன்.

**வாழ்ந்த காலம்:** 1854 — 1939.

இவர் சிவசம்புப் புலவரிடத்தில் நீதி நூல்களேயும் புராண நூல்களேயும் இலக்கண நூல்களேயுங் கற்ருர். இளமைச்

காலத்தில் இவர் இந்தியாவிற்கு வந்து சொற்பொழிவுகள் செய்தபோது பாண்டித்துரைத் தேவரின் பாராட்டினைப் பெற்றார். குன்றக்குடி, திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த அம்பலவாண தேசிகர், மதுரை ஆதீனம் திருஞான சம்பந்த தேசிகர். திருவண்ணாமலையாதீனம் தாண்டவராய தேசிகர் ஆகியோர் இவரைப் போற்றி நாவலர் பட்டம் வழங்கியுள்ளனர். இவர் செட்டிநாட்டிலும் யாழ்ப்பாணத் திலும் கொழும்பிலும் சமய விரிவுரைகள் பல ஆற்றியுள்ளார்.

**நூல்:** திருவள்ளுவர் சமணரென்னும் கொள்கை மறுப்பு, திருவிளையாடற் புராணம் — வேதப்பொருள் அருளிச் செய்த படலத்திற்கு அகல உரை.

## தில்லைநாயகசோதிடர் (19-நூ)

**ஊர்:** திருவானைக்கா.

**நூல்:** சாதகசிந்தாமணி.

## தில்லைநாயகன் ( )

**நூல்:** காலசக்கரம்.

## தில்லைநாயக முதலியார் (20-நூ)

**ஊர்:** தென்னார்க்காடு மாவட்டம், சிதம்பரம்.

**தந்தை:** வெல்லப்பிறந்தான் முதலியார்.

**வாழ்ந்த காலம்:** 1876 — 1917.

இவர் ஈசானியமடம் இராமலிங்கத் தம்பிரானிடம் இலக்கண இலக்கியங்கள் கற்றுத்தேர்ந்தார். சிதம்பரத்தில் செந்தமிழ்ச் சங்கம் ஒன்றை நிறுவி அதன் துணைத் தலைவராகத் தமிழ்ப் பணிபுரிந்தார். சென்னை அரசாங்கம் ஏற்படுத்திய தமிழ் அகராதித் தொகுப்புக் குழுவினரில் சிறப்பு உறுப்பினராக இருந்தார்.

**நூல்:** முருகவேள் மும்மணிக்கோவை.

இந்நூலில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் மிக்குள்ளன.

## தில்லைமுதலியார் ப. (20-நூ)

**ஊர்:** சோழநாடு, பிரமநகர்.

**தந்தை:** பகவான் முதலியார்.

இவர் சொக்கலிங்க முதலியார் என்பவரிடத்தில் தமிழ் கற்றுப் புலமை எய்தினர்.

**நூல்:** இரட்டை மணிமாலை.

இது பிரமீசர் மீது பாடப்பெற்றது. இந்நூலுக்குக் காஞ்சீபுரம் வீராசாமி முதலியார் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## திவ்வியகவி நாராயணபாரதி, (18-நூ)

**ஊர்:** தொண்டைநாடு, வெண்மணி.

**நூல்:** திருவேங்கட சதகமென்னும் மணவாள நாராயண சதகம், திருவெங்களூரந்தாதி.

**திருவேங்கடசதகம்:** இந்நூல் மணவாள நாராயணன் என்பவர் வேண்டிக் கொண்டதற்கிணங்கச் செய்யப் பெற்றது.

## திவாகரர் (8-நூ)

இவர் முதன்முதலாக நிகண்டினை இயற்றினர். அந் நிகண்டு இவர் பெயரால் திவாகரம் என வழங்குகின்றது. காவிரிக்கரையில் அம்பர் என்ற ஊரில் வாழ்ந்து கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கிய வண்மையிற் சிறந்த சேந்தனல் இவர் ஆதரிக்கப் பெற்ருர். இந்நூலில் சாளுக் கியரைப் பற்றியும் இரட்டர்களைப் பற்றியும் குறிப்புக்கள் காணப்படுகின்றன. ஆதலின் இவர் ஏழாம் நூற்ருண்டிற்குப் பின் விளங்கியவர் என்று கருதலாம். சேந்தன் சைவ சமயத்தவனுதலின் அவன் உதவி பெற்றுப் பாடிய திவா கரரும் சைவ சமயத்தவராதல் வேண்டும். திவாகரர் நூல் முகத்தில் 'தந்திமுகத் தெந்தை' என விநாயகர் வணக்கம் கூறுவதும் இதனை வலியுறுத்தும்.

**நூல்:** திவாகரம் (1835).

இந்நூலில் பன்னிரண்டு தொகுதிகள் உள்ளன. முதற் பத்துத் தொகுதிகள் பொருள் பற்றிய தொகுதியாகவும் பதினொன்றாவது ஒரு சொற் பல் பொருள் தொகுதியாகவும் பன்னிரண்டாந் தொகுதி பல்பெயர்க் கூட்டத்தொரு பெயர்த் தொகுதியாகவும் உள்ளன. முதற் பத்துத் தொகுதிகள் முறையே தெய்வம், மக்கள், விலங்கு, மரம், இடம், பல்பொருள், செயற்கை வடிவம், பண்பு, செயல், ஒலிபற்றிய பெயர்த் தொகுதிகளாக அமைந்துள்ளன.

இந்நூலின் ஒவ்வொரு தொகுதியின் இறுதியிலும் இந்நூல் தோன்றுதற்குக் காரணமாக இருந்த சேந்தனை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். சேந்தன் வேண்டிக் கொண்டவாறு திவாகரர் நிகண்டு செய்து முடித்து, செய்தவர் செய்வித் தவர் ஆகிய இருவர் பெயரும் ஒருங்கே அமையச் சேந்தன் திவாகரம் என்று பெயரிட்டார்.

## தீர்த்தப்பிள்ளை (        )

**நூல்:** திருமுடியடைவு (1894).

இந்நூல் பெரிய பெருமாள் முதலாக வரும் ஆசாரிய பரம்பரையின் வரலாறு கூறுவது.

## தீன்மதி நாகனார் (சங்க காலம்)

**இ.பெ:** நாகன்.

சங்கப் புலவர்களுள் நாகன் என்று பெயர் பெற்றுள்ள புலவர்கள் பலர் ஆவர். இவர் 'ஆர்' விருதுபெற்று 'நாகனார்' என்று அழைக்கப் பெற்றார். தீன்மதி என்னும் அடை மொழிக்குக் காரணம் தெரியவில்லை.

இவருடைய பெயர் தீன்மதி நாகன், தீன்மிதி நாகனார், தீன்மிதிநாகன், தீமிதி நாகனார், தீமிதிநாகன் எனப் பலப் பதிப்புக்களில் பல வேறுபாடுகளுடன் காணப்படுகிறது.

**நூல்:** குறுந்தொகை 111.

## துட்டநிக்கிரக சிரோன்மணி (19-நூ)

**ஊர்:** சென்னை.

இவருடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. துட்டநிக்கிரக சிரோன்மணி என்பது இவராகப் படைத்திட்டுக் கொண்ட பெயராகும்.

**நூல்:** பொக்கைவாயன் பேரிற் சொல்லிய நொண்டி.

இது பொக்கைவாயன் என்னும் பகைவன் மேலியற்றப் பட்ட வசை நூலாகும்.

## தும்பிசேர் கீரனார் (சங்க காலம்)

**இ.பெ:** கீரன்.

இவர் பெயர் 'ஆர்' விகுதி பெற்று கீரனார் என்று ஆயிற்று. தும்பிசேர் என்னும் அடைமொழி, இவர் தம் கவிதைகளில், தும்பியை 'அம்மவாழியோ அணிச்சிறை தும்பி' (குறுந். 392) எனவும், 'கொடியை வாழி தும்பி' (நற்றிணை. 271) எனக் குறித்திருப்பதனால் இணைந்ததாகும். எனவே இவர் தொடரால் பெயர் பெற்றவராகத் திகழ்கிறார்.

இவர் பெயர் தும்பிசேர் கீரன், தும்பி சொகினனார், தும்பி சொகிநன், தும்பிசேர் தீரன், தும்பி மோசி கீரன், தும்பி சோகீரனார், தும்பைச் சொகினனார், தும்பி கோக்கீரனார் எனப் பல பதிப்புக்களில் பல வேறுபாடுகளுடன் காணப் படுகின்றது.

இப்பெயர்கள் அனைத்திற்கும் உரியவரை தும்பிசேர் கீரனார் என்றோ அல்லது தும்பி சொகினனார் என்றோ பெயருடைய ஒரே புலவராகச் சிலர் கருதுகின்றனர். தும்பிசேர் கீரனார், தும்பி சொகினனார் என்னும் இரு புலவர்களாகவும், தும்பி சேர் கீரனார், தும்பிசேர் கீரன், தும்பி சொகினனார் என்று மூன்று புலவர்களாகவும் கொண்டு இவர் பாடிய பாடல்களையும் முறையே இரு புலவர்களுக்கும், மூன்று புலவர்களுக்கும் பிரதிபேதங்களுக்கு ஏற்பப் பிரித்து அளித்துள்ளனர் சிலர்.

இவர் பெயரைத் 'தும்பிசேர் கீரனார்' என்று கொண்டு, இவரை அரசமரபினர் என்று கருதுவாரும் உளர்.

**நூல்:** குறுந்தொகை 61, 315, 316, 320, 392; நற்றிணை: 277; புறம் 249.

## துர்க்கை முத்துப்புலவர் (19-நூ)

**ஊர்:** பாண்டிவளநாடு, சங்கரநயினார் கோயில்.

**தந்தை:** சூரியன் சங்கரபாண்டியப் புலவர்.

**நூல்:** காவடிச்சிந்து.

இது முருகன் மீது பாடப் பெற்றது.

## துரப்முகமத் உசேன் இபின் இஸ்மேயில் (20-நூ)

**நூல்:** தொழுகை ரஞ்சித அலங்காரம் (1897)..

இந்நூல் மனோரஞ்சித அலங்காரம் போன்ற சிற்றின்ப நூல்களைப் படியாது பேரின்பச் செய்திகளைத் தெரிந்து கொள்வதற்காக இயற்றப் பெற்றது. தென்பாங்கு, தனி முருகு முதலிய இசைக் கீர்த்தனைகளாகப் பாடல்கள் உள்ளன.

## துராலிங்கர் (        )

இவர் அகத்தியர் மாணவர் பன்னிருவருள் ஒருவர். தொல்காப்பியனாரோடு உடன் பயின்றவர்.

## துரியானந்தர் (20-நூ)

**நூல்:** இராமலிங்க சுவாமிகள் சினிமா சரித்திரம் (1938).

வள்ளலார் வரலாற்றைப் புதிய நாடகமுறையில் கூறும் நாடக நூல்; பாட்டும் உரைநடையும் விரவியுள்ள நூல்.

## துருஜயர் (19-நூ)

தமிழ்நாட்டிற்கு வந்த வெள்ளைக்கார ஐயர்களில் ஒருவர். இவர் இயற்றமிழாசிரியர் முகவை இராமாநுசக் கவிராய ரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றார்.

**நூல்:** திருக்குறளில் சில அதிகாரங்கள் (ஆங்கில மொழி பெயர்ப்பு).

## துரைச்சங்க பச்சகந்த சாமியார் (20-நூ)

**ஊர்:** சென்னப்பராயக்கன் பாளையம்.

**நூல்:** 'சித்தாந்த சிகாமணி உரை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'சித்தாந்த சிகாமணி' என்னும் நூல் துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளால் தமிழில் மொழிபெயர்க்கப் பெற்றதாகும்.

## துரைசாமி ஆச்சாரியார் ( )

**நூல்:** தருமலிங்க ஆசாரியார் பேரில் வழிநடைப் பதம்; நாகேசுரர் பேரில் உயிர் வருக்கமாலை; நாகேசுரர் பேரில் கீர்த்தனங்கள்; நாகேசுரர் பேரில் நமசிவாய மாலை.

**தருமலிங்க ஆசாரியார் பேரில் வழிநடைப் பதம்:**

இந்நூல் தருமலிங்க ஆசாரியார் புகழ் கூறுவது; செய்யுள் நடையில் 8 பக்கங்களில் அமைந்தது.

**நாகேசுரர் பேரில் உயிர் வருக்கமாலை:**

இந்நூல் அ, ஆ முதலிய உயிர் வருக்க எழுத்துக்கள் பன்னிரண்டினையும் தொடக்கமாகக் கொண்டு பாடப் பெற்ற பாமாலை; 13 செய்யுட்கள்.

## துரைசாமி ஐயங்கார் (19-நூ)

**ஊர்:** கந்தாடை.

**நூல்:** சின்னச்சாமி சாத்திரியார் இயற்றிய இசைப் பாடல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## துரைசாமி ஐயங்கார் கே, (20-நா)

**ஊர்:** வடுவூர்.

**நூல்:** துரைராஜா (1948) டாக்டர் சோணசலம் (1945) இருமன மோகினிகள் (1951) கலியாண சுந்தரம் அல்லது வேலியே பயிரை மேய்ந்த விந்தை (1942) மருங்காபுரி மாயக் கொலை (1948) முத்துலக்ஷ்மி அல்லது வெடிகுண்டு மர்மம் (1947) நங்கைமடவன்னம் (1946) நவநீதம் (1953) நவநீதம் அல்லது நவநாகரிக பரிபவம், (1949) நீலலோசனி (1951) பாவாடைச் சாமியார் (1946) பச்சைக்காளி (1948) பிச்சு முத்துக் கோனன் (1951) பூஞ்சோலையம்மாள் (1951) ராஜேந்திர மோகன (1944) சமயசஞ்சீவி (1953) சிங்கார சூரியோதயம் (1951) சிவராம கிருஷ்ணன் (1948) சோமசுந்தரம் (1951) சொக்கன் செட்டி (1945) தங்கம்மாள் (1947) திரிபுரசுந்தரி அல்லது திகம்பர சாமியார், திரும்பிரவேசம் (1950) திலோத்தமா (1921) வசந்த கோகிலம் அல்லது மிருச்சகடி (1944).

**துரைராஜா:** இது ஒரு கற்பனைக் கதை.

**டாக்டர் சோணசலம்:** கற்பனைக் கதை.

**இருமன மோகினிகள்:** துப்பறியும் நாவல்.

**கலியாண சுந்தரம் அல்லது வேலியே பயிரை மேய்ந்த விந்தை:** கற்பனைக் கதை.

**மருங்காபுரி மாயக் கொலை:** துப்பறியும் நாவல்.

**முத்துலக்ஷ்மி அல்லது வெடிகுண்டு மர்மம்:** கற்பனைக் கதை.

**நங்கைமடவன்னம்:** துப்பறியும் நாவல்.

**நவநீதம்:** துப்பறியும் நாவல்.

**நவநீதம் அல்லது நவநாகரிக பரிபவம்:** கற்பனைக் கதை.

**நீலலோசனி:** கற்பனைக் கதை.

**பாவாடைச் சாமியார்:** கற்பனைக் கதை.

**பச்சைக்காளி:** கற்பனைக் கதை.

**பிச்சை முத்துக் கோனுன்:** கற்பனைக் கதை.

**பூஞ்சோலையம்மாள்:** கற்பனைக் கதை.

**ராஜேந்திர மோகனு:** கற்பனை நாடகம்.

**சமய சஞ்சீவி:** துப்பறியும் நாவல்.

**சிங்கார சூரியோதயம்:** கற்பனைக் கதை.

**சிவராம கிருஷ்ணன்:** கற்பனைக் கதை.

**சோம சுந்தரம்:** கற்பனைக் கதை.

**சொக்கன் செட்டி:** துப்பறியும் நாவல்.

**தங்கம்மாள்:** கற்பனைக் கதை.

**திரிபுரசுந்தரி அல்லது திகம்பர சாமியார் திரும்பிரவேசம்:** துப்பறியும் கதை.

**வசந்த கோகிலம் அல்லது மிருச்சகடி:** நாடகம்.

## துரைசாமி ஐயங்கார் மே. (20-நா)

**ஊர்:** சென்னை.

இவர் இலக்கண இலக்கியம், வடமொழி, தென்மொழி, மருத்துவம் ஆகிய துறைகளில் வல்லவராக விளங்கினுர். ஆயுர்வேதக் கல்லூரியில் ஆசிரியராகப் பணிபுரிந்தார்.

**நூல்:** சாரங்கதர சம்மிதை, மாதவநிதானம், இரசரத்தின சமுச்சயம், காதம்பரி, மேகசந்தேசம்.

சாரங்கதர சம்மிதை, மாதவநிதானம், இரசரத்தின சமுச்சயம் — இம்மூன்றும் வைத்திய நூல்கள்.

காதம்பரி, மேகசந்தேசம் இவை வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப் பெற்றவை.

## துரைசாமிஐயர் டி. எல். (        )

**நூல்:** குணபூஷணி, இந்நூல் இந்துதேச பூர்வீக அரசர்களும், அவர்களுடைய நீதியும் முதலியன பற்றி உரைப்பது; உரைநடையில் அமைந்தது.

## துரைசாமிக் கவிராயர் (19-நூ)

**ஊர்:** சென்னை.

**தந்தை:** சாமியப்ப கவிராயர்.

**நூல்:** பழநியாண்டவர் இசைப்பாட்டு, திருப்போரூர் ஆண்டவர் இசைப்பாட்டு, பழநியாண்டவர் வெண்பா அந்தாதி, பழநியாண்டவர் கலித்துறை அந்தாதி, பழநியாண்டவர் பதிகம், பழநியாண்டவர் தோத்திரப் பாமாலை, பழநியாண்டவர் மாலை, பழநியாண்டவர் போற்றிக் கலிவிருத்தம், சொர்ணாம்பிகை தோத்திரம்.

## துரைசாமிச் சோழகர், ச. (20–நூ)

**ஊர்:** வெள்ளாம் பிரம்பூர்.

**நூல்:** இரண்டு சிறப்புப்பாயிரப் பாடல்கள்.

"வேளாள சூளாமணி" என்னும் நூலுக்கு இரண்டு சிறப்புப் பாயிரப் பாடல்கள் பாடியுள்ளார்.

## துரைசாமி சாமி (20-நூ)

**நூல்:** அறநெறி விளக்க சங்கிரகம் (1908).

## துரைசாமி தேசிகர் (20-நூ)

**ஊர்:** கூடலூர்.

**நூல்:** திருவதிகைப் புராணத்தைப் பாராட்டிச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

திருவதிகைப் புராணம், அப்பாவையர் என்பவரால் இயற்றப் பெற்றது; இருபதுக்கு மேற்பட்ட படலங்களையும் 1037 செய்யுட்களையுங் கொண்டது. இந்நூலினைப் பாராட்டித் திருவாவடுதுறை ஆதீனம் சுப்பிரமணியத் தம்பிரான், திருமயிலை சண்முகம்பிள்ளை, பூவை அட்டாவ தானம் கலியாணசுந்தர முதலியார் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## துரைசாமி நாயகர் (20-நூ)

**ஊர்:** பேழைக்குடி.

**நூல்:** சிலையெழுபது என்னும் நூலுக்கு உரை.

'சிலையெழுபது' கம்பரால் இயற்றப் பெற்றது. இந்த உரையைப் பாராட்டிக் கோ. வடிவேலுச் செட்டியார், கா. நமச்சிவாய முதலியார், மு. சி. பூரணலிங்கம் பிள்ளை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## துரைசாமி நாயகர் மு. (   )

**ஊர்:** சென்னை; கோடம்பாக்கம்.

இவர் ஆங்கிலம் தமிழ் வடமொழி ஆகியவைகளில் வல்லுநராயிருந்தார். அரக்கோணம் புகைவண்டி நிலையத்தில் அலுவல் பார்த்து வந்தார். இவர் தமிழ் நூலாராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார்.

**நூல்:** சாணூர் விகற்ப வினவிடை, சிலையெழுபது விருத்தியுரை. ஆக்னேய புராணத் தமிழ் மொழி பெயர்ப்பு.

## துரைசாமி நாயுடு (19-நூ)

**ஊர்:** கோவளம்.

**நூல்:** 'அறிவறியாமை ஆதாரவிளக்கம்' என்னும் நூலுக்கு சாற்றுகவி பாடியுள்ளார்.

'அறிவறியாமை ஆதார விளக்கம்' என்னும் நூல் சுப்பராயர் என்பவரால் இயற்றப் பெற்றது.

## துரைசாமிப் பாவலர் (20-நூ)

**நூல்:** ஒரு துறைக் கோவை (1912).

இந்நூல் செண்டத்தூர் ஐயாத்துரை முதலியார் என்பவர் மேல் பாடப் பெற்றது. நாணிப் புறங்காட்டல் என்னும் ஒரு துறையே பற்றி எழுந்தது. இந்நூலுக்குக் காவை இராசு நாவலர் என்பவர் உரை செய்திருக்கிறார். இக் கோவையில் நூற்றெட்டுப் பாடல்கள் உள்ளன.

## துரைசாமிப் பிள்ளை (20-நூ)

**ஊர்:** சேலம்.

**நூல்:** போற்றித் திருவகவல்.

## துரைசாமிப்பிள்ளை, அ. (19-நூ)

**ஊர்:** கோயம்புத்தூர் மாவட்டம், பொள்ளாச்சி.

**பிறப்பு:** 6—11—1896.

**நூல்:** கொங்குநாட்டின் சிரஞ்சீவிகள்.

## துரைசாமிப் பிள்ளை, க (19-நூ)

**ஊர்:** கோயமுத்தூர்.

**தந்தை:** கணபதிப் பிள்ளை.

இவர் உடன்பிறந்தவராகிய வீராசாமிப்பிள்ளை என்பவரும் புலவராகவும் வழக்கறிஞராகவும் விளங்கினார்.

**நூல்:** திருப்பேரூர் வெண்பா அந்தாதி.

## துரைசாமிப் பிள்ளை, சே. அ. (19-நூ)

**ஊர்:** சேலம்.

**தந்தை:** அப்பாசாமிப் பிள்ளை.

இவர் பி.எ., பி.எல். வரை ஆங்கிலக் கல்வி கற்றதன்றித் தமிழ்ப் புலமையும் பெற்றார்; வழக்கறிஞராகத் தொழில் புரிந்து கொண்டே தமிழ்த் தொண்டும் செய்தார்.

**நூல்:** சேலம் தலபுராணத்திற்கு உரையும் பல நூல்களுக்குச் சிறப்புப் பாயிரமும்.

சேலம் தலபுராணம், அட்டாவதானம் சொக்கலிங்கப் புலவரால் இயற்றப்பெற்றது.

## துரைசாமிப் பிள்ளை, ஞானசிரோன்மணி சாமுவேல் (19-நூ)

**ஊர்:** தஞ்சாவூர் மாவட்டம், பட்டுக்கோட்டை.

**பிறப்பு:** 2—11—1883.

இவர் ஆசிரியராகப் பணியாற்றியவர். பைபிள் பதிப்புப் பணியில் இவர் சிறந்த தொண்டாற்றியுள்ளார்.

**நூல்:** கிள்ளை விடுதூது, விண்ணப்பப் பத்து, தமிழிலக்கியம் —சங்ககாலம், மலை அருமறை.

## துரைசாமிப் பிள்ளை, தெ. சி. ( )

**நூல்:** திருப்புன்கூர் மும்மணிக் கோவை (1895) இந்நூல் திருப்புன்கூர் சிவபெருமான் புகழ் பேசுவது; 31 செய்யுட்கள்.

## துரைசாமிப் பிள்ளை, ஜே. டி. ( )

**நூல்:** கடலங்குடி திருமலைநாதர் நான்மணிமாலை, சவுந்தர நாயகி கலித்துறை.

## துரைசாமி முதலியார், க. ச. (20-நூ)

**நூல்:** திருவதிகைப்புராணத்தைப் பற்றிச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

திருவதிகைப் புராணம் அப்பாவையர் — க. என்பவரால் இயற்றப் பெற்றது; இருபதுக்கு மேற்பட்ட படலங்களையும் 1037 செய்யுட்களையுங் கொண்டு விளங்குகிறது.

## துரைசாமி முதலியார், வீ. (20-நூ)

**ஊர்:** புதுச்சேரி.

இவர் புதுவை அரசினர் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். 'தமிழ் மகவு' என்னும் பத்திரிகை ஒன்றையும் நடத்தினார்.

**நூல்:** கண்ணப்ப நாயனார் கலம்பகம்.

இக் கலம்பகத்தைப் பாராட்டித் திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகள், உ.வே. சாமிநாதையர், கோ. வடிவேலுச் செட்டியார் முதலாயினோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## துரைசாமி மூப்பனர் (20-நூ)

**ஊர்:** தஞ்சை மாவட்டம், கவித்தலம்.

**தந்தை:** முத்தைய மூப்பனர்.

இவருக்கு ஆசிரியராக விளங்கியவர் திரிசிரபுரம் கோவிந்த பிள்ளை.

**நூல்:** அயோத்தி நகரமான்மியம், சானகீபரிணயம், பிரசன்னராகவம், அமிச சந்தேசம், கருட புராண வசனம், கயாமான்மியம், கங்கா யாத்திரை மான்மியம், பாரதச் சருக்கம், கம்பராமாயண அருங்கவி விளக்கம் (தொகுப்பு நூல்).

**கம்பராமயண அருங்கவி விளக்கம்:** கம்பராமாயணத்தில் அரிய செய்யுட்களைத் திரட்டி வெளியிடப் பெற்றது.

## துரைசிங்கம் பிள்ளை (19-நூ)

**ஊர்:** பாண்டிய நாட்டில் கடலாடி.

**தந்தை:** பச்சையப்பப் பிள்ளை.

இவர் தம் தந்தையாரிடம் இளமை முதல் கல்வி கற்ருர்.

**நூல்:** கந்தபுராண வண்ணச் சிறப்புப் பாயிரம்.

## துரைசிங்க தாசர் ( )

**ஊர்:** திரிசிரபுரம்.

**நூல்:** கலிகாலக் கொடுமை (1889).

இந்நூல் கலிகாலத்தில் உலகில் நிகழும் தடுமாற்றங்கள் பற்றி வேடிக்கையாகக் கூறுவது; செய்யுள் நடையில் அமைந்தது.

## துரைராமாநுச தாசர் ( )

**ஊர்:** உத்தமர் கோவில்.

**நூல்:** பெத்த தாசர் சரித்திரம் (1890).

இந்நூல் அரங்கநாதர் புகழினை ஓதும் சிந்துப் பிரபந்தம்; 50 செய்யுட்கள்.

## துறவு சாமிகள் ( )

**நூல்:** சீடாசாரம் (1886).

இந்நூல் சீடர்களின் ஒழுக்கத்தைப் பற்றிக் கூறுவது.

## துறைக் குறுமாவிற் பாலங் கொற்றனார் (சங்ககாலம்)

கொற்றனார் என்பதை இவரது இயற்பெயராகச் சிலர் கொள்வர். இது இவரது இயற்பெயரா அல்லது தொழிலால் வந்த பெயரா என்று அறுதியிட்டுக் கூற இயலவில்லை.

இவர் 'பொருள்வயின் பிரிவு' பற்றிப் பாடியுள்ளமையால் வணிக குலத்தினரோ என எண்ணுவாரும் உளர்.

**நூல்:** நற்றிணை 26.

## துறையூர் ஓடை கிழார் (சங்க காலம்)

**இ.பெ.** ஓடை கிழார்.

**வே.பெ.** துறையூர் அரிசில் கிழார்.

**ஊர்:** துறையூர்.

கிழார் என்பது வேளாள மரபையொட்டி அமைந்த பெயராகத் திகழ்கிறது. துறையூர் என்ற அடைமொழியால் இவர் ஊரால் பெயர் பெற்றவராகவும் கருதப் படுகிறார். துறையூர் காவிரிக்கரையில் அமைந்துள்ள ஓர் ஊர்.

இவரது பாடல்கள் இவருடைய வறுமையைப் புலப் படுத்துவன. இவரால் பாடப்பட்டவர் 'ஆய்' என்னும் வள்ளல் ஆவர்.

**நூல்:** புறம் 136.

## தூங்க லோரியார் (சங்க காலம்)

**ஊர்:** தூங்கல்.

இவர் 'ஆர்' விகுதி பெற்று ஓரியார் என அழைக்கப் பெற்றார்.

இவருடைய பெயரோடு இணைந்துள்ள 'தூங்கல்' என்ற சொல் இவருடைய ஊரைக் குறிக்கும் என்றும், இது கொங்கு நாட்டு ஊர்களிலொன்றான தூங்கலூரைக் குறிப்பது என்றும் கூறுவர்.

**நூல்:** குறுந்தொகை 15, 295; நற்றிணை 1.

## தெட்சணு மூர்த்தி நாயகர் (19-நூ)

**நூல்;** 'இதய தீபம்'— உரை.

'இதய தீபம்' என்னும் நூல் இராமச்சந்திரவெள்ளைப் பொம்மைய நாயகர் என்பவரால் இயற்றப் பெற்றது.

## தெண்டாயுதம் பிள்ளை, சி. (19-நூ)

**தந்தை:** சிதம்பரம் பிள்ளை.

**நூல்:** 'வேந்தன்பட்டி விநாயகக் கடவுள் அந்தாதி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'வேந்தன்பட்டி விநாயகக் கடவுள் அந்தாதி' என்னும் நூல் கோ. குமாரசாமி முதலியார் என்பவரால் இயற்றப் பெற்றது.

## தெய்லர் ஐயர் (19-நூ)

ஐரோப்பியர். 1815 ஆம் ஆண்டு கிறித்துவமதத்திற்குத் தொண்டு செய்வதற்காகச் சென்னைக்கு வந்தார். 1819இல் இங்கிலாந்து சென்று மதகுருவுக்கான கல்வி பயின்று மீண்டும் சென்னைக்கு வந்தார். இலக்கிய ஆராய்ச்சி செய்வதில் பெரும் பொழுதைச் செலவிட்டார். தமிழில் சிறு நூல்களை எழுதி வெளியிட்டார். இவர் செய்த தமிழ்த் தொண்டுகள் பல.

**நூல்:** வேதத்தாட்சி (1834) சில பாடப் புத்தகங்கள், வெற்றி வேற்கை—ஆங்கில மொழி பெயர்ப்பு, கீழ் நாட்டுக்

கையெழுத்துப் புத்தக சாலை ஏட்டுச் சுவடிகளுக்கு விரிவான பட்டியல், கீழ்நாட்டுச் சரித்திரத் தமிழ்க் கையெழுத்துச் சுவடி — ஆங்கில மொழிபெயர்ப்பு.

**சில பாடப்புத்தகங்கள்:** ஐரோப்பியர் தமிழ் கற்பதற்காக இவை ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதப்பட்டன.

## தெய்வங்கள் பெருமாள் பிள்ளை ( )

**ஊர்.** தில்லைவிடங்கன்.

**தந்தை:** மாரிமுத்துப் பிள்ளை.

இவர் தந்தையிடமே கல்வி கற்றுப் புலமை எய்தினர்.

**நூல்:** பழநிச் சுப்பிரமணியர் பதிகம்.

## தெய்வச் சிலையா பிள்ளை ( )

**நூல்:** மனுநீதி காதல் (1881)

இந்நூல் பல அறங்களைத் தொகுத்துரைப்பது. பொருளை விளக்கும் தலைப்புக்கள் தரப் பெற்றுள்ளன; 1181 செய்யுட்கள்.

## தெய்வச் சிலையார் (15-நூ)

இவர் தொல்காப்பியச்சொல்லதிகாரத்திற்கு உரை இயற்றியவர்; இளம்பூரணர், சேனவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய மூவருக்கும் பிற்பட்டவர். திருப்புல்லாணியில் எழுந்தருளியுள்ள திருமாலின் பெயர்களுள் தெய்வச் சிலை என்பதும் ஒன்று. தெய்வச் சிலையார் என்ற பெயர் இடைக் காலத்தில் மக்களுக்குரிய பெயராக வழங்கியது. இவர் தம் உரையில் மற்றைய. உரையாசிரியர் பெயர் ஒன்றையும் கூறவில்லை. அங்ஙனமே இவருடைய உரையையும் ஏனைய உரையாசிரியர் யாரும் குறிப்பிடவில்லை. இவர் சைவர் என்று தெரிகிறது. 37-ஆம் நூற்பா உரையில் இவர் முருகனை வாழ்த்தும் பாடல் ஒன்றை மேற்கோளாகக் காட்டுகிறார். 32-ஆம் நூற்பாவுரையில் "வேதாகமத் துணிவு ஒருவர்க்கு உணர்த்துமிடத்து உலகும் உயிரும் பரமும் அனாதி, பதியும் பசுவும்

பாசமும் அனுதி என வரும்'' என்பர். இவ்வெடுத்துக் காட்டுகள் இவர் சைவர் என்று எண்ண இடந்தருகின்றன.

**நூல்:** 'தொல்காப்பியச் சொல்லதிகார உரை (1924).

தெய்வச் சிலையார் ஒவ்வோர் இயலின் இறுதியிலும் எழுத்தெண்ணி வடமொழி மரபை ஒட்டி இத்துணைக் கிரந்தம் என எழுதிச் செல்கின்றார். இவ்வுரையாசிரியர் தமக்குப் புலனாகாத கருத்துக்களைத் தமக்கு விளங்கவில்லை என்றே எழுதிச் செல்கிறார். இவர் தம் உரையில் புறநானூறு முதலிய எட்டுத்தொகை நூல்கள் மணிமேகலை, சூளாமணி, சிலபதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் ஆகியவற்றையே மேற்கோளாகக் காட்டுகிறார். பல இடங்களில் வேறு பாடங்களைக் கொண்டிருக்கிறார். பிறர் ஒன்றாய்க் கூறிய நூற்பாவைப் பலவாய்ப் பிரித்தும் பலவாய்க் கூறியவற்றை ஒன்றாய்ச் சேர்த்தும் உரை எழுதுகிறார். இவர் ஆங்காங்குக் கூறியுள்ள கருத்துக்கள் இளம்பூரணர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் ஆகிய மூவர் உரைகளையும் மறுத்துக் கூறுவனவாகத் தெரிகின்றன.

முத்தொள்ளாயிரம் வெண்பாக்களைப் போன்ற நயமான பல வெண்பாக்கள் இவர் உரையில் இடம் பெற்றுள்ளன. வேற்றுமை மயங்கியலில் (20) சிலப்பதிகாரக் கதை நிகழ்ச்சிகளை மிகச் சுருக்கமாகக் கூறும் வெண்பா ஒன்றைக் காட்டுகின்றார். அறனோக்கி (90) வானின்றுலகம் (103) அற்றார் அழிபசி (25) ஆகிய குறள்களுக்குப் புதிய உரை எழுதியுள்ளார். இவர் வடமொழிப் புலமை உடையவர். வடமொழி இலக்கணக் கருத்தை நினைவூட்டிப் பல இடங்களில் எழுதிச் செல்கின்றார். இவருடைய உரையில் நெசவுத் தொழிலைப் பற்றிய எடுத்துக் காட்டுகள் நிறைய இடம் பெற்றுள்ளன.

## தெய்வசிகாமணி ஆச்சாரியார் டி. எம். (19-நூ)

**ஊர்:** கும்பகோணம்.

**பிறப்பு:** 4—7—1881.

இவர் இலண்டனிலுள்ள ராயல் கழகத்தினை (London Royal Society of Arts) சேர்ந்தவர். கட்டிடக் கலையில் தனித் தேர்ச்சி பெற்றவர்.

**நூல்:** மேடைத் தமிழ் (1940)

## தெய்வ சாமிக் கவிராசர் (19-நூ)

**ஊர்:** எட்டயபுரம்.

**நூல்:** 'அருணசலேசர் தோத்திரப் பாமாலை' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'அருணசலேசர் தோத்திரப் பாமாலை' என்னும் நூல் ச. தம்பா உபாத்தியாயர் என்பவரால் இயற்றப் பெற்றது.

## தெய்வசிகாமணிக் கவிராயர் (18-நூ)

**ஊர்:** பாண்டிநாடு, குலசேகரன் பட்டினம்; வேளாளர்.

இவர் கல்வியைக் கற்க வேண்டிய காலத்தில் நன்கு கற்றுச் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தார். குலசேகரன் பட்டினத்தை அந்நாளில் ஆண்டு வந்த செந்தில் காத்த மூப்பனர் என்னும் சிற்றரசரோடு நட்புடையவராக விளங்கினர்.

**நூல்:** அறம் வளர்த்த நாயகி பிள்ளைத் தமிழ்.

## தெய்வ சிகாமணிக் குருக்கள் (19-நூ)

**நூல்:** சிவானந்த சுவாமிகள் பதிகம்

## தெய்வ சிகாமணிப் பிள்ளை (19-நூ)

**ஊர்;** திண்டுக்கல்; கிறித்தவர்.

**வாழ்ந்த காலம்:** கி. பி. 1802-1846.

**நூல்:** இன்பமணிமாலை, தோத்திரக் கும்மி.

## தெய்வ சிகாமணிப் புலவர் -1 (19-நூ)

**ஊர்:** பேறையூர்.

**நூல்:** 'தென்சேறைத் தடாக சிங்கார மாலை – சிறப்புப் பாயிரம்'

தென்சேறைத் தடாக சிங்கார மாலை என்னும் நூல் வடமலைத் திருவதை சுந்தர தாசுப் பாண்டியர் மீது இராம கிருட்டிணக் கவிராயர் என்பவரால் பாடப் பெற்றது.

## தெய்வ சிகாமணிப் புலவர் -2

இவர் கொங்கு தேசத்தில் காஞ்சிக் கோவில் நாட்டில் படைத் தலைவராக விளங்கிய சின்னுர் வேலப்ப கவுண்டர் இராவுத்த கவுண்டர் ஆகியோரால் ஆதரிக்கப் பெற்றவர்; கல்வியை நன்கு கற்றவர்; வாக்குப் பலித முள்ளவர்.

**நூல்:** தனிப் பாடல்கள்.

## தெய்வ சிகாமணி முதலியார் பு. தெ. (20-நூ)

**ஊர்:** தென்னுர்க்காடு மாவட்டம், திருப்பாதிரிப்புலியூர், புதுப்பாளையம்.

இவர் ஆங்கிலம், தமிழ் ஆகியவைகளைக் கற்று அரசாங்க அலுவலில் அமர்ந்திருந்தார். இவர் தம்முடைய வரலாற்றை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார்.

**நூல்:** சில வரலாற்று நூல்கள், திருவருள் விலாசம், பகவந்த சுவாமிகள் பஞ்சரத்தினம்.

## தெய்வ நாயக அடிகள் (19-நூ)

இவர் சங்கராச் சாரியருடைய மரபில் வேதாந்த வழியில் ஒழுகியவர். விநாயக பாரதி என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்றவர்.

**நூல்:** தசகாரிய மகா வாக்கியம்.

இந்நூல் ஐம்பத் தொரு செய்யுட்களையுடையது. ஈசூர் சச்சிதானந்த அடிகள் இந்நூற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## தெய்வ நாயக கவி ( )

**நூல்:** திருவாவடுதுறைச் சுப்பிரமணிய பண்டார சன்னிதி கள் பேரில் இரட்டை மணிமாலை.

## தெய்வ நாயக சாமிகள் (      )

**நூல்:** *தச காரிய மகா வாக்கியம்.* (1870)

*இந்நூலுக்கு அருணாசல சுவாமிகள் உரை இயற்றியுள்ளார்.*

*இவ்வுரையாசிரியரின் உரைச் சிறப்புப் பாயிரச் செய்யுள் நூல் முகப்பில் உள்ளது.*

## தெய்வ நாயகப் பெருமாள் நாயகர், சோ. (      )

**ஊர்:** *பாண்டிவளநாடு, சீயர்குளம்.*

*இவர் இளமையிலேயே செய்யுள் பாடும் திறமை பெற்றிருந்தமையால் பாலகவி என்னும் சிறப்புப் பெயர் பெற்றார்.*

**நூல்:** *வானமாமலைச் ' சதகம்,* (1873) *வானமாமலை அலங்காரக் கொம்மைப் பாடல்.* (1873)

**வானமாமலைச் சதகம்:** *இச் சதகம் திருமால் துதியாக உள்ளது. துருவர் முதல் மணவாள மாமுனிகள் ஈறுகப் பல பத்தர்களின் பெருமைகளைத் தனித் தனிப் பாடல் தோறும் புகழ்ந்து கூறுவது. பிற சதக நூல்கள் நீதிகளை உரைக்க, இச் சதகம் இறைவனைப் புகழ்ந்து போற்றும் பத்தி நூலாக அமைந்துள்ளது.*

**வானமாமலை அலங்காரக் கொம்மைப் பாடல்:** *இது வானமாமலைப் பெருமானைப் புகழ்ந்து கூறுவது;* 273 *செய்யுட்கள்.*

## தெய்வ நாயகப் பெருமாள் நாயுடு (      )

**ஊர்:** *ஆழ்வார் திருநகரி.*

**நூல்:** *திருமங்கையாழ்வார் சபாரஞ்சிதமாலை* (1899).

*இந்நூல் திருமங்கையாழ்வார் சபையின் சிறப்புக்களைக் கூறுவது;* 118 *செய்யுட்கள்.*

## தெய்வ நாயகம் பிள்ளை - 1 ( )

**ஊர்:** சோழநாடு, ரெட்டியூர்.

இவர் கணக்கு வேலையை மேற்கொண்டிருந்தார்; புலவ ராகவும் விளங்கினர்.

**நூல்:** சிறப்புப் பாயிரம்.

இச் சிறப்புப் பாயிரம், சீனிவாசதாதாசாரியார் என்பவர் இயற்றிய பூவராகர் அந்தாதி என்னும் நூலுக்கு அளிக்கப் பட்டதாகும்.

## தெய்வ நாயகம் பிள்ளை - 2 (19-நூ)

பெரும் புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் திரிசிர புரத்தில் இருந்தபோது அவரிடம் தமிழ்பயின்று சிறந்த புலமை பெற்றவர்.

**நூல்:** சிறப்புப் பாயிரம்.

இச் சிறப்புப் பாயிரம், ஆறுமுக நாவலர் திருக்குறள் பரிமேலழகர் உரையைப் பதிப்பித்து வெளியிட்டபோது கொடுக்கப் பட்டதாகும்.

## தெய்வ நாயகம் பிள்ளை - மு (20-நூ)

**ஊர்:** பாண்டிநாடு, முதுகுளத்தூர்.

தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்ற இவர் சித்திர கவிகள் இயற்றுவதில் வல்லவராக விளங்கினர்.

**நூல்:** சிறப்புப் பாயிரம்.

இச் சிறப்புப் பாயிரம் புவனேந்திர காவியம் என்னும் நூலுக்கு அளிக்கப் பட்டதாகும்.

## தெய்வ நாயக முதலியார் - 1 ( )

**நூல்:** விநாயகர் சொரூப நிர்ணய தோத்திர அகவல், விநாயக மூர்த்தங்களின் அகவல்.

**விநாயகர் சொரூப நிர்ணய தோத்திர அகவல்:**

**விநாயக மூர்த்தங்களின் அகவல்:**

இவை இரண்டும் விநாயகரைப் புகழும் நீண்ட அகவற்பா.

## தெய்வ நாயக முதலியார் - 2 (     )

**ஊர்:** விழுப்புரம்.

**தாய்:** தனக்கோடி அம்மாள், **தந்தை:** இரத்தின சபாபதி முதலியார்.

இவர் கடை வாணிகத்தை மேற்கொண்டிருந்தார்.

**நூல்:** வண்ணக்கலி விருத்தம், வெண்பா, முருகக் கடவுள் பஞ்சரத்தினம், நடராசர் பஞ்சரத்தினம், நடராசர் பதிகம், தரிசனையற்புதப் பதிகம், புலம்பற் கண்ணிகள், திருமயிலைக் கபாலீசர் பதிகம், நேரிசைக் கட்டளைக் கலித்துறை, ஆனந்தக் களிப்பு, தேவாரக் கண்ணிகள், நடராசர் ஆனந்தக் கீர்த்தனை, முருகர் கீர்த்தனை, திருநீற்றுப் பதிகம், சுப்பிரமணியர் தோத்திரம், தோத்திரத் திருப்புகழ், பரஞ்சுடர்க் கண்ணி, ஆண்டிகளின் மூடமதி திறவு, பொருள்தேடி அருளடையார்.

## தெய்வ நாயக முதலியார், ப. (20-நூ)

**நூல்:** வருண தருப்பணம் என்னும் நூலைப் பற்றிச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

இந்நூல் ஆறுமுக நாயகர் என்பவரால் இயற்றப் பெற்றது; பலவகையான சாதிச் செய்திகளையும் தகுந்த எடுத்துக் காட்டுகளோடு கூறுகின்றது.

## தெய்வ நாயக முதலியார் - வல்லி-ப. (20-நூ)

**ஊர்:** சென்னை.

இவர் அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியாரிடம் இலக்கிய இலக்கண நூல்களையும் சைவ சித்தாந்த நூல்களையும் கற்றுத் தேர்ந்தார். இவர் சில நூல்களுக்கு

உரை எழுதியதோடன்றிச் சில நூல்களை ஆராய்ந்தும் பதிப்பித்திருக்கிறார்.

**நூல்:** திருவிளையாடற் புராண சார வெண்பா.

தெய்வ நாயக முதலியார் திருவாவடுதுறைக்குச் சென்ற போது ஆதீனத் தலைவர் அம்பலவாண தேசிகர் திருவிளையாடற் புராணச் செய்திகளை அமைத்து ஒருநூல் இயற்றும் படி கட்டளையிட, அதனை மேற்கொண்டு இந்நூல் இயற்றப் பட்டது.

## தென் பழநிப் பிள்ளை (18-நூ)

**ஊர்:** கஞ்சுவாடி.

இவரது சமயம் சைவம். இவர் கஞ்சுவாடி சமீனின் காரியக் காரரரான முத்து சாமிக் கவுண்டரால் ஆதரிக்கப் பெற்றவர். தாமே கற்றுப் பிறர் மதிக்கும் படியான புலமையை அடைந்தவர்.

**நூல்:** முக்கூட்டுப் பள்ளு, காதல், பல தனிப் பாடல்கள்.
**முக் கூட்டுப் பள்ளு:** இந்நூல் அவரை ஆதரித்த முத்து சாமிக் கவுண்டர் மேல் பாடப் பெற்றது.

**காதல்:** இந்நூல், காவடிக்கா நாட்டுக் கோமங்கலத்திலிருந்த கொடையாளரான கங்க நாயகர் மீது பாடப் பெற்றது.

## தென் வீரையாம் பதியார் (        )

**நூல்:** வைகுந்த அம்மானை.

இந்நூல் பெரும்பாலும் பாரதக் கதையாக உள்ளது.

## தென்னவன் தமிழவேள் (10-நூ. முன்)

மதுரைப் பகுதி நாகமலையின் கீழ்பாலுள்ள மாத்தூர் சிவாலய கருப்பக் கிரகத்தின் குமுதப்படையில் அரை குறையான வட்டெழுத்துச் சாசனம் ஒன்று செய்யுளுருவில் அமைந்துள்ளது. இச் செய்யுளால் இப்புலவர் அறியப் படுகின்றார். இவர் இச்சிவன் கோயிலைக் கட்டியவரென்றும் தெரிகின்றது.

இச் சாசனப் பாட்டில் "மெய்ம்மை உணர்ந்தவனென்றும், தரிசனங்களாலும் தமிழ்கள் மூன்றும் வடநூல் வகையும் நீதிநூலும் மேதகுபுராணமும் பாதஞ்சலமுதற் பனுவற் பயன்களும்" உணர்ந்தவரென்று புகழப்படுகின்றார். இப் புகழுரைகள் தமிழவேளுக்கு உரியன என்று கருதப் படுகின்றன. புலமை பற்றியே இவர் தமிழவேள் என்று சிறப்பிக்கப் பெற்றார் எனலாம்.

இவர் வேளிர் மரபினரென்பதும் பத்தாம் நூற்றாண்டுக்கு முன் வாழ்ந்தவரென்பதும் பெயர் வழக்கால் வட்டெழுத் தமைதியாலும் தெரிகின்றன. மேற்குறித்த தொடர்களி லிருந்து இச்சாசனங் கூறும் பெரியார் வடமொழி தென் மொழிகளிற் பெரும்புலமையும் சாத்திரப் பேரறிவும் தத்துவ ஞானமும் பெற்று ஞானியாக வாழ்ந்தவரென்று தெரிய வருகிறது.

## தேசிக ஐயங்கார், சி (     )

**நூல்**: திருஞானக்கும்மி (1892).

இந்நூல் கிறித்தவ சமயத்தின் வரலாறு முதலியவற்றை மறுத்துக் கூறுவது; 30 செய்யுட்கள்.

## தேசிக விநாயகம் பிள்ளை (20-நூ)

**சி.பெ:** கவிமணி.

**ஊர்:** கன்னியாகுமரி மாவட்டம், தேரூர்.

**தாய்:** ஆதிலட்சுமியம்மை; **தந்தை:** சிவதாணுப் பிள்ளை; வேளாளர்.

**வாழ்ந்த காலம்:** 1876 — 28—9—1954.

இவர் தேரூரில் தொடக்கக் கல்வி பயின்று கோட்டாற்றில் ஆங்கிலக் கல்வியும் திருவனந்தபுரத்தில் ஆசிரியப் பயிற்சி முறைக் கல்வியும் பெற்றார்; தேரூரிலுள்ள திருவாவடுதுறை ஆதீன மடத்திலிருந்த சாந்தலிங்கத் தம்பிரானிடம் தமிழ் நூல்கள் கற்றார். 1895 முதல் 1931 வரை முப்பத்தாறு

ஆண்டுகள் கோட்டாற்றிலும் நாகர்கோயிலிலும் திருவனந்த புரத்திலும் தமிழாசிரியராகவும் தமிழ் விரிவுரையாளராகவும் பணி செய்தார். கவிதைகள் இயற்றுவதிலும் கல்வெட்டுக் களை ஆராய்ந்து ஆங்கிலத்தில் பல கட்டுரைகள் எழுதி வெளியிடுவதிலும் ஈடுபட்டார்.

இவர் தம் மனைவியின் ஊராகிய புத்தேரியில் ஓய்வு பெற்றபின் வாழ்ந்து வந்தார். ஆதலின் இவர் புத்தேரிக் கவிஞர் என்றும் அழைக்கப்படுவாராயினர்.

இவருடைய கவிதையின் மிகச் சிறந்த இயல்பு எளிமை யாகும். இவர் கவிதைகளில் ஆழ்ந்த தெளிவும் சொல் இனிமையும் மிகுந்து காணப்படுகின்றன. பழைமையின் அமைதியையும் புதுமையின் பொலிவையும் இவருடைய பாடல்களில் காணலாம்.

இவர் சுற்றுப்புற ஊர்களில் வாழும் மக்களுக்குப் பல தொண்டுகளைச் செய்து அவர்கள் முன்னேற்றத்திற்குப் பெரிதும் பாடுபட்டார். மருமக்கள் தாய முறையால் துன்புற்ற மக்களின் நிலை கண்டு அரும்பாடுபட்டு அதனை ஒழிக்கச் செய்தார்.

**நூல்:** மலரும் மாலையும், ஆசிய ஜோதி, உமர்கய்யாம் பாடல்கள், நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழிமான்மியம், தே.வி. யின் கீர்த்தனங்கள், கவிமணியின் உரைமணிகள், காந்தளூர்ச்சாலை.

**மலரும் மாலையும்:** இந்நூல் வார இதழ்களிலும், திங்கள் இதழ்களிலும் வெளிவந்து அறிஞர்கள் கருத்தைக் கவர்ந்த தேசிக விநாயக பிள்ளையவர்களின் பாடல்களின் தொகுப் பாகும். இரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் பலப் பல வெளியீடுகளிலும் வெளிவந்த பாடல்களையெல்லாம் ஒருங்கு திரட்டிப் புதுமைப் பதிகத்தாரைக் கொண்டு இத் தொகுப்பு வெளிவரச் செய்தார்.

இத் தொகுப்பில் பக்திமஞ்சரி, இலக்கியம், சரித்திர கவிதை, மழலை மொழி, இயற்கை இன்பம், காட்சி இன்பம்,

கதைப் பாட்டு, உள்ளமும் உணர்வும், வையமும் வாழ்வும், சமூகம், தேசியம், வாழ்த்து, சரமகவி, கதம்பம், முத்துக் குவியல் ஆகிய தலைப்புக்களில் 1330 பாடல்கள் உள்ளன. சிறுவர்களுக்காகப் பாடிய பாடல்கள் எளிய சொற்களாலி யன்று சிறுவர்கள் பாடி மகிழ்தற் கேற்றனவாக உள்ளன. இயற்கை இன்பம் என்ற தலைப்பில் வரும் ஆறு, கடல், நிலா, மலர்கள் இவைகளைப் பற்றிய பாடல்கள் இயற்கையின் எழிலைப் புலப்படுத்தி இன்பம் ஊட்டுவனவாயுள்ளன. கதைப் பாட்டுகள் சிறுவர்களுக்கேற்ற கதைப் பொருளாக அமைந்துள்ளன. உள்ளமும் உணர்வும் என்ற தலைப்பில் வரும் குதிரைகள் புலம்பல் உள்ளத்தை உருக்குந் தன்மை யதாயுள்ளது. சரமகவி நாட்டிலுள்ள அறிஞர்களும் கொடை வள்ளல்களும் மறைந்தபோது பாடிய இரங்கற் பாக்களின் தொகுப்பாக உள்ளது.

**உமார் கய்யாம் பாடல்கள்:** பாரசீகக் கவிஞரான உமார் கய்யாம் என்பார் பாரசீக மொழியில் எழுதியுள்ள கவிதைகளை ஆங்கிலத்தில் பலரும் மொழி பெயர்த்துள்ளனர். அவற்றுள் பில்ட்ஜிரால்டு என்பவரின் மொழி பெயர்ப்புத்தான் மிகவும் சிறந்தது. அதனையும் சுவாமி கோவிந்த தீர்த்தர் முதலி யோரின் மொழி பெயர்ப்புக்களையும் ஒப்பிட்டுப் பார்த்து ஆசிரியன் குறிக்கோளையும் உள்ளப் பாங்கையும் ஆராய்ந் தறிந்து தமிழ் முதனூல் என்று கூறுமாறு பாடப்பட்டுள்ளன உமார்கய்யாம் பாடல்கள். உமார் உலகை நோக்கும் பொது நோக்கும் கொள்ளும் உணர்ச்சித் துடிப்புக்களும் கண்ட உண்மைகளை மூடிமறைக்காமல் எடுத்துக் கூறும் தெளிவும் கலை உணர்ச்சியும் மிக அழகாக அமையுமாறு அப்படியே இந்தத் தமிழாக்கத்தில் வடித்தெடுத்துத் தந் திருக்கிறார்.

**நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழிமான்மியம்:**

திருவிதாங் கோட்டரசர்கள் மலையாளிகள்; மருமக்கள் தாயத்தைக் கொண்டவர்கள். ஆயினும் தமிழர்களுக்குச்

சிறப்பான பல உரிமைகளுந்தந்து உயர்ந்த அரசுப் பணிகளும் நல்கினர். அதனால் நாஞ்சில் நாட்டாரும் மன்னர்களிடம் கொண்ட பற்றுக் காரணமாக அரண்மனைப் பழக்க வழக்கங்களிலும் ஒழுகலாறுகளிலும் தாமும் ஈடு பட்டவர்களாய் ஒன்றி வாழத் தலைப்பட்டார்கள்.

ஒருவர் தமக்கு உரியனவாகக் கொண்டு நுகர்கின்ற வீடு வாசல் நிலபுலம் முதலிய உடைமைகள் அவர்தம் மனைவிமக்களுடனிருந்து நுகரத் தக்கனவேயன்றி எவ்வித அழிவுக்கும் ஈடுபாட்டுக்கும் உட்படுத்தத் தக்கனவல்ல. அவர் காலத்திற்குப்பின் அவ்வுடைமை அவர் மனைவிமக்களை அடையமாட்டா. அவர் உடன் பிறந்த பெண்டிரின் பிள்ளைகளுள் மூத்தவனுக்கே அவ்வுடைமை போய்ச் சேரும். உடன் பிறந்தவர்களுக்கு உரிமையில்லை.

இத்தாய முறையால் வேளாளர் சமுதாயம் இடர்ப் பாட்டில் சிக்கி இன்னலுற்றது. அந்த இன்னலைக் களைய எழுந்ததே மருமக்கள் வழிமான்மியம் என்னும் நூல். இந்நூலுக்கு மான்மியம் என்பது வஞ்சப் புகழ்ச்சியாக அமைந்த பெயராகும். இந்நூலுள் புராண மான்மியங்களைப் போலப் படலங்கள் உள்ளனவேனும் நீண்ட பெரிய பா வகைகள் கையாளப்படவில்லை. சமுதாயத்தின் அடிநிலையி லுள்ளவர்களும் புரிந்து கொள்ளுமாறு எளிய இனிய சிறிய ஆசிரியப் பாக்களே இடம் பெற்றுள்ளன.

இந்நூல் குலமுறை கிளத்துப்படலம் முதல் கும்பி யெரிச்சல் படலம் ஈறுகப் பதினொரு படலங்களைக் கொண்டது. இந்நூலுள் சமுதாய ஊழல்களும் கொடுமை களும் சித்தரிக்கப்படுகின்றன. இந்நூலால் நாஞ்சில் நாட்டு வேளாளரின் தாயமுறைச் சீர்திருத்த மசோதாவானது 1926-ஆம் ஆண்டு சட்டமன்றத்தில் கொண்டு வரப்பட்டது. அதனால் மருமக்கள் தாயமுறை நீங்கி மக்கள் வழித்தாய முறை நிலைபெற்றது.

**தே-வி-யின் கீர்த்தனங்கள்:**

இந்நூலில் தமிழிசைப் பெருமையைத் தமிழிசைப் பாட்டாகிய கீர்த்தனையிலேயே அமைத்து மிக அழகுபடக்

காட்டுகிறார் கவிமணி. வடநாட்டினின்றும் வந்த ஏமநாதன் என்னும் யாழ்ப்பாணன் ஒருவன் பாணபத்திரனுக்குத் தோற்றோடிய கதையை யுட்கொண்டு வடநாட்டிசையைத் தமிழிசைவென்றது என்னுங் கருத்தில் இனிய கீர்த்தனம் ஒன்று இந்நூலில் இடம் பெற்றுள்ளது. தில்லை நடராசனை நாயகனாகக் கொண்ட ஒரு பெண் அவர் பிரிவினால் வருந்துவதாக உள்ள பாடல் பிரிவுத் துன்பத்தின் உச்சநிலையைக் காட்டுகிறது. பிரிவுத் துயரால் வருந்திய தலைவி தோழியைத் தூதனுப்பியதாக அமைந்துள்ள பாடல் அவிநயத்திற்கு ஏற்றதாக விளங்குகிறது. இவருடைய கீர்த்தனைகள் இதயத்தின் உள்ளுணர்ச்சியை வெளிப்படுத்துபவை. முருகப் பெருமான்மீது வஞ்சப் புகழ்ச்சியாகப் பாடப்பெற்ற கீர்த்தனைகள் பல இதனுள் இடம் பெற்றுள்ளன. இந்நூல் பாரி நிலையத்தாரால் பதிப்பிக்கப் பெற்று வையாபுரிப் பிள்ளையவர்கள் முன்னுரையுடன் வெளிவந்துள்ளது.

## தேசிகாசாரியார் (20-நூ)

இவர் தமிழிலும் வடமொழியிலும் புலமை பெற்றவர்.

**நூல்:** கல்கிபுராணம்.

இது வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப் பட்டது.

## தேய்புரிப் பழங்கயிற்றினார் (சங்ககாலம்)

இவருடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவர் பாடலில் தன் அறிவிற்கும் மனத்திற்கும் நடைபெறும் போராட்டம், இரு பெரும் யானைகளுக்கிடையே நடை பெறும் போராட்டத்தை ஒத்திருக்க, அவ்விரு யானை களாலும், இருபுறமும் பற்றியிழுக்கப்படும். "தேய்புரிப் பழங் கயிறு அறுந்தொழிவது போல் என் உடல்நலம் அழியுமோ?" என்று தலைவன் வருந்துவதாகக் கூறுங்கால் 'தேய்புரிப் பழங் கயிறு போல' என்று இவர் ஆண்டுள்ள

உவமையே இவர் பெயராக அமைந்தது. தொகை நூல்களில் உவமையால் பெயர்பெற்ற புலவர்களுள் இவர் ஒருவர் ஆவர்.

**நூல்:** நற்றிணை 284.

## தேரதரன் (சங்க காலம்)

இவருடைய பெயர் தேரதனுர், தாமோதரன், தோதான் என்ற வேறுபாடுகளுடன் பல்வேறு பதிப்புக்களில் எடுத்தாளப்பட்டுள்ளது. இப்பெயர் வேறுபாடுகள் பெரும்பாலும் ஏடெழுதுவோரால் ஏற்பட்ட மாற்றங்களாகவே இருக்கும். ஏனெனில் அனைத்துப் பெயர் வேறுபாடுகளும் ஒலி ஒற்றுமை உடையனவாக உள்ளன.

**நூல்:** குறுந்தொகை 195.

## தேரையர் (     )

இவர் சித்தர்களில் ஒருவர், மருத்துவத் துறையில் வல்லவர். இவர் ஒருவகையாலும் நீக்கமுடியாத தலைவலியால் வருந்தின அரசனொருவனுக்குச் சம்மோகினி என்னும் பச்சிலையால் மயக்கமுண்டாக்கிக் கபாலத்தைத் திறந்து, அங்கிருந்த தேரையை ஒரு நீர்க்கிண்ணத்தைக் காட்டி வெளிப்படுத்திப் பிறகு சந்தானகரணி என்னும் பச்சிலையால் முன்போலக் கபாலத்தைப் பொருத்தினுராகையால் தேரையர் என்னும் பெயர் வந்ததென்று கதை வழங்குகிறது.

**நூல்:** பதார்த்தகுண சிந்தாமணி, நீர்க்குறி, நெய்க்குறி சாத்திரம், தைலவருக்கச் சுருக்கம், வைத்திய யமக வெண்பா, மணிவெண்பா.

## தேவகுஞ்சரியம்மாள் - சி (20-நூ)

**ஊர்:** திரிசிரபுரம்.

**தந்தை:** சிவாநந்த சாகர யோகீசுவரர்.

இவர் தந்தையாரிடம் தமிழ் கற்றுப் புலமை எய்தினர்.

**நூல்:** சூத சங்கிதை வசனம்.

## தேவகுலத்தார் (சங்க காலம்)

இவருடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. தேவகுலத்தார் என்ற இப்பெயர் காரணம்பற்றி வந்த சிறப்புப் பெயராகும். ஆனல் என்ன காரணமென்று அறுதியிட்டுக் கூற இயலவில்லை. தேவகுலம் என்ற சொல்லுக்குத் தெய்வக்கோயில் என்ற பொருளுண்டு. எனவே இறைவன் உறையும் கோயில் ஒன்றுடன் வழிபாடு செய்யும் வகையிலோ அல்லது வேறு எந்த வகையிலோ இவர் ஏதாவது ஒரு தொடர்பினைப் பெற்றிருக்கலாம்.

**நூல்:** குறுந்தொகை 3.

## தேவராசதாசர் (  )

**நூல்:** பக்தவிஜய அவதாரிகை.

## தேவராசகவிராய சோதிடர் (  )

**நூல்:** சோதிடக் கலப்பு.

இந்நூல் முற்றும் அந்தாதி. சோதிடம் சம்பந்தமானவை பலவும் தொகுத்துரைக்கப் பெற்றுள்ளன.

## தேவராச சாமி (19-நூ)

**நூல்:** கந்த சட்டிக் கவசம்.

## தேவராசசீடர் (  )

**நூல்:** சேடமலை பதிற்றுப் பத்தந்தாதி.

## தேவராச பாரதிகள் - உ.வே. (19-நூ)

**ஊர்:** பாண்டிவளநாடு.

இவர் இராமநாதபுரம் அவைக்களப் புலவர் முத்துசாமி ஐயங்காரிடம் தமிழ் பயின்று சிறந்த புலவராக விளங்கினர்.

**நூல்:** சந்திர கலாமாலை, சடகோப திவ்விய சரித்திரம், பராங்குசர் வரலாறு.

சடகோப திவ்விய சரித்திரம் பதினைந்து படலங்களையும் ஆயிரத்து இருநூறு பாட்டல்களையுங் கொண்டது.

## தேவராசப் பிள்ளை (19-நூ)

**ஊர்:** செங்கற்பட்டு மாவட்டம், வல்லூர்.

**தந்தை:** வீராசாமி பிள்ளை; சீர்கருணீகர்.

இவர் பெங்களூரில் இருக்கும்போது மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் புலமையைக் கேள்வி யுற்று, அவரைத் தம் வீட்டிலிருக்கச் செய்து வேண்டும் நலன்களை எல்லாம் செய்து தமிழ் கற்றார்; புலமை நிரம்பிச் செய்யுள் பாடுந் திறம் பெற்றார். மீனாட்சி சுந்தரம் பிள்ளையைத் தமிழ்ப் பாவினாற் பரவி ஐயாயிரம் ரூபாயும் பொன்னாடையும் காணிக்கையாகத் தந்தார்.

**நூல்:** சூதசங்கிதை, தணிகாசலமாலை, சேடமலை மாலை, பஞ்சாக்கர தேசிகர் பதிகம், பஞ்சரத்தினம், குசேலோ பாக்கியானம்.

**சூதசங்கிதை:** இது வடமொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட நூல்; மூவாயிரம் பாடல்களைக் கொண்டது. இந்நூல் விபூதி, உருத்திராக்கம், பஞ்சாக்கரம், சிவபூசை, சிவதானமகிமை, தலவிசேடமகிமை ஆகியவற்றைப் பற்றிக் கூறுகின்றது.

**பஞ்சாக்கர தேசிகர் பதிகம்:**

இது திருவாவடுதுறை ஆதீனத்து முதற்குரவர் நமசிவாய மூர்த்திகள் மீது பாடப்பெற்றது.

**பஞ்ச ரத்தினம்:** இது திருவாவடுதுறை ஆதீன முதற் குரவராகிய நமசிவாய மூர்த்திகள் மேல் பாடப் பெற்றது.

**குசேலோபாக்கியானம்:** குசேலரைப் பற்றிய கிளைக் கதை என்பது இதன் பொருள். பாகவதத்தின் பத்தாம் கந்தத்தில் குசேலர் வரலாறு ஒருகிளைக் கதையாக வரு கின்றது. செவ்வைச் சூடுவார் இயற்றிய பாகவதத்தில் குசேலர் வரலாறு சுருக்கமாகக் கூறப் பட்டுள்ளதைக் கண்டு அதனை அரிய நீதிகள் பொதிந்த சிறுகாப்பியமாக இயற்றினார். இந்நூல் கி.பி. 1872-இல் அரங்கேற்றப்பட்டது. இந்நூல் பொது, சிறப்பு என்னும் பாயிரமும் மூன்று அத்தியாயங்களும்

கொண்டது. மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் அளித்துள்ளார். இந்நூலி லுள்ள செய்யுட்கள் 773. அவை இனிய நடையும் ஓசை யின்பமும் உள்ள விருத்தப்பாக்கள். இந்நூல் அறமும் நீதியும் இணைந்து நிற்ப. உலகியல் உண்மைகளை மனத்திற் பதியுமாறு எடுத்துரைக்கின்றது.

## தேவராசர் ( )

**நூல்:** சரமோபாயதாத்பரியம்.

## தேவராயசாமி ( )

இவர் முருகக் கடவுளிடத்தில் சிறந்த பத்தியுடையவ ரென்பதும் மந்திர தந்திரங்களில் வல்லவரென்பதும் இவர் நூலால் பெறப்படுகின்றன.

**நூல்:** கந்தர் சட்டிக் கவசம்.

இது ஒரு பாராயண நூல். மந்திரங்களைப் பற்றிய பல குறிப்புக்கள் அடங்கியுள்ளன. மக்கள் இதனைப் படிப்பதால் நோய் நீக்கம், வெற்றி, பொருட்பேறு ஆகிய இவைகளைப் பெறுவர்.

## தேவரியாண்டான் ( )

**நூல்:** தேவரியாண்டான் இரகசியம்.

## தேவன் ( )

இவர் பால்வண்ண தேவனுன வில்லவ தரையனுர் என்பவர்.

**நூல்:** இவர் அகநானூற்றுக்கு அகவலால் ஓர் உரை செய்துள்ளார்.

## தேவன் திருவரன் குளமுடையான் (13-நூ)

இவர் 13-ஆம் நூற்ருண்டுக் கல்வெட்டால் அறியப் பெறும் புலவர்.

**நூல்:** பேர்வஞ்சி.

இந்நூல் பாண்டிமண்டலத்துப் பொன்னமராவதி முதலிய நாடுகளில் வாழும் பெரு வீரர்களாகிய மற மாணிக்கர்கள் மேல் பாடப்பட்டது. இந்நூலைப் பாடியமைக்காக அவர்கள் இவருக்கு 'மறச்சக்கரவர்த்தி' என்ற பட்டப் பெயரையும் 'தூத்திக்குடி' என்ற ஊரிற் பாதியையும் அளித்தார்கள். இது பெருவஞ்சி என்னும் புறத்துறை நூல்.

## தேவனார் (சங்க காலம்)

**இ.பெ.** தேவன்.

இவர் தெய்வத்தால் பெயர் பெற்றவராகப் போற்றப் படுகின்றார்.

**நூல்:** நற்றிணை 227.

## தேவேந்திரநாத பண்டிதர் ( )

**ஊர்:** செழுமணவை.

**நூல்:** வைத்தியக்குறள், வைத்திய மூலிகை அகராதி, கை கண்ட அனுபோக வைத்தியப் பெருங்குறள்.

## தேவேந்திர மாமுனி (19-நூ)

**நூல்:** ஜீவசம்போதனை (1883).

இது சமண சமய நூல். முதலாவது அனித்தியம் என்னும் அதிகாரமும் இரண்டாவது சரணின்மை என்னும் அதி காரமும் அமைந்துள்ளன. பன்னிரண்டு பிரிவாக உள்ள இந்நூலில் முதல் இரண்டு பிரிவுகள் மட்டுமே அச்சிடப் பெற்றுள்ளன.

## தேனிக்குடிக் கீரனார் ( )

இவர் திருவள்ளுவமாலை பாடிய புலவர்களுள் ஒருவர்.

**நூல்:** திருவள்ளுவமாலையில் 'பொய்யாப்பால்' என்று தொடங்கும் செய்யுள்.

## தையல்பாகம் பிள்ளை, எஸ், எம். (19-நூ)

**ஊர்:** சீவில்லிப்புத்தூர்.

**தந்தை:** மணிமுத்துப்பிள்ளை.

இவர் ஆங்கிலமும் தமிழும் நன்கு கற்றுத் தேர்ந்தார்; பின்னர்த் திருநெல்வேலி மாவட்ட நீதிமன்றத்தில் வழக்கறிஞராகப் பணிபுரிந்தார்; ஓய்வுக் காலங்களில் தமிழ் நூல்களை நன்குகற்றுப் பெரும் புலமை எய்திப் பல தமிழ் நூல்களை இயற்றினார்.

**நூல்:** கழுகுமலைக் கந்தர் பதிகம், குறுக்குத்துறைக் குகன் பதிகம், சீராசைக் கோமதியம்மை பதிகம், திருச்செந்தில் வெண்பா அந்தாதி, திருச்செந்தூர் மாதாந்தக் கலித்துறை, திருநெல்வேலி மதியம்மன் பதிகம். நெல்லையந்தாதி, புதுவைச் சிவகாமசௌந்தரி மாலை, புதுவை வைத்தீசுவரர் இரட்டை மணிமாலை, திருச்செந்தில் வெண்பா அந்தாதி: செந்தூர் முருகன் புகழ் பேசுவது; 108 செய்யுட்கள் கொண்டது.

**நெல்லையந்தாதி:** இந்நூலில் புதுவைச் சிவகாம சௌந்தரி மாலை முதல் சீராசைக் கோமதியம்மன் பதிகம் வரை 8 வகை நூல்கள் உள்ளன. நெல்லையந்தாதி கலித்துறை அந்தாதி யாகும். திருநெல்வேலியில் கோயில் கொண்டுள்ள பெருமானைப் பலபடியாகப் புகழ்ந்து குறையிரந்து வேண்டுவது.

## தொட்டயாச் சாரியர் (        )

**தந்தை:** கோவிந்தாச்சாரிய சீனிவாசாச் சாரியர்.

**நூல்:** வேதாந்தாச்சாரிய வைபவப் பிரகாசிகை.

## தொட்டயாச்சாரியர், வாதூல, (        )

**நூல்:** தொட்டயாச்சாரியர் சிரீமுகம்.

## தொட்டயாச்சாரியர், சுத்தத்துவம்.

**நூல்:** தத்துவத்திரய வியாக்கியான அரும்பதம், திருமந்திரார்த்த வியாக்கியான அரும்பத விளக்கம், திருப்பாவை ஸ்வாபதேச வியாக்கியானம்.

## தொட்டைய கவுண்டர் - வே (20-நூ)

**ஊர்:** சிரவணம் பட்டி.

**தந்தை:** வேலப்பக் கவுண்டர்.

தொட்டைய கவுண்டரும் சிரவணம் பட்டிக் கௌமார மடம் இராமானந்த அடிகளும் ஒருசாலை மாணவர்கள். இவர் இளமையிலேயே செய்யுளியற்றும் வன்மை பெற்றிருந்தார்.

**நூல்:** இரத்தினகிரிச் சித்தி வேலவன் மாலை. இரத்தினகிரி என்பது சிரவணம் பட்டியைக் குறிக்கும்.

## தொடித் தலை விழுத்தண்டினார் (சங்க காலம்)

இவருடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவர் பெற்றுள்ள இப்பெயர் சிறப்புப் பெயராகும். இவர் பாடியுள்ள புறநானூறு 243ஆம் பாடலில் பெருமுதாளரொருவர் தம் கல்லா இளமையை எண்ணி "அது யாண்டுளதோ" என்று இரங்கிக் கூறுமிடத்து முதுமைப் பருவத்தின் உற்ற துணையாகத் "தொடித் தலை விழுத்தண்டு" எனப் பூண் செறிந்த தலையையுடைய பெரிய தண்டுக் கோலைக் குறிப்பிடுகிறார். கைத்தடியினை 'தொடித் தலை விழுத்தண்டு" என்று சிறப்பித்துக் கூறும் உயர்வு கருதி இவர் "தொடித் தலை விழுத்தண்டினார்" என அழைக்கப் பட்டார். இவர் தொடரால் பெயர் பெற்ற சங்கப் புலவருள் ஒருவர்.

ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ் சாத்தன் இவரால் பாடப்பட்டவனென்றும், "அறநான் கூறிபொருள்" என்று தொடங்கும் திருவள்ளுவமாலைப் பாடல் இவரால் இயற்றப் பெற்றதென்றும் கூறுவர்.

**நூல்:** புறம் 243.

## தொண்டரடிப் பொடியாழ்வார் (8-நூ)

**வே.பெ.** விப்பிர நாராயணர்.

**ஊர்:** சோழநாடு, திருமண்டங்குடி, அந்தணர்.

இவர் நந்தவனத் தொண்டை மேற்கொண்டு திருவரங்கத்தில் வாழ்ந்து வந்தார். தேவதேவி என்ற தேவதாசியினால் மயக்குண்டு அவள் வலையில் சிக்கிக் கிடந்த இவர் திருவரங்கன் திருவருளால் அவளை விட்டு விலகினர். வைணவர்களுடைய பாத தூளியாய் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து அடிமை பூண்டு ஒழுகி அதனால் தொண்டரடிப் பொடியாழ்வார் என்ற பெயர் பெற்றார். சாதிச் சிறப்பினும் ஞானச் சிறப்பினையே உயர்வாக மதித்த உயர்குலத்துத் திருமாலடியார்களுள் இவர் மிகச் சிறந்தவர் என்பது இவர் பிரபந்தங்களால் அறியக்கிடக்கின்றது. பின் பழகிய ஜீயர் குருபரம்பரைப் பிரபாவத்தில் திருமங்கைமன்னன் கோயிற்றிருமதில் கட்டும்போது தொண்டரடிப் பொடியாழ்வார் திருத்தொண்டு செய்கின்ற இடம் ஒதுங்கக் கட்டுவித்ததாகக் குறித்துள்ளார். அதனால் தொண்டரடிப் பொடியாழ்வார் திருமங்கைமன்னன் காலத்தில் திருப்பணி செய்து கொண்டிருந்தாரென்று தெரிகிறது.

**நூல்:** திருமாலை, திருப்பள்ளியெழுச்சி.

**திருமாலை:** தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச்செய்த திவ்வியப் பிரபந்தங்கள் இரண்டினுள் இது முதலாவது

'திருமாலையறியாதவன் பெருமாளையறியான்' என வழங்கும் பழமொழியினால் இப்பிரபந்தத்தின் சிறப்பு விளங்கும். ஒரு பொருளைக் குறித்துப் பல செய்யுள் கூறுவது மாலை எனப்படும். தமிழிலுள்ள பலவகைப் பிரபந்தங்களுள் மாலை என்பது ஒன்று. திரு என்னும் சொல் சிறப்புப் பொருளைக் காட்டி மாலைக்கு அடைமொழியாக நின்றது. இப் பாமாலை திருவரங்கன் திருவடிகளில் சாத்தும் பூமாலை போலுதலாலும் இந்நூல் திருமாலை எனப்பெயர் பெற்றது. இந் நூலிலுள்ள செய்யுட்கள் நாற்பத்தைந்து, பச்சைமாமலை போல் மேனி, வேத நூற்பிராயம் நூறு, வண்டின முரலும் சோலை, வடதிசை முடியை வைத்து, ஊரிலேன் காணியில்லை முதலிய பாடல்கள் அன்பர்களால் அடிக்கடி பாடப் படுவதுண்டு.

**திருப்பள்ளியெழுச்சி:** இது பத்துப் பாடல்களைக் கொண்டது; திருவரங்கம் திருக் கோயிலில் இன்றும் காலையில் ஓதப்பட்டு வருகின்றது. அரங்கத் தம்மாபள்ளி எழுந்தருளாயே என்றும் எம் பெருமான் பள்ளி எழுந்தருளாயே என்றும் இப்பாடல்கள் முடிகின்றன.

## தொண்டி ஆமூர்ச் சாத்தனார் (சங்க காலம்)

**இ.பெ.** சாத்தன்

**ஊர்:** ஆமூர்.

தொண்டி ஆமூர் என்பது தொண்டியைச் சேர்ந்த ஆமூர் எனப் பொருள்படும். ஆமூர் என்ற பெயருடைய ஊர்கள் பல இருந்தலால் தொண்டி என்னும் அடைமொழியோடு இது வழங்கப் படுவதாயிற்று. புலவர் சாத்தனாருடைய ஊர் தொண்டி நகரைத் தலை நகராகக் கொண்ட சேர நாட்டைச் சார்ந்த ஆமூராகும். இது சேர நாட்டில் குறும் பொறை மலைக்குக் கீழ்பாலுள்ளதென்பர். இவரை ஊரொடு பெயர் பெற்ற புலவராகக் கூறுவர்.

**நூல்:** அகம் 169.

## தொத்தாத்ரைய சாமிகள் ( )

**நூல்:** இவர் சமாதி சகசம் முதலிய பதினொரு திருப் பதிகங்கள் பாடியுள்ளார்.

## தொத்திலிங்கக் குழந்தை நாவாணர் ( )

**நூல்:** சிவகங்கைத் திருமுகவிலாசம்.

இந்நூல் சிவகங்கைச் சமத்தானத்தைப் பற்றியது; முற்றும் கலிவெண்பாவால் கூறப் பெற்றுள்ளது. முதற்கண் முருகக் கடவுளின் திரு அவதாரச் சிறப்பும், அவரது மற்றைச் செயல்களும் கூறப்பெற்றுள்ளன. பின்னர் இந் நூல் இச்சமத்தானதிகளைப் புகழ்ந்து கூறுகின்றது.

## தொல் கபிலர் (சங்க காலம்)

**இ.பெ.** கபிலர்

தொகை நூல்களில் கபிலர் என்ற பெயரில் பல புலவர்கள் காணப்படுகின்றனர். அவர்களில் கபிலபரணர் எனச் சிறப்பிக்கப் பெற்றவரும் குறிஞ்சிப்பாட்டுப் பாடியவருமான கபிலர் என்னும் புலவரினின்றும் இவர் வேறு பட்டவர் என்பதைக் காட்டத் தொல் என்னும் அடைமொழி இவருக்குச் சேர்க்கப்படுவதாயிற்று. இவ்வடைமொழியால் இவர் கபிலருக்கு முற்பட்டவரென்று கருதுவர். நற்றிணை 114 ஆம் பாடலில் இவர் ஆண்டுள்ள "புள்ளித் தொல்கரை" என்னுந் தொடரிலிருந்து 'தொல்' என்னும் அடைமொழி இவர் பெயரோடு இணைந்தது என்றுங் கூறுவர். இப் பாடலில் இவர் ஆண்டுள்ள 'தொல்' என்னுச் சொல் பாடல் உணர்வினை வெளிப்படுத்தப் பெரிதும் துணை செய்கின்றது.

**நூல்:** அகம் 282; குறுந்தொகை 14; நற்றிணை 114, 276, 328, 399.

## தொல்காப்பிய தேவர் (14-நூ)

இவர் சிறந்த தமிழ்ப் புலவர். இவர் ஒரு சமணக்கோயில் கட்ட விரும்பினரென்றும் அதற்குச் செங்கல் அறுக்க

வேண்டிய இடம் சைவர்களுடையதாகையால் அவர்கள் விருப்பப்படி இந்நூலைப் பாடினரென்றும் கதை வழங்குகிறது. இவர் முதலில் சமணராயிருந்து பின் சைவராகியிருக்கலா மென்று கருதப்படுகிறது.

**நூல்:** திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம்.

இந்நூல் பாயிரம் உட்பட 103 செய்யுட்களையுடையது. 15-ஆம் நூற்றாண்டிலிருந்த இரட்டைப் புலவர்களால், "தொல்காப்பியத்தேவர் சொன்ன தமிழ்ப் பாடலன்றி நல்காத் திருச்செவிக்கு நாமுரைப்பதேறுமோ?" என்று புகழப்பெற்றது. இந்நூலில் இரட்டையர் கயிறிட்டுப் பார்த்துப், "பாடுவார் பாடும்" என்று தொடங்கும் பாட்டில், "தோடுவார் காதொன்றே தோன்றுந் துணை யையர், பாடுவார் ஓரிருவர்க் கிட்ட படைவீடே" என்னும் பகுதி கண்டு மகிழ்ந்து தில்லைக் கலம்பகம் பாடினர் என்ப.

## தொல்காப்பியர் (கி.மு. 10-நூ)

**ஊர்:** காப்பியக்குடி என்பர். இது சீகாழிக்குத் தெற்கில் உள்ளதோர் ஊரென்பர் உ.வே. சாமிநாதையர்.

இவர் தொல்காப்பியம் என்னும் நூலை இயற்றிப் பாண்டியன் அவைக்களத்து அதங்கோட்டாசான் தலைமையில் அரற்கேற்றினர் என்று பனம்பாரனர் கூறுவர். இவர் வாழ்க்கை வரலாறு ஒன்றும் தக்க சான்றுகளுடன் கிடைக்க வில்லை, இவர் தொல்காப்பியம் தவிர வேறு நூலொன்றும் செய்ததாகத் தெரியவில்லை. தொல்காப்பியர் தம் நூலை அவர்கால நூலொடு வழக்கையும் தழுவி எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி முந்து நூல் கண்டு முறைப்படி எண்ணிப் புலந் தொகுத்தார் என்றறிகின்றோம்.

தொல்காப்பியர் கூறிய பல விதிகளுக்கு மாறுபட்டுச் சங்க இலக்கியத்தில் பல சொற்றொடரமைப்புகள் காணப் படுதலின் தொல்காப்பியம் கடைச் சங்க இலக்கியங்களுக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றியதென்பது புலனாகும். சங்கப்பாக்களின் காலம் கி.மு. 7-ஆம் நூற்றாண்டுவரை

செல்வதால் தொல்காப்பியர் காலம் கி. மு. 10-ஆம் நூற்றாண்டாக இருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர் கருதுவர்.

நிலந்தோறும் வேறுவேறு பெயர்களால் உருவமைத்து வழிபடப் பெறும் எல்லாத் தெய்வங்களும் பொருளால் ஒன்றே என்பது பண்டைத் தமிழ்ச் சான்றோரது துணி பாகும். இங்ஙனம் தெய்வ வழிபாட்டு முறையில் ஒற்றுமை உணர்வு நிலவிய காலத்தில் வாழ்ந்தவர் தொல்காப்பிய ராதலின் அவர் தம் காலத்தில் நிலந்தோறும் நிகழ்ந்த தெய்வ வழிபாடுகளெல்லாவற்றையும் ஒத்த மதிப்புடன் தம் நூலிற் குறிப்பிட்டுள்ளார். "பால்வரை தெய்வம் (தொல். சொல். கிளவியாக். 57) என்னுந் தொடருக்கு எல்லோர்க்கும் இன்ப துன்பத்திற்குக் காரணமாகிய இரு வினையையும் வகுப்பது எனச் சேனாவரையரும் நச்சினார்க் கினியரும் கூறிய பொருள் தொல்காப்பியர் சமயக் கருத்தினை இனிது விளக்குவதாகும். ஊழ்வினைப் பயன் தானே வந்து உயிர்களைப் பற்றுந் தன்மையதன்று என்பதும் உயிர்கள் செய்யும் நலந்தீங்குகளாகிய இருவினைகளுக்கேற்ப அவற்றின் பயன்களை வகுத்து நுகர்விக்கும் முதல்வன் ஒருவன் உளன் என்பதும் தொல்காப்பியர் கருத்தாகும். வேந்தன் தன் ஆணையை ஏனைய அதிகாரிகள் மாட்டு வைத்து அவர்களைக் கொண்டு அவ்வத்தொழில் செய்விக்குமாறு போல இறைவனும் தன் ஆணையை இருவினையின் கண்ணே வைத்து அவற்றைக் கொண்டே வினைப்பயன்களை நுகர்விப்பன். இக் கருத்தினை உட் கொண்டே 'பால்வரை தெய்வம்' என்ற தொடரால் தொல்காப்பியர் இறைவனைக் குறிப்பிடு வாராயினர். காணப்படும் இவ்வுலகம் இல்பொருளன்று; அடிக்கடி நிலைமாறும் இயல்பிற்றாகிய உள்பொருளே என்பது தொல்காப்பியர் கொள்கை. கடவுள் உலகம் என்பவற்றின் வேறாக உயிர் என்பதனைத் தனிப்பொருளாகக் கொண்டு அவ்வுயிர்கள் பலவெனத் தொல்காப்பியர் தெளிவாகக் கூறியுள்ளார். உயிர்கள் என்றும் அழிவில்லன என்பது தமிழர் கொள்கை. தொல்காப்பியரும் அதனை உடன்

பட்டுத் 'தொல்லுயிர்' (புறத்திணை-21) என்ற தொடரால் வழங்கியுள்ளார். தொல்காப்பியர் ஊழின் இயல்பினை எடுத்துரைத்தலால் அவ்வூழுக்குக் காரணமாகிய மறுபிறப்பு உண்டென்பதும் அவர் தமக்கு உடன்பாடாதல் நன்கு பெறப்படும். தொல்காப்பியர் கடவுளைச் 'சிறந்தது' என்னும் பெயராற் குறிப்பிடுகின்றார். தொல்காப்பியர் பல்வேறு வகையில் நிகழும் எல்லா வழிபாடுகளையும் ஏற்றுக் கொள்ளும் முழு முதற்பொருள் ஒன்றே என்னுங் கொள்கையினையுடையர் என்பது புலனாகின்றது. தொல்காப்பியர் இன்ன தெய்வத்தைச் சிறப்பு முறையில் வழிபட்டார் என்று துணிந்து சொல்லுதற்கில்லை. நிலந்தோறும் வேறு வேறு பெயர்களால் உருவமைத்து வழிபடப்படும் எல்லாத் தெய்வங்களும் பொருளால் ஒன்றே என்பது தொல்காப்பியர் துணிபு.

**நூல்:** தொல்காப்பியம்.

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் பொருளதிகாரம் என மூன்று பகுதிகளையுடையது. எழுத்துக்களின் இலக்கணத்தை முறைப்பட விரித்துரைக்கும் படலம் எழுத்ததிகாரம் என வழங்கப் பெறுவதாயிற்று. தொல்காப்பியனாரால் எழுத்தெனச் சொல்லப்பட்டவை அகரமுதல் னகரமீறாகவுள்ள முப்பதும் குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆய்தம் என்னும் மூன்றும் ஆக முப்பத்து மூன்றாகும். இவற்றிற்கு எழுத்தென்னும் பெயர் தமக்கு நெடுங்காலத்திற்கு முன்பே தோன்றி வழங்கியது என்பதனை 'எழுத்தெனப் படுப அகரமுதல் னகரவிறுவாய் முப்பஃதென்ப' என வருஞ் சூத்திரத்தால் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். தொல்காப்பியனார் தாம் கூற எடுத்துக் கொண்ட எழுத்திலக்கணத்தினை நூன்மரபு, மொழிமரபு, பிறப்பியல், புணரியல், தொகைமரபு, உருபியல், உயிர்மயங்கியல், புள்ளி மயங்கியல், குற்றியலுகரப் புணரியல் என ஒன்பது இயல்களால் உணர்த்துகின்றார். எழுத்ததிகாரத்திற்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகிய இருவரும் உரை எழுதியுள்ளனர். எழுத்ததிகார நூற்பா 483 ஆகும்.

சொல்லதிகாரம் கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமைமயங்கியல், விளிமரபு, பெயரியல், வினையியல், இடையியல், உரியியல், எச்சவியல் என ஒன்பது இயல்களை யுடையது. இதற்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சேனா வரையர், தெய்வசிலையார், கல்லாடனார் ஆகியோர் உரை எழுதியுள்ளனர். இளம்பூரணர் சொல்லதிகாரத்தினை 456 நூற்பாவுடையதாகவும் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் 463 நூற்பாவுடையதாகவும் தெய்வச்சிலையார் 453 நூற்பா வாகவும் கொண்டனர். கல்லாடனார் உரை 260 நூற்பாக் களுக்கே கிடைத்துள்ளது. சொல்லதிகாரத்திற்கு அமைந் துள்ள உரைகளுள் சேனாவரையருரையே மிகச் சிறந்ததாகக் கருதப்படுகின்றது.

பொருளதிகாரம் எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் கருவியாகக் கொண்டு மக்கள் உணர்ந்து கொள்ளுதற்குரிய பொருள் நெறிமரபினை உணர்த்துகின்றது. இவ்வதிகாரம் அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், உவமவியல், மெய்ப்பாட்டியல், செய்யுளியல், மரபியல் என ஒன்பது இயல்களைக் கொண்டது. இவ்வுலகி லுள்ள காட்சிப் பொருள் கருத்துப் பொருள் ஆகிய எல்லா வற்றையும் நன்காராய்ந்து அவற்றை முதல் கரு உரி என மூவகைப் படுத்துணர்த்தி, இவ்வுலகத்து வாழ்வாங்கு வாழும் வாழ்க்கை முறையினை வகுத்துரைப்பது பொருளிலக்கண மெனப்படும். இப்பகுதி தமிழுக்கே சிறப்புரிமை உடைய தாகும். இவ்வதிகாரத்துள் முற்பட இன்பப் பகுதியாகிய கைக்கிளை முதலாகப் பெருந்திணை ஈறாக அகப்பொருளிலக் கணமுணர்த்தி, அதன்பின் பொருட் பகுதியாகிய வெட்சி முதல் பாடாண்டிணை ஈறாகப் புறப் பொருளிலக்கண முணர்த்தினார். பின்னர் அகப்பொருட் பகுதியாகிய களவு கற்பு என்னும் இருவகை ஒழுகலாறுகளையும் விரித்துக் கூறினார். அதன்பின் அகமும் புறமுமாகிய இவ்வொழுக லாறுகளைப் பற்றிவரும் பொருளியல்பு உணர்த்தினார். அதன்பின் அவ்விரு பொருட்கண்ணும் குறிப்புப் பற்றி நிகழும் மெய்ப்பாடு உணர்த்தினார். பின்னர் வினைபயன்

மெய் உரு என்னும் இவைபற்றி உவமிக்கப்படும் உவமையின் இயல்புரைத்தார். அதன்பின் எல்லாப் பொருட்கும் இடமாகிய செய்யுளிலக்கணத்தை விரித்துரைத்தார். அதனையடுத்து வழக்கிலக்கணமாகிய எஞ்சிநின்ற மரபிலக்கணம் உணர்த்தினர். இம்முறையான் பொருளதிகாரம் ஒன்பது இயல்களை உடையதாயிற்று.

பொருளதிகாரம் முழுமைக்கும் இளம்பூரணர் உரை எழுதியுள்ளார். அவர் கொண்ட நூற்பா எண்ணிக்கை 655. முன் ஐந்து இயல்களுக்கும் செய்யுளியலுக்கும் நச்சினர்க்கினியரும் பின் நான்கு (மெய்ப்பாடு, உவமம், செய்யுள், மரபு) இயல்களுக்குப் பேராசிரியரும் உரை எழுதியுள்ளனர். அவர்கள் இருவரும் கொண்ட நூற்பா எண்ணிக்கை 665.

இந்நூலின் நூற்பாக்கள் 1594 என இளம்பூரணரும் 1611 என நச்சினர்க்கினியரும் கொண்டனர்.

## தோபா சாமிகள் (19-நூ)

**வே.பெ:** இராமலிங்கம்.

**ஊர்:** திரிசிரபுரம்.

**தந்தை:** சிவகுருநாதப்பிள்ளை; வேளாளர்.

இவர் இளமையிலேயே தம் தாய் தந்தையரை இழந்தார். அரசினர் இவரைப் படையில் அலுவல் பார்க்கும் போர்வீரர் மக்களோடு சேர்த்துப் பாதுகாத்தனர். இவர் படைக்கலப் பயிற்சி பெற்றூர். தந்தையின் அலுவலைத் தொடர்ந்து இவரும் போர்வீரரானூர். அப்பணியில் இவர் இருந்தாலும் பிறவா நெறி எய்த எண்ணித் தேவாரம் திருவாசகம் முதலிய அருட் பாடல்களை ஓதத் தொடங்கினூர். திருஞான சம்பந்தரை வழிபடு கடவுளாகக் கொண்டார். இதனல் இவருக்கு மெய்யுணர்வு ஏற்பட்டுச் சிவஞான நிட்டையிலழுந்தி ஞானசம்பந்தரோடு உறவாடினூரென்பர். அப்போது இவர் அடிக்கடி "தோபா தோபா" என்று கூறினமையால் தோபா சாமிகள் என்றழைக்கப் பெற்றூர்.

தமது பணியை விடுத்துத் துறவறம் மேற்கொண்டார். இவர் திகம்பர சாமியாராகவே இருந்தார். இவருடைய திருவிளையாடலின் பெருமையுணர்ந்த சென்னையைச் சேர்ந்த முகம்மதியரொருவர் தோபா மசூதி என்றொரு மசூதியைக் கட்டியுள்ளார். சாமிகள் பல சித்துக்களைச் செய்ததாகக் கூறுவர்.

இவரது பெருமையினையுணர்ந்த முத்தமிழ் ரத்திஞகரம் பாநுகவி என்பவர் இவர்மீது தோபா சாமிகள் அருட்பத்து, ஞானநாயகமாலை என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

**நூல்:** திருத்தணிகை முருகன் அருட்பா.

## தோம்பிலிப்பு நாவலர் (19-நூ)

**ஊர்:** ஈழநாட்டில் யாழ்ப்பாணத்தை அடுத்த தெல்லிநகர்; சோழிய வேளாளர்.

இவர் தெல்லி நகரில் சிறந்த தமிழ்ப்புலவராகப் பெயர் பெற்றவர். சோழிய வேளாள குலத்தில் பிறந்த இவர், கிறித்தவ சமயத்தைச் சேர்ந்து அச்சமய ஒழுகலாற்றினை மேற்கொண்டார்.

**நூல்:** 'விசுவாச விளக்கமென்னும் ஞாஞனந்த புராணம்'.

இந்நூல் கிறித்தவ சமயச் சத்தியவேதத்தை விளக்குவது. மூன்று காண்டங்களில் இருபத்தி நான்கு சருக்கங்கள் 1104 செய்யுட்களைக் கொண்டது. இந்நூலிற்கு அறிஞர்கள் பலர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## தோமஸ்புலவர் ( )

**நூல்:** உலகரட்சகர் வண்ணச்சந்த ஓயிற்கொம்மி (1888).

இந்நூல் ஏசுநாதரின் வரலாற்றைக் கும்மிப் பாடலமைப்பில் கூறுவது; 406 செய்யுட்களுடையது.

## தோமாஸ் இயேசுதாச கவிராயர் (19-நூ)

**ஊர்:** பாளையங்கோட்டை.

இவர் பாளையங்கோட்டை ஆங்கிலக் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார்.

**நூல்:** வாக்கிய இலக்கணம்.

மாணவர்களுக்கு எளிய முறையில் இலக்கணத்தைக் கற்பித்தற்காக இது எழுதப்பட்டது.

## தோமஸ் பிள்ளை, ச. கி. ( )

**நூல்:** 'சோதிட மாணிக்கம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'சோதிட மாணிக்கம்' என்னும் நூல் சூ.அ. மாணிக்க சாமி முதலியார் என்பவரால் இயற்றப் பெற்றது.

## தோமைப் பிள்ளை பட்டங்கட்டியார் (19-நூ)

**நூல்:** அந்தோணியார் அம்மானை (1892).

இந்நூல் பல காதைகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. விருத்தப் பாடல்களும் இடையிடையே அமைந்துள்ளன. 811 பாடல்கள் காணப்படுகின்றன.

## தோலாமொழித் தேவர் (10–நூ)

**ஊர்:** சோழநாடு.

**வே.பெ:** சீவர்த்த தேவர் என்பது இவருடைய இயற்பெயர்.

தோலாமொழித் தேவர் என்பது அவர் நூற்பாடல்களின் அருமை நோக்கி வந்த பெயராகும். குணபத்திர முனிவருக்குப்பின் குமரசேனர் என்று ஒருவரும் அவருக்குப் பின் சிந்தாமணி ஆசிரியரும் அவருக்குப் பின் சீவர்த்த தேவரும் இருந்தார்கள் என்று கன்னட நாட்டில் சிரவண பெள் குளத்திலுள்ள கல்வெட்டொன்று விரிவாய்த் தெரி விக்கின்றது. அக்கல்வெட்டு "சூடாமணி என்பது காவியங் களுக்கெல்லாம் சூடாமணி என்று சொல்லத்தக்க ஒரு சிறந்த காவியமாகும். இதைக் கீர்த்தி பெறத்தக்க புண்ணியஞ் செய்தவராகிய சீவர்த்ததேவர் என்பவர் செய்தார்" என்று குறிப்பிடுகின்றது. இவர் தருமதீர்த்தன் என்ற ஆசாரியரின் மாணக்கர். இவர் தீபங்குடியில் நிடும்பறை தீர்த்தக் கரையிலிருந்த அருங்கலான்வயத்தைக்

கொண்ட தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்தவர்; தருமதீர்த்தங் கரரிடத்து ஈடுபாடு மிக்கவர்; கார்வெட்டி அரையன் என்ற தலைவனால் ஆதரிக்கப்பெற்று வடமொழி மகா புராணத்தி லுள்ள பிரசாபதி என்ற அரசன் வரலாற்றைச் சூளாமணி என்ற அழகிய தமிழ்க் காவியமாகப் பாடியவர்.

**நூல்:** சூளாமணி.

இக் காப்பியத்தின் கதை ஸ்ரீ புராணத்தில் உள்ளது. வித்தியாதரர் கதையும் மக்கள் கதையும் விரவி வரப் பெற்றது. பயாபதியின் மகனாகிய திவிட்டன் தனக்கு வணங்காமையால் அச்சுவகண்டன் என்பவன் கோபங் கொண்டு மாயச்சிங்கம் ஒன்றை அனுப்புகின்றான். அது திவிட்டனுக்கு அஞ்சி ஓடிவிட, குகையிலிருந்து வந்த உண்மைச் சிங்கத்தைத் திவிட்டன் கொன்று விஞ்சையர் மகளாம் சுயம்பிரபையை மணக்கின்றான். திவிட்டனுடைய படையும் அச்சுவகண்டனுடைய படையும் போரிட அச்சுவ கண்டன் இறக்கின்றான். திவிட்டனுடைய மகளாகிய சோதிமாலை தன் மாமன் மகன் அமுதகேசனை மாலையிட்டு மணக்கின்றாள். அமுதகேசனின் தங்கையும் திவிட்டன் மகன் விசயனை மணக்கின்றாள். பயாபதி அரசன் துறவு மேற்கொண்டு உலகுக்கொரு சூளாமணியாகின்றான்.

அரசியல் நீதிகள், தூது செல்லும் முறை, குடிகளின் திருவிழா, வேனில் விழா, மந்திரி சபை, சுயம்வரம், தெய்வப் போர், மாயப்போர் ஆகியவையெல்லாம் இந்நூலுள் இடம் பெற்றுள்ளன. தமிழ் முறைப்படி ஐந்திணை வளங் கூறி நாடு நகரம் கூறினாலும் வடமொழி வருணனைகளின் நிழலையும் இந்நூலுட் காணலாம். துறவுச் சருக்கத்தோடும் முத்திச் சருக்கத்தோடும் இந்நூல் முடிவு பெறுகின்றது.

பயாபதி உலகின் சூளாமணியாதலைக் கூறுவதே இக் காப்பியத்தின் நோக்கமாகும். இவன் வரலாற்றை இவன் மகன் திவிட்டன் வரலாறு மழுங்கச் செய்து விடுகிறது.

இந்நூலிலுள்ள ஒவ்வொரு செய்யுளும் ஒவ்வொரு படலமும் முறையே முழுமணியாகவும் சிறந்த மணிமாலை

யாகவும் நம் கருத்தைக் கவர்கின்றன. இந்நூலாசிரியர் இயற்கையழகினைப் புதியதொரு முறையில் பாடியுள்ளார். பூக்களின் திணைமயக்கங் கொண்டே துறக்க வாழ்வினைச் சுட்டிக் காட்டுகின்றார்.

அறம் பொருள் இன்பம் வீடு என்ற நாற்பொருளுந்தரப் பாடுவதே பெருங்காப்பியமென்றும் அவற்றுள் ஒன்று குறையப்பாடுவது சிறு காப்பியமென்றும் கூறும் முறையில் பார்த்தாலும் இது பெருங்காப்பியமே யன்றிச் சிறுகாப்பிய மாகாது.

## தோலு லெப்பை மீராப் பிள்ளைப் புலவர் ( )

**ஊர்:** காலங்குடியிருப்பு.

**நூல்:** இசைப் பாடல்கள் பல இயற்றியுள்ளார்.

## தௌட சுவாமிகள் (19-நூ)

**ஊர்:** சிதம்பரம்.

**நூல்:** பஞ்சபத மகாவாக்கியம்.

இந்நூல் வினாவிடையாக எழுதப் பட்டுள்ளது.

## நக்கண்ணையார் (சங்க காலம்)

**வே.பெ:** பெருங்கோழி நாய்கன்மகள் நக்கண்ணை வணிக மரபு.

**ஊர்:** உறையூர்.

இவர் உறையூரில் வாழ்ந்த பெருங்கோழி நாய்கன் என்பவரின் மகளாராவர். கண்ணன் என ஆடவர்க்குப் பெயரிடுதல் போலக் கண்ணை எனப் பெண்டிருக்கும் பெய ரிடுவர். அப்பெயரோடு 'ந' என்னும் சிறப்பை உணர்த்தும் இடைச்சொல் சேர 'நக்கண்ணையார்' என்றாயிற்று என்பர். நாய்கன் என்பது கடல் வாணிகம் மேற்கொள்ளும் இனத்தவர் வைத்துக் கொள்ளும் பட்டப்பெயர். கோழி என்பது உறையூருக்கு ஒரு பெயராதலால் இவர் உறையூரில்

வாழ்ந்த பெருங்கோழி நாய்கன் என்ற வணிகரின் மக ளென்று கருதுகின்றனர்.

புறநானூற்றில் வந்துள்ள இவர் பாடல்கள், உறையூர் வீரை வேண்மான் வெளியன் தித்தனது மகன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி என்ற சோழ மன்னனைப் பற்றியவை. இக்கிள்ளி தன் தந்தையொடுமாறுபட்டு நாடிழந்து புல்லரிசிக் கூழுண்டு வருந்தினும் ஆமூர்மல்லன் என்பவனைப் போரில் வென்றதைச் சிறப்பித்து, அவன் ஆற்றலை வியந்து காமுற்ற ஒரு பெண் கூறுவதுபோல நக்கண்ணையார் பாடியுள்ளார்.

**நூல்:** அகம் 252; நற்றிணை 19, 87; புறம் 83, 84, 85.

நக்கீர தேவநாயனுர் (        )

இவர் பதினோராந் திருமுறையில் தொகுக்கப்பட்டுள்ள திரு வீங்கோய்மலை எழுபது என்ற நூலினை இயற்றியவர். இவர் சங்ககால நக்கீரரினும் வேறானவர்; சிவனடியார்.

**நூல்:** திருவீங்கோய்மலை எழுபது.

இந்நூல் 70 செய்யுட்களாலாகியது. 48 முதல் 61 வரை உள்ள செய்யுட்கள் மறைந்து விட்டன.

நக்கீரர் - 1 (சங்காலம்)

**இ.பெ.** கீரன்.

**வே.பெ.** மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர்.

**ஊர்:** மதுரை.

இவரது தந்தை மதுரையில் ஆசிரியராயிருந்தவர். தந்தையின் பெயரோடு இணைத்து இவர் மதுரைக் கணக் காயனுர் மகனுர் நக்கீரனுர் என வழங்கப்பட்டார். கீரர் என்னும் இயற்பெயரோடு சிறப்பை உணர்த்தும் 'ந' என்னும் இடைச்சொல் சேர்ந்து நக்கீரர் என்றாயிற்று.

இவர் அந்தணர் குலத்தவரென்பது சிலர் கருத்தாகும். கடைச்சங்க காலத்தில் சங்கப் பலகையில் முதலிடத்தை முதலில் ஏற்றவர் இவரே என்றும் ஒரு கருத்துண்டு.

கடைச் சங்கப் புலவர்களான கபிலர் பரணரோடு வைத்து எண்ணத்தக்க பெரும்புலவர் இவர். இவரைப் பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. தொல்காப்பியச் செய்யுளியலில் 179-ஆம் நூற்பாவுரையில் பேராசிரியர் இரண்டு வெண் பாக்களை எடுத்துக் கூறி, "இவை தெற்கண் வாயில் திறவாத பட்டி மண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும் சாவவும் பாடிய மந்திரம் அங்கதப் பாட்டாயின" என்று குறித்துள்ளார். இக்கதையினுல் இவர் வாக்குப் பலித முள்ளவராகக் காணப்படுகிருர். சிவப்பிரகாசர் பாடிய சீகாளத்திப் புராணத்திலும் நிரம்ப அழகிய தேசிகர் பாடிய திருப்பரங்கிரிப் புராணத்திலும் பெரும்பற்றப்புலியூர் நம்பி திருவிளையாடற் புராணத்திலும் பரஞ்சோதி முனிவர் திரு விளையாடற் புராணத்திலும் இவரைப் பற்றிப் பல்வேறு கதைகள் வழங்குகின்றன. தருமிக்குப் பொற்கிழியளித்த வரலாற்றில் சிவபெருமான் பாடிய, "கொங்கு தேர் வாழ்க்கை" என்று தொடங்கும் பாடலுக்கு நக்கீரர் குற்றங் கூறினுரென்றும், அவ்வாறு கூறிய பிழைக்காகச் சிவபெரு மான் சினந்து தம் நெற்றிக் கண்ணைக் காட்ட, நக்கீரர் அதனுல் தாக்கப்பட்டுப் பொற்ருமரைக் குளத்தில் விழுந்த தாகவும் பின்னர்க் கைலைபாதி காளத்திபாதி என்னும் அந்தாதி பாடச் சிவபெருமானுல் கரையேற்றப்பட்டதாகவும் கதை ஒன்று வழங்குகின்றது. நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே என்று இவர் இறைவனேடு வாதிட்டதாக இக்கதையில் கூறப்பட்டுள்ளது.

நக்கீரர் செய்த சிவபூசையில் குற்றம் நேர்ந்ததற்காக ஒரு பூதம் அவரைப் பிடித்துச்சென்று ஒருமலைக்குகையில் அடைத்ததாகவும், நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடி முருகன் அருளால் சிறையிலிருந்து விடுபட்டதாக மற்ருெரு கதை கூறுகின்றது.

பத்துப் பாட்டிலுள்ள திருமுருகாற்றுப் படையும் நெடுநல் வாடையும் இவரால் பாடப் பெற்றவை. இவற்றுள் திருமுரு காற்றுப்படை பன்னிரு திருமுறைகளுள் பதினேராந் திரு முறையில் ஒன்ருகச் சேர்க்கப்பட்டிருப்பதாலும் அதனைப்

பாடியவர் நக்கீர தேவ நாயனார் என்றிருப்பதாலும் சங்க கால நக்கீரர் இதனைப் பாடவில்லை என்பர். பதினோராந் திருமுறையில் உள்ள பிற பிரபந்தங்கள் சொல்வழக்கு, பொருளமைதி, வரலாற்று நிகழ்ச்சி முதலியவற்றில் திருமுருகாற்றுப் படையோடு முற்றிலும் வேறுபடுவதால் இக் கருத்து ஏற்புடையதன்று.

அடிநூல் என்ற செய்யுளிலக்கணமொன்றும் நாலடி நாற்பது என்ற நூலொன்றும் நக்கீரர் இயற்றியனவாக யாப்பருங்கல விருத்தியுரை கூறுகின்றது. இந் நூல்களைப் பாடியவர் சங்க கால நக்கீரரா? பிற்காலத்தவரா? என்பது ஆய்விற்குரியது.

நக்கீரர் கரிகாற்சோழனைக் குறித்தும் பாடியிருத்தலால் இவர் காலம் கி.பி. முதலாம் நூற்றாண்டு என்று கருது கின்றனர். அகநானூறு 120 ஆம் பாடலில் மாலைக் காலத்தில் கொக்குகள் வானத்தில் வரிசையாகப் பறந்து செல்லும் அழகை முருகன் மார்பிலிருக்கும் ஆரத்திற்கு ஒப்புமை கூறியிருத்தலாலும், புறநானூறு 56 ஆம் பாட்டில் முருகனை 'முன்னியது முடிக்கும் திறலோன்' என்று குறிப் பிட்டிருப்பதாலும் இவர் முருகனிடத்தில் மிகுந்த பற்றுக் கொண்டவரென்று தெரிகின்றது.

அகநானூறு 141 ஆம் பாடலில் கார்த்திகை விழாவை இவர் விரித்துக் கூறியுள்ளார்.

**நூல்:** பத்துப் பாட்டில் திருமுருகாற்றுப் படை, நெடுநல் வாடை: அகம் 36, 57, 78, 93, 120, 126, 141, 205, 227, 249, 253, 290, 310, 340, 346, 369, 389; நற்றிணை 31, 86, 197, 258, 340, 358, 367; குறுந்தொகை 78, 105, 131, 143, 161, 266, 280, 368; புறம் 56, 189, 395. திருவள்ளுவமாலை "தானே முழுதுணர்ந்து" எனத் தொடங்கும் வெண்பா.

**திருமுருகாற்றுப்படை:** இது பத்துப்பாட்டில் முதலில் அமைந்த ஆற்றுப்படை; 317 அடிகளால் அமைந்த ஆசிரியப்பா. இதனைப் புலவராற்றுப் படை என்று நச்சினார்க்

கினியர் கூறுவர். பிற ஆற்றுப்படைகளெல்லாம் வழிகாட்டப் படுகின்றவனது குடிப்பெயரால் பெயர் பெறும். ஆனால் இவ்வாற்றுப்படை புரவலன் பெயராலேயே முருகாற்றுப் படை எனப் பெயர் பெறுகின்றது. இவ்வாற்றுப் படையில் முருகன் தலமாகிய ஆறுபடை வீடுகளின் சிறப்புக் கூறப் படுகின்றது. தமிழ்நாட்டில் வழங்கிய பலவகை வழிபாடுகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**நெடுநல்வாடை:** இது பத்துப்பாட்டில் ஏழாவது பாட் டாகும்; 188 அடிகளால் அமைந்த ஆசிரியப்பா. இப் பாட்டின் தலைவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்.

பகைமேற் சென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பிரிந்து வருந்துந் தலைவிக்கு அவ்வருத்தந் தீரும்படி அவன் பகையை வென்று விரைவில் வருவானாக என்று கொற்றவையைப் பரவுவாள் கூறியதாக இப்பாடல் அமைந்துள்ளது. தலைவனைப் பிரிந்து வருந்துந் தலைவிக்கு ஒருபொழுது ஒரூழிபோல நெடி தாகிய வாடையாகவும் போகத்தில் மனமற்று வேற்றுப் புலத்திலிருக்கும் அரசனுக்கு இது நல்லதாகிய வாடை யாகவும் இருத்தல் பற்றி நெடுநல்வாடை எனப் பெயர் பெற்றது.

இஃது அகப்பாடலே. அகப் பொருளுக்கேற்ற செய்திகளைத் தன்பாற் கொண்டுள்ளதேனும் 'வேம்புதலை யாத்த நோன் காழ் எஃகம்' எனப் பாண்டியனது அடையாளப் பூவாகிய வேம்பு கூறப்பட்டமையின் புறத்திணையாயிற்றென்பர் நச்சினார்க்கினியர். இப்பாட்டில் பூமலர்வதனால் பொழுதை யறியும் வழக்கமும் மகளிர் மாலைக் காலத்தைக் கொண்டாடும் செயலும் மனை வகுக்கும் முறையும் வேலுக்கு அடையாளப் பூவை அணியும மரபும் அறியப்படுகின்றன.

## நக்கீரர் - 2 (          )

இவர் நக்கீர தேவநாயனார் எனப்படுவர். இவர் இயற்றிய ஒன்பது நூல்கள் பதினோராந் திருமுறையில் சேர்க்கப் பட்டுள்ளன.

**நூல்:** கைலைபாதி காளத்திபாதி அந்தாதி, திருஈங்கோய் மலை எழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழு கூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப்பிரசாதம், கார் எட்டு, போற்றித் திருக்கலிவெண்பா, திருக்கண்ணப்ப தேவர் திருமறம்.

கைலைபாதி காளத்திபாதி அந்தாதி 100 செய்யுட்களைக் கொண்டது; வெண்பா அந்தாதி; பதினோராந் திருமுறையில் ஒன்பதாம் நூல்.

காரெட்டு எட்டுச் செய்யுட்களைக் கொண்டது. பதினோராந் திருமுறையில் பதினைந்தாம் நூல்.

## நச்சர் (        )

இவர் திருக்குறள் உரையாசிரியர் பதின்மருள் ஒருவர். சிலர் நச்சர் என்பவர் நச்சினார்க்கினியர் என்று கருது கின்றனர். ஆனால் நச்சர் நச்சினார்க்கினியர் என்பதற்குப் போதிய சான்றுகள் இல்லை. நச்சினார்க்கினியரைப் பற்றிய சிறப்புப்பாயிரம் அவர் திருக்குறளுக்கு உரை இயற்றிய தாய்க் குறிப்பிடவில்லை. ஆதலின் இந்நச்சர், நச்சினார்க் கினியரின் வேறானவர்.

## நச்சினார்க்கினியர் (14-நூ)

**ஊர்:** மதுரை.

இவர் பரத்துவாசகோத்திரத்தில் பிறந்தவர். இவர் பெயர் சிவபெருமானுக்குரிய பெயர். "நச்சுவார்க் கினியர் போலும் நாகவீச்சுரவனாரே" (திருநா. தேவாரம்) எனவும் "நச்சினார்க்கினியாய் போற்றி" (காஞ்சிப்புராணம்) எனவும் வந்திருத்தலால் உணரலாம்.

இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பது இவருடைய உரையால் உணரக் கிடக்கின்றது. சைவ சமயத்தைச் சார்ந்த இவர் சமண நூலாகிய சீவகசிந்தாமணிக்கு உரை எழுதியிருப்பதும் அந்நூலில் வரும் அச்சமய மரபுகளை அம் மதத்தவர் போலத் தெளிந்து விளக்கியிருத்தலும் இவருடைய சமரச மனப்பான்மையை விளக்கும்.

திருமுருகாற்றுப்படையுரையில் (106ஆம் அடி) பரி மேலழகர் கொள்கையை மறுத்து, 'வசிந்து' என்பதற்குப் பொருள் கூறியிருத்தலால் இவர் பதின்மூன்றும் நூற்றாண்டில் வாழ்ந்த பரிமேலழகர்க்குப் பிற்பட்டவர் என்பது தெளியப் படும்.

இவர் தமிழ் மொழியிலுள்ள பல நூல்களை ஆழ்ந்து பயின்று பெரும்புலமை எய்தியவர் என்பதும் இலக்கண இலக்கியங்களேயன்றி ஏனைய கலைகளிலும் நிரம்பிய அறிவு பெற்றவரென்பதும் வடமொழி யறிவும் வாய்க்கப்பெற்றவ ரென்பதும் இவருடைய உரையால் புலனாகின்றன. இவர் நூல் எதுவும் இயற்றவில்லை. ஆயினும் பண்டைத் தமிழ் நூல்களுக்கு உரை காண்பதிலேயே தம் வாழ்நாளைக் கழித்த பெருமையுடையவர்.

இவர், தம் உரையில் தெளிவும் விளக்கமும் அமைய எழுதிச் செல்வார். தேவையான இடங்களில் இலக்கணங் கூறி வினைமுடிபுகளை விளக்குவார்; சிறந்த மேற்கோள்களைக் காட்டுவார். ஆனால் மேற்கோளுக்குரிய இடஞ் சுட்டுவது இல்லை. பத்துப்பாட்டு போன்ற மிக நெடிய பாடலாயினும் வினைமுடிபு காட்டுதல் இவருடைய வழக்கம். 'மாட்டு' என்ற பெயரால் நச்சினார்க்கினியர் செய்யுட்களையெல்லாம் கலைத்து, அடிகளை மாற்றிச் சொற்களைப் பிரித்து, முன் பின்னாகக் கூட்டி வலிந்து பொருள் கொண்டு தம் கருத்தைப் பாட்டில் திணித்து விடுகின்றார். இலக்கண நூற்பாக்களுக்கு உரை எழுதும்போதும் இவர் இம்முறையை மேற்கொள் கின்றார். "மருவின் தொகுதி" (தொல் எழுத்து 111) என்று தொடங்கும் நூற்பா முதலியவற்றின் உரைகளால் இவர் தம் கருத்திற்கேற்பச் சொற்களைக் கொண்டு கூட்டும் இயல்பினர் என்பது புலப்படும். இவர் தமது உரையில் எண்பதுக்கு மேற்பட்ட நூல்களிலிருந்து மேற்கோள் காட்டி யிருத்தலால் இவருடைய நினைவாற்றலையும் பரந்த புலமையையும் உணரலாம். இவர் பழம் பாடல்களையும் அவற்றின் கருத்துக்களையும் உரைநடையாக எழுதும் இயல்பினர். சொல் நயங்களை விளக்குவதில் இவர் தலை

சிறந்தவர் என்பது சிந்தாமணியில் வரும் "கரும்பே தேனே" (2453) என்று தொடங்கும் பாடலுரையால் உணரப்படும். பதப்பொருள் விளக்கஞ் செய்வதிலும் இவர் சிறந்தவர். இதனால் இவர் "உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர்" என்று புகழப்படுகின்றார்.

**நூல் உரைகள்:** தொல்காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை, குறுந்தொகையில் இருபது பாடல்கள், சீவக சிந்தாமணி.

## நச்சுமனார் ( )

**நூல்:** திருவள்ளுவமாலையில் "எழுத்தசை சீரடி" எனத் தொடங்கும் பாடல்.

## நஞ்சப்ப செட்டியார் (19-நூ)

**நூல்:** தே. ர. அரங்கநாதக் கவிராயர் என்பவர் இயற்றிய 'அருச்சுனன் தீர்த்தயாத்திரை' என்ற நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## நஞ்சப்ப பிள்ளை (19-நூ)

**நூல்:** சிவத்தியான கீர்த்தனை, (1886)

இந்நூல் சிவனை நோக்கி வீண்காலம் போக்காது சிவத்தியானம் செய்யுமாறு அறிவுறுத்துவது; 30 செய்யுட்கள்.

## நஞ்சயப் புலவர் - 1 (20-நூ)

**ஊர்:** கவந்தபாடிப் புதூர்.

இவர் குருடர்.

பிரபந்தங்கள் பல பாடியவர்.

## நஞ்சயப் புலவர் - 2 (20-நூ)

**ஊர்:** திங்களூர்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## நஞ்சீயர் (      )

**சி.பெ.** வேதாந்தி.

இவர் பட்டருடைய மாணுக்கர்; நம்பிள்ளையின் ஆசிரியர். கல்வியாலும் செல்வத்தாலும் நிறைவுற்று வீறுற்றிருந்த பொழுது பட்டரால் திருத்திப் பணி கொள்ளப்பட்டார். பின்னர்த் துறவறத்தை மேற்கொண்டதனுல் 'சீயர்' என்றும் பட்டரால் நம்முடைய சீயர் என்று அழைக்கப் பெற்றமையால் 'நஞ்சீயர்' என்றும் அழைக்கப் பெற்ருர்.

**நூல்:** திருவாய் மொழிக்கு ஒன்பதினுயிரப்படி, திருப்பாவைக்கு ஈராயிரப்படி, திருவந்தாதிகள், கண்ணி நுண் சிறுத்தாம்பு, திருப்பல்லாண்டு இவற்றிற்கு வியாக்கினம், இரகசியத் திரய வியாக்கியானமாக நூற்றெட்டுச் சரணுகதி கத்தியவியாக்கியானம்.

## நஞ்சுண்ட மூர்த்தி சாமிகள் (      )

**வாழ்விடம்:** சீரங்கப்பட்டணம்.

**நூல்:** சிவானந்த போதம், பதிகங்கள்.

இந்நூல் மயில் பாடற் கண்ணிகள், கீர்த்தனைகள் என்ற நூல்களுடன் சேர்த்துப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது; உரைநடையுஞ் செய்யுளுமாக அமைந்தது.

**பதிகங்கள்:** இந்நூலில் செல்வராயர் பதிகம், தசரதராசமாலை, சீரங்க நாயகர் பதிகம், மீனுட்சியம்மன் பதிகம், சுப்பிரமணியர் பதிகம் என்பன உள; 80 செய்யுட்கள்.

## நட்டாற்றியார் (      )

**நூல்:** முத்துறைமுப்பத்தாறு (1888).

இந்நூல் நீதித்துறைகள் முப்பத்தாறினைக் குறித்து மூன்று வகைக் கவிகளாலான நூல். ஆத்திகச் சிறப்பு, அநாத்திக மறுப்பு முதலிய முப்பத்தாறு துறைகள் உள. கிருட்டினமாச்சாரியார் என்பவர் இதற்கு உரை எழுதியுள்ளார்.

## நடராச ஐயர் (19-நூ)

**ஊர்:** சேலம்.

**நூல்:** தே. ர. அரங்கநாதக் கவிராயர் என்பவர் இயற்றிய 'அருச்சுனன் தீர்த்தயாத்திரை' என்ற நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## நடராச ஐயர், செ. (20-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம் இணுவில்.

**வாழ்ந்த காலம்:** கி.பி. 1844 — 1905.

இவர் நல்லூர் ஆறுமுக நாவலரிடத்தில் இலக்கண இலக்கியங்களையும் சித்தாந்த சாத்திரங்களையும் பயின்றவர்; வடமொழியிலும் புலமை பெற்றவர். சோதிடம், மந்திரம், மருத்துவம் ஆகியவற்றிலும் இவருக்கு நல்ல பயிற்சி உண்டு. சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கு ஞானப்பிரகாசர் எழுதிய உரையினை இவர் பதிப்பித்துள்ளார்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## நடராச ஐயர், வி. (20-நூ)

**ஊர்:** மருதூர்.

**தந்தை:** வேங்கடராம ஐயர்.

இவர் திருச்சி எஸ்.பி.சி. கல்லூரியில் கல்வி பயின்று பி.ஏ. தேர்வில் தமிழில் முதல் நிலையாகத் தேறினர். 1895-ஆம் ஆண்டில் "லோகோபகாரி" என்னும் பெயருடன் பத்திரிகை ஒன்றைத் திங்களுக்கு மும்முறையாக வெளியிட்டார். 1897-ஆம் ஆண்டில் அதனை வாரப் பத்திரிகையாக வெளியிட்டார். இவருடைய பத்திரிகையில் வேதாந்தச் செய்திகளும் உலகச் செய்திகளும் இடம் பெற்றன. 1897-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் முதற்கொண்டு "ஞான சந்திரிகா" என்ற திங்கள் வெளியீட்டையும் வெளியிட்டு வந்தார். 1901-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் முதல் இந்தியன் நியூஸ் என்னும் பெயரோடு ஆங்கிலத்தில் கிழமை

இதழ் ஒன்றையும் வெளியிட்டார். இவர் சிறந்த பத்திரிகை ஆசிரியராகவும் ஞானசிரியராகவும் நூலாசிரியராகவும் விளங்கினர். இவர் 12—1—1908-இல் காலமானர்.

**நூல்:** ஞானத்திரட்டு முதற்பாகம், இரண்டாம் பாகம், ஞானபூஷணி (1896) ஞானதரிசனி (1898) தத்துவதரிசனி (1899) ஞானலோசனி (1900) நீதிமாலினி, (1901) இலலிதாங்கி, சலசாட்சி (1902) தேவி சந்திர பிரபா (1902) சோதிஷ்மதி, நிர்மலா, ஆநந்தமகிளா (1903) ஹேமாம்பரி (1904) சரசுவதி (1905) கௌரி (1906) ஞானரஞ்சனி (1907).

ஞானத்திரட்டு முதற்பாகமும் இரண்டாம் பாகமும் விவேகாநந்த அடிகளாரின் சொற்பொழிவுகளின் தமிழாக்கமாகும். ஞானபூஷணி என்னும் நூல் ஓர் அரசகுமாரியின் கதையைக் கூறுவது. இதில் தெய்வபக்தி, பெண்கல்வி முதலியன நன்கு விளக்கப் பெற்றுள்ளன. இக்கதையில் ஆங்காங்குச் சில துணைக்கதைகள் உள்ளன.

## நடராச ஐயர் (20-நூ)

**ஊர்:** தென்பிரம்பூர்.

**நூல்:** 'வேளாள சூளாமணி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'வேளாள சூளாமணி' என்னும் நூல் சாமிநாதப்பிள்ளை, சி. வ. என்பவரால் இயற்றப்பெற்றது.

## நட்ராசக் கவிராயர் (19-நூ)

**வே.பெ.** நடராசபிள்ளை.

**ஊர்:** சேந்தன்குடி.

**நூல்:** வடிவுடையம்மன் பிள்ளைத்தமிழ்.

## நடராசக் கவிராயர் வி. (19-நூ)

**நூல்:** வைரவன் கோயில் புராணம் (1895).

இந்நூல் பல படலங்களையுடையது; 1152 செய்யுட்கள்.

## நடராசச் செட்டியார் (20-நூ)

**ஊர்:** சிதம்பரம்.

**தந்தை:** இராமசாமிச் செட்டியார்.

**நூல்:** பாண்டிய நாயகம் சுப்பிரமணியக் கடவுள் மீது பதிகங்கள்.

## நடராச பிள்ளை - 1 (19-நூ)

**ஊர்:** நாகப்பட்டினம்.

**நூல்:** 'மும்மணிமாலை' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'மும்மணிமாலை' மதுரைப் பிள்ளை என்பவர் மீது செய்யப்ப முதலியார், த. என்பவரால் இயற்றப்பெற்றது.

## நடராச பிள்ளை - 2 (20-நூ)

**ஊர்:** பேரூர்.

**நூல்:** பேரூர் நான்மணிமாலை.

## நடராசர் (17-நூ)

**ஊர்:** தென்னார்க்காடு மாவட்டம், கீரனூர்.

**தந்தை:** சேவடிநாதன்.

இவருடைய தந்தை நடராசனுக்கு வடமொழியையும் தென் மொழியையும் நன்கு கற்பித்தார். சோதிட நூலையும் நன்கு கற்க வேண்டும் என்னும் எண்ணம் நடராசருக்கு உண்டாகியது. அந்நாளில் திட்டகுடியில் சோதிடப் புலமையில் சிறந்து விளங்கிய திருமலை ஐயங்கார், நாராயண ஐயங்கார் என்பவர்களிடம் சோதிட நூல்களை நன்கு கற்றுப் புலமை எய்தினர். கீழ்முத்தூர் நாராயண ஐயர் என்பவ ரிடத்திலும் சோதிட நூல்களைக் கற்றுத் தெளிந்தார்.

**நூல்:** சோதிடாலங்காரம்.

இந்நூல் 1415 விருத்தப்பாக்களாலாகியது; 1665-இல் அரங்கேற்றப் பெற்றது. இந்நூல் தமிழ் நாட்டிலுள்ள சோதிடர்களுக்குப் பெரிதும் பயன்படுகின்றது.

நடராசன் (        )

**நூல்:** இரிபு கீதை. இது வேதாந்த நூல். இஃது இரிபு என்னும் முனிவரால் நிதாகர் என்னும் முனிவருக்கு உப தேசிக்கப் பெற்றது. இவர் இரிபு கீதையைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

நடராசன், வி. சூ. (20-நூ)

**ஊர்:** சென்னை.

**தந்தை:** பரிதிமாற்கலைஞன் என்னும் சூரியநாராயண சாத்திரியார்.

**வாழ்ந்த காலம்:** 13—7—1899 — 31—10—1953.

இவர் 1917-ஆம் ஆண்டில் மதுரையில் எஸ்.எஸ்.எல்.சி., தேர்வை முடித்தார்; தமிழில் புலமை பெற்றிருந்தபடியால் உசிலம்பட்டி மாவட்டக்கழக உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினர். தமிழ்ப் பேராசிரியரான கோபாலகிருட்டின ஐயர் நடத்திவந்த விவேகோதயம் என்னும் பத்திரிகைக்குக் கதை, கட்டுரை, கவிதை முதலியன எழுதிவந்தார். இவருடைய தந்தையாருக்கிருந்த தமிழ்ப் பற்றும் தமிழறிவும் இவரிடத்திலும் நன்கு அமைந்திருந்தன. இவர் சுகாதார அலுவலராகப் பணியாற்றிய போதும் ஓல்லும் வகையால் செல்லுமிடங்களிலெல்லாம் தமிழ்ப் பணியைச் செய்து கொண்டேயிருந்தார். இவர் மொழி பெயர்ப்புகள் செய்வதிலும் கதைகள் கட்டுரைகள் எழுது வதிலும் வல்லவராக விளங்கினர். இவர் தமிழ் அகர வரிசை நூல் ஒன்றைப் பெரிதாக எழுதி முடிப்பதற்குத் திட்டமிட்டு அவ்வேலையயுஞ் செய்து கொண்டிருந்தார். ஆனல் அவ்வேலை முடிவுபெறவில்லை.

**நூல்:** கதைப் பூங்கொத்து, பைசா நாடகம், கதம்பம், காதற் கள்வன்.

**நடன கோபால நாயகியார் (19-நூ)**

**நூல்:** நடன கோபால சங்கீர்த்தனம் (1887).

இந்நூல் கண்ணன்மேல் காதற்கொண்ட ஆண்டாளைப் போல மனம் உருகிப் பாடிய கீர்த்தனைகளின் தொகுதி; 265 கண்ணிகளும் வேறுபல இசைக்கீர்த்தனைகளும் உள்ளன.

**நடுவிலாழ்வான்பிள்ளை (       )**

**நூல்:** முமுட்சு, சேதநானு சந்தானம்.

**நடேச அடிகள் (ஈசானியமடம்) (19-நூ)**

**நூல்:** ஆத்மானந்த அடிகள் இயற்றிய ஆத்மானந்த விளக்கம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

**நடேச சர்மா, இ. கே. (20-நூ)**

**ஊர்:** திருநெல்வேலிமாவட்டம் இடையாற்று மங்கலம்.

**பிறப்பு:** 28—11—1896.

இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பயின்று எம்.ஏ. பி.ஓ.எல். பட்டம் பெற்றவர். இலயோலாக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றியவர்.

**நூல்:** பாரியூர் காளியம்மன் ஆற்றுப்படை, முத்திரா ராட்சசம் (மொழிபெயர்ப்பு) காதம்பரி (மொழிபெயர்ப்பு) சமாதி யோகம் (மொழிபெயர்ப்பு).

**நடேச சாத்திரி (20-நூ)**

**வாழ்விடம்:** திருச்சி.

**தந்தை:** மகாலிங்க ஐயர்; **தாய்:** அகிலாண்டேசுவரி.

**வாழ்ந்த காலம்:** கி. பி. 1859 — 1906.

இவர் பண்டித நடேச சாத்திரியார் என்று அழைக்கப் பெற்றார். மெட்ரிகுலேசன் வகுப்பில் தேர்வு பெற்ற பிறகு

கும்பகோணம் கல்லூரியில் சேர்ந்து படித்தார். பின்னர் சென்னை மாநிலக் கல்லூரியில் சேர்ந்து படித்து பி.ஏ., பட்டம் பெற்றார். தஞ்சாவூர் மாவட்டத்தில் நாகலட்சுமி என்ற அம்மையாரை மணந்து கொண்டார். 1881-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் இந்திய சாசன சிற்ப ஆராய்ச்சித் துறையில் பணிபுரியத் தொடங்கினார். வட மொழிப் புலமையால் இவரது பதவி உயர்ந்தது. இவர் இப்பதவியில் இருந்த போது தமிழகம் முழுவதிலும், பம்பாய் மாநிலத்தின் சில பகுதிகளிலும் சுற்றிப் பார்க்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இ. பி. ஹேவல் என்ற துரை யுடன் பல கோயில்களுக்கும் மலைக்குகைகளுக்கும் சென்று கல்வெட்டு முறிகளை ஆராய்ந்தார். இவருக்கு பதினெட்டு மொழிகள் தெரியும். துரை அவர்கள் இதனை மேலதி காரிகளுக்கு எழுதி இவருக்குப் பண்டிதர் என்ற சிறப்புப் பட்டம் கிடைக்கச் செய்தார். இவர் மைசூர் அரசாங்கச் சாஸன சிற்ப ஆராய்ச்சிப் பிரிவில் இரண்டு ஆண்டுகள் அலுவல் புரிந்துள்ளார். 1888-ஆம் ஆண்டில் உதக மண்டலத்தில் சிறைகளின் கண்காணிப்பாளர் அலுவலகத்தில் தலைமை எழுத்தர்ளராக அலுவல் பார்க்கத் தொடங்கினார். இவருடைய மேலாளர் ஏ.ஜி. கார்டியூ ஆதரவால் இவர் அரசாங்கச் செயலகத்திற்கு மாற்றப்பட்டார். 1900-ஆம் ஆண்டில் பதிவுப் பிரிவிற்கு மாற்றப்பட்டார். அங்குப் படிப்படியாக உயர்ந்து பதிவுப் பிரிவுப் பொதுக் கண்காணிப் பாளர் அலுவலகத்தின் மேலாளராகப் பொறுப்பேற்றார். 1906-ஆம் ஆண்டு வரையில் இந்த அலுவலை மேற்கொண்டார். இப்பணிகளோடு இவர் நூல் எழுதும் பணியையும் இடை விடாமல் செய்து வந்தார். இளமைக் காலத்தில் பாட்டி மார்கள் கதைகளைக் கேட்கும் வாய்ப்பு ஏற்பட்டதால் இவருக்கு நூல் எழுதும் பழக்கம் ஏற்பட்டது. திருவல்லிக் கேணி பார்த்தசாரதி கோயில் திருவிழாவில் அதிர்வெடியின் பேரொலியைக் கேட்டு மிரண்டு ஓடிய ஒரு குதிரை இவரைக் கீழே தள்ளியதால் இவர் 1906-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 11-ஆம் நாள் காலமானார்.

**நூல்:** 'தீன தயாளு', 'கோமளம் குமரியானது', 'திக்கற்ற இரு குழந்தைகள்', 'மதிகெட்டமனைவி', 'மாமிகொலு விருக்கை', 'தலையணை மந்திரோபதேசம்', 'தானவன்', 'தக்காணத்துப் பூர்வ கதைகள்', 'தக்காணத்து மத்யகாலக் கதைகள்', ஈஸாப் நீதிகதைகள்', 'தூக்குத்தூக்கி', 'நான்கு பக்கிரிகள் கதை', 'குமார சம்பவம்', (மொழிபெயர்ப்பு) 'வேணி சம்மாரம்', 'மிருச்சகடிகை' (மொழிபெயர்ப்பு), 'முத்திரா ராக்ஷஸம்', (மொழி பெயர்ப்பு) 'ஷேக்ஸ்பியர் நாடகக் கதைகள்', 'சிறுவர்களுக்கான கதைகள்', 'சம்ஸ்க்ருத கவிகளின் சரிதைகள்', 'சுகாதாரம்', 'தன்னுயிரைப் போல் மன்னுயிரை நினை', 'பெர்டிடா சரித்திரம்', 'ராஸலிண்டு சரித்திரம்', 'வயோலா சரித்திரம்'.

**வடமொழி நூல்கள்:** 'சாகுந்தல நாடக விமர்சனம்', 'ஹர்ஷ சரித்திர விமர்சனம்', ஆத்ம வித்யா வித்யாவிலாச மொழி பெயர்ப்பு, ரகுவம்சம் மொழிபெயர்ப்பு.

**ஆங்கில நூல்கள்:** இந்து மதவிழாக்கள், திராவிட கால இராக் கதைகள், 'தென்னிந்திய நாட்டுக் கதைகள்', 'அரசனும் நான்கு மந்திரிகளும்', 'சூரியனுடைய கதைகள்', தெனாலிராமன் கதைகள்.

## நடேச தேசிகர் (20-நூ)

**நூல்:** திருநீற்றுப் பெருமை (1909).

## நடேசப் பத்தர் ( )

**நூல்:** நடராச தெரிசன உற்சவ வழி நடைப்பதம் (1894).

இந்நூல் சிதம்பரம் நடராச உற்சவ தரிசனம் காணச் செல்வோர் வழியில் பாடிச் செல்வதாக அமைந்தது.

## நடேசபாத இருதயர் ( )

**நூல்:** ஆத்மபிரகாச தீபிகைக் கண்ணிகள் என்னும் ஞானக் குறத்திக் கண்ணிகள், நடேசர் கீர்த்தனம்.

இவ்விரண்டு நூல்களும் ஒன்றாகச் சேர்த்து பதிப்பிக்கப் பெற்றுள்ளன. முதல் நூல் ஆத்மாவைப் பற்றிச் சிந்திக்கு மாறு அறிவுறுத்துவது; 41 செய்யுட்கள்.

## நடேச பிள்ளை (    )

**ஊர்:** மங்காணம்.

**நூல்:** சாத்திர விசித்திரம்.

## நடேச பிள்ளை, ச. (19-நூ)

**நூல்:** 'திருப்பேரூர் பட்டி விநாயகர் மாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'திருப்பேரூர் புட்டி விநாயகர் மாலை' என்னும் நூல் ஆறுமுகம் பிள்ளை என்பவரால் இயற்றப் பெற்றது.

## நடேசப் பிள்ளை, சு. (20-நூ)

**ஊர்:** தஞ்சை.

**வாழ்விடம்:** இலங்கை.

இவர் சர். பொன்னம்பலம் இராமநாதன் அவர்களின் மருகர். யாழ்ப்பாணம் பரமேசுவரக் கல்லூரித் தலைவராகவும் கல்லூரித் தலைவராகவும் சர். பொன்னம்பலம் இராமநாதன் அவர்களால் நிறுவப்பட்ட கல்வி நிலையங்களின் மேற் பார்வையாளராகவும் விளங்கினர். இலங்கைப் பாராளு மன்றத்தின் உறுப்பினராகவும் அஞ்சல் தந்தி வானொலி அமைச்சராகவும் திகழ்ந்தார்.

**நூல்:** சகுந்தலை வெண்பா, இலங்கைப் பல்கலைக் கழகம் வெளியிட்ட இலங்கை வரலாற்று ஆங்கில நூலின் சில பகுதிகள், சென்னைத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தினர் வெளி யிட்ட கலைக்களஞ்சியத்தில் சில கட்டுரைகள்.

**சகுந்தலை வெண்பா:** இந்நூலின் கதைப் போக்கு வட மொழியில் காளிதாசர் இயற்றிய சகுந்தலை நாடகத்தைப் பெரும்பாலும் தழுவியது; காப்பியமாதலால் கதை இடையி லிருந்து தொடங்காமல் முதலிலிருந்தே தொடங்குகிறது; நளவெண்பாவைப் போல இந்நூல் காண்டப் பிரிவினது; பிறப்புக் காண்டம், காதற் காண்டம், துன்புறு காண்டம், இன்புறு காண்டம் என்ற நான்கு காண்டங்களில் 343

செய்யுட்களையுடையது. இந்நூலிற்கு அ. சே. சுந்தரராஜ ஐயங்கார் குறிப்புரை எழுதியுள்ளார்.

## நடேச முதலியார் (20-நா)

**ஊர்:** காளத்தி.

**பிறப்பு:** 22—4—1901.

**வாழ்விடம்:** சென்னை.

**நூல்:** இறைவனின் உறைவிடங்கள்.

## நடேச முதலியார் மு, (20-நா)

**ஊர்:** திரிசிரபுரம்.

**தந்தை:** முனிசாமி முதலியார்.

**வாழ்ந்த காலம்:** கி. பி. 30—8—1891 — 13—12—1942.

இவர் மெட்ரிகுலேசன் தேர்வு பெற்றவர்; திருச்சி மாவட்ட நீதிமன்றத்தில் அலுவல் புரிந்த இவர். ஓய்வு நேரத்தில் தமிழ் நூல்களைப் பயின்றார். திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் அடிகளிடம் அவ்வப்போது சென்று தமிழ் நூல்களைப் பாடங்கேட்டார். பின்னர் 1919-ஆம் ஆண்டில் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணி ஏற்றார். உறையூர் வெஸ்லி கிறித்தவ சங்கப் பள்ளியிலும் சில சமயங்களில் பாடங் கற்பித்தார். 1927-ஆம் ஆண்டில் திருச்சி செயின் சோசப் கல்லூரியில் தமிழாசிரியரானார்; ஹோலி கிராஸ் பெண்கள் பள்ளியிலும் பணியாற்றியுள்ளார். இப்பணிகளுக்கிடையே திருச்சியில் தமிழ்ச் சங்கம் ஒன்றை நிறுவினார்; மாணவர்களுக்குத் தமிழ் இலவச வகுப்பு ஒன்று நடத்தினார்; சொற்பொழிவாற்றும் திறனும் எழுத்துவன்மையும் உடையவர்.

**நூல்:** திலகவதியார்; புனிதவதியார்; மேல்நாட்டுப் பேரறிஞர்; சிறுவர் கடமை.

## நடேசன், எம். (19-நூ)

**நூல்:** சாஸ்திர விசித்திரம் (1898).

இந்நூல் உரைநடையில் அமைந்தது. அறிவியல் தொடர் பான சில விநோதச் செய்திகள் படங்களுடன் அமைந் துள்ளன.

## நத்தத்தனார் ( )

இவர் வாழ்ந்த காலம் மற்றும் வரலாறு முதலியன தெரியவில்லை. இவர் பழைய இலக்கண ஆசிரியருள் ஒருவர். "வஞ்சி விரவினு மாசிரிய முரித்தே, வெண்பா விரவினுங் கலிவரைவின்றே' என்றார். பொதுவகையாயினும் நத்தத்தனா ரெனக் கொள்க" என யாப்பருங்கல விருத்தி பழைய உரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. அகத்தியர் மாணவர் பன்னிருவருள் ஒருவரும் இப்பெயர் பெறுவர். திருவள்ளுவ மாலையில் 'அயிராறு முந்நூறு' என்னும் திருவள்ளுவமாலைச் செய்யுள் செய்தவர் பெயர் நத்தத்தனார் எனக் காணப் படுகிறது.

## நந்திக் கலம்பக ஆசிரியர் (9-நூ)

ஆசிரியனின் பெயர் தெரியவில்லை. தெள்ளாறெறிந்த நந்தி ஆண்ட காலம் கி.பி. 825 முதல் 850 வரை ஆகும். இவனுடைய மாற்றாந்தாயின் புதல்வனே நந்திக் கலம்பகம் செய்த ஆசிரியனாவன். ஆதலின் இந்நூல் 9 ஆம் நூற்றாண்டில் தோன்றியதாகும்

நந்தியின் வாழ்வை முடிக்கக் கருதிய இவ்வாசிரியன் அவன் மீது அறம் வைத்துக் கலம்பகம் ஒன்று பாடினான். அதன் பாடல் ஒன்றினை ஒருநாள் இரவு நகர்ச் சோதனையின் போது கேட்ட நந்திவர்மன் அப்பாடலின் சுவையில் தன்னை மறந்து பாடல்கள் அனைத்தையும் பாடுமாறு வற்புறுத்தி னான். அறம் வைத்து அப்பாடல்கள் இயற்றப்பட்டன என்பதறிந்தும் தன் உயிரை இழக்கத் துணிந்து அந்நூலை அரங்கேற்றும் படி செய்தான். இறுதிப்பாடலைச் சிதையி

லிருந்து கேட்ட வண்ணம் உயிர்துறந்தான். "நந்தி, கலம் பகத்தால் மாண்டகதை நாடறியும்" என்னுஞ் சோமேசர் முதுமொழி வெண்பாவும், "கள்ளாருஞ் செஞ்சொற் கலம் பகமே கொண்டு காயம் விட்ட, தெள்ளாறை நந்தி எனுந் தொண்டைமான்" என்னுந் தொண்டைமண்டல சதகமும் இதனை விளக்கும்.

**நந்திக் கலம்பகம்:** இந்நூல் மூன்றும் நந்திவர்மனைப் பற்றி எழுந்த சிறு காப்பியம். இந்நூல் நந்திவர்மனின் தெள்ளா றெறிந்த வெற்றியை 16 பாடல்களில் குறிப்பிடுகிறது, இக் கலம்பகம் தமிழில் உள்ள கலம்பகங்களுள் பழைமையானது இக் கலம்பகத்தில் பலவகைச் செய்யுள் விகற்பங்களும் அகப் பொருள் புறப்பொருள் துறைகளும் கலந்து வருகின்றன. இறுதியாக வெளிவந்த பதிப்பில் 114 பாடல்கள் உள்ளன. இக் கலம்பகத்தின் இறுதியில் பல பாடல்கள் கலம்பக விதிப்படி அந்தாதித் தொடையாக அமையவில்லை. இந் நூலில் மயிலை, கச்சி, மல்லை முதலிய ஊர்களும் கச்சிநாடு, வடவேங்கடநாடு, கங்கநாடு முதலிய நாடுகளும் கடம்பூர், குருக்கோட்டை, தெள்ளாறு, தொண்டி, பழையாறு, வெறியலூர் முதலிய போர்க் களங்களும் பற்றிய குறிப்புக் கள் உள்ளன. ஆதலின் இது வரலாற்றுக்குத் துணை செய்யும் சிறந்ததொரு நூலாகும்.

## நந்தி சிவாக்கிர யோகிகள் (16-நூ)

இவர் சிவாக்கிர யோகிகளின் மாணவராகையால் 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராவர்.

**நூல்:** சிவநெறிப்பிரகாசம் உரை.

சிவநெறிப்பிரகாசம் சிவாக்கிரயோகிகளால் இயற்றப் பெற்றது.

## நந்திதேவர் (        )

**நூல்:** அமிர்தபஞ்சாக்கரம், நந்திதேவர் தாண்டகம், நந்திதேவர் வாதசூத்திரம் 30, தத்துவக்கட்டளை, நந்தி நூல் ரேகை சாஸ்திரம்.

இந்நூல்களுள் நந்திநூல் ரேகை சாஸ்திரம் என்ற நூல் 100 செய்யுட்களைக் கொண்டது. இந்நூற் செய்யுட்கள் கையில் அமைந்துள்ள ரேகைகளின் பயனைக் கூறுவன.

## நந்தீசுவரர் (      )

**நூல்:** நந்தீசுவரர் கைத்தாள சூத்திரம் (5) (8), நந்தீசுவரர் கரகைப்பா 500, நந்திசுவரர் மதிகைப்பா 100, நந்தீசுவரர் பாடல் 8, நந்தீசுவரர் சூத்திரம் 100, நந்தீஸ்வரர் பூஜாவிதி.

## நந்நாகனுர் (      )

இவர் பனிரண்டாம் பரிபாடலுக்கு இசை வகுத்தவர்.

## நப்பசலையார் (சங்க காலம்)

**வே. பெ:** காமக்கணிப் பசலையார்.

**ஊர்:** மதுரை.

பசலையார் என்ற பெயர் பசலை என்ற நோயின் இயல்பைப் பாடிய காரணத்தால் பெற்ற பெயரென்று கருதப்படுவதாயினும் இவர் பாடிய நற்றிணைப் பாடலில் (243) அக் குறிப்புக் காணப்படவில்லை. பசலையார் என்ற பெயரை அக்கால மகளிர் பலரும் வைத்துக் கொண்டிருந்தது போலவே காமக்கணி என்ற பெயரையும் அக்கால மகளிர் பலர் கொண்டிருந்தனர். இதற்கு வெறிபாடிய காமக்கண்ணியார் என்ற பெயரே சான்ருகும். இம்மரபிற்கேற்ப இவரும் காமக்கணிப் பசலையார் என்ற பெயரைக் கொண்டு விளங்கினுர் எனலாம். இவர் பெயர் மதுரைக் காமக்கணி நப்பசலையார் என்றும் வழங்கியது.

**நூல்:** நற்றிணை 243.

## நப்பண்ணனுர் (சங்ககாலம்)

**இ.பெ:** பண்ணன்.

இவர் பரியாடல் பாடிய புலவர்களுள் ஒருவர். இவர் தம் பெரும் புலமையால் சிறப்புணர்த்தும் நகர இடைச்

சொல்லையும் உயர்வுணர்த்தும் 'ஆர்' விருதியையும் பெற்று நப்பண்ணனார் என்று அழைக்கப்பெற்றார்.

**நூல்:** பரிபாடல் 19.

இப்பாட்டு செவ்வேளைப் பற்றியது. இப்பாடற்கண் திருப்பரங்குன்றத்தே நிகழும் திருவிழாக் காட்சிகளும் அவ் விழாக் காணச் செல்லும் மக்களின் மனநிலையும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. கூடல் நகரும் பாண்டியனும் சிறப்பிக்கப் பெற்றுள்ளனர்.

## நப்பாலத்தனார் (சங்ககாலம்)

**இ. பெ:** பாலத்தன்.

இவர் பெயர் பாலத்தனார் என்றும் காணப்படுகின்றது. யாப்பருங்கல மேற்கோளுள் நப்பாலத்தனார் சூத்திரமெனச் சில சூத்திரங்கள் காட்டப் படுதலின் இவர் யாப்பிலக்கண மொன்று செய்துள்ளாரென்றும் கருதப் படுகின்றது. திரு வள்ளுவமாலை 47 ஆம் செய்யுள் இவர் பெயரில் காணப்படு கின்றது. இருவரும் ஒருவரா வேறா என்பது ஆய்விற்குரியது. இவர் பாடிய நற்றிணைப் பாடலில் (452) வல்வில்லோரியைப் பாராட்டிக் கூறியுள்ளார்.

**நூல்:** நற்றிணை. 52, 240.

## நம்பி (15-நூ)

**ஊர்:** திருக்குறுங்குடி.

**நூல்:** வல்லம் காளத்தி முதலியாரைப் பாடிய தமிழ்ப் பாடல்.

## நம்பி ஐயங்கார் (19-நூ)

**நூல்:** 'இசைப்பாடல் நூல்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'இசைப்பாடல் நூல்' கந்தசாமிப் பிள்ளை, இ. என்பவரால் இயற்றப் பெற்றது.

## நம்பிகாட நம்பி (11-நூ)

இவர் திருவிசைப்பா பாடியவருள் ஒருவர்; பூந்துருத்தியில் வாழ்ந்த ஆதி சைவராவர். இவர் ஆத்திரேய கோத்திரத் தாராய் முதல் இராசராசன் காலத்தில் வாழ்ந்தவர்.

## நம்பிகாளி (12-நூ)

**ஊர்:** தொண்டை நாட்டுச் செங்கற்பட்டு மாவட்டத்தி லுள்ள வல்லை; யாதவர்.

இவர் ஒட்டக் கூத்தர் காலத்தில் விளங்கியவர். "கற்கும் கவிவல்ல யாதவர்கோன் நம்பி காளிக்கு யாம் விற்கும் பரிசமைாகி விட்டோம்" என்று நெற்குன்ற வாணர் பாடி யிருக்கும் பாட்டால், நம்பி காளியைப் பற்றி அறிய முடிகின்றது. நெற்குன்றவாணர் இப்புலவரின் புலமையைக் கண்டு வியந்து தம்மை இவருக்கு அடிமையாக்கி விட்டதாக அப்பாட்டில் கூறுகின்றார்.

நம்பி காளி ஒட்டக் கூத்தருடன் இணைத்துக் கூறப்படும் பெரும் புலவராக விளங்கினாரென்பதைக் "கம்பனென்றும் கும்பனென்றும்" எனவரும் தனிப்பாடலில் "காளி ஒட்டக் கூத்தன்" என வருவதால் அறியலாம். இவர் கொங்கு மண்டலத்தில் உள்ள நெடுவூரில் பட்டமரம் தழைக்கப் பாடினார் என்று கூறப்படுவதால், வாக்குப்பலிதம் உள்ளவர் என்பது புலனாகின்றது.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## நம்பிகுட்டுவன் (சங்க காலம்)

சேரர்கள் குட்ட நாட்டை ஆட்சி புரிந்தமையின் குட்டுவ ரெனப்பட்டனர். ஆதலின் இப்புலவர் சேரமரபினராவர். இவர் இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. நம்பி ஆடவரிற் சிறந்தவன். எனவே இவர் பெற்றுள்ள அடை மொழி இவரது அழகைப் புலப்படுத்தும்.

**நூல்:** குறுந்தொகை 109, 243; நற் 145, 236, 345.

## நம்பிநாயுடு (          )

**நூல்:** பாசுரப்படி இராமாயணம், மோட்ச சூக்குமம் என்னும் விட்டுணு தோத்திர நாமாவளி.

## நம்பியாண்டார் நம்பி (11-நூ)

**ஊர்:** தென்னார்க்காடு மாவட்டம், திருநாரையூர்.

இவர் ஆதிசைவர் குலத்தில் பிறந்தவர். இவர் தந்தை திருநாரையூரில் கோயில் கொண்ட பொல்லாப்பிள்ளை யாரை வழிபட்டுவந்தார். இவர் தந்தையார் வெளியூருக்குச் சென்ற போது இவர் பிள்ளையாரை வழிபடச் சென்றார். தம் தந்தையார் கொண்டு செல்லும் உணவினைப் பிள்ளையார் உண்பது வழக்கம் என எண்ணியிருந்த இவர், தாம் கொண்டு சென்ற உணவையும் உண்பார் என எதிர்பார்த்தார். பிள்ளையார் உண்ணவில்லை. உண்ணாமைக்குக் காரணம் தம் வழிபாட்டில் உள்ள தவறு என்று எண்ணித் தம் தலையைக் கல்லில் மோதிக் கொள்ளச் சென்றார். உடனே பிள்ளையார் இவரைத் தடுத்துத் தம் துதிக்கையால் உணவை எடுத்துண்டார். பொல்லாப் பிள்ளையாரிடமே இவர் கல்வி கற்றுத் தேர்ந்தார்.

இவர் சோழ நாட்டை ஆண்ட இராசராசன் வேண்டு கோளின்படி பொல்லாப் பிள்ளையார் அருளால் மூவர் தேவாரப் பதிக ஏடுகள் சிதம்பரத் திருக்கோயிலில் இருப்ப தறிந்து அவற்றை எடுத்துத் திருமுறைகளாக வகுத்தார்.

சம்பந்தர் அருளிய தேவாரப் பாக்களை முதல் மூன்று திருமுறைகளாகவும், அப்பர் அருளிய தேவாரப் பாக்களை 4, 5, 6–ஆம் திருமுறைகளாகவும், சுந்தரர் அருளிய தேவாரப் பாக்களை ஏழாந் திருமுறையாகவும், மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம் திருக்கோவையார் இரண்டையும் எட்டாந் திருமுறையாகவும் திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த் தேவர், கண்டராதித்தர், வேணாட் டடிகள், திருவாலியமுதனார், பூந்துருத்தி காடவ நம்பி, புருடோத்தம நம்பி, சேதிராயர் என்னும் ஒன்பதின்மரும்

இயற்றிய திருவிசைப்பாத் திருப்பதிகங்களையும் சேந்தனர் அருளிய திருப்பல்லாண்டையும் ஒன்பதாந் திருமுறையாக வும் திருமூலர் அருளிய திருமந்திரத்தைப் பத்தாந் திரு முறையாகவும் திருவாலவாயுடையார் திருமுகப்பாசுரம் முதலாகத் தாம் அருளிய திருநாவுக்கரசுதேவர் திருஏகாதச மாலை இறுதியாக அமைந்த நூல்கள் நாற்பதையும் பதி னோராந் திருமுறையாகவும் வகுத்தார். பதினோராந் திரு முறைவரை முதல் இராசராசன் காலத்தே தொகுக்கப் பெற்றன என்பது பலருடைய கருத்து. பேராசிரியர் க. வெள்ளைவாரணனர், சதாசிவப் பண்டாரத்தார் ஆகிய இருவரும் முதலாம் காலத்தே திருமுறைகள் தொகுக்கப் பெற்றன என்பர். சிலர் ஆதித்த கரிகாலன் காலத்தே (இரண்டாம் கரிகாலன்) திருமுறைகள் தொகுக்கப் பெற்றன என்பர்.

**நூல்:** திருநாரையூர் விநாயகர் இரட்டை மணிமாலை, கோயில் திருப்பண்ணியர் விருத்தம், திருத்தொண்டர் திரு வந்தாதி, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, திருச்சண்பை விருத்தம், திருமும்மணிக் கோவை, திருஉலாமாலை, திருக் கலம்பகம், திருந்தொகை, திருநாவுக்கரசு தேவர் திரு ஏகாதசமாலை.

## நம்பிள்ளை (14-நூ)

**வே. பெ:** வரதராசர்.

**ஊர்:** திருவரங்கத்திற்குத் தெற்கேயுள்ள நம்பூர்.

ஆசாரியரால் திருக்கலிகன்றி தாசர் என்ற பெயர் இடப் பெற்றது. கந்தாடை தோழப்பரால் லோகாசாரியர் என்ற பெயர் இடப் பட்டது. ஆசாரியரான நஞ்சீயர் இவருடைய குணாதிசயங்களைக் கண்டு 'நம்பிள்ளையோ' என்று தழுவிக் கொண்டார். அதுமுதல் நம்பிள்ளை என்ற பெயர் இவருக்கு வழங்கலாயிற்று. இவர் தமிழும் வடமொழியும் நன்கு கற்றுத் தேர்ந்தவர்.

**நூல்:** திருவாய்மொழியுரை ஒன்பதினாயிரப்படி, திருப் பள்ளியெழுச்சியுரை, திருவிருத்தவுரை, பெரிய திருமொழி யுரை, நம்பிள்ளை நாலு வார்த்தை, நம்பிள்ளை இரகசியம்.

## நம்புசாமி ஐயர் - 1 (20-நூ)

**நூல்:** 'காசி மகத்துவம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'காசி மகத்துவம்' என்னும் நூல் நரசிம்மலு நாயுடு. சே.ப. என்பவரால் இயற்றப் பெற்றது.

## நம்புசாமி ஐயர் - 2 (19-நூ)

**ஊர்:** கோயம்புத்தூர் மாவட்டம்.

இவர் சொற்பொழிவாற்றுவதில் வல்லவர். தலப்பயணம் மேற்கொண்டு பல சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார்.

**நூல்:** தனிப்பாடல்.

## நம்பெருமாள் ஐயர் (       )

**நூல்:** 'மனுச் சோழச் சக்கரவர்த்தி வாசகப்பா' என்னும் நூலினைப் பாராட்டிவழங்கிய சிறப்புப்பாயிரம்.

'மனுச்சோழச் சக்கரவர்த்தி வாசகப்பா' என்னும் நூல் நாராயணசாமி நாயுடு, பெ. என்பவரால் இயற்றப் பெற்றது.

## நம்மாழ்வார் (8 அல். 9-நூ)

**வே. பெ:** குருகைப்பிரான், மாறன், சடகோபன், பராங்குசன், காரிமாறன்.

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஆழ்வார் திருநகரி.

**தந்தை:** காரியார். **தாய்:** உடைய நங்கையார்.

இவர் ஆழ்வார் திருநகரியில் வேளாண் குலத்துட் பிறந்து தாய்ப்பாலுண்ணாது வளர்ந்தன ரென்பர். ஆழ்வார்களுள் தலைமையும் பெருமையும் உடையவராதலால் நம்மாழ்வார் என்ற பெயர் இவருக்கு உரியதாயிற்று. இவர் வைணவ குலபதி என்று சிறப்பிக்கப் படுவர். இவருடைய அருளிச் செயல் தமிழ்மறை என்று உயர்த்திச் சொல்லப்படும்.

நம்மாழ்வார் தமது திருவாய் மொழி ஒன்றில் "புளிங்குடிக் கிடந்து வர குணமங்கை இருந்து" என்று குறிப்பிட்டிருப்ப தால் வரகுணன் பெயரால் ஏற்பட்ட திருப்பதியை இவர் பாடியவராவர். கி. பி. 770 இல் ஆண்ட மாறன் நெடுஞ் சடையன் காலத்திற்குப் பின்பே பிற்காலத்து முதலாம் வரகுணன் அரசாண்டவனவன். நம்மாழ்வாருடைய திரு வாய் மொழியில் மிகுதியும் பயின்றுள்ள வடமொழிப் பகுதியினாலும் சொல் நடையினாலும் அவர் தம் நூலை 8 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதென்று கூறமுடியவில்லை. மாறன் நெடுஞ் சடையன் காலத்திற்குப் பின் உண்டான சீவர மங்கை என்னும் தலத்தையும் நம்மாழ்வார் பாடியி ருத்தலால் அவர் 8ஆம் நூற்றாண்டின் இறுதியிலாதல் 9ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலாதல் வாழ்ந்திருக்க வேண்டும்.

சீவான்மா தன் மாயாபந்தங்களை அகற்றிப் பரமான்மாவை அடைதற்கு ஆழ்வார் தெளிந்த உத்தம நெறி பிரபந்தி என்ற மார்க்கமாகும். அஃதாவது இருவகைப் பற்றுமற்று ஈசனையே இடையறாமல் நினைந்து தனக்கு ஒரு பாரமுமின்றி அவனொருவனையே அடைக்கலம் புகுதலாகும்.

இவ்வாழ்வார் பெரிதும் உவந்தருளிய அவதாரமூர்த்தி கண்ணபிரானேயாவார். இவ்வாறு கண்ணனைத் தாம் சிறப் பாகப் பற்றுதற்கு அவன் தம் மனத்துள் நின்று கொண்டு தன் காரியமாக "எனக்கே ஆட் செய் எக்காலத்தும்" என்று இடைவிடாது உணர்த்திவருதலே காரணம் என்கிறார் இவ் வாழ்வார். இறைவனை அடையும் பெரும்பேறு அவனருளால் கைகூடுவதன்றி ஆன்மாவின் முயற்சியாலேயே அடையக் கூடியதன்று என்பதே இவர் கருத்து. அவனது அருளுக்குரிய நிலைக்களமாகத் தன்னை ஆக்கிக் கொள்ளுதலே ஆன்மா செய்யக்கூடியதாகும். இவ்வாறு இறைவன் இவருடன் இணைந்த நிலையில் இவர் அருளிச் செய்த பாசுரங்கள் அருமையும் பெருமையும் உடையவை.

ஆழ்வார் தாம் அருளிய திருவாய்மொழியைத் தாமே பாடிய பிரபந்தமாகக் கூறாமல் இறைவனே தம் வாக்கில்

நின்று கொண்டு தம்மைத் தாமே பாடிய இருந்தமிழ் நூலாகக் கூறுகின்றார். அகப்பொருட்டுறைகளை மக்களைத் தலைவராகப் பாடிவந்த புலவர் மரபை மாற்றி, இறைவனிடம் காதல் பெருகப் பாடும் முறைக்கு வழிகற்பித்தவர்களுள் நம்மாழ்வாரும் ஒருவராவர். இறைவனைத் தலைவனாகவும் சீவான்மாவைத் தலைவியாகவுங் கொண்டு அகப்பொருள் நயங்கள் அமைய ஆழ்வார் பாசுரங்கள் பலவும் விளங்குகின்றன.

இவர் அருளிய முடிவான பொன்மொழி ''ஒக்கத் தொழுகிற்றீராகில் ஒன்றுங் கலியுகமில்லையே'' என்பது. வேதாந்த முடிவுகளான அரிய பெரிய தத்துவங்கள் இவர் அருளிச் செயல்களில் மலிந்து கிடக்கின்றன. இவை யாவற்றையும் முன்னோர் அருளிய ஈடு முதலிய பேருரைகளால் அறியலாம்.

**நூல்:** திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி.

**திருவிருத்தம்:** இது 100 பாடல்களையுடையது. இதில் நம்மாழ்வார் அகப்பொருட்டுறைகளமையப் பல பாடல்கள் பாடியுள்ளார். இது மூன்றாவது ஆயிரத்திலுள்ளது.

**திருவாசிரியம்:** இது 7 செய்யுட்களைக் கொண்டது. இதுவும் மூன்றாம் ஆயிரத்திலுள்ளது.

**பெரிய திருவந்தாதி:** இது 87 பாடல்களைக் கொண்டது; வெண்பாக்கள் அந்தாதித் தொடையாக அமைந்துள்ளன.

**திருவாய்மொழி:** இந்நூல் முதற்பத்து, இரண்டாம் பத்து எனப் பத்துப் பத்துக்களாக வகுக்கப்பட்டுள்ளது; ஆயிரம் பாடல்களையுடையது. இவ்வாழ்வாருடைய அருளிச் செயல்களில் இந்நூலே சிறப்பாகப் போற்றப்படுவதாகும். இதனுள் இறைநிலை, உயிர்நிலை, உபாயநிலை, தடைநிலை, உறுதிப் பொருள் நிலை என்ற ஐந்து உண்மைகளும் கூறப்பட்டுள்ளன. இந்த அர்த்த பஞ்சக ஞானமே முத்தி அடைவிக்க வல்லது என்பர் சமயநூலோர்.

நமச்சிவாய ஐயர் (      )

**நூல்:** ஞானவாசிட்டத்திரட்டு.

நமச்சிவாய கவி (      )

**நூல்:** வடமலை நராதிபதிக்கு எழுதிய சீட்டுக்கவி.

நமச்சிவாயக் கவிராசர் (      )

**நூல்:** உலகம்மன் கலித்துறை அந்தாதி (1885).

இந்நூல் பாபவிநாசத்தில் எழுந்தருளியுள்ள உலகம்மனைத் துதிக்கும் சிறு பிரபந்தம். 100 செய்யுட்கள்.

நமச்சிவாயக் கவிராயர் - 1 (19-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம், விக்கிரம சிங்கபுரம்.

**நூல்:** உலகுடையம்மை அந்தாதி, சிங்கைச் சிலேடை அந்தாதி.

நமச்சிவாயக் கவிராயர் - 2 (      )

இவர் சிவஞான யோகிகளின் சிறிய தந்தையாராவர்.

**நூல்:** சிங்கைப் பிரபந்தத்திரட்டு.

நமச்சிவாயச் செட்டி (19-நூ)

**நூல்:** விவேக சுந்தரம் (1888), பிள்ளை விடுதூது ஆபாச விளக்கம்.

முதல் நூல் ஒருபுதினம்.

நமச்சிவாயச் செட்டியார், எஸ்.ஆர். (      )

**நூல்:** தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் திவ்விய சரித்திரம்.

இந்நூல் திருவள்ளுவநாயனார் வரலாறு பற்றியது. கர்ண பரம்பரைச் செய்திகள் பல இந்நூலில் அமைந்துள்ளன

## நமச்சிவாய சிவராசயோகி (20-நூ)

**ஊர்:** சென்னை.

**தந்தை:** சாது இரத்தின செட்டியார்.

இவர் இலக்கண இலக்கிய நூல்களையும் வேதாந்த சித்தாந்த நூல்களையும் மருத்துவ நூல்களையும் கற்றுத் தேர்ந்தார். தம் பெயரால் மருத்துவமனை ஒன்று ஏற்படுத்தித் தொண்டாற்றினார்.

**நூல்:** கிருட்டினலீலாமிர்த வசனம், குசேலர், இந்துசெய பேரிகை, சென்னைப்பட்டினம் கேப்பமாரிப் பட்டினமா? சென்னைக் கந்தராலய வைபவம், உருத்திரகோடித் தல மான்மிய வசனம்.

## நமச்சிவாயத் தம்பிரான் (17-நூ)

**வே.பெ.** நமச்சிவாய தேசிகர்.

இவர் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த சைவ அடியார். இப்பெயருடைய சைவ அடியார்கள் பலர் அங்கு இருந்துள்ளனர். அவர்களில் இவர் யார் என்பது தெரிய வில்லை. வினாவெண்பா என்ற நூலுக்கு எழுதிய உரையின் இறுதியில் உள்ள குறிப்பில் அவ்வுரை செய்த காலம் கி. பி. 1678 என்று தெரிய வருவதால் இவர் வாழ்ந்த காலம் கி.பி. 17-ஆம் நூற்றாண்டாகும்.

இவர் திருவாவடுதுறை மடத்தைச் சார்ந்தவர்.

**நூல்:** உமாபதி சிவாச்சாரியாரின் வினாவெண்பா உரை, சிவஞான சித்தியார் (சுபக்கம்) உரை, அருணந்திசிவாச் சாரியார் இருபா இருபஃது உரை.

## நமச்சிவாய நாவலர், அ. (19-நூ)

**வாழ்விடம்:** அரியக்குடி.

இவர் திருவரங்கம் அரங்கநாதர் மீது பல நூல்களை இயற்றியுள்ளார்.

**நூல்:** கார்வண்ணமாலை, அரங்கப்பத்து, மெய்ஞ்ஞான சோதிமயம், இரகுராமப்பத்து, கோவிந்தப் பத்து, சிந்தை குடிகொண்ட பதிகம், ஆதிசீரங்கப் பதிகம், இராமப் பத்து, கருடப் பத்து, போற்றிப் பத்து, பரப்பிரமப் பத்து, குறு விருத்தமாலை, ஆதிமூலப் பத்து, சிந்தையின் பத்து, அட்டாட்சரத்திருப்புகழ், அலர்மேல்மங்கைத் தாயார் பதிகம், நேரிசை வெண்பா, இராமர் பேரில் பதம்.

## நமச்சிவாய நாவலர், ப. (20-நூ)

**ஊர்:** பண்ணுருட்டி.

இவர் சொக்கபுரம் இராமலிங்கத் தம்பிரானிடம் தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்றுப் புலமை பெற்றார். தமது ஊரில் கல்லூரி ஒன்றில் தமிழாசிரியராகப் பணி யாற்றினார். புராணச் சொற்பொழிவு செய்வதிலும் நூலாராய்ச்சி செய்வதிலும் வல்லவர்.

**நூல்:** மயிலாசல சதகம்.

## நமச்சிவாயப் பிள்ளை 1 (20-நூ)

**நூல்:** 'காசிச் சாமிகள் தோத்திரம்'.

## நமச்சிவாயப் பிள்ளை 2 ( )

**ஊர்:** மாயூரம்.

**நூல்:** பட்டினத்துப் பிள்ளையார் சரித்திர சங்கிரகம் (1899).

## நமச்சிவாயப் பிள்ளை, ப. (20-நூ)

**ஊர்:** திருமறைக் காட்டையடுத்த தோப்புத்துறை.

**நூல்:** கயிலாசநாதப் பெருமாள் பதிற்றுப்பத்தந்தாதி.

## நமச்சிவாயப் புலவர் - 1 (19-நூ)

**ஊர்:** கடிகை.

இவர் எட்டையபுரம் பெரு நிலக் கிழாரின் அவைக்களப் புலவர்.

**நூல்:** வல்லி பரதம்.

இந்நூல் வள்ளி திருமணக் கதையை நாடக அமைப்பில் கூறுவது.

## நமச்சிவாயப் புலவர் - 2 ( )

**ஊர்:** வள்ளியூர்.

**நூல்:** 'திருவல்லிக்கேணி பார்த்த சாரதிப் பெருமாள் கலம்பகம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் கலம்பகம்' என்னும் நூல் சங்கரலிங்கம் பிள்ளை, அ. என்பவரால் இயற்றப்பெற்றது.

## நமச்சிவாயப் புலவர் - 3 (17-நூ)

இவர் பாண்டிய நாட்டினர். இவர் பிறந்த பதிபற்றியோ பிறப்பு வளர்ப்புப் பற்றியோ ஒன்றுந் தெரியவில்லை. கீழக் கரையிலிருந்த சீதக்காதி என்ற பெரியதம்பி மரைக்காயர் மேல் பல பாடல்கள் பாடியுள்ளார். தனிச் செய்யுட் சிந்தாமணி என்ற நூலில் மான்விடுதூது, என்ற நூல் இவரால் செய்யப்பட்டதாகக் குறிக்கப்பட்டுள்ளது. மான் விடுதூது பாடியவர் குழந்தைக் கவிராயர். முத்திருளப்ப பிள்ளை என்பவர்மீது இவர் பாடியதாகக் கூறப்படும் பாடல் களும் இவரால் பாடப்பெற்றவை அல்ல என்று கருதப் படுகிறது.

## நமச்சிவாயப் புலவர் - 4 (18-நூ)

இவரின் பிறப்பிடம் எதுவென்று தெரியவில்லை. தமிழ் நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று வந்தாரென்றும், இராம நாதபுரத்தில் சிறிது காலம் நிலைத்திருந்தாரென்றும் தெரிகிறது.

**நூல்:** முத்திருளப்பபிள்ளை பிள்ளைத்தமிழ், மான்விடுதூது, தனிப்பாடல்கள்.

## நமச்சிவாயப் புலவர் - 5 ( )

**நூல்:** சிவகங்கைச் சிலேடைவெண்பா (1937).

## நமச்சிவாயப் புலவர், சு. (20-நூ)

**ஊர்:** யாழ்ப் பாணத்தைச் சேர்ந்த ஆவரங்கால்

**தந்தை:** சுப்பிரமணிய பிள்ளை,

இவர் உடுப்பிட்டிச் சிவசம்புப் புலவர், ம. க. வேற்பிள்ளை ஆகியோரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். இவர் இசைக் கலையில் தேர்ச்சி பெற்றுப் பல தனிநிலைச் செய்யுட்களையும் கீர்த்தனங்களையும் இயற்றியுள்ளார்.

## நமச்சிவாயம் பிள்ளை (19-நூ)

**ஊர்:** சோழநாட்டில் மாயூரம் அருகிலுள்ள சித்தக்காடு.

இவர் சித்தக்காடு வித்துவான் என்று சிறப்பாக அழைக்கப் பெற்றார். கேட்போர் வியக்கும் வண்ணம் உரையாடுவதிலும் செய்யுள் இயற்றுவதிலும் வல்லவர்.

**நூல்:** திருப்பனந்தாள் காசிமடத்தலைவர் சாமிநாத சாமிகள் மீது பாடிய பத்துப் பாடல்கள்.

## நமச்சிவாயம் பிள்ளை, மா. (20-நூ)

**வாழ்விடம்:** சென்னை.

இவர் சிவாநந்த சாகர யோகீசுரரிடம் கல்வி கற்றார். புரக்கிரசிவ் யூனியன் பள்ளியில் தமிழாசிரியராகத் தொழில் புரிந்தார்.

**நூல்:** திருவொற்றியூர்த் தியாகேசர் பஞ்ச ரத்தினம், வடிவாம்பிகை பதிகம்.

**பதிப்பு நூல்கள்:** சிவராத்திரி புராணம், நம்பியாண்டார் நம்பி புராண வசனம், சேக்கிழார் சுவாமிகள் பிள்ளைத்

தமிழ், செவ்வந்திப் புராணம், சந்தான குரவர் நான்மணி மாலை.

## நமச்சிவாய முதலியார் (19-நூ)

**நூல்:** 'திருத்தணிகைப் பதிகம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்

**'திருத்தணிகைப் பதிகம்' என்னும் நூல் இராமாநுசம்பிள்ளை என்பவரால் இயற்றப் பெற்றது.**

## நமச்சிவாய முதலியார், கா. (20-நூ)

**ஊர்:** வடார்க்காடு மாவட்டம், காவேரிப் பாக்கம்.

**தந்தை:** இராமசாமி முதலியார்.

**தாய்:** அகிலாண்டவல்லி அம்மையார்.

**வாழ்ந்த காலம்:** 10-2-1876 — 1937.

இவருடைய தந்தை தொடக்கப்பள்ளி ஒன்று ஏற்படுத்தி மாணவர்களுக்குக் கல்வி கற்பித்தார். இப்பள்ளியிலேயே நமச்சிவாயர் தமது கல்வியைத் தொடங்கினார். 15 ஆண்டு வரை தம் தந்தையாரிடமே நீதி நூல்களைக் கற்றார். பின்னர்ச் சென்னையை அடைந்து ஒரு தொடக்கப்பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றினார். தொண்டைமண்டலம் துளுவ வேளாளர் பாடசாலையில் தமிழாசிரியர் சண்முகம் பிள்ளை யிடம் 12 ஆண்டுகள் தமிழ் நூல்களைக் கற்றார். அவரைத் தம் தந்தையைப் போல வழிபட்டார். ஆசிரியரின் விருப்பப் படி அவரது மனைவியைத் தம் தாய்போல இறுதிவரை காப்பாற்றினார்.

செயின்ட் சேவியர் உயர் நிலைப்பள்ளியிலும் நார்த்விக் மகளிர் பாடசாலையிலும் சிங்கிலர் கல்லூரியிலும் சிறிது காலம் தமிழாசிரியராக இருந்தார். எஸ்.பி.ஜி. உயர்நிலைப் பள்ளியில் பல ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணி புரிந்தார் 1914 முதல் மேரி ராணியார் கல்லூரியில் ஆசிரியராகப் பணி புரிந்தார். ஓய்வு பெறுமுன் சில ஆண்டுகள் சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ்ப் பணிபுரிந்தார். 1920ஆம்

ஆண்டு தொடங்கி 1934 வரையில் அரசாங்கத் தமிழ்க் கல்விச் சங்கத்தின் தலைவராக இருந்து பணியாற்றினார். அப்போது இவர் செய்த முயற்சியினால் தான் தமிழாசிரியர்கள் தனித் தமிழ்த் தேர்வு எழுதி வித்துவான் பட்டம் பெற முடிந்தது. தமிழாசிரியர் ஊதியம் உயரவும் இவர் முயன்றார்.

1906 ஆம் ஆண்டில் இவர் சுந்தரம்மாள் என்பவரை வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொண்டார். அவ் வம்மையாரின் விருந்தோம்பும் பண்பினால் நமச்சிவாயர் இல்லத்தில் புலவர் பெருமக்களும் நண்பர்களும் விருந்துண்டு மகிழ்ந்தனர்.

இவர் 'நல்லாசிரியர்' என்ற திங்களிதழினைப் பதினைந்து ஆண்டுகள் நடத்திப் பள்ளி ஆசிரியர்களின் அறிவு வளர்ச்சிக்கு ஊக்கம் ஊட்டினார். மாணவர்களுக்கேற்ற தமிழ்ப் பாடப் புத்தகங்களை எழுதுவதில் இவர் தேர்ச்சி பெற்றவராகத் திகழ்ந்தார். முதல் வகுப்பு முதல் ஒன்பதாம் வகுப்பு வரை தமிழ்ப் பாட நூல்களை எழுதி வெளியிட்டார்.

'ஜநவிநோதினி' என்னும் திங்களிதழில் தொடர்ந்து பல கட்டுரைகள் எழுதினார். தமிழ் நூல்களை நல்ல தாளில் உயர்ந்த முறையில் ஆங்கில நூல்களைப் போல வெளியிட வேண்டும் என்ற குறிக்கோளினைக் கொண்டிருந்தார். இக் குறிக்கோளினை நிறைவேற்றும் வகையில் நீதிநூல்கள் பல வற்றையும் தொல்காப்பியப் பகுதிகள் சிலவற்றையும் தஞ்சைவாணன்கோவை, தணிகைப்புராணம் ஆகியவை களையும் அம்முறையில் பதிப்பித்தார். அந்நாளில் இவர் தமிழ்ப் புலவராக விளங்கியதோடு பெரும் புரவலராகவும் விளங்கினாரென்பது குறிப்பிடத் தக்கது.

**நூல்:** கீசகன், பிருதிவிராசன், தேசிங்குராசன், சனகன், தணிகைத் தவப்பயன் மாலை.

நமச்சிவாயர் (          )

**நூல்:** வினாவெண்பா உரை.

## நயனப்ப முதலியார்

**ஊர்:** சென்னை.

**நூல்:** 'சிற்றம்பல முதலியார் என்பவர் இயற்றிய 'ஐயாச் சாமீயம்' என்னும் காலக்கணித நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## நயனப்ப முதலியார், பு. (19-நூ)

இவர் சென்னைக் கல்விச் சங்கப் புலவராக இருந்தவர். தாண்டவராய முதலியாரின் ஆணைப்படி திவாகரம் 9, 10-ம் பகுதிகளைப் பதிப்பித்தார்.

**நூல்:** சித்தாந்த சைவர்களின் உண்மை நிலை.

## நயினியப்பக் கவிராயர் (        )

**நூல்:** 'திரிபுர சுந்தரி அம்மன் பிள்ளைத்தமிழ்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'திரிபுரசுந்தரி அம்மன் பிள்ளைத் தமிழ்' என்னும் நூல் முத்துக் குமரப்ப கவி என்பவரால் இயற்றப்பெற்றது.

## நயினுத்தை முதலியார் (18-நூ)

**ஊர்:** புதுச்சேரி.

இவர் விரைவாகச் செய்யுளியற்றுந் திறம் பெற்றிருந்த தால் "நிமிடகவி" எனப் புகழ்பெற்றார்.

**நூல்:** ஆரியபுராண வசனம்.

## நயினு முகம்மதுப் புலவர் (18-நூ)

**ஊர்:** பாசிப்பட்டினம்.

**தந்தை:** பீருமுகம்மது சாகிப்.

**நூல்:** முகைதீன் மாலை, முன்கிரீன் மாலை, மீரான் சாகிபு ஆண்டவர் சரித்திரச் சுருக்கம்.

## நயினு முகம்மது இராவுத்தர், யா. (20-நூ)

**ஊர்:** தஞ்சாவூர்.

**நூல்:** அப்துல் மசீது, மு. க .அ. என்பவர் இயற்றிய ஆசாரக் கோவை என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## நயினுர் ஆசாரியார் (14-நூ)

**தந்தை:** வேதாந்த தேசிகர்.

**நூல்:** பிள்ளையந்தாதி.

இந்நூல் வேதாந்த தேசிகரைப் புகழ்ந்து பாடியது.

## நயினுர் பிள்ளை (19-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம், குறிச்சி.

இவர் எண்வகை அவதானங்கள் செய்வதில் வல்லவராகையால் அட்டாவதானி என்று அழைக்கப் பெற்ருர். இவருடைய மகன் கந்தசாமி உபாத்தியாயரும் சிறந்த புலவராவர்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## நயினுர் முகம்மது பாவாப் புலவர் ( )

இவருடைய முழுப் பெயர் சொர்ணகவி நயினுமுகம்மது பாவாப் புலவர். இவர் சையிது முகம்மது என்பவரின் வழி முறையினர். இவர் வாக்குப் பலிதம் உடையவராகக் கருதப் பட்டார்.

**நூல்:** மழைப்பாட்டு, செங்குதாவூது அலியுல்லா பிள்ளைத் தமிழ், கியாமத் மாலை, திருமண வாழ்த்து, வண்ணப்பாட்டு, வழிநடைச் சிந்து.

## நயினுர் லெப்பை ஆலிம் புலவர் ( )

**நூல்:** மெல்லிசை வண்ணம்.

## நரகரி மாணவர் ( )

**நூல்:** சப்தாக்சரி வியாக்கியானம்.

## நரசிங்கப் பிள்ளை, (19-நூ)

**ஊர்:** அணியாபரண நல்லூர்.

**தந்தை:** பரமேசுரன் பிள்ளை.

**நூல்:** வைரவசாமி பிள்ளைத் தமிழ்.

## நரசிம்ம ஐயர் (19-நூ)

**ஊர்:** கும்பகோணம்.

**நூல்:** மார்க்கண்டேயர் நாடகம்.

இந்நூலில் விருத்தம், கட்டளைக் கலித்துறை, உரைநடை, இசைப்பாடல்கள் ஆகியவை அடங்கியுள்ளன.

## நரசிம்ம சாமியார் (20-நூ)

**ஊர்:** ஒண்டிபுதூர்.

இவர் வேதாந்த நூல்கள் பல இயற்றியவர்.

## நரசிம்ம தாசர் ( )

இவர் வேமனானந்த சாமிகள் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்றவர்.

**நூல்:** வேமனானந்தர் பதிகம்.

## நரசிம்ம பாகவத பாரதி (19-நூ)

**நூல்:** 'திருக்கோகன்ன அந்தாதி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'திருக்கோகன்ன அந்தாதி' என்னும் நூல் சுப்பிரமணிய ஐயர், க. என்பவரால் இயற்றப் பெற்றது.

## நரசிம்ம பாகவதர் தி. ரா. ( )

**ஊர்:** திருவெண்ணெய் நல்லூர்.

இவர் தி. ந. சுப்பிரமணிய முதலியாரிடம் கல்வி கற்றுப் புராண இதிகாசங்களைச் சொற்பொழிவு செய்யும் திறம் பெற்றார்.

**நூல்:** இராசப்ப நாவலர் இயற்றிய திருவெண்ணெய் நல்லூர்க் கலம்பகத்திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## நரசிம்ம பாரதி (          )

**நூல்:** அன்பிலாந்துறை மான்மியம் (1895).

## நரசிம்ம பாரதி, அ. (20-நூ)

**ஊர்:** திருமயம்.

**நூல்:** பள்ளத்தூர் அங்கயற் கண்ணம்மை மீது பிள்ளைத் தமிழ், சோமசுந்தரேசர் மீது பதிகம், மீனுட்சியம்மை பஞ்சரத்தினம், நேரிசை வெண்பாமாலை, அங்கயற் கண்ணம்மை அலங்காரமாலை, தோத்திரப் பாமாலை, கூட சதுக்கம், காதைகரப்பு, காலிலா வெண்பா, கொம்பிலாப்பா, முற்றுமோனை ஆசிரிய விருத்தம்.

## நரசிம்மல ராசா, சி. கே. (20-நூ)

**ஊர்:** ஓமலூர்.

இவர் ஆங்கிலம் தெலுங்கு தமிழ் ஆகிய மொழிகளில் வல்லவர்.

**நூல்:** சன்மரகித போதினி (தமிழாக்கம்)

இந்நூல் புட்பபாலவரதராசர் என்பவர் தெலுங்கு மொழியில் இயற்றியதாகும்.

## நரசிம்மாசாரியார், இரா. (20-நூ)

இவர் எம்.ஏ. வரை கல்வி கற்றவர். இராவ் பகதூர், மகா மகோபாத்தியாயர் என்ற சிறப்புப் பட்டங்களைப் பெற்றவர். மு. இராகவையங்காரின் தந்தையார் சதாவ தானம் முத்துச்சாமி ஐயங்காரிடம் தமிழ்நூல்களைக் கற்றுர். மைசூர் நாட்டில் சாசனத்துறைப் பொறுப்பாளராக விளங்கியவர். முத்துச்சாமி ஐயங்கார் இயற்றிய நூற் றெட்டுத் திருப்பதி அகவல், மணவாள மாமுனிகள் நூற்றந் தாதி ஆகிய நூல்களை அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

**நூல்:** பல நூல்களுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## நரசிம்மையர் (        )

**ஊர்:** மணஞ்சேரி.

**நூல்:** அரிச்சந்திரோபாக்கியான நாடகாலங்காரமென்னும் கீர்த்தனை.

## நரசிம்மையர், மூ. (        )

**நூல்:** அரிச்சந்திர மகாராசன் பேரில் மனோன்மணிக்கும்மி, அரிச்சந்திரோபாக்கியான நாடகாலங்காரம்.

## நரிவெரூஉத் தலையார் (சங்ககாலம்)

இவர் இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. உறுப்பாற் பெயர் பெற்ற சங்கப் புலவர்களுள் இவர் ஒருவர். யாது காரணத்தாலோ இவர் தம் உடம்பு வேறுபட்டிருந்து. கருவூரேறிய ஒள்வாட்கோப் பெருஞ்சேரலிரும் பொறையைக் கண்ட போது அவ்வேறுபாடு நீங்கித் தம் உடம்பு முன் போலப் பெற்றாரென்று புறநானூறு 5 ஆம் பாட்டின் பின்னருள்ள குறிப்பும், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் ஏழாம் நூற்பா உரையில் பேராசிரியர் குறிப்பும் தெரிவிக்கின்றன.

திருவள்ளுவமாலை 33 ஆம் செய்யுள் இவர் இயற்றியதென்று ஒரு கருத்து உண்டு.

**நூல்:** குறுந்தொகை 5, 236, புறம் 5, 195.

## நரைமுடி நெட்டையார் (சங்ககாலம்)

இவர் இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. 'நரைமுடி' என்ற தொடரைத் தம்பாடலொன்றில் பயன்படுத்தியமையால் இவர் இப்பெயர் பெற்றார் என ஒரு கருத்து உண்டு. ஆனால் இவர்பாடிய ஒரே அகநானூற்றுப் பாடலில் (339) இத் தொடரைக் காணவில்லை. எனவே இப்பெயர் இவருக்கு உறுப்பால் வந்தது என்று கருதலாம்.

**நூல்:** அகம் 339.

## நல்கூர் வேள்வியார் ( )

**நூல்:** திருவள்ளுவமாலையில் "உப்பக்கம் நோக்கி" என்று தொடங்கும் பாடல்.

## நல்ல குற்றாலம் பிள்ளை ( )

**ஊர்:** ஸ்ரீ வைகுண்டம்.

**நூல்:** 'நிரோட்டக யமக வந்தாதி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'நிரோட்டக யமக வந்தாதி' என்னும் நூல் சௌந்தர பாரதி என்பவரால் இயற்றப்பெற்றது.

## நல்லச்சுதனார் (சங்க காலம்)

இவர் பரிபாடற் புலவர்களில் ஒருவர். இவர் இயற்றிய பரிபாடல் 21-ஆம் செய்யுள் செவ்வேளுக்குரியது. இப் பாட்டில் இவர் திருப்பரங்குன்றத்தை யானையாக உருவகஞ் செய்துள்ளார். முருகக்கடவுள் ஊர், யானை, அவர் தொடும் அடையற் செருப்பு, வேற்படை, கடப்பமாலை இன்ன பிற வற்றைப் புனைந்துள்ளார்.

**நூல்:** பரிபாடல் 21.

## நல்லசாமிப் பிள்ளை, தொ. மு. (19-நூ)

**ஊர்:** உறையூர்.

**நூல்:** 'அகம்புற ஆராய்ச்சி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'அகம்புற ஆராய்ச்சி' என்னும் நூல் சுப்பராய ஆச்சாரி யார் என்பவரால் இயற்றப்பெற்றது.

## நல்லசாமிப் பிள்ளை, ஜே. எம். (20-நூ)

**ஊர்:** திருச்சிராப்பள்ளி.

**தந்தை:** மாணிக்கம் பிள்ளை; **தாய்:** செல்லத்தம்மையார்.

**வாழ்ந்த காலம்:** 24-11-1864 — 1920.

இவர் இளமைப் பருவத்தில் தமிழறிஞரொருவரிடம் பொதுக்கல்வியும் ஓதுவார் ஒருவரிடம் தமிழ் மறையும் பாடசாலை ஒன்றில் ஆங்கிலமும் பயின்றார். சென்னைமாநிலக் கல்லூரியில் பயின்று தத்துவத் துறையில் பி.ஏ., பட்டமும் பின்னர்ச் சட்டக் கல்லூரியில் பயின்று பி.எல், பட்டமும் பெற்றார். 1887 ஆம் ஆண்டில் சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்கறிஞரானார். 1893 ஆம் ஆண்டு முதல் இருபது ஆண்டு கள் தமிழகத்தின் பல பகுதிகளில் மாவட்ட முன்சீப்பாக இருந்தார். இப் பணியோடு தமிழ்ப் பணியிலும் சைவசமய வளர்ச்சியிலும் ஈடுபட்டார். 1894 ஆம் ஆண்டில் சிவஞான போதத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டார். பின்னர்த் திருவருட்பயன் என்ற நூல் வெளிவந்தது. உண்மை விளக்கம், சித்தாந்த தீபிகை என்ற திங்கள் வெளியீடுகளையும் நடத்தினர். இவர் சிறந்த சொற் பொழிவாளராக விளங்கியதால் 1907 ஆம் ஆண்டில் கல் கத்தாவிலும் 1911 ஆம் ஆண்டில் அலகாபாத்திலும் நடந்த சர்வசமயப் பெருங் கூட்டங்களில் ஆகம அத்துவிதச் சைவச் சொற்பொழிவுகள் செய்தார். மதுரைத் தமிழ்ச் சங்க ஆண்டு விழாவில் இரு முறையும் சைவசித்தாந்த மகா சமாச ஆண்டு விழாவில் மூன்று முறையும் தலைவராக அமர்ந்து சொற்பொழிவாற்றினர். இறுதிக் காலத்தில் மதுரையை அடைந்து மீண்டும் வழக்கறிஞர் தொழிலை மேற் கொண்டார். நூலெழுதும் பணியில் உண்மை நெறிவிளக்கம், சிவஞானபோதம், சிவஞான சித்தியார், திருவுந்தியார், உண்மை விளக்கம், வினவெண்பா, கொடிக்கவி, திருவருட் பயன், இருபா இருபஃது, சிவபக்த விலாசம் என்ற நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். இந் நூல்களை வெளியிடும் பணியினைத் தருமபுர ஆதீனத்தார் மேற்கொண்டுள்ளனர்.

## நல்லசிவ தேவர் (          )

**நூல்:** சிவப்பிரகாசச் சிந்தனை உரை.

சிவப்பிரகாசம் என்ற நூலுக்குப் பழைய உரைகள் இரண்டுண்டு. ஒன்று மதுரைச் சிவப்பிரகாசர் இயற்றியது.

மற்றொன்று திருவாவடுதுறை மடத்தைச் சேர்ந்த நல்லசிவ தேவரது உரையாகும்.

## நல்ல சிவன் பிள்ளை, கோ. (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம் கலியாணபுரம்.

இவர் முருகதாச சாமிகள் என்ற ஆழ்வாரப்பப் பிள்ளையிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்.

**நூல்:** ஆழ்வாரப்ப பிள்ளை மீது இயற்றிய தனிச் செய்யுள்.

## நல்ல சிவன் பிள்ளை சு. (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலிக்கு அருகிலுள்ள சம்புலிங்கபுரம்.

**தந்தை:** சுப்பிரமணிய பிள்ளை; **தாய்:** சண்முகத் தம்மையார்.

**வாழ்ந்த காலம்:** 8—6—1882 — 26—3—1952.

இவர் தன் மாமன்மாரிடம் தமிழ் கற்றுத் தேர்ந்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் ஆசிரியராகப் பொறுப்பேற்றுப் பல ஆண்டுகள் பணிபுரிந்தார். செய்யுளியற்றுவதில் சிறப்புப் பெற்றவர்.

**நூல்:** மதுரைச் சொக்கநாதர் வருக்கக் கோவை.

இந்நூல், திருப்பனந்தாள் காசிமடத்தில் 19-ஆவது தலைவராக விளங்கியவர்கள் பணித்தவாறு இயற்றப் பெற்றது.

## நல்லதம்பி, மு. (20-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம், வட்டுக்கோட்டை.

**தந்தை:** முருகுப்பிள்ளை; **தாய்:** தங்கம்மாள்.

**வாழ்ந்த காலம்:** 1896 — 1951.

இவர் தெல்லிப் பழையில் உயர்தரக் கல்வி பயின்றார். இளமைக் காலத்திலேயே கவிதைகள் இயற்றுவதிலும் நாடகங்கள் நடிப்பதிலும் ஆர்வம் காட்டினார். தெல்லிப் பழை போதனா முறைப் பயிற்சிக் கழகத்தில் 1914-ஆம்

ஆண்டில் பயின்று தமிழாசிரியரானார். பண்டத் தரிப்பு, மண்டைத்தீவு, ஆனைக்கோட்டை ஆகிய ஊர்களில் தமிழாசிரியராகவும் கொழும்பு சகிராக் கல்லூரியில் 1918-ஆம் ஆண்டுமுதல் 28 ஆண்டுகள் வரை தலைமைத் தமிழாசிரியராகவும் பணியாற்றினார். கொழும்புக்கு வந்தபின் தென் கோவை ச. கந்தையா பிள்ளையிடம் தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்களையும் சங்க நூல்களையும் பாடங் கேட்டார். இலங்கை முஸ்லீம் மக்களிடையே தமிழார்வத்தை வளர்த்த பெருமைக்குரியவர். இசுலாமிய இலக்கியங்களையும் அவற்றின் தத்துவங்களையும் உணர்ந்த புலவர். பத்திரிகைகளுக்கு அவ்வப்போது பல கட்டுரைகள் எழுதியுள்ளார். சிறுவர்க்கான இனிய எளிய பாடங்கள் இயற்றுவதில் தனித் திறமை பெற்றவர்.

**நூல்:** மணித்தாய்நாடும் மரதனோட்டமும், இளைஞர் விருந்து, ஈழவாசகம்.

**மணித்தாய்நாடும் மரதனோட்டமும்:**

இந்நூல் 1950-ஆம் ஆண்டில் இலங்கைச் சுதந்திர விழாவினை முன்னிட்டு நடைபெற்ற மரதன் தமிழ்க் கவிதைப் போட்டியில் கலந்து பாடிப் பரிசு பெற்ற நூல்.

## நல்லதம்பிச் செட்டியார் (20-நூ)

**நூல்:** அப்பாவையர் க. இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## நல்லதம்பிப் பிள்ளை (20-நூ)

**ஊர்:** பாலைக்காட்டினை அடுத்த தத்தைமங்கலம்.

**தந்தை:** பொன்னப்ப பிள்ளை; வேளாளர்.

இவர் இலக்கிய இலக்கணங்களும் தருக்கமும் தெரிந்தவர்: வடமொழியிலும் மிக்க பயிற்சியுடையவர். திருப்புத்தூர் நகரசபை உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி யாற்றியவர்.

**நூல்:** சைவ சித்தாந்த ரகசியம், பாலப்பிரபோதம்.

இரண்டாவது நூல் வடமொழி தென்மொழி என்ற இரு மொழி இலக்கணங்களுக்கும் இயைபு காட்டி எழுதப் பெற்றது.

## நல்லதம்பி முதலியார் (        )

**நூல்:** காஞ்சிகாமாட்சியம்மன் சந்த விருத்தம்.

இது பத்து விருத்தப் பாக்களைக் கொண்டது.

## நல்லந்துவனார் (சங்க காலம்)

**இ. பெ:** அந்துவன்.

**ஊர்:** மதுரை.

இவர் மதுரையாசிரியர் நல்லந்துவனார் எனவும் கூறப் பெறுவர். சங்ககாலப் புலவர் மருதனிள நாகனார், 'அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை' (அகம். 59) எனக் குறிப்பிட்டுள்ளமையால் இவர் புலமைச் சிறப்பு விளங்கும்.

கலித்தொகைக்குக் கடவுள் வாழ்த்துப் பாடித் தொகுத்தவர் இவரே என்று ஒரு கருத்துண்டு. சங்கத் தொகை நூல்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடியவரே இதற்கும் பாடியிருக்கலாம் என்று கருதப்படுவதால் இக்கருத்து ஐயத்திற்குரியது. திருவள்ளுவமாலையில் "சாற்றிய பல்கலை" என்ற 18 ஆம் வெண்பா இவர் பெயரில் காணப்படுகின்றது. கலித் தொகையில் நெய்தற்கலியைப் பாடியவர் இவரே யாவர்.

**நூல்:** அகம் 43, கலித்தொகை 118 முதல் 150; நற்றிணை 88; பரிபாடல் 6, 8, 11, 20.

பரிபாடலில் 6, 11, 20ஆம் செய்யுட்கள் வையையைச் சிறப்பிப்பன. 8ஆம் செய்யுள் செவ்வேளுக்குரியது.

## நல்ல பெருமாள் கவிராயர் (20-நூ)

**ஊர்:** தூத்துக்குடி.

**நூல்:** விவேக விளக்கமாலை.

## நல்ல முத்து என்ற இராமாநுசதாசர் (19-நூ)

**நூல்:** இராசாராம் கோவிந்தராவ் என்பவர் இயற்றிய ''ஸ்ரீபக்தலீலாமிர்தம்'' என்ற நூலுக்கு வழங்கிய சாற்றுக்கவி.

## நல்ல வீரப்ப பிள்ளை (19-நூ)

**ஊர்:** இராமநாதபுரமாவட்டம் முதுகுளத்தூர்.

**நூல்:** கொடுமளூர் முருகப்பெருமான் பள்ளு, கொடுமளூர் முருகப்பெருமான் குறவஞ்சி.

## நல்லழிசியார் (சங்ககாலம்)

இவர் பரிபாடற் புலவருள் ஒருவர்.

**நூல்:** பரிபாடல் 16, 17.

16-ஆவது செய்யுள் வையையாற்றைச் சிறப்பிப்பது. 17-ஆம் செய்யுள் செவ்வேளுக்குரியது. திருப்பரங் குன்றத்தில் முருகக் கடவுள் எழுந்தருளிய கடம்பை அன்பர்கள் வந்து வழிபடுவது இச்செய்யுளில் எடுத் துரைக்கப்பட்டுள்ளது.

## நல்லாதனார் (7-நூ)

ஆதன் என்பது தமிழ் நாட்டில் முற்காலத்தில் இயற் பெயராக வழங்கி வந்ததென்பது தொல்காப்பியம் முதலிய நூல்களால் தெரிய வருகிறது. திருநெல்வேலியைச் சார்ந்த திருத்து என்ற ஊரினரென்று பழைய செய்யுளொன்று இவ ரைக் குறிப்பிடுகின்றது. இவர் வைணவ சமயத்தைச் சார்ந்தவரென்பது திரிகடுகத்தின் காப்புச் செய்யுளால் அறியப்படுகிறது.

**நூல்:** திரிகடுகம்.

இந்நூல் சுக்குமிளகு திப்பிலி சேர்ந்த மருந்து போல மூன்று அருமையான உண்மைகளை ஒவ்வொரு பாட்டிலும் அமைத்துக் கூறுகின்றது.

## நல்லாப்பிள்ளை (18-நா)

**ஊர்:** தொண்டை நாட்டில் முதலம்பேடு.

இவர் வடமொழிப் பயிற்சி மிக்கவர். தமது பதினெட்டாவது வயதில் தேவசேனைப்புராணம் என்ற செய்யுள் நூலை இயற்றித் தமது புலமையை வெளிப்படுத்தினர்.

செங்காடு என்ற சிற்றூரில் வாழ்ந்த வீரராகவ செட்டியார் என்ற புலவரின் வேண்டுகோளுக்கு ஏற்ப வடமொழிப் பாரதத்தை வில்லிப்புத்தூரார் பாரதத்தினும் விரிவாகப் பாடினர். வில்லிபாரதத்தின் விடுபட்ட கதைகளையெல்லாம் முற்றிலும் பாடி வில்லிபாரதத்தை விரிவாக்கினர். இந்நூல் காஞ்சிபுரத்தில் அரங்கேற்றப்பட்டது. இந்நூலியற்றும் பணியில் இவருடன் பயின்ற முருகப்ப உபாத்தியாயரென்பவரும் சேர்ந்து தொண்டாற்றினர். ஆயினும் முருகப்ப உபாத்தியாயர் பாடியவற்றிலும் இவர் பாடியவையே மிகுதியாக இருந்ததனால் இந்நூல் நல்லாப்பிள்ளை பாரதம் என்றே வழங்கப்பெற்றது.

**நூல்:** தேவசேனைபுராணம், நல்லாப்பிள்ளை பாரதம்.

**தேவசேனைபுராணம்:** முருகக் கடவுளின் தோற்றம் முதல் தெய்வயானை அம்மை திருமணம் வரை அமைந்தது.

**நல்லாப்பிள்ளை பாரதம்:** இந்நூல் வில்லிபாரதத்தின் விரிவு; 14728 செய்யுட்கள். இவற்றுள் வில்லிப்புத்தூரார் செய்யுட்கள் 4350.

## நல்லாவூர் கிழார் (சங்ககாலம்)

**ஊர்:** நல்லாவூர்.

இவர் இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. ஊராற் பெயர் பெற்ற சங்கப்புலவர்களுள் இவரொருவர். இவர் பிறந்த ஊராகிய நல்லாவூர் இப்பொழுது எங்குள்ளது என்று தெரியவில்லை. இவர் பாடிய அகநானூறு 86 ஆம் பாடலில் முற்காலத்திய திருமணச் சடங்குகளை விளக்கியுள்ளார்.

**நூல்:** அகம் 86; நற்றிணை 154.

## நல்லாறனார் ( )

**நூல்:** நல்லாறன் மொழிவரி.

இப்பெயருள்ள செய்யுள் இலக்கண நூலொன்று இருந்த தென்பது யாப்பருங்கல விருத்தியுரையால் தெரிய் வருகிறது. யாப்பருங்கல ஒழிபியலில் 'இடைச்சொல்லும் உரிச் சொல்லும். தொல்காப்பியம், தக்காணியம், அவிநயம், நல்லாறன் மொழி முதலியவற்றுட் காண்க' என்று உரை யாசிரியர் எழுதுவதிலிருந்து இதனை அறியலாம். மேலும் இந்நூலிலிருந்து நான்கு நூற்பாக்களை இவ்வுரையாசிரியர் தமது உரையில் மேற்கோள் காட்டுகிறார். நல்லாறன் என்னும் பெயர் நல்லாதன் என்றும் காணப்படுகிறது. ஆகவே இவர் பெயர் நல்லாறனா, நல்லாதனா என்பது உறுதியாகக் கூற முடியவில்லை.

## நல்லான் ( )

இவர் நல்லாப் பிள்ளையினும் வேறானவர்.

**நூல்:** தெய்வயானைப் புராணம்.

## நல்லிறையனார் (சங்ககாலம்)

இவர் இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. அகப் பொருள் பாடிய இறையனாரினும் இவர் வேறானவர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை இவர் பாடியுள்ளார். இப்பாடலில் இவர் காவிரியைச் சிறப் பித்துள்ளார்.

**நூல்:** புறம் 393.

## நல்லுருத்திரனார் (சங்ககாலம்)

புறநானூற்றில் 190-ஆம் பாடலைப் பாடியுள்ள சோழன் நல்லுருத்திரனினும் இவர் வேறானவர். இருவரும் ஒருவரே என்றும் அறிஞர் சிலர் கருதுகின்றனர். இவர் கலித்தொகையில் முல்லைக் கலியைப் பாடியவராவர்.

**நூல்:** கலித்தொகை 101 முதல் 117.

## நல்லூர்ச் சிறு மேதாவியார் (சங்ககாலம்)

**ஊர்:** நல்லூர்.

இவர் இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை; ஊரொடு பெயர் பெற்ற சங்கப் புலவர்களில் ஒருவர். இவரும் நன்பலூர்ச் சிறு மேதாவியாரும் ஒருவரென்று சிலர் கருது கின்றனர். இருவரும் வேருனவராவர்.

**நூல்:** நற்றிணை 282.

## நல்லெழுதியார் (சங்ககாலம்)

தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட அதியமான் நெடுமானஞ்சியின் வழியினர் எழுநி என்றழைக்கப் படுவர். இப்புலவரும் அவன் வழி வந்தவராதல் வேண்டும். இவர் பரிபாடற் புலவர்களில் ஒருவர்.

**நூல்:** பரிபாடல் 13.

இப்பாடல் திருமாலைச் சிறப்பிப்பது. கரிய மேகத்தைத் திங்களும் ஞாயிறும் பணிசெய்வது போலச் சங்கும் சக்கரமும் இருபுறமும் விளங்கத் திருமால் காட்சியளிப்பதாகப் புலவரால் சித்திரிக்கப்பட்டுள்ளது.

## நல்வழுதியார் (சங்ககாலம்)

இவர் பரிபாடற் புலவர்களில் ஒருவர். வழுதியார் என்பது பாண்டியர் குடியிற் பிறந்தவரென்பதைக் காட்டும்.

**நூல்:** பரிபாடல் 12.

இப்பாடல் வையையாற்றை வருணிப்பது. வையையாறு சையமலையிலிருந்து மரங்கள் முதலியவற்றை அடித்துவருவது இதன்கண் சித்திரிக்கப்பட்டுள்ளது.

## நல்விளக்கனார் (சங்ககாலம்)

**ஊர்:** நல்விளக்கு.

இவர் ஊரால் பெயர் பெற்ற சங்கப்புலவர்களில் ஒருவர். இவ்வூர் இப்பொழுது எங்குள்ளது என்று தெரியவில்லை.

**நூல்:** நற்றிணை 85.

### நல்வெள்ளியார் (சங்ககாலம்)

**வே.பெ:** மதுரை நல்வெள்ளியார், நல்லொளியார்.

**ஊர்:** மதுரை.

இவர் சங்ககாலப் பெண்பாற் புலவரில் ஒருவர்.

**நூல்:** அகம் 32; குறுந்தொகை 365; நற்றிணை 7, 47.

### நல்வேட்டனார் (சங்ககாலம்)

**வே.பெ.** மிளைகிழான் நல்வேட்டனார்.

**ஊர்:** மிளை; வேளாளர்.

**நூல்:** குறுந்தொகை 341; நற்றிணை 53, 210, 292, 349.

### நவநீத கிருட்டிண பாரதியார், சு. (20-நூ)

**சி.பெ:** பண்டிதமணி.

**ஊர்:** தஞ்சாவூர் மாவட்டம், கிருஷ்ணபுரம்.

**தந்தை:** சுப்பிரமணிய பாரதியார்; **தாய்:** தையலம்மை.

**வாழ்ந்த காலம்:** 1889-1952

இவர் இளமைக் காலத்தில் சர்க்கரை இராமசாமிப் புலவரிடம் தமிழ் கற்றார். பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் பண்டித அ. கோபாலையர், சோழவந்தான் அரசன் சண்முகனார் ஆகியோரிடமும் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். இளம் வயதிலேயே கவிபாடும் ஆற்றலையும் பெற்றார். தொடக்கத்தில் இவர் பாலக்காடு விக்டோரியா கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். பின்னர்த் திருவாவடுதுறை ஆதீன மகா சந்நிதானம் திருப்பெருந்திரு. அம்பலவாண தேசிக சாமிகளுக்குத் திருமுறை ஆராய்ச்சித் துணைவராக விளங்கினார். இரண்டு மூன்று ஆண்டுகள் திருவாரூர்க் கல்லூரியில் ஆசிரியராக இருந்தார். பின்னர் 1917 ஆம் ஆண்டில் இலங்கைக்குச் சென்று சுன்னாகம் இராமநாதன் மகளிர் கல்லூரியில் தமிழாசிரியராகப் பொறுப்பேற்றார். 1912 ஆம் ஆண்டில் 'உலகியல் விளக்கம்' என்ற நூலினை இயற்றினார். இந்நூலினைப் பதிப்பித்தவர் விபுலாநந்த

அடிகளென்பது குறிப்பிடத்தக்கது. 1923ஆம் ஆண்டு தொடங்கி ஏறக்குறைய 12 ஆண்டுகள் திருநெல்வேலி பரமேசுவரக் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணி ஆற்றினர்.

**நூல்:** பழநிப் பதிகம், உலகியல் விளக்கம், திருவாசக விரிவுரை.

## நவநீதன் (14-நூ)

**வே. பெ:** நவநீதநடனர்.

**நூல்:** நவநீதப்பாட்டியல்.

இந்நூல் பொருத்தவியல், செய்யுள் மொழியியல், பொது மொழியியல் என்ற மூன்று உறுப்புக்களையுடையது.

## நற்கம்பர் (19-நூ)

**ஊர்:** மதுரை.

**நூல்:** திரிசிரபுரம் முத்துச்சாமி முனிவர் இயற்றிய 'விஞ்ஞான தீபம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## நற்சேந்தனர் (சங்ககாலம்)

**இ.பெ.** சேந்தன்.

இவர் கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனரினும் வேறனவர்.

**நூல்:** நற்றிணை 128.

## நற்றங் கொற்றனர் (சங்ககாலம்)

**இ.பெ.** கொற்றன்.

நற்றன் என்பது இவர் தந்தையின் பெயராக இருக்கலா மென்று கருதப்படுகிறது.

**நூல்:** நற்றிணை 136.

## நற்றமனார் (சங்க காலம்)

நல்தமனார் எனப் பிரித்து யாவருடனும் உறவு கொள்ளும் இயல்பினரெனக் காரணப் பெயராகக் கொள்வர்.

**நூல்:** நற்றிணை 133.

## நன்பலூர்ச் சிறு மேதாவியார் (சங்க காலம்)

**ஊர்:** நன்பலூர்.

இவர் நல்லூர்ச் சிறு மேதாவியாரினும் வேறானவர். இவர் ஊரொடு பெயர் பெற்ற புலவர்களில் ஒருவர்.

**நூல்:** அகம் 94, 394.

## நன்னாகனார் (சங்ககாலம்)

**இ.பெ.** நாகன்.

**வே.பெ.** புறத்திணை நன்னாகனார்.

இவர் பெயர் நன்னாதனார் என்றும் காணப்படுகின்றது.

**நூல்:** புறம் 176, 376, 379, 381, 384.

## நன்னாகையார் (சங்க காலம்)

**வே.பெ.** கச்சிப்பேட்டு நன்னாகையார்.

**ஊர்:** கச்சிப்பேடு.

நாகையார் என்பது இவரது இயற்பெயர். நல் என்ற அடைமொழி பெற்று நன்னாகையார் என்று அழைக்கப் பெற்றார். இவர் பிறந்த கச்சிப்பேடு காஞ்சிபுரத்தின் புறத்தே உள்ள ஓர் ஊர். இளந்தச்சனார், பெருந்தச்சனார், காஞ்சிக் கொற்றனார் முதலிய சங்கப் புலவர்களும் இவ்வூரினரே. பெண்பாற் புலவராகிய நன்னாகையர் பாடிய எட்டு பாடல்களும் குறுந்தொகையின் கண்ணே தொகுக்கப் பெற்றுள்ளன.

**நூல்:** குறுந்தொகை 30, 118, 172, 180, 192, 197, 287, 325.

## நாகநாத பண்டிதர் (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம், சுன்னாகம்.

**தந்தை:** அம்பலவாணப் பிள்ளை; வேளாளர்.

**வாழ்ந்த காலம்:** 1824-1884.

இவர் வடமொழி தென்மொழி சிங்களம் ஆங்கிலம் என்னும் நான்கு மொழிகளிலும் வல்லவர். பட்டுக்கோட்டைக் கல்விக் கூடத்தில் கல்வி பயின்றார். சுன்னாகம் குமாரசாமிப் புலவர் இவருடைய மாணவர். முல்லைத்தீவு வழக்குமன்றத்திலும் கற்பிட்டி வழக்குமன்றத்திலும் துவிபாஷாவாதி என்ற பதவியில் பணியாற்றினார்.

**நூல்:** மானவ தருமசாத்திரம் (தமிழாக்கம்) பகவத்கீதை (தமிழாக்கம்) மேகதூதம் (தமிழாக்கம் ) கிதோபதேசம் (தமிழாக்கம்) சிசுபாலவதம் (தமிழாக்கம்). சாங்கிய தத்துவம் (தமிழாக்கம்).

## நாகப்பக் கவுண்டர் (       )

**நூல்:** துரைசாமிப் பிள்ளையவர்கள் மீது பஞ்சரத்தினப் பத ஜாவளி.

இந்நூல் ஈரோடு மாவட்ட முன்சீப் துரைசாமிப் பிள்ளையைப் புகழ்வது.

## நாகப்பச் செட்டியார் (18-நூ)

**ஊர்:** அருப்புக் கோட்டை; தேவாங்கர்.

இவர் இலக்கிய இலக்கணங்களைக் கற்றுத் தமிழ்ப் புலவராக விளங்கியவர்.

**நூல்:** வள்ளிநாயகம் பிள்ளை என்பவர் பாடிய திருப்பரங்கிரி மாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## நாகப்ப முதலியார், அ. (19-நூ)

**ஊர்:** சோழநாட்டில் பெருமாத்தூர்.

**தந்தை:** அருணாசல முதலியார்; செங்குந்தர்.

இவர் இலக்கண இலக்கியங்களைக் கற்றறிந்ததோடு வேதம், உபநிடதம், பதினெண்புராணம், அறுவகைச் சமய நூல்கள் முதலியவற்றை நன்கு ஓதி உணர்ந்தார். சுப்பராயஅடிகள் என்பாரை அறிவாசிரியராகக் கொண்டார்.

**நூல்:** அத்வைத சிந்தாமணி என்னும் ஞானசாரம்.

## நாகம் போத்தன் (சங்க காலம்)

**தந்தை:** நாகன்.

போத்தன் என்பது இவரது இயற்பெயர். நாகன் என்பது இவரது தந்தையின் பெயர். தந்தையின் பெயரோடு சேர்த்து இவர் நாகம் போத்தன் என்று அழைக்கப் பெற்றார்.

**நூல்:** குறுந்தொகை 282.

## நாகமணிப் புலவர் (20-நூ)

**வாழ்விடம்:** யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த நயினார் தீவு.

**வாழ்ந்த காலம்:** 1891-1933.

**நூல்:** நயினை திரோட்டகயமக அந்தாதி, நயினை மான்மியம்

## நாகம நாயகர்

**ஊர்:** மதுரை.

**நூல்:** இராமச்சந்திர வெள்ளைப் பொம்மைய நாயகர் என்பவர் இயற்றிய 'இதயதீபம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## நாகமுத்துப் பிள்ளை, உ. (       )

**ஊர்:** யாழ்ப்பாணம், வண்ணைநகர்.

**நூல்:** கா. வைத்தியலிங்கம் பிள்ளை இயற்றிய ஒருதுறைக் கோவை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## நாகமுத்துப் புலவர் (19-நூ)

**ஊர்:** திருச்சிராப்பள்ளி.

**நூல்:** தாயுமானவர் மீது பதிற்றுப் பத்தந்தாதி.

## நாகரத்தின நாயகர் (       )

**நூல்:** நியாயப் பிரகாசம் (தமிழாக்கம்).

## நாகரத்தினம்மாள் (        )

**வாழ்விடம்:** பெங்களூர்.

இவர் வேதாந்த நூல்களைக் கற்றுப் புலமை பெற்றவர்
**நூல்:** பஞ்சீகரண பௌதிக விவேக விளக்கம்.

## நாகராசன் (16-நூ)

**நூல்:** தினகரவெண்பா.

இந்நூல் பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்த தினகர பிள்ளை என்பவரைப் பெருமைப்படுத்துவதற்காகப் பாடப்பெற்றது. ஒவ்வொரு வெண்பாவும் திருக்குறளைப் பின் இரண்டு அடியாக அமைத்துப் பாடப் பெற்றது. இந்நூலின் பாட்டுடைத் தலைவராகிய தினகரபிள்ளை, வீரையபிள்ளை என்பவரின் மகன். தொண்டைநாட்டுக் கோவை மரபினர்; சீர் கருணீகர். குன்றை அச்சுதேந்திரனுக்கு அமைச்சராக இருந்தவர்.

## நாகலிங்க அடிகள் (19-நூ)

**ஊர்:** கோயம்புத்தூர்.

**நூல்:** திருவாமாத்தூர் முத்தாம்பிகை மீது அந்தாதி.

## நாகலிங்க ஐயர் (20-நூ)

இவர் துறையூர்ப் பெரியமடம் சிவப்பிரகாச சுவாமிகள் ஆதீனத்தில் ஆதீனப் புலவராக இருந்தவர்; இலக்கண இலக்கியப் புலமையும் கவிபாடும் ஆற்றலும் பெற்றவர்.

**நூல்:** கருணீகர் புராணம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## நாகலிங்க சாத்திரி, கெ, வ. (        )

**நூல்:** வேளாளர் இயல்பு.

இந்நூல் வேளாளரைச் சூத்திரர் என்பது தவறு என்றும் வைசிய மரபினரென்றும் காட்டுகின்றது. வேளாளர் இயல்பு பற்றித் தேவாரம் முதலிய நூல்களிலிருந்து ஆதாரங்கள்

காட்டப் பெற்றுள்ளன. இறுதியில் நெய்வேலி அம்மானை யிலிருந்து வேளாளர் பெருமை பேசும் பகுதி சேர்க்கப் பெற்றுள்ளது.

நாகலிங்க சாமிகள் - 1 ( )

**ஊர்:** கண்டநல்லூர்.

**நூல்:** ஆத்ம நாமம், ஏது சொருப காரியம், ஞானவந்தாதி பஞ்சகோசம், பஞ்சதசப் பிரகரணம், முத்துராமலிங்க சுவாமிகள் பாசுரம், வாசுதேவர் மனனம், நால்வர் துதி.

**முத்துராமலிங்க பாசுரம்:** இது வேதாந்த சிரவணோப தேசா நுட்டான சீவ சமாதி வைபவங்களை அமைத்துச் செய்த பாசுரமாகும்.

**நால்வர் துதி:** சைவசமயா சாரியார் நால்வரையும் துதிப்ப தோடு, அவர்களின் வயது, அவர்கள் முத்தியடைந்த நாள் ஆகியனவும் இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

நாகலிங்க சாமிகள் - 2 ( )

**ஊர்:** கோயமுத்தூர்.

**நூல்:** வேதகிரி முருகர் பதிற்றுப் பத்தந்தாதி.

புதுவை வேதபுரீசர் ஆலயத்துள் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள முருகக் கடவுள் மேல் பாடப் பெற்ற அந்தாதி. வெவ்வேறு வகையான பாவகைகளில் பத்துப் பத்துப் பாடலுக்கு ஒருமுறை சந்தம் வேறுபட நூறு பாடல்கள் கொண்டது.

நாகலிங்க தேசிகர் (19-நூ)

இவர் கோயிலூர் முத்துராமலிங்க தேசிகரிடம் வேதாந்த நூல்களைக் கற்றுத் தேறியவர்.

**நூல்:** சீவன் முத்திப் பிரகரணம், வாசுதேவர் மனனம்.

இந்நூல் 684 பாடல்களைக் கொண்டது.

இரண்டாவது நூல் 23 அதிகாரங்களையும் 611 செய்யுட் களையுங் கொண்டது.

நாகலிங்கபிள்ளை, சி. (        )

**ஊர்:** யாழ்ப்பாணத்தில் வதிரி.

**நூல்:** திருத்திலதைப்பதிப்புராணம், சுந்தர மூர்த்தி சுவாமிகள் சரித்திர நாமாவளி.

முதல் நூல் 10 படலங்களும் 486 செய்யுட்களும் கொண்டது.

நாகலிங்க முனிவர் (20-நூ)

**சி.பெ.** கச்சியடிகள், வண்ணக் களஞ்சியம்.

**ஊர்.** காஞ்சிபுரம் அருகில் உள்ள ஏகனும் பேட்டை.

**தந்தை:** சரவணப் பெருமாள் முதலியார்; **தாய்:** மனோன் மணி அம்மையார்; செங்குந்தர் மரபு.

**வாழ்ந்த காலம்:** கி.பி. 1865 — 1950.

காஞ்சி ஞானப் பிரகாச அடிகள்பால் துறவு பெற்றபின், நாகலிங்க முதலியார் என்ற பெயர், நாகலிங்க முனிவர் என மாறியது. இவர் பள்ளிக் கல்விக்குப்பின் சென்னைக்குச் சென்று பூவை கலியாண சுந்தர முதலியார், மயிலை சண்முகம்பிள்ளை, குன்றக்குடி ஆறுமுகத் தம்பிரான் முதலியவர்களிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். தக்ககாலத்தில் திருமணம் செய்து கொண்டு இல்லற வாழ்வை ஏற்றார். காஞ்சிபுரம் முத்துக்கச்சபேச்சுர சிவாச்சாரியாரிடம் சைவ தீட்சை பெற்றார். சென்னையில் சிவனடியார் திருக் கூட்டத்தைத் தொடங்கிச் சைவப் பணியாற்றினார். மெய்கண்ட சந்தான சபையின் துணைத் தலைவராகப் பணியாற்றி இதன் ஆதரவில் தேவாரப் பாடசாலை ஒன்றையும் நடத்தினார். மெய்கண்டான் கல்லூரியின் வாயிலாகப் பலருக்குச் சைவசித்தாந்த நூல்களைக் கற்பித்தார். திருவாவடுதுறை ஆதினத் தலைவர்களின் உதவியுடன் பதிப்பகம் ஒன்று ஏற்படுத்திப் பல நூல்களை அச்சிறப்பதிப்பித்தார். பாண்டித்துரைத் தேவரின் வேண்டுகோளின்படி சிவஞான போதச்சிற்றுரையை அழகிய பதிப்பாக வெளி

யிட்டார். சைவ சித்தாந்த நூல்கள் பதினன்கினையும் மெய்கண்ட சாத்திரம் என்ற பெயரில் ஒரே தொகுதியாக உரையுடன் வெளியிட்டார். இதனால் திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் இவருக்கு மெய்கண்ட சாத்திரப் பிரசாரகர் என்ற சிறப்புப் பட்டத்தை வழங்கினர். இவர் திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், தாயுமானவர் பாடல், பன்னிரு திருமுறை, காஞ்சிப் புராணம், காஞ்சிக் கட்டளைக் கலித்துறைப் புராணம், திருப்புகழ், செங்குந்தர் பிரபந்தத் திரட்டு, தமிழ் அகராதி முதலிய நூல்களையும் பதிப்பித்துள்ளார். செங்குந்தர் மக்களின் முன்னேற்றம் கருதி ஆங்காங்கே சங்கங்கள் அமைத்ததோடு, 1927ஆம் ஆண்டில் 'செங்குந்தமித்திரன்' என்ற இதழையும் தொடங்கினர். 1944ஆம் ஆண்டில் சென்னையில் திரு.வி. கலியாண சுந்தர முதலியார் தலைமையில் இவருக்கு முத்துவிழா நடைபெற்றது. 9-7-1950ஆம் ஆண்டில் காலமானர்.

**நூல்:** திருத்தணிகை வண்ணமஞ்சரி; தென்கடம்பன்துறை பதிற்றுப்பத்து; வடபழநிமயிலேறும் பெருமாள் மாலை; இரட்டை மணிமாலை; திருவாமாத்தூர் வண்ணங்கள்; திருவெறும்பியூர்ப் புராணம்;

## நாகலிங்க வாத்தியார் (20-நூ)

**ஊர்:** சேலம் மாவட்டம் விலாரிப் பாளையம்.

இவர் திண்ணைப்பள்ளி யொன்று வைத்து நடத்தினர். இராமாயணம், பாரதம் முதலிய நூல்களைப் பலருக்குப் பாடஞ் சொல்லிக் கொடுத்தார்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## நாகன் தேவனர் ( )

**நூல்:** திருவள்ளுவ மாலையில் "தாளாளர் மலர்ப்பொய்கை" என்று தொடங்கும் செய்யுள்.

## நாகசாமி ராவு ( )

**நூல்:** துருவச் சரித்திரக் கீர்த்தனை.

இந்நூல் துருவனது வரலாற்றினைக் கூறுவது. கீர்த்தனை, விருத்தம், வசனம் முதலியன கலந்துவர நாடக முறையில் அமைந்தது.

## நாகி செட்டியார் செ. (19–நூ)

**ஊர்:** சேலம், செவ்வாய்ப் பேட்டை.

**தந்தை:** சென்னவசவப்ப செட்டியார்.

இவர் ஆங்கிலம், தமிழ், வடமொழி, தெலுங்கு ஆகிய மொழிகளைக் கற்றவர்; வீரசைவ நூல்களில் மிகுந்த பயிற்சியுடையவர். சென்னை மத்திய சிறையில் அதிகாரி யாகப் பணியாற்றியவர்.

**நூல்:** சித்தாந்த சிகாமணி உரை.

சித்தாந்த சிகாமணி துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளால் தமிழாக்கம் செய்யப்பெற்றது.

## நாகூர் முகம்மதுப் புலவர் ( )

**ஊர்:** நாகூர்.

இவர் ஊர்ப் பெயரோடு சேர்த்து இயற்பெயர் போல நாகூர் முகம்மதுப் புலவர் என்றே அழைக்கப் பெற்றார்.

**நூல்:** ஊஞ்சற்பாட்டு.

## நாகூர் முத்துப் புலவர் (17–நூ)

**ஊர்:** நாகூர்.

இவர் ஊர்ப்பேயரோடு சேர்த்து இயற்பெயர் போல நாகூர் முத்துப்புலவரென்றே வழங்கப்பெற்றார். கடிகை முத்துப்புலவரும் இவரும் ஒருகாலத்தவரென்று கருதப் படுவதால் இவர் கி.பி. 17ஆம் நூற்றாண்டினராவர். எட்டையபுரம் அவைக்களப் புலவராகப் பணியாற்றியவர். இவருடைய பெயரால் வழங்கப் பெறும் தனிப்பாடல்கள் பல.

**நூல்:** வெங்கடேசஎட்டப்பன் மேல் பாடிய பாடல்கள்.

## நாகேச ஐயர் (19–நூ)

**ஊர்:** பட்டுக்கோட்டை.

**தந்தை:** இராமசாமி ஐயர்.

இவர் பல நாடகங்களும் பல தனிப்பாடல்களும் பாடியுள்ளார். தமிழகத்திற்குத் தல யாத்திரை வந்து இராமேசுரம் முதலிய தலங்களிலுள்ள கடவுளர் பேரிலும் பல கவிகள் இயற்றியுள்ளார்.

**நூல்:** அருச்சுன நாடகம், சுபத்திரை நாடகம், கந்தசாமி பேரில் நாணிக்கண் புதைத்தல், அமுத நுணுக்கம்.

**கந்தசாமி பேரில் நாணிக்கண் புதைத்தல்:** இது இலங்கை அடைக்கலந்தோட்டத்தில் கோயில் கொண்டுள்ள கந்தசாமி பேரில் நாணிக்கண் புதைத்தல் என்ற துறையில் பாடப் பெற்றது; 100 செய்யுட்கள்.

**அமுத நுணுக்கம்: இது ஒரு விடமருத்துவ நூல்.**

## நாச்சியார் (          )

**பார்க்க:** ஆண்டாள்.

## நாதகுப்தனார் (7-நூ)

இவர் குண்டலகேசியின் ஆசிரியர்; பௌத்தர். இவர் எக்காலத்தில் வாழ்ந்தார், இவர் வரலாறு என்ன என்பது தெரியவில்லை. 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென்று ஒரு கருத்துண்டு.

**நூல்:** குண்டலகேசி.

இது ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று. இந்நூல் ஒரு வணிகக் கன்னியின் கதையைக் கூறுவது. குண்டலகேசி, அருக்க சந்திரன் என்பவரிடத்தில் பௌத்த தருமத்தைக் கற்று நாவலந்தீவிலுள்ளாரை வாதத்தில் வென்று பௌத்தராக்குவேன் என்று உறுதி கொண்டு, பலரும் செல்லும் பேட்டை வாயில் வழியில் நாவல் மரத்தினை நட்டு அவ்வழிச் செல்வாரைத் தடுத்துத் தன்னுடன் வாதிடவந்தாரை வென்று பௌத்தராக்கினார். ஆவனம் என்ற நகரில் நாதகுப்தனார் என்ற அருக்கரையும் வென்றாள். இதுவே இந்நூலின் கதை. இந்நூலில் சமணசமயக் கொள்கைகள் மறுக்கப் பட்டுள்ளன. இம்மறுப்புக்களுக்கு விடையளிக்கவே நீலகேசி என்ற நூல் தோன்றியது.

## நாதமுனி (10-நூ)

இவர் ஆசாரிய பரம்பரையில் முதல்வரென்று கருதப்படு கின்றார். நாதன் என்பது இவருடைய இயற்பெயர். நம்மாழ்வாரால் தமக்கு உபதேசிக்கப்பட்ட அருத்தங்களை அடையவே எப்பொழுதும் மனனஞ் செய்து கொண்டிருக் கின்ற அந்தணராதலின் நாதமுனி என வழங்கப் பெற்றார். ஆழ்வார்கள் காலத்திற்குப் பின் நம்மாழ்வாரது திருவாய் மொழியினை யாவருங் கைக் கொள்ளத் தக்க முறையில் பாராயணத்திலும் ஆட்சியிலும் வைத்தவர் இவரேயாவர்.

இவர் காலங்குறித்துக் கருத்துவேறுபாடு உண்டு. பு.ரா. புருடோத்தம நாயடு அவர்கள் இவர் கி. பி. 825 - 918 இல் வாழ்ந்தவர் என்பர். ரா. சுப்பிரமணியப்பிள்ளை அவர்கள் இவர் காலத்தைக் கங்கை கொண்ட சோழபுரத்தில் சோழராட்சி தொடங்கிய காலம் என்பர். அங்குச் சோழராட்சி கி.பி. 1011 க்குப்பின் ஆதலின் இவர்காலம் கி.பி. 11 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியே என்பர். வேறு சிலர் இவர் வாழ்ந்த காலம் பிற்பகுதி என்று கொண்டு கி.பி. 1063-1117 என்பர். இவர் காட்டுமன்னார் கோயிலில் அவதரித்தவராவர்.

**நூல்:** நியாயதத்துவம், யோகரகசியம், புருஷநிர்ணயம்.

## நாதமுனிநாயுடு, நா. (19-நூ)

**ஊர்:** சென்னை.

**தந்தை:** நாராயணசாமி நாயுடு.

இவர் தம் தந்தையாரிடமே கல்வி கற்றுப் புலமை பெற்றார்.

**நூல்:** மோசூர் முனிசாமி முதலியார் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## நாதமுனிப்பிள்ளை, கு. (20-நூ)

**வே.பெ.** நாதமுனி தாசர்.

**ஊர்:** செய்யாறு கோட்டம் அத்திமாநகர்.

**தந்தை:** குப்பையபிள்ளை; **தாய்:** பூங்களியம்மாள்; சரட்டுக் கருணீகர் குலம்.

**வாழ்ந்த காலம்:** கி.பி. 1857–1925.

இவர் தம்முடைய தமையனாரிடமும் பிற தமிழறிஞர் களிடமும் தமிழ்நூல்களைக் கற்று தேர்ந்தார். செங்கமலம் மாள் என்ற பெண்மணியை 1879ஆம் ஆண்டில் மணந்தார். இவ்வம்மையாரும் நன்கு பாடும் திறம் பெற்றவர். அத்தியூரின் கணக்குப்பிள்ளை வேலையை மேற்கொண்டும் தமிழாய்வில் மிக்க கவனம் செலுத்தினார். இரதபந்தனம், அட்டபந்தனம், நாகபந்தனம் ஆகிய சித்திரகவிகளைப் பாடுவதிலும் வல்லவர்.

**நூல்:** பெருநகர் திருவூரக வரதராசப் பெருமாள் பஞ்சரத்தினம், பெருந்தேவத்தாயார் பஞ்சரத்தினம்.

வரதராசப் பெருமாள் பஞ்சரத்தினம் என்ற நூல், நூலாசிரியரின் தமையனார் கந்தசாமிப் பிள்ளையால் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இந்நூலில் வடசொற்கள் மிகுதியாக காணப் பெறுகின்றன.

## நாதமுனி முதலியார் (20-நூ)

**ஊர்:** சென்னை, மயிலாப்பூர்.

இவர் தணிகாசல முதலியாரிடம் தமிழ் கற்றார். புராணச் சொற்பொழிவாற்றுவதில் திறமைபெற்று விளங்கியமையால் புராணரத்தினகரம் என்ற சிறப்புப் பட்டத்தினையும் பெற்றார்

**நூல்:** திருமயிலைத் தலபுராணம்.

இது 11 படலம் 580 செய்யுளைக் கொண்டது.

## நாமலார் மகன் இளங்கண்ணன் (சங்ககாலம்)

**தந்தை:** நாமலார்.

கண்ணன் என்ற பெயருடைய புலவர்களிலிருந்து வேறு படுத்த இவர் இளங்கண்ணன் என்று அழைக்கப்பெற்றார். தந்தையின் பெயரொடு சேர்த்து இவர் பெயர் நாமலார் மகன் இளங்கண்ணன் என்று வழங்கப்படுகின்றது.

**நூல்:** குறுந்தொகை. 250.

## நாயனு கண்ணு முதலியார், வி, செ.(20-நூ)

**நூல்:** திருவொற்றியூர் மான்மியத் தெளிவு, தியாகேசர் தோத்திரப்பா.

## நாரணன் ( )

**ஊர்:** நன்னிலம்.

**நூல்:** சுபத்திரா கலியாண நாடகம்.

## நாரதர் ( )

**நூல்:** பஞ்சபாரதீயம்.

இப் பெயருடைய நூலொன்று இருந்தது என்பது சிலப் பதிகாரத்திற்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையினுல் தெரிய வருகிறது. இவரது உரையில் 'இனி இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை, பெருங்குருகும் பிறவும் தேவவிருடி நாரதன் செய்த பஞ்சபாரதீயம் முதலாக உள்ள தொன் னூல்களும் சிறந்தன'' என்று குறிப்பிட்டுள்ளார். ஆதலின் அவர் காலத்திலேயே இந்நூல் மறைந்து விட்டதென்பது தெளிவு. சிலப்பதிகாரம் வேனிற் காதை, 'செம்பகை யார்ப்பே கூட மதிர்வே, வெம்பகை நீக்கும் விரருளி யறிந்து' என்னும் அடிகளுக்கு உரை கூறிய அடியார்க்கு நல்லார் இந்நூலிலிருந்து ஒரேயொரு பாடலே மட்டும் மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

## நாரப்ப நாயக்கர் ( )

**நூல்:** ஊஞ்சல்வனம் என்னும் முண்டி பாளையத்து ஸ்தல மகத்துவம். (1886)

இந்நூல் தல வரலாறும் தோத்திரமுமாக அமைந்துள்ளது.

## நாராயண உபாத்தியாயர் (19-நூ)

**ஊர்:** சேமங்கலம்.

**நூல்:** இயற்றமிழாசிரியர் இராமாநுசக் கவிராயர் எழுதிய நன்னூல் விருத்தியுரைக்கு வழங்கிய சாற்றுக் கவி.

## நாராயண ஐயர் (20-நூ)

**ஊர்:** பாண்டி நாட்டில் மானுமதுரை.

**தந்தை:** நாகுவையர்; **தாய்:** பருவதம் அம்மையார்.

**வாழ்ந்தகாலம்:** 31-12-1857 — 1914.

இவர் 1874 ஆம் ஆண்டில் மெட்ரிகுலேஷன் தேர்வில் முதல்வராகத் தேறி கும்பகோணத்தில் இரண்டாண்டுகள் இடைநிலை வகுப்பில் படித்து அங்கும் முதன்மையாகத் தேறினார். சென்னை மாநிலக் கல்லூரியில் 1879 ஆம் ஆண்டில் பி.ஏ., தேர்வில் வெற்றி பெற்றார். இரசாயன நூலிலும் பூதநூலிலும் சென்னை மாநிலத்திலேயே முதன்மையாகத் தேறி ஆரணிப் பெருநிலக் கிழாரின் தங்கப் பதக்கத்தினைப் பெற்றார்.

சென்னை உயர்நீதி மன்ற வழக்கறிஞரான பாலாசிராயர் என்பவரிடம் அலுவல் புரிந்து பின்னர்த் தம்மை வழக்கறிஞராகப் பதிவு செய்து கொண்டு 1883 ஆம் ஆண்டில் தொழில் தொடங்கினார். இத்தொழிலில் மிகுந்த சிறப்பினைப் பெற்றார். பொதுநலத் தொண்டில் ஈடுபட்டு மதுரையில் 'பிரம ஞான மந்திரம்' என்ற சபையை ஏற்படுத்தினார். அங்கு நூலகம் ஒன்றை ஏற்படுத்தினார். மதுரைத் தாலுக்கா போர்டு உறுப்பினராகவும் உதவித் தலைவராகவும் இருந்து தொண்டாற்றினார். மங்கம்மாள் அறச்சாலைக் கட்டிட மாளிகைகள் இவருடைய முயற்சியால் கட்டப் பெற்றன என்று கூறுகின்றனர்.

தமிழ் மொழியிலும் தமிழ் நூல்களிலும் இவருக்கு மிகுந்த அன்பு உண்டு. தேவாரம் திருவாசகம் திருவாய்மொழி திருமந்திரம் முதலிய நூல்களை நன்கு கற்று அவைகளை நடைமுறைக்குக் கொண்டுவந்தார். ஆங்கில நூல்கள் பலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார். பதஞ்சலியோக சூத்திரம் என்ற நூலை வடமொழியிலிருந்து தமிழாக்கம் செய்து வெளியிட்டார். பூரண சந்திரோதயம் என்ற ஓரிதழையும் நடத்தினார்.

**நூல்:** சனாதனதர்மம், பிராசீன தர்மங்களின் உயர்வும் இக்கால ஆசாரங்களும், இந்துமத தூடணையின் பரிகாரம், மனிதனின் வம்சாவளியின் உண்மை, அன்னி பெசண்டு அம்மையார் சொற்பொழிவுகள், ஒழுக்கமுறை நூல், சர்வ சமய ஐக்கிய மத்திய சாரசங்கிரகம், மௌனவாக்கு, சன்மார்க்க தீபம், சன்மார்க்க முறையில் இதோபதேசம்.

## நாராயண ஐயர், தெ. (20-நூ)

**நூல்:** 'கணித விளக்கம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

'கணித விளக்கம்' என்ற நூல் இராசு முதலியார் என்பவரால் இயற்றப் பெற்றது.

## நாராயணக் கவிராயர் (20-நூ)

**ஊர்:** பாண்டி நாட்டில் திருநெல்வேலி.

**தந்தை:** கண்ணப்பிரான் கவிராயர்.

இவர் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைப் பாக்களையும் பாடுந்திறம் பெற்றிருந்ததால் 'நாற்பாப்புலி'என்று சிறப்புப் பெயர் பெற்றார். 'மகாவித்துவ சிரோன்மணி' என்ற சிறப்புப் பெயரும் இவருக்கு அமைந்திருந்தது.

**நூல்:** பல நூல்களுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரங்கள்.

## நாராயண சந்த வர்க்கர் நைட்டு (    )

**நூல்:** நூதன இந்தியா-இந்தியாவின் நூதனஸ்திதி.

இந்நூல் இந்திய அரசாட்சித் தொடர்பான சீர்திருத்தங்களை எளிதாக விளக்குவது. இதில் 16 அத்தியாயங்கள் உள.

## நாராயணசாமி (    )

**ஊர்:** கடுவை.

**தந்தை:** அமுதசாகரர்.

இவர் வடமொழி, தென்மொழிப் புலமையோடு கணித நூற் புலமையும் பெற்றவர்.

**நூல்:** விதான மாலை.

இந்நூல் 25 படலங்களையும் 535 கலித்துறைகளையும் கொண்டது.

## நாராயணசாமி, ஆர். (20-நூ)

**ஊர்:** மதுரை மாவட்டம், தேவாரம்.

**பிறப்பு:** 28-12-1893.

இவர் ஒரு பத்திரிகையாளர். காலஞ்சென்ற நேரு அவர்கள் எழுதிய 'சோவியத் ரஷியா' என்ற நூலினையும், டட் என்பவர் எழுதிய 'சரோசினி நளினி' வாழ்க்கை வரலாற்றினையும் மொழி பெயர்த்துள்ளார்.

**நூல்:** சுப்பிரமணியபாரதியார் (வாழ்க்கை வரலாறு).

## நாராயண சாத்திரி டி. எஸ், (20-நூ)

இவர் பி.ஏ.,பி.எல்., பட்டம் பெற்றவர்; தமிழ்ப் புலமையும் செய்யுளியற்றுந் திறமையும் பெற்றவர்; ஆங்கிலத்திலும் வடமொழியிலும் நாடகங்கள் இயற்றியுள்ளார்.

**நூல்:** போசசரித்திரம்.

## நாராயணசாமி ஐயர் - 1 ( )

**ஊர்:** கும்பகோணம்.

**நூல்:** நடுவேனிற்கனவு.

இந்நூல் ஷேக்ஸ்பியர் எழுதிய Mid-Summer Night's Dream என்ற நூலின் தமிழாக்கம்.

## நாராயணசாமி ஐயர் - 2 (20-நூ)

**வே.பெ.** நாராயண அவதானிகள்.

**ஊர்:** தஞ்சை மாவட்டம் திருத்துறைப்பூண்டி கூற்றத்திலுள்ள பின்னத்தூர்.

**தந்தை:** வேங்கடகிருட்டின அவதானிகள்.

**தாய்:** சீதாலட்சுமி அம்மையார்.

**வாழ்ந்த காலம்:** 1862–1914.

இவர் தந்தையார் அறநோக்கில் மருத்துவம் செய்தவர். இக் குடும்பத்தில் பிறந்த இவர் உரிய காலத்தில் பள்ளிக் கல்வியைக் கற்றபின் வடமொழியையுங் கற்று மறை ஓதுதலையும் மேற்கொண்டார். யாழ்ப்பாணம் ஆறுமுகநாவலரின் மருகரான பொன்னம்பலம் பிள்ளையிடம் தமிழ் கற்றார். தொல்காப்பியத்தில் நல்ல பயிற்சி பெற்றார். சங்கநூல்களை உரையோடு வெளியிடுவதற்கு உ.வே. சாமிநாதையரைப் போல் நாராயணசாமி ஐயரும் பெருமுயற்சி செய்தார். குறுந்தொகையை நன்கு ஆய்ந்தார். நற்றிணைக்கு உரை எழுதி முடித்து அச்சிட்டார். அகநானூற்றிற்கு உரை எழுதும் பணியையும் மேற்கொண்டார். வடமொழியில் காளிதாசர் இயற்றிய பிரகசன நாடகத்தைத் தமிழாக்கம் செய்தார். தமிழ் நாட்டின் பழைய வரலாறுகளை ஆராய்வதில் மிகுந்த விருப்பங்காட்டினார். கோயில்களிலும் பிற இடங்களிலும் வெட்டியுள்ள கல் வெட்டுக்களைப் படித்தறியும் ஆற்றல் பெற்றார். தமிழ்ப் புலவர்களின் வரலாறுகளை நன்கு அறிந்து அவர்கள் அவ்வச் சமயங்களில் பாடிய செய்யுட்களை மனத்தே அமைத்து வேண்டிய போது எடுத்துரைக்கும் ஆற்றல் பெற்றிருந்தார். தொல்காப்பியப் பொருளதிகாரத்திற் காட்டிய மேற்கோள்களுக்கெல்லாம் அகர வரிசை ஒன்றைத் தயார் செய்தார். 1899ஆம் ஆண்டு முதல் 1914ஆம் ஆண்டு சூலைத்திங்கள் 30ஆம் நாள் காலமாகும் வரை கும்பகோணம் உயர் நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினார்.

**நூல்:** நீலகண்டேச்சுரக்கோவை, பிரகசன நாடகம், இடும்பாவன புராணம், இறையனார் ஆற்றுப்படை, சிவபுராணம், களப்பாள் புராணம், அரதைக் கோவை, வீரகாவியம், சிவகீதை, நரிவிருத்தம், மாணாக்கராற்றுப்படை, இயன் மொழி வாழ்த்து, தென்தில்லைக் கலம்பகம், பழையது விடுதூது, மருதப் பாட்டு, செருப்பு விடுதூது, தமிழ்நாயக மாலை, இராமாயண அகவல், நற்றிணையுரை.

## நாராயணசாமி ஐயர் - 3 (        )

**ஊர்:** புதுச்சேரி.

**நூல்:** சாரங்கதரன் சரித்திரப்பா. (1891)

## நாராயணசாமி ஐயர் - 4 (20-நூ)

**நூல்:** 'சங்கர விசயம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'சங்கர விசயம்' என்னும் நூல் கோவிந்தசாமி ஐயர், மு. என்பவரால் இயற்றப்பெற்றது.

## நாராயணசாமி ஐயர், அ. (20-நூ)

**ஊர்:** மதுரை மாவட்டம், பிள்ளையார் பட்டி.

**தந்தை:** அண்ணுசாமிஐயர்.

**நூல்:** சங்கிரக இராமாயணம்.

## நாராயணசாமிக் கவிராசர் (19-நூ)

**ஊர்:** சாமிமலை.

**நூல்:** முருகக்கடவுள் அந்தாதி, முருகக்கடவுள் கலம்பகம்.

இந்நூல்கள் சாமிமலை முருகக்கடவுள் மீது இயற்றப் பெற்றவை.

## நாராயணசாமி தாசர் (19-நூ)

**ஊர்:** வல்லிபுரம்.

**நூல்;** 'பகவத்யான கீர்த்தனம்' என்னும் நூலினைப்பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'பகவத்யான கீர்த்தனம்' என்னும் நூல் கோவிந்தராச பாகவதர், ப. என்பவரால் இயற்றப்பெற்றது.

## நாராயணசாமி நாயகர் - 1 (19-நூ)

**ஊர்:** தஞ்சாவூர் மாவட்டம் முத்தாம்பாள்புரம்.

இவர் இலக்கணப் பாடசாலையொன்று அமைத்துப் பலருக்குக் கல்வி கற்பித்தார்.

**நூல்:** அநுபவானந்த தீபிகை, திருக்கண்ணபுர புராணம், நன்னெறித் தங்கம் பாட்டு.

**அநுபவானந்த தீபிகை:** இது திருவடிப்புகழ்ச்சி மாலை முதலிய பல சிறுபகுதிகளில் பல்வேறு வகையான பாடல்களைக் கொண்டு அமைந்தது. 527 செய்யுட்கள்.

**திருக்கண்ணபுர புராணம்:** இந்நூல் வடமொழியிலுள்ள புராணத்தைப் பின்பற்றித் தஞ்சாவூர் கோட்டாட்சித் தலைவராயிருந்த கருணபுரம் வீராசாமி நாயகர் கேட்டுக் கொண்டதற்கேற்பத் தமிழில் பாடப் பெற்றது; 20அத்தியாயங்கள், 1030 செய்யுட்கள்.

**நன்னெறித் தங்கம் பாட்டு:** சின்ன தங்கச்சிந்து, பெரிய தங்கச் சிந்து, கட்டு தங்கச்சிந்து முதலிய சிற்றின்பம் பற்றிய பாடல்களைச் சிறுவர்களும் பாடுதல் கேட்டு உளம் நொந்து ஆசிரியர் நன்னெறிபற்றிப் பாடியிருக்கிறார். 184 செய்யுட்கள்.

## நாராயணசாமி நாயகர் - 2 ( )

**நூல்:** குருவருட்பேறு (1896).

## நாராயணசாமி நாயகர், ல, (20-நூ)

**நூல்:** இராமநந்த சாமிகள், நிச்சல. என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## நாராயணசாமி நாயகர், வெ. (19-நூ)

**தந்தை:** வெள்ளையப்ப நாயகர்.

இவர் நாகூரிலிருந்த கா. முகம்மது புலவர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்.

**நூல்:** அபிராமியம்மன் பதிகம், இசைப் பாடல்கள், ஓவியப் பாடல்கள்.

## நாராயணசாமி நாயுடு - 1 ( )

**நூல்:** 'கேமன் முனிவர் வெண்பா வந்தாதி'

## நாராயணசாமி நாயுடு - 2 (19-நூ)

**வாழ்விடம்:** வேலூர்.

**நூல்:** தமயந்தி நாடகம். (1871)

இந்நூலுக்கு 'நளச்சக்கரவர்த்தி நாடகம்' என்ற பெயரும் உண்டு. நைடதச் செய்திகள் நாடக அமைப்புப் பெற்றுள்ளன.

## நாராயணசாமி நாயுடு, பா. (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம் தச்சநல்லூர்.

**தந்தை:** பாலு நாயுடு;

காவல்துறை அதிகாரியாகத் தமது தொழிலைத்தொடங்கிய இவர் ஓய்வு நேரங்களில் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்; கவிபாடும் திறமையும் பெற்றார். முருகக்கடவுள் மீது பாமாலைகள் பாடினார்.

**நூல்:** நெட்டூர்ப் புராணம்.

சிந்துபூந்துறை தட்சணாமூர்த்தி மடத்தின் தலைவர் வேதநாயகஅடிகள் கேட்டுக் கொண்டதற்கிணங்க இப் புராணம் இயற்றப் பெற்றது; 456 பாடல்கள். இடையே சந்தப் பாடல்கள் அமைந்தது.

## நாராயணசாமி நாயுடு, பெ. (19-நூ)

**ஊர்:** புதுச்சேரி பாகூர் கோட்டம் மணப்பட்டு.

**தந்தை:** பெரியதம்பி நாயுடு.

இவர் மணப்பட்டு என்ற சிற்றூரில் அதிகாரியாகப் பணி யாற்றியவர்; பலருக்குக் கல்வி கற்பிக்கும் பணியையும் மேற்கொண்டிருந்தார்.

**நூல்:** 'மனுச்சோழச் சக்கரவர்த்தி வாசகப்பா' 'சாரங்கதரன் சரித்திரப்பா', 'சிறுத் தொண்டநாயனர் சரித்திரப்பா. இவையனைத்தும் நாடக நூல்கள்.

## நாராயணசாமிப் பிள்ளை - 1 ( )

**நூல்:** திருவரங்கத்தில் எழுந்தருளிய அரங்கர் அலங்கார மாலை.

இந்நூலின் ஒவ்வொரு செய்யுளிலும் ஒவ்வொரலங்காரத்தின் இலக்கணமும் இலக்கியமும் அரங்கநாதன் தொடர்பாக வந்துள்ளமையால் இப்பெயர் பெற்றுள்ளது. இந்நூலில் பல அணிகளின் இலக்கணமும் இலக்கியமும் அமைந்துள்ளன; 100 செய்யுட்கள்.

## நாராயணசாமிப் பிள்ளை - 2 ( )

**ஊர்:** பெங்களூர்.

**நூல்:** சித்திரங் காட்டிச் சத்தியம் நிறுத்திய கதை (1879), சுக்கிரீவ பய நிக்கிரகம்(1891), மங்களவல்லி விலாசம்(1882) மெய்கண்ட முதலியார் கீர்த்திமாலை (1901).

முதல் நூல், உலக இயற்கை இப்படிப்பட்டது என்று உயர்ந்தோருரைத்த நீதிவசனங்களையும் மற்றும் பல பழமொழிகளையும் பொருத்தமான கதைகளையும் ஆங்காங்குக் காட்டிக்கற்பித்து எழுதப்பெற்றது; உரைநடையிலமைந்தது.

இரண்டாவது நூல் இராமாயணத்திலுள்ள ஒரு நிகழ்ச்சி பற்றி உரைநடையிற் கூறுவது.

## நாராயணசாமிப் பிள்ளை - 3 ( )

**ஊர்:** வேலூர்.

**நூல்:** இந்திர சகன சபா, உருக்மாங்கத நாடகம், உருக்மாங்கத விலாசம், தமயந்தி நாடகம், மகாபாரதம் ஆரண்யபர்வம்-நச்சுப்பொய்கை, மங்களவல்லி விலாசம்.

## நாராயணசாமிப் பிள்ளை - 4 (        )

**ஊர்:** புதுக்கோட்டை.

**நூல்:** 'திருத்தணிகாசலயமக வந்தாதி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'திருத்தணிகாசலயமக வந்தாதி' என்னும் நூல் சொக்கலிங்க தேசிகர், ம. என்பவரால் இயற்றப் பெற்றது.

## நாராயணசாமிப் பிள்ளை, கி. (19-நூ)

**ஊர்:** சென்னை இராயபுரம்.

**நூல்:** 'விநாயகர் பாமாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'விநாயகர் பாமாலை' என்னும் நூலினை அண்ணாமலை முதலியார், ஆ. என்பவர் இயற்றியுள்ளார்.

## நாராயணசாமிப் பிள்ளை, கோ. (19-நூ)

**ஊர்:** திரிசிபுரம்.

**தந்தை:** கோவிந்தபிள்ளை.

இவர் தம் தந்தையாரைப் போலவே கல்வி கேள்விகளில் புலமை பெற்றார். சென்னையில் ஆசிரியர் தொழில் புரிந்தார்.

**நூல்:** இருபா இருபஃது, சீரங்கபட்டண சரித்திரம், மாமி மருமகள் வாழ்க்கை.

## நாராயணசாமிப் பிள்ளை. தி.வி. (19-நூ)

**நூல்:** திருவெவ்வளூர் அந்தாதி (1867)

இந்நூல் 108 திருப்பதிகளுள் ஒன்றும் இப்பொழுது திருவள்ளூர் என வழங்கப் பெறுவதுமாகிய திருவெவ்வளூர்ப் பெருமான் மீது பாடப் பெற்ற பிரபந்தம். இந்நூலின் ஈற்றில் சில தனிச் சித்திரக்கவிகள் உரை முதலிய விளக்கங்களுடன் தரப்பட்டுள்ளன.

## நாராயணசாமிப் பிள்ளை, ம (19-நூ)

**ஊர்:** தஞ்சாவூர் மாவட்டம் மன்னார்குடி.

இவர் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணி யாற்றினார். தனிப்பட்ட முறையிலும் பலருக்குத் தமிழ்க் கல்வி கற்பித்தார். இவருடைய மாணவர்களில் நற்றிணைக்கு உரையெழுதிய நாராயணசாமி ஐயர் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

**நூல்:** ப. சோமசுந்தர தேசிகர் இயற்றிய 'சிவாலய மான் மியக் கோவை' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## நாராயணசாமிப் பிள்ளை, வி. (19-நூ)

**நூல்:** சங்கீத மஞ்சரி ஜாவளிகள் (1888).

இந்நூலில் சில தோத்திரக் கீர்த்தனைகள் உள்ளன. ஆங்கில அரசாட்சியையும் விக்டோரியா ராணியையும் புகழ்ந்து கூறும் கீர்த்தனங்கள் ஈற்றில் உள்ளன.

## நாராயணசாமிப் பிள்ளை, வே. (20-நூ)

**வாழ்விடம்:** தஞ்சை மாவட்டம் நாகப்பட்டினம்.

**தந்தை:** வேங்கடாசலம் பிள்ளை.

இவர் நாகப்பட்டினத்தில் புத்தகக்கடை வைத்து வணிகம் நடத்தியவர். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, முத்து வீரைய உபாத்தியாயர் முதலியோரிடம் தமிழ் நூல்களைக் கற்றார். பின்னர் மலையாள நாட்டிற்குச் சென்ற போது மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம் பிள்ளைக்குத் தமிழ் நூல்களைக் கற்பித்தார். சுவாமி வேதாசலம் என்ற மறை மலையடிகளார், நாகூர் குலாம்காதிர் நாவலர் ஆகியோர் இவர்பால் தமிழ் கற்றவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அமிர்தம் பிள்ளை பாடிய தமிழ்விடுதூதில் இவர் பாராட்டப் பெற்றுள்ளார். இக்குறிப்பிலிருந்து இவரும் அமிர்தம் பிள்ளையும் ஒருசாலை மாணவரென்பது தெரிய வருகிறது. இவருடைய புலமை நலமும் பாராட்டப் பெற்றுள்ளது.

**நூல்:** சார்த்து கவிகள்.

## நாராயணசாமிப் பிள்ளை தாசன் (        )

**நூல்:** உற்சவப் பதிகமும் பசனைக் கீர்த்தனையும்.

இந்நூல் நாச்சியார் கோயிலென்னும் நறையூர்ச்சீனிவாசப் பெருமான் உற்சவச் சிறப்புப் பற்றிக் கூறுவது.

## நாராயணசாமி முதலியார். (19-நூ)

**ஊர்:** சேமங்கலம்.

**நூல்:** 'சோமசுந்தரப் பெருமாள் அந்தாதி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'சோமசுந்தரப் பெருமாள் அந்தாதி' என்னும் நூல் கந்தசாமிப்புலவர் என்பவரால் இயற்றப்பெற்றது.

## நாராயணசாமி முதலியார், அ. (20-நூ)

**ஊர்:** தொண்டை நாட்டில் பனைப்பாக்கம்.

**தந்தை:** அம்பலத்தாடி முதலியார்; செங்குந்தர்.

இவர் சிவப்பிரகாச ஐயர் என்ற அறிஞரிடம் கல்விகற்றுர். பனைப்பாக்கம் புராணம் என்ற நூலை எல்லப்ப முதலியார் என்பவருடன் சேர்ந்து இயற்றினர்.

**நூல்:** பனைப்பாக்கம் புராணம்; இந்நூல் 19 படலங்களையும் 1137 திருவிருத்தங்களையுமுடையது.

## நாராயணசாமி முதலியார், கி.கு. (20-நூ)

**ஊர்:** கோயம்புத்தூர்.

இவர் இலக்கண இலக்கியங்கற்றுச் சிறந்த புலமை படைத்தவர். பழந்தமிழ்ப் புலவர்களின் வரலாறுகளை நன்கு ஆராய்ச்சி செய்து பல நூல்கள் எழுதியுள்ளார்.

**நூல்:** அருணகிரி நாதர் வரலாறு, ஒட்டக் கூத்தர் வரலாறு, படிக்காசுப் புலவர் வரலாறு, மாம்பழக் கவிச்சிங்க நாவலர்

வரலாறு, புகழேந்திப் புலவர் வரலாறு, இரட்டையர் வரலாறு, பொய்யா மொழிப்புலவர் வரலாறு, வில்லிப்புத்தூரார் வரலாறு.

## நாராயணசாமி முதலியார், செ. (20-நூ)

**ஊர்:** செங்கற்பட்டு; தொண்டை மண்டலத்துளுவவேளாளர்.

**நூல்:** ஞானானந்த விளக்கம், உண்மைப் பொருள் விளக்கம், எக்காலக்கண்ணி.

## நாராயணசாமி முதலியார், தொ (19-நூ)

**நூல்:** 'மெய்ஞ்ஞான சாரம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'மெய்ஞ்ஞான சாரம்' என்னும் நூல் பேறை திருஞான சம்பந்த சாமிகள் என்பவரால் இயற்றப் பெற்றது.

## நாராயணசாமி முதலியார், பூ (19-நூ)

**ஊர்:** சென்னை.

இவர் காஞ்சிபுரம் பச்சையப்ப முதலியார் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக விளங்கிய கோபால கிருட்டிண கவிராசசேகரர் என்பவரிடம் தமிழ் இலக்கியங்களைக்கற்றூர்.

**நூல்:** இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவருக்கு எழுதிய கடிதப்பாடல்.

## நாராயண சிவனர், சே (19-நூ)

இவர் திருக்காளத்தி சேடாத்திரி சிவனர் மாணவர். வடமொழி, தென் மொழிகளில் புலமை பெற்றவர்.

**நூல்:** நாநா சீவவாதக் கட்டளை (தமிழாக்கம்).

## நாராயண சுதர்சன சாத்திரிகள் (20-நூ)

**நூல்:** ஆறுமுகநாயகர், கா. என்பவர் இயற்றிய 'வருண தருப்பணம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## நாராயண செட்டியார் (19- நூ)

**நூல்:** 'தில்லை சிவகாமியம்மை சதகம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'தில்லை சிவகாமியம்மை சதகம்' என்னும் நூல் ஐயாத்துரை ஞானியார் என்பவரால் இயற்றப்பெற்றது.

## நாராயணசெட்டியார் - விரு (19-நூ)

**ஊர்:** தஞ்சாவூர் மாவட்டம் நாகப்பட்டினம்.

இவர் தரகுத் தொழிலில் ஈடுபட்டவர். எனினும் இலக்கண இலக்கியப் பயிற்சி பெற்றவர்.

**நூல்:** ஐயாத்துரை ஞானியார் இயற்றிய 'தில்லைச்சிவகாம சுந்தரி சதகம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## நாராயணன் செட்டியார், கா ( )

**ஊர்:** நரசிங்க நல்லூர்.

**தந்தை:** காமாட்சிநாதன் செட்டியார்.

**நூல்:** 'காந்திமதியம்மை பேரில் இசைப்பாடல்கள்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'காந்திமதியம்மை பேரில் இசைப்பாடல்கள்' என்னும் நூல் காமாட்சிநாதன் செட்டியார், வ. நா. என்பவரால் இயற்றப்பெற்றது.

## நாராயணதாசர் - 1 (18-நூ)

**வே.பெ.** திவ்விய கவி நாராயணதாசர்.

**நூல்:** வடவேங்கட நாராயண சதகம்.

## நாராயணதாசர் - 2 ( )

**ஊர்:** புதுச்சேரி.

**நூல்:** செயங்கொண்ட செளந்தரவல்லி கதை, அற்புத பூலோக ரம்பை கதை, உலக விசித்திரக் கதை, மைனுவதி கதை.

## நாராயணதாசர் - 3 ( )

**வாழ்விடம்:** பருவூர்.

**நூல்:** பூவராகரந்தாதி, வேதநாராயணன் போற்றிமாலை என்னும் நூல்களுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

பூவராகரந்தாதி, வேதநாராயணன் போற்றி மாலை என்னும் இருநூல்களையும் இயற்றியவர் சீநிவாசவதாதாசாரிய சுவாமிகளென்னும் வைணவ அந்தணர்.

## நாராயணதாசர், ர.கு ( )

**நூல்:** சதுர்வேதி சரித்திர சங்கீர்த்தனை (1900), விசிஷ்டாத்வைத நாம சங்கீர்த்தனமிருதலகிரி (1897).

முதல் நூல் சதுர்வேதி என்பானது வரலாற்றினைக் கீர்த்தனைக் கவிதைகளில் உரைப்பது. சதுர்வேதி ஒரு திருமால் பக்தர்.

இரண்டாவது நூல் திருமால், ஆழ்வார், ஆச்சாரியர் துதியாக உள்ளன; 100 கீர்த்தனங்கள் உள்ளன.

## நாராயண தீட்சிதர் (17-நூ)

**ஊர்:** தென் திருப்பேரை.

இவர் பிள்ளைமங்கலத்தார் என்ற குடும்பத்தைச் சேர்ந்தவர்: வைணவக் குடியினர். தம் தந்தையாரிடமும் புலவர் பெருமக்களிடமும் தமிழ் நூல்களைக் கற்றார். தமது ஊரில் எழுந்தருளியுள்ள மகர நெடுங்குழைக் காதர் என்ற திருமாலிடத்தில் பெரும் பற்றுக் கொண்டு அவரைப் போற்றுதலைத் தமது கடமையாகக் கொண்டார். நம்மாழ்வாரிடத்தில் அளவற்ற அன்பு கொண்டிருந்தமையால் இவரை நம்மாழ்வார் தாசரென்றும் கூறுவதுண்டு.

**நூல்:** மகர நெடுங்குழைக்காதர் பாமாலை.

இந்நூல் எழுதப்பட்டது குறித்துக் கதை ஒன்று வழங்கு கிறது. இவர் சிரசை வடமலையப்பப் பிள்ளையின் காலத்தில் வாழ்ந்தவர். ஒருமுறை மழையின்மையால் நிலங்களுக்கு வரி செலுத்த இயலவில்லை. வடமலையப்பப் பிள்ளையினுடைய அதிகாரி இவரையும் வரி செலுத்தாத மற்றைத் தமிழ்ப் புலவர்களையும் சிறையிலடைத்து விட்டான். தமிழ்ப் புரவலரின் ஆட்சிக் காலத்தில் இந்த நிலை ஏற்பட்டதற்கு வருந்தி மகர நெடுங்குழைக் காதர் மீது பாக்களைப் புனையத் தொடங்கினார். வாயிற்காவலன் மூலம் செய்தியறிந்த வடமலையப்பப் பிள்ளை, புலவர்களை விடுவித்ததோடு அவர் களிடம் மன்னிப்பும் வேண்டினார். நிலங்களுக்கு வரி நீக்கம் செய்ததோடு அவைகளை முற்றூட்டாகவும் கொடுத்தார். மகர நெடுங்குழைக் காதர் மீது புனையத் தொடங்கிய பாமாலையை முற்றுவிக்க வேண்டியதாகவும் அவருடைய வேண்டுகோளுக் கேற்ப இவர் முற்றுவித்ததாகவும் கூறுவர். இந்நூல் 101 செய்யுட்களையுடையது.

## நாராயண தேசிகர் சாது (20-நூ)

**ஊர்:** வடார்க்காடு மாவட்டம் இராயவேலூர்.

**தந்தை:** இலட்சுமைய நாயகர்.

**தாய்:** சேடம்மாள்.

**வாழ்ந்த காலம்:** கி.பி. 1851-1911.

இவர் இளமையிலேயே தம் தந்தையை இழந்தார். தாயின்ஆதரவில் வளர்ந்து சுப்பையரெட்டியார் என்பவரிடம் மிக விரைவில் தெலுங்கு மொழியினைக் கற்றுக்கொண்டார். இராமசாமி நாயுடுவிடம் தமிழ்க்கல்வி கற்றார். ஞானானந்த நாத முனி அடிகள் என்ற பெரியார் பால் நான்கு சீவவாதக் கட்டளை என்ற வேதாந்த நூலைக்கற்றார். தமிழ் நூல்களில் பலவற்றைத் தாமே ஓதி உணர்ந்தார். திருவள்ளூர் உயர் நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். கிறித்தவ முகம்மதிய வைணவ சமயத்தாரோடு சொற் போர்கள் நிகழ்த்தி, அவர்களை வென்று புகழ் பெற்றார். அத்வைத சமயத்தைப் பரப்புங் குறிக்கோளில் வேதாந்தச் சொற்

பொழிவுகள் பல நிகழ்த்தினர்: மெய்யன்பர்களுக்கு வேதாந்த விந்தையைக் கற்பித்தார்.

**நூல்:** அநுபவாநந்த தீபிகை.

இந்நூல் வேதாந்தப் பொருளை நன்கு கூறுவது. இரண்டு பகுதிகளாலாகியது.

## நாராயணப் பாரதி (18-நூ)

**வே.பெ.** திவ்வியகவி நாராயண பாரதியார்.

**ஊர்:** தொண்டை நாட்டில் வெண்மணி.

இவர் களமூர் மணவாள நாராயணன் என்ற செல்வரால் ஆதரிக்கப் பெற்றவர்.

**நூல்:** திருவெவ்வுளூர் அந்தாதி, மணவாள நாராயண சதகம், கோவிந்த சதகம்.

## நாராயணப் பிரமேந்திரர் ( )

**நூல்:** 'சமரச கலைக்கியானம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'சமரச கலைக்கியானம்' என்னும் நூல் பூரணனந்தர் என்பவரால் இயற்றப் பெற்றது.

## நாராயணப் பெருமாள் (20-நூ)

**ஊர்:** காட்டுப்புத்தூர்.

இவர் புதுமை இராமானுச நாவலரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்.

**நூல்:** பாஞ்சாலி கலைவளர் மான்மியம்

## நாராயண பிள்ளை. - 1 ( )

**நூல்:** கௌளி நூற்றெளிவு.

## நாராயண பிள்ளை. - 2 (19-நூ)

**நூல்:** சிவதூடண பரிகாரம் (1889).

### நாராயண பிள்ளை. - 3 (19-நூ)

**ஊர்:** வல்லிபுரம்.

**தந்தை:** சிதம்பரநாதர்.

**நூல்:** விட்டுணு தூஷண பரிகாரம். (1885)

### நாராயண பிள்ளை. - 4 (19-நூ)

இவர் அட்டாவதானப் பயிற்சி உடையவர்.

**நூல்:** 'குணகரம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்

'குணகரம்' என்னும் நூல் சேட ஐயங்கார் என்பவரால் இயற்றப் பெற்றது.

### நாராயண பிள்ளை. - 5 (19-நூ)

**ஊர்:** திரிசிரபுரம்

**நூல்:** 'வேலாயுதக் கண்ணி' என்னும் நூலினைப்பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'வேலாயுதக் கண்ணி' என்னும் நூல் சாமிநாதபிள்ளை, மு என்பவரால் இயற்றப் பெற்றது.

### நாராயண பிள்ளை, அ. (19-நூ)

**தந்தை:** அருணசலம் பிள்ளை.

இவருடைய தந்தையார் புதுக்கோட்டைச் சமத்தானத்தில் அலுவல் பார்த்தவர். அறுவை வாணிகத்தில் ஈடுபட்டிருந்த இவர் கடைத் தொழிலிலும் ஈடுபட்டு நூல்கள் பல கற்றுப் புலவரானர்.

**நூல்:** பழனி வெண்பா.

### நாராயண பிள்ளை, க. (19-நூ)

**ஊர்:** திருநெல்வேலி.

**தந்தை:** கள்ளப்பிரான் பிள்ளை.

**நூல்:** இலக்கணப் பரீட்சை.

இந்நூல் இலக்கண விதிகளை எளிமையாக விளக்குவது.

நாராயண முதலியார் (      )

**நூல்:** திருப்பனைசைப் புராணம்.

இந்நூல், இவரும் பனைப்பாக்கம் அம்பலத்தாடி முதலியாரும் சேர்ந்து இயற்றியது.

நாராயண முநீந்திரர் (      )

**நூல்:** நியாய விம்சதிவியாக்கியானம்.

இந்நூல் மணிப்பிரவாள நடையிலுள்ளது. நூல் அச்சிடப் பெற்றுள்ளது.

நாராயண முனி (      )

**நூல்:** சிறீ பாஷ்யம், இராமாநுச நூற்றந்தாதி உரை.

நாராயண வேங்கடாசல நாயகர், சோ. (19-நூ)

**நூல்:** 'கரையேறவிட்டநகர்ப் புராணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

'கரையேறவிட்டநகர்ப் புராணம்' என்னும் நூல் சிவ சிதம்பர முதலியார், ந.ரா. என்பவரால் இயற்றப்பெற்றது.

நாராயணன் செட்டியார், முரு. (20-நூ)

**ஊர்:** மதுரை மாவட்டம் மேலூர்ப் பிரிவு கணபதி புரம்.

**தந்தை:** முருகாநந்த சாமிகள்

**நூல்:** இலங்கை காலிநகர் நகரத்தார் கோயில் ஆனை முகக் கடவுள் மீது கணபதி வெண்பா, கதிரேசர் மீது கதிரேச வெண்பா, எச்சரிக்கை, கட்டியம்.

நாராயணன் பட்டாதித்தன் (11-நூ)

இவர் முதல் இராஜராஜன் மீது இராஜராஜ விஜயம் என்னும் நூலைப் பாடியவராகச் சாசனங்களால் அறியப் படுகிறார்.

**நூல்:** இராஜராஜ விஜயம்.

இந்நூல் இராஜராஜனது வீரம், கொடை, அறம், தியாகம் முதலிய அரிய குணங்களைச் சிறப்பித்து எழுதப்பட்டதொரு நூல் என்று கருதப்படுகிறது. முக்கிய நாட்களில் இந் நூலைப் பொது மக்களிடையே படிப்பதற்காக நிலக் கொடை அளிக்கப்பட்டது என்ற செய்தியும் சாசனத்தால் அறியப் படுகிறது.

## நாராயணன் வேம்பையர் கோன் (10-நூ)

இவர் கல்வெட்டாலறியப்படும் புலவர்களுள் ஒருவர். திருச்சிராப்பள்ளிக்குன்றின் மேல் பல்லவர் காலத்திலமைந்த குடவரை மலையில் இவர் எழுதிய அந்தாதி நூலொன்று காணப் பெறுகின்றது.

## நாற்கவிராசநம்பி (12-நூ)

**இ.பெ.** நம்பி நயினார்.

**தந்தை:** உய்ய வந்த நயினார்; சமணர்.

இவர் அகப்பொருள் விளக்கம் என்னும் நூலின் ஆசிரியர். ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்ற நான்கு வகைக் கவிகளை இயற்றும் ஆற்றல் பெற்றிருந்தமையால் நாற்கவிராசர் என அழைக்கப் பெற்றார். இவர் பாண்டி நாட்டில் பொருநையாற்றின் வடகரையிலுள்ள புளியங்குடி என்ற ஊரில் பிறந்தவரென்று சிலரும், தொண்டை நாட்டுப் புளியங்குடியில் பிறந்தவரென்று சிலரும் கருதுகின்றனர்.

**நூல்:** அகப்பொருள் விளக்கம்.

இந்நூல் தொல்காப்பியத்திற்கு வழி நூலாக இயற்றப் பெற்றது. முதல் நூலிற் பலவாறு பரவிக் கிடந்த இலக்கண விதிகள் இந்நூலில் ஒருங்குறத் தொகுத்துக் கூறப் பெற்றுள்ளன. இந்நூல் குலசேகர பாண்டியன் அவையில் அரங்கேற்றப் பெற்றதென்ற குறிப்பு நூலின் சிறப்புப் பாயிரத்தால் அறியப்படுகிறது.

## நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் (சங்ககாலம்)

இவர் மான் கொம்பைக் கைக் கோலாகக் கொண்டமையால் கலைக் கோட்டுத் தண்டன் எனப்பட்டா ரென்றும்

நிகண்டன் என்ற அடைமொழியினைப் பெற்று நிகண்டன் கலைக் கோட்டுத் தண்டனார் என வழங்கப் பெற்றாரென்றும் தெரிகிறது. நிகண்டன் என்ற அடைமொழியால் இவர் தமிழில் நிகண்டு நூல் ஒன்று செய்திருக்கலாமென்று கருதப் படுகிறது.

**நூல்:** நற்றிணை 382.

நிச்சலதாசர் (      )

**நூல்:** விசாரசாகரம் என்னும் வேதாந்த சங்கிரகம், சிறீ விசாரசாகரம், சிறீ விருத்திப் பிரபாவம், விருத்திரத்தினாவளி.

நிச்சலப் பிரகாசர் (20-நூ)

**நூல்:** சுவாமி ஓம்பிரகாசநாதர் இயற்றிய நூல்களுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

நிச்சலாநந்த சாமிகள் (20-நூ)

**ஊர்:** சென்னை.

**நூல்:** இராமாநந்த சாமிகள் (நிச்சல) என்பவர் இயற்றிய நூல்களுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

நிசகுணயோகி (19-நூ)

இவர் கி.பி. 19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர்.

**நூல்:** விவேக சிந்தாமணி.

இது இப்பெயருடன் வழங்கும் நீதி நூலின் வேறானது; படியாதார்க்கும் எளிதில் விளங்கும் சொல்நடையில் அமைந்துள்ளது.

நிசாநந்தர் (20-நூ)

இவர் சுயம் பிரகாசர் என்ற பெரியாரிடம் அருளுரை பெற்றவர். தமிழ், வட மொழிப் பயிற்சி மிக்கவர்.

**நூல்:** சுயம்பிரகாசர் மீது அவதூத வெண்பா மாலை.

## நித்தியானந்த அடிகள் (19-நூ)

**ஊர்:** கேரள மாநிலம் கோட்டாறு.

இவர் இளம் வயதிலேயே இல்லந் துறந்து கோயிலூர் சென்று முத்திராமலிங்க ஞான தேசிகர் என்ற பெரியார் பால் அருளுரை வேண்ட, அப் பெரியவர் இவரைத் தமது மாணவர் அருளுடைய அடிகள்பால் அனுப்பினர். அவர் இவருக்கு அருளுரை செய்து அறிவு நூல்களை ஓதினர். காசிக்குச் சென்று வடமொழியைக் கற்றுப் புலமை பெற்றார்.

**நூல்:** சம்சார தாரணி விரிவுரை, அத்வைத ரச மஞ்சரி மூலமும் உரையும், பஞ்சதசி, தட்சணாமூர்த்தி அட்டகம் என்ற நூல்களின் தமிழாக்கம்.

## நித்தியானந்த சரசுவதி (20-நூ)

**ஊர்:** திரிசிரபுரம்.

**நூல்:** குழுமியானந்த முனிவர் சற்குருமணி மாலை, தோத்திரத் திரட்டு.

## நித்தியானந்த சாமி - 1 ( )

**ஊர்:** கோயம்புத்தூர்.

**நூல்:** சுப்பிரமணியர் பஞ்சதசகீர்த்தனைகள்.

## நித்தியானந்த சாமி - 2 ( )

**நூல்:** இலக்கணவிருத்தி, ஆத்துமநிருபணம், ஞானஉபதேசம்.

## நித்தியானந்த பிரமம் ( )

**நூல்:** சீரங்க மகத்துவம். (1888).

இந்நூல் திருவரங்க நாதரின் சிறப்பினையும் புகழையுங் கூறுவது; உரைநடையிலமைந்தது.

## நிதியின் கிழவன் ( )

இவர் தலைச் சங்கமிருந்த புலவருள் ஒருவர். இறையனார் அகப்பொருளில் தலைச் சங்க வரலாறு கூறும் பகுதியில், "அவருள் தலைச் சங்க மிருந்தார் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும் குன்றெறிந்த முருகவேளும் முரஞ்சியூர் முடி நாகராயரும் நிதியின் கிழவனுமென இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்து ஒன்பதின்மர் என்ப" என வருகின்றது. இதனால் குபேரனாகிய நிதியின் கிழவன் தலைச்சங்கமிருந்து தமிழாராய்ந்த புலவர் பெருமக்களுள் ஒருவர் என்பது புலனாகின்றது.

## நிரஞ்சன நாதர் (17-நூ)

இவர் அந்தகக் கவி வீரராகவ முதலியாரின் காலத்தவ ராகையால் 17ஆம் நூற்றாண்டினராவர்.

**நூல்:** அந்தகக் கவி வீரராகவ முதலியார் சீட்டுக் கவிகளைப் புகழ்ந்து பாடிய பாடல்கள்.

## நிரம்ப வழகிய தேசிகர் (16-நூ)

இவர் வேதாரணியத்தில் அபிடேகத்தர் என்று சொல்லு கின்ற தேசிகர் மரபில் பிறந்தவர். நிரம்ப அழகியார் என்பது இவருடைய பிள்ளைத் திருநாமம்.

இவருடைய உடம்பில் சிரந்தி நோய் இருந்ததால் தனித்தே ஒரு மரத்தடியில் தங்கியிருக்கும் வழக்கமுடையவ ரானார். ஒரு நாள் ஒருசிற்றரசன் இவரைக் கண்டு இவரது நோயைப் பொருட்படுத்தாது கல்வியின் பெருமையை உணர்ந்து இவர் "நிரம்ப அழகியரோ?" என்றான். அது முதல் இவருக்கு இப்பெயர் நிலைத்துவிட்டது. இவர் துழாவூர் நிரம்ப அழகியதேசிகர் என்றும் அழைக்கப் படுகின்றார். துழாவூர் மடம் 16ஆம் நூற்றாண்டில் சைவ சமய வளர்ச்சி கருதி ஏற்பட்டமடங்களுள் ஒன்று. அங்கு இவர் கமலைஞானப் பிரகாசரிடம் தீக்கையும் உபதேசமும் பெற்று நீண்ட காலந்தங்கியிருந்தார். ஞானப்பிரகாசர்

இறந்த பிறகு திருப்பரங்குன்றத்தில் சில காலம் தங்கி யிருந்தார். பின்னர்த் தன் இனத்தாருடைய வேண்டு கோளுக்கிரங்கிப் பாண்டிய நாட்டில் குன்றக்குடியின் மேல் திசையிலுள்ள துழாவூரில் மடம் ஒன்றமைத்து வாழ்ந்தார்.

இவருடைய மாணுக்கர் பலர். இவர்களுள் திருவாரூர்ப் புராணம் பாடிய அளகைச் சம்பந்த முனிவரும் திருவை யாற்றுக்குச் செப்பேச புராணம் பாடிய ஞானக் கூத்தரும் சங்கரவிலாசம் என்ற புராணம் பாடிய சிதம்பரநாத பூபதியும் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

கமலை ஞானப் பிரகாசர் மழுவாடிப்புராணம் செய்த காலம் கி.பி. 1565. அவருடைய மாணுக்கர் நிரம்ப அழகி யார். இவருடைய மாணுக்கர் அளகைச் சம்பந்தமுனிவர். இவர் 1592இல் திருவாரூர்ப் புராணம் பாடினூர். ஆதலால் அழகியாருடைய காலம் இதே காலமென்றும் அதாவது கி.பி. 1550-75 ஆகலாமென்றும் கருதலாம். திருவையாற்றுப் புராணம் பற்றி ஒரு குறிப்பு உள்ளது. அதன்படி அப்புராணம் அழகியார் செய்ததாயின் 17ஆம் நூற்றுண்டின் தொடக்க ஆண்டிலும் வாழ்ந்தவராதல் வேண்டும். அதன்படி அவரது காலம் கி.பி. 1550-1610 என்று கொள்ள இடமுண்டு.

**நூல்:** திருப்பரங்கிரிப் புராணம்; சேதுப் புராணம்; திரு ஐயாற்றுப் புராணம்; சிவஞான சித்தியார்-உரை; திருவருட்பயன்-உரை;

**திருப்பரங்கிரிப் புராணம்:** இத்தமிழ்ப் புராணம் பாயிரம் உள்பட 11 சருக்கங்களும் 526 பாடல்களும் உடையது. துதிப்பாடல்களுடன் தெய்வயானை, வள்ளியம்மை, நவவீரர், திருமால் துதிகளும் உள்ளன.

**சேதுபுராணம்:** இதனை ஒரு தலபுராணமாக மட்டுமல்லாது ஆசிரியர் காப்பியமாகவே கருதி அமைத்துள்ளார். தொடக்கத்தில் பாயிரம், திரு நாட்டுச் சிறப்பு, கந்த மாதனச் சிறப்பு, நைமி சாரணியச் சிறப்பு என்ற நான்கு பகுதிகளும் 45 சருக்கங்களும் 3438 பாடல்களும் கொண்டது. இந்நூலில் சரசுவதிக்கும், மெய்கண்ட தேவருக்கும் வணக்கம்

சொல்லியிருப்பது சிறப்புடையது. புராணத்தின் இறுதிப் பாடல் இவர் இராமநாத முனிவர் என்பவர்பால் ஈடுபாடு டையவர் என்றும், அவர் சேதுவில் வாழ்ந்து புராணம் பாடும் படி இவரை ஊக்குவித்தார் என்றும் கருதஇடமுண்டு.

**திருவையாற்றுப் புராணம்:** இந்நூல் வடமொழிப் பிரமகை வர்த்த புராணத்தினின்றும் எடுக்கப்பட்டதென்று கூறுகின்றனர். இது இரண்டு காண்டமாக முதல் காண்டத்தில் 35 அத்தியாயமும் 1534 பாடல்களும், இரண்டாம் காண்டத்தில் 13 அத்தியாயமும் 673 பாடல் களும் ஆக 48 அத்தியாயம் 2207 பாடல்களைக் கொண்டது. நூலில் பலவகைச் சந்தப் பாடல்கள் மிகுதி.

ஞான சம்பந்த குருதசமணிமாலை, வேணுவன புராணம் என்ற நூல்களும் இவரால் பாடப் பெற்றன என்று ஒரு கருத்து உண்டு.

நிரம்ப அழகிய தேசிகரும், குருஞான சம்பந்தரும், கமலை ஞானப்பிரகாசரின் மாணவர்கள். இவருள் அழகியாரே முற்பட்ட மாணவர். அவர் குருஞானசம்பந்தரைப் பாடினார் என்பது இயலாததாகக் கருதப்படுகிறது.

வேணுவன புராணம், சேதுபுராணம் பாடுவதற்கு முன் பாடப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகின்றது.

## நிரம்ப வழகிய பண்டாரம் ( )

**நூல்:** திருவருட் பயன் உரை.

## நீலகண்ட சாமிகள் ( )

**நூல்:** விவேக சிந்தாமணியில் வேதாந்த பரிச்சேதம் (1898)

இந்நூல் மொழியாக்கம் செய்யப் பெற்றது. பிரம சூத்திரம், பகவத் கீதை முதலிய விரிந்தநூல்களின் சார மாகக் கன்னட மொழியில் விவேக சிந்தாமணி என்னும் நூலில் "வேதாந்த பரிச்சேதம்" எனக் கூறப்பட்டுள்ளது. இதனை நீலகண்ட சாமிகள் தமிழாக்கம் செய்துள்ளார். இதனையே வேதாந்த சூளாமணி என்ற பெயரில் சிவப் பிரகாசர் செய்யுள் வடிவில் மொழிபெயர்த்துள்ளார்.

## நீலகண்ட செட்டியார் (19-நூ)

**ஊர்:** சென்னை.

இவர் சிந்தாதிரிப்பேட்டை அ. வடிவேலுச் செட்டியார் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறினார்.

**நூல்:** திருத்தணிகை வெண்பா அந்தாதி, இரட்டை மணி மாலை.

## நீலகண்ட தாசர் - திருவ, (20-நூ)

**ஊர்:** திருவனந்தபுரம், கரமனை.

**நூல்:** இலலிதா தேவி மான்மியக் கீர்த்தனம்.

## நீலகண்டம் பிள்ளை (19-நூ)

**ஊர்:** திரிசிரபுரம்.

**நூல்:** நாகமுத்துப் புலவர் என்பவர் இயற்றிய 'தாயுமானவர் பதிற்றுப் பத்தந்தாதி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## நீல மேகாச்சாரியார் ( )

**நூல்:** பூமியின் மிராசு பாத்தியம் எவருக்கு? (1891).

இந்நூல் உரைநடையிலமைந்தது; நிலக் கிழார்களுக்காக எழுதப் பெற்றது.

## நீலலோசனி சதாசிவம் பிள்ளை (20-நூ)

**ஊர்:** நாகப்பட்டினம்.

**நூல்:** சுப்பையா பிள்ளை, இரா. என்பவர் இயற்றிய 'புவனேந்திர காவியம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## நீலாம்பிகையம்மையார் (20-நூ)

**ஊர்:** நாகப்பட்டினம்.

**தந்தை:** மறைமலையடிகள்;

**தாய்:** சௌந்தரவல்லி அம்மையார்.

**வாழ்ந்தகாலம்**: 6-9-1903 — 10-10-1945.

இவர் நாகப்பட்டினத்திற் பிறந்து தம் தந்தையாரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் வடமொழியையுங் கற்றார். சென்னை லேடிவில்லிங்டன் உயர் நிலைப் பள்ளியில் இரண்டாண்டுகள் பயின்றார். பல்லாவரத்தில் தோன்றிய பள்ளியொன்றில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். பின்னர் சென்னை இராயபுரத்தில் நார்த்விக் மகளிர் உயர் நிலைப் பள்ளியில் 1928 ஆம் ஆண்டு வரை தமிழாசிரியராகப் பணியாற்றினார். 1927 இல் திருவரங்கனார் என்பவரை மணம் புரிந்து கொண்டார்.

**நூல்**: முப்பெண்மணிகள் வரலாறு, ஜோன் வரலாறு, பிளாரன்ஸ் நைட்டிங்கேல், மேனாட்டுப் பெண்மணிகள், பழந்தமிழ் மாதர், அருஞ்செயன்மூவர், தமிழ் நாடும் தமிழ் மொழியும் முன்னேறுவது எப்படி? வடசொல் தமிழ் அகர வரிசை.

## நூரு முகம்மது (          )

**நூல்**: காயற்பட்டினம் பள்ளிவாசற் சபையார் பேரில் கவிதைகள். (1877)

பள்ளி வாசற் சபையாகிய புகழணிக் கூட்டத்தார் பேரில் இயற்றப் பெற்றது; பக்தர் சிறப்பினைப் பாராட்டுவது; 36 செய்யுட்கள்.

## நெடுங் கழுத்துப் பரணர் (சங்ககாலம்)

இவர் உறுப்பால் பெயர் பெற்ற சங்கப் புலவர்களுள் ஒருவர்.

இவரை நெடுங் களத்துப் பரணர் என்றும் வழங்குவர். இவ்வழக்கினை ஏற்றால் இவர் நெடுங்களம் என்ற ஊரால் பெயர் பெற்ற புலவராவர். நெடுங்களம் திருச்சிராப் பள்ளிக்குக் கிழக்கே காவிரிக் கரையில் அமைந்தது. பரணர் என்ற சங்கப் புலவரினின்றும் இவரை வேறுபடுத்த நெடுங் களத்துப் பரணர் என அடைகொடுத்து இவரை வழங்கினரென்பர். நெடுங்களத்து என்பது நெடுங் கழத்து எனப்

பிழைபட்டுப் பின்னர் நெடுங்கழுத்து எனத் திரிபடைவதா யிற்று என ஔவை சு. துரைசாமிப்பிள்ளை கருதுகிறார்.

நூல்: புறம்: 291.

## நெடும் பல்லியத்தனார் (சங்ககாலம்)

இவர் பாடிய பாட்டு புறநானூற்றில் (64) காணப் படுகிறது. இப்பாட்டில் இவர் யாழ், ஆகுளி, பதலை முதலிய பல இசைக்கருவிகளைக் குறிப்பிட்டுள்ளமையால் இப்பெயர் பெற்றாரென்று கூறுவர்.

நூல்: புறம் 64.

குறுந்தொகையில் 203ஆம் பாட்டைப் பாடியவர் நெடும் பல்லியத்தனார் என்ற ஒரு கருத்துண்டு. இப்பாட்டைப் பாடியவர் நெடும் பல்லியத்தை என்ற பெண்பாற் புலவராவர்.

## நெடும்பல்லியத்தை (சங்ககாலம்)

இவர் சங்ககாலப் பெண்பாற் புலவர்களுள் ஒருவர். நெடும்பல்லியத்தனார் என்ற ஆண்பாற் புலவரொருவரும் உளர். அவர் தம் பாட்டில் யாழ், ஆகுளி, பதலை முதலிய இசைக்கருவிகளைக் குறிப்பிட்டமையால் அப்பெயர் பெற்றா ரென்பர். ஆனால் நெடும்பல்லியத்தை என்ற பெண்பாற் புலவருக்கு அக்காரணம் பொருந்தாது.

நூல்: குறுந்தொகை 178, 203.

இவற்றுள் 203 ஆம் பாட்டைப் பாடியவர் நெடும் பல்லியத்தனார் என்ற கருத்தும் உண்டு.

## நெடுவெண்ணிலவினார் (சங்ககாலம்)

இவர் தொடரால் பெயர் பெற்ற சங்கப் புலவருள் ஒருவர். குறுந்தொகையில் "கருங்கால் வேங்கை" (47) என்று தொடங்கும் பாடலில் இரவுக் குறிக்கண் வருந்தலைவனுக்கு இடையூறாக உள்ள நிலவை" நெடுவெண்ணிலவே" என விளித்ததனால் இப் பெயர் பெற்றாரென்று கூறுவர்.

நூல்: குறுந்தொகை 47.

## நெட்டிமையார் (சங்ககாலம்)

இவர் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமி பெரு வழுதியைப் பாடியவர். இவர் உறுப்பால் பெயர் பெற்ற சங்கப்புலவர்களுள் ஒருவராகக் குறிப்பிடப் பெறுகின்றார். நெடுந் தொலைவிலுள்ள பொருளைக் கூர்ந்து நோக்கி அறியுங் கண்ணை நெட்டிமை என்று சிறப்பித்துரைத்த நயங்கருதி இவருக்கு இப்பெயர் உண்டாயிற்று என்ற கருத்தும் உண்டு. இன்று கிடைக்கும் இவரது பாடல்களுள் இதுபோன்ற ஆட்சி இல்லை. இவர் பஃறுளியாறு கடலால் கொள்ளப் படுவதற்கு முன் இருந்தவராதலின் இவ் ஆட்சியுடைய அப் பாடல் கடல் கோளில் மறைந்திருக்கலாமென்று கருதப் படுகிறது.

**நூல்:** புறம் 9, 12, 15.

## நெய்தற் கார்க்கியார் (சங்ககாலம்)

கார்க்கியர் என்ற பெயர் கௌதமன் என்பது போல ஒரு முனிவர் பெயராகும். இப்பெயர் உபநிடதங்களில் சிறப்பாக வழங்கும் ஒரு பெண்பாற் பெயராகும். இதனை ஒட்டி இவர் இப்பெயர் பெற்றாரென்று கருதுவர். இவ்வாறாயின் கார்க்கியார் என்பது புலவரின் இயற்பெயர். இவர் பாடிய இரண்டு குறுந்தொகைப் பாடல்களும் நெய்தற்றிணை பற்றியமையால் இவர் 'நெய்தற் கார்க்கியார்' என்று அழைக்கப்பட்டார் எனலாம்.

**நூல்:** குறுந்தொகை 55, 212.

## நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர்கிழார் (சங்ககாலம்)

இவர் வழக்க ஒழுக்கத்தால் பெயர் பெற்ற சங்கப் புலவர்களுள் ஒருவர். ஆவூர் கிழார் என்ற பெயருடையார் பலராவர். அப் பெயருடையார் பலரினின்றும் பிரித்தறிதற் காக இவர் நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர் கிழார் என்றழைக்கப்பட்டார். நெய்தல் சாய்த் துய்த்த என்ற

அடைமொழி இவருக்கு எக்காரணம் பற்றி வந்ததென்பது தெரியவில்லை.

**நூல்:** அகநானூறு 112.

## நெய்தற்றத்தனுர் (சங்ககாலம்)

இவர் இயற்பெயர் தத்தன் என்பதே. தத்தனுர் என்னும் பெயர் சங்ககாலத்தில் பல புலவர்களுக்கு இயற்பெயராக இருந்தது. அவர்களில் சிலர் அவரவர் செய்யும் தொழிலால் பிரித்தறியப் பெற்று கணக்காயன் தத்தனுர், வண்ணக்கன் தத்தனுர் என்று அழைக்கப் பெற்றனர். சிலர் 'நெடு' என்ற அடையினையும், மற்றும் சிலர் தாம் பாடிய பாடல்களின் பொருள்களால் அமைந்த அடைகளையும் பெற்றனர். இவ்வாறு அமைந்த அடையொடு கூடிய பெயரே நெய் தற்றத்தனுர் என்பது. இவர் பாடிய பாடல்களில் நற்றிணைப் பாடல்கள் இரண்டும் நெய்தல் திணை பற்றியவை. அகநானூற்றுப்பாடல் பாலைத்திணை பற்றியது.

**நூல்:** அகம்: 243, நற்றிணை: 49, 130.

## நெய்னுன் முகம்மதுப் பாவலர் எம்.ஏ., (17-நூ)

இவர் ஆலிப்புலவரின் வழி வழிப் பேரனுவர். ஆலிப்புலவர் 16 ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவராதலால் இவர் 17 ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியினர் என்று கருதப் படுகின்றுர்.

**நூல்:** தற்கலை பீர்முகம்மது அப்பா என்பவர் எழுதிய ஞான நூல்களுக்கு விளக்கவுரை.

## நெல்லைநாத முதலியார் (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம் தென் கோவையைச் சார்ந்த இருபாலை.

இவர் மிகவும் நினைவாற்றல் மிக்கவர்; தாம் வாழ்ந்த காலத்தில் மிகச் சிறப்போடு வாழ்ந்தவர். கவி அரங் கேற்றுவோர் அனைவரும் இருபாலைக்குச் சென்று இவர்

முன்னிலையிலேயே அரங்கேற்றுவர். இவர்மகன் சேனுதிராய முதலியாரும் சிறந்த புலவராகத் திகழ்ந்தார்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## நெல்லை நாதர் ( )

**நூல்:** சிவராத்திரிப் புராணம்.

இந்நூல் 5 அதிகாரங்களையும் 303 செய்யுட்களையுங் கொண்டது. இச் சிவராத்திரிப் புராணமே யன்றி வேறு சிலர் பாடிய சிவராத்திரிப் புராணங்களும் உள.

## நெல்லையப்பக் கவிராயர் ( )

**நூல்:** திருநெல்வேலித் தலபுராணம்.

## நெல்லையப்ப கவிராச பண்டாரம் (19-நூ)

**நூல்:** திருமலை யமகவந்தாதி.

இந்நூல் கந்தரந்தாதி, திருவரங்கத்தந்தாதி முதலிய அந்தாதி நூல்களைப் போல் ஆழ்ந்து கருத்தூன்றிப் பொருளுணரத் தக்க நிலையிலுள்ளது.

## நெல்லையப்ப பிள்ளை (20-நூ)

**வே.பெ.** கவிராச நெல்லையப்ப பிள்ளை.

**ஊர்:** திருநெல்வேலி.

**தந்தை:** முத்துக்குமாரசாமிக் கவிராசர்.

**வாழ்ந்தகாலம்:** கி.பி. 1832 - 1905.

இவர் மு.ரா. கந்தசாமிக் கவிராயர், மு.ரா. அருணுசலக் கவிராயர், கல்போத்துப் பிச்சுவையர், மேலகரம் சுப்பிரமணியக் கவிராயர் முதலியவர்களிடம் கல்வி பயின்றவர்.

**நூல்:** சந்திவிநாயகர் பதிகம் சந்திவிநாயகர் இரட்டை மணிமாலை, சுப்பிரமணியர் தோத்திரம், சுப்பிரமணியர் பதிகம், பழநியாண்டவர் தோத்திரம், சோமசுந்தரேசர் பதிகம், சுதர்ம சாரசங்கிரகம், கால்நடை மருத்துவநூல், சந்தத் தமிழ்ப் பத்து.

## நெல்லையப்ப பிள்ளை, ச. (    )

**ஊர்:** திருநெல்வேலி.

**தந்தை:** சங்கரமூர்த்திப் பிள்ளை, வேளாளர்.

இவர் பள்ளிக் கல்வியைப் பயின்று முடிந்தபின் தக்கார் பால் தமிழ்க்கல்வியினைக் கற்றார். இவர் திருநெல்வேலிப் புராணம் என்ற நூலினைப் பாடியுள்ளார். இந்நூலை, இறைவன் அடியவர் வேடத்தில் வந்து இவரிடம் கேட்டுக் கொண்டதற் கிணங்கப் பாடப்பெற்றதாக ஒரு கதை வழங்குகிறது.

**நூல்:** திருநெல்வேலிப் புராணம்.

இந்நூலினை ஆசிரியர் நீலகண்ட சாத்திரி என்ற புலவரிடம் வடமொழி மான்மியத்தைப் பெற்றுத் தக்கார் பால் அதன் பொருளறிந்து தமிழில் இயற்றியுள்ளார். இப்புராணத்தில் 120 சருக்கங்களும் 6892 செய்யுட்களும் உள்ளன. நைமி சாரணியச் சிறப்பு, நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு, அகத்தியர் வரவு, தக்கன் வேள்வி, திருநீற்றுப் பெருமை, ஐந்தெழுத்துப் பெருமை, சிவபூசை பெருமை, தொண்டர் கள் பெருமை, மகளிர் இலக்கணம், ஆசாரம், இல்லறம் துறவறம் முதலிய சிறப்புக்களும் பல வரலாற்றுச் செய்தி களும் உள்ளன.

## நெல்லையப்ப பிள்ளை, தா. (    )

**நூல்:** திருநெல்வேலித் தலபுராணம், திருமலை சுப்பிர மணியர் தோத்திரம், தென்பழநியாண்டவர் தோத்திரம்.

## நெல்லையப்ப பிள்ளை, மா. வே. (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலிக்கு அருகேயுள்ள மாறாந்தை.

**வாழ்விடம்:** திருநெல்வேலி சிந்து பூந்துறை.

**மறைவு:** 14-4-1943.

இவர் பி.ஏ., வரை கல்வி கற்றுத் தாசில்தாராகப் பணி யாற்றியவர். தமிழ்நூல்களையும், சைவசமய நூல்களையும் கற்றுப்புலமை பெற்றவர். சைவ சித்தாந்த நூற்பதிப்புக்

கழகத்திலும், தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கத்திலும் தலைவராகப் பணியாற்றியவர். 'செந்தமிழ்' இதழாசிரியர் குழுவிலும் பணியாற்றிப் பல கட்டுரைகள் எழுதியுள்ளார். சைவ சித்தாந்தைப் பரப்பும் பணியில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தவர். திருக்குறளில் அமைந்துள்ள சைவசமய உண்மைகள் குறித்து ஆய்ந்து சொற்பொழிவுகள் நிகழ்த்தி யுள்ளார்.

**நூல்:** அருள் முறைத்திரட்டு-உரை, திருவாசகத்திரட்டு-உரை.

## நெல்லையப்ப முதலியார் (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி.

**நூல்:** கச்சி ஆளவந்த வள்ளலார் ஆதீனம் சிவசாமி தேசிகர் மீது தெரிசன மாலை, தோத்திர மாலை.

## நெல்லையப்பர், கா. நா. (20-நூ)

**ஊர்:** பாண்டிநாட்டில் வீரவநல்லூர்.

**நூல்:** மேலைக்கொழுந்து மாமலைக் குமரன் பிள்ளைத்தமிழ், சுதந்திரப்பரணி, மகாத்மா காந்தியடிகள் வரலாறு, பழநி யாண்டவர் பாராயணத்திரட்டு, எடப்பாடி ஆறுமுகசாமி கலம்பகம்.

## நெல்லையப்பர் எம்.ஏ., (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம் திருப்புடைமருதூர்.

**பிறப்பு:** 27-9-1886.

இவர் தொடக்கத்தில் கொழும்பில் இரண்டாண்டுகள் பார்சி வணிகரொருவரிடம் எழுத்தராகப் பணி புரிந்தார். அறிவு நூல்களைக் கற்பதிலும் பெரியோர்களை அடுத்துப் பணிபுரிவதிலும் இவருக்கு ஆர்வம் மிகுதியாக இருந்தது. பகவத்கீதை கற்பதிலும் மிகுந்த விருப்பங் கொண்டார். 1914 ஆம் ஆண்டில் திருவொற்றியூரில் ஓர் அறிவாசிரியரிடம் அறிவுரை பெற்றார். "கதாரத்னுகரம்" என்ற திங்கள்

வெளியீடொன்றைத் தொடங்கிச் சிலஆண்டுகள் நடத்தினர். 1920 ஆம் ஆண்டில் சுதேசமித்திரன் கிளை அச்சகத்தில் மேலாளராகவும் மெயில் என்ற ஆங்கிலப் பத்திரிகை அலுவலகத்திலும் அலுவல் புரிந்தார்.

சென்னை நகரில் சரவண வேலைச் சுவாமிகள் என்னும் பெரியவரால் வேதாந்த சித்தாந்த நூல்களைக் கற்றார். "அமிர்த வசனி" என்ற திங்களிதழையும் நடத்தினர்.

**நூல்:** வர்த்தகயுக்தி, வியாபார தந்திரம்.

முதல் நூலில் யார் வர்த்தகம் செய்ய வேண்டும்? எப்படிச் செய்ய வேண்டும்? ஒரு தொழிலைத் தொடங்குதற் குரிய முன் யோசனை என்ன என்ற விவரங்கள் அடங்கி யுள்ளன.

## நெல்லையப்பன் கவிராசர் (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி.

**நூல்:** கனகசபைப் பிள்ளை, கூ. என்பவர் இயற்றிய 'வருண சிந்தாமணி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## நெற்குன்றங்கிழார் களப்பாளராசர் (12-நூ)

இவர் முதலாங் குலோத்துங்கன் காலத்து விளங்கிய ஒரு புலவர். களப்பாளரென்பார் பண்டைக் காலமுதல் தமிழ் நாட்டில் தமிழர்களாய் விளங்கியவர்.

**நூல்:** திருப்புகலூர்ச் சிவபிரான் அந்தாதி.

## நெற்குன்றவாணர் (12-நூ)

இவர் ஒட்டக்கூத்தர் காலத்து வாழ்ந்த தமிழ்ப்புலவராகக் கருதப்படுவதால் கி.பி. 12ஆம் நூற்றுண்டினராவர். இவர் புரவலராகவும் விளங்கியுள்ளார். ஒட்டக்கூத்தர் கவிஞரை வெட்ட வேண்டாமென்று, 'கோக்கண்ட' என்னும் பாட்டைப் பாடித் தடுத்தவரென்றும், நம்பிகாளி என்னும்

புலவருக்குப் பொருள் கொடுத்ததோடு அவர் புலமைக்கு அடிமைப்பட்டேனென்று சிறப்புக் கவியும் கொடுத்தவ ரென்றும் தமிழ் நாவலர் சரிதை கூறுகிறது.

இவர் திருப்புகலூர்ச் சிவபிரான் மேல் அந்தாதி நூல் ஒன்று பாடியுள்ளார். அந்நூலின் இறுதியில் 'களப்பாளன் நெற்குண்றவாணன்' என்ற குறிப்பு இருப்பதால் இவர் களப்பாளர் மரபினர் என்று கருதப்படுகின்றார்.

திருப்புகலூர்ச் சிவன் கோயிற் கல் வெட்டொன்றில் 'நெற்குன்றங்கிழார் அரையன் கருவுரையகரான களப்பாள ராஜர் செய்வித்த சாலை' என்று குறிப்பிட்டிருப்பது நெற் குன்றவாணரையே என்று சாசனத் தமிழ்க்கவி சரிதம் கூறுகின்றது.

நெற்குன்றம் என்பது தொண்டை நாட்டில் புலியூர்க் கோட்டத்தில் உள்ள தென்று செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள குன்றத்தூர்க் கல்வெட்டுக் கூறுகின்றது.

**நூல்:** திருப்புகலூரந்தாதி.

இந்நூல் ஒரு கலித்துறையந்தாதி; அருணசலக் குருக்கள் என்பவர் இதற்குப் பதவுரை எழுதியுள்ளார்.

## நேப்பியர் ( )

**நூல்:** சிற்ப சித்திர கீத நூல்கள்.

இந்திய நாட்டுச் சிற்ப சித்திர கீத நூல்களைப் பற்றி லார்டு நேப்பியர் அவர்களால் செய்யப்பட்ட சொற்பொழி வின் மொழி பெயர்ப்பு என்னுங் குறிப்பு, நூல் முகப்பில் உள்ளது.

## நேமி சந்திராசிரியர் ( )

இவர் சைன ஆசிரியர்களுள் ஒருவர்.

**நூல்:** சோமசாரம், இலப்தீசாரம்.

## நைநாராச்சாம் பிள்ளை (18-நூ)

**நூல்:** சரமோபாயம்.

## நையாண்டிப் புலவர் (19-நூ)

இவர் இராமச்சந்திர கவிராயர் காலத்தில் வாழ்ந்தவர். பள்ளிகொண்டான் என்ற பரதவனைப் பாடி பரிசு பெற்றவர்.

**நூல்:** பள்ளிகொண்டான் மீது பாடிய தனிப்பாடல்.

## நைல்ஸ் ( )

**நூல்:** சிலுவையின் உபதேசம்.

## நொச்சிநியமங் கிழார் (சங்ககாலம்)

**ஊர்:** நொச்சி நியமம்.

இவர் ஊராற் பெயர் பெற்ற சங்கப் புலவர்களில் ஒருவர். இவர் பிறந்த ஊர் நியமம் என்பதாகும். இப்பெயருடைய ஊர்கள் பல இருத்தலின், நொச்சி வேலி சூழ்ந்த பிறவற்றின் வேறுபடுத்தலின் இந் 'நியமம்' நொச்சிநியமம் எனப்பட்டது. இஃது இப்போது நொச்சியம் என்று வழங்குகிறது. இவ்வூர் திருச்சியிலிருந்து முசிறிக்குச் செல்லும் வழியில் உத்தமர் கோயிலுக்கு அண்மையில் உள்ளது.

**நூல்:** அகம்: 52, நற்றிணை: 17, 208, 209, புறம்: 293.

## நொரோஞா சாமிகள் ( )

**நூல்:** சபைகளின் அநுசாரம்.

கிறித்துவ சபைகளின் ஒழுங்குகள், செபங்கள், முழுமையான பலன்கள் முதலிய செய்திகள் அடங்கியுள்ளன.

## நோய் பாடியார் (சங்க காலம்)

காதலால் உண்டாகும் துன்பத்தைப் பாடியவர் என்ற பொருளில் இவர் நோய் பாடியார் என்று அழைக்கப் பெற்றார். அகநானூற்றில் பாலைத்திணையில் அமைந்த 67 ஆம் பாடலே இவர் பாடிய பாடலாகும். இப்பாடலில் இவர் பிரிந்த தலைவனை நினைந்து தலைவி படும் மனத் துன்பத்தைக் கூறுகின்றார். மனத்துன்பமே 'நோய்' எனப்படுவது. நற்றிணையில் 185 ஆம் பாடல் ஆசிரியர் பெயரின்றிக் காணப்படுகிறது. இப்பாடலை இப்புலவர்

பாடியிருக்கலாம் என்று கருதுகின்றனர். இப்பாடல் 'ஆறு நோயோடு அழிபடர்க் கலங்கி' எனத் தொடங்குகிறது. இப்பாடலில் நோய் என்ற சொல்லால் காதல் நோய் விளக்கப்படுவதால் இப்பாடலைப் பாடியவர் இவராக இருக்கலாம் என்பர்.

**நூல்:** அகம்: 67.

## பக்கீர் சாயபு (19-நூ)

**நூல்:** அரங்க நாதக் கவிராயர், தே.ர. என்பவர் இயற்றிய ''அருச்சுணன் தீர்த்தயாத்திரை'' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பக்கீர் முகியித்தீன் புலவர் (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம்.

**தந்தை:** பரிகாரி மரக்காயர்.

இவர் இசைப்பாடல்களும் சில நூல்களும் இயற்றியுள்ளதாகத் தெரிகிறது.

**நூல்:** பீர் முகம்மது சாயபு இயற்றிய ''ஞானரத்தினக் குறவஞ்சி'' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பக்குடுக்கை நன் கணியார் (சங்ககாலம்)

நன் கணியார் என்பது இவரது இயற்பெயர். இவர் பெயருக்கு முன் அமைந்துள்ள 'பக்குடுக்கை' என்ற அடைமொழி இவரது ஊர்ப் பெயரைக் குறிப்பது என்று கொள்வர் சிலர். பக்கு என்பது பை எனப் பொருள்படும். புலவர் பையையே உடையாகக் கொண்டிருந்ததனால் பக்குடுக்கை என்னும் அடைபெற்றார் என்பர். 'ஒருவருக்கு உடுப்பவை இரண்டாக வேண்டியிருப்பவும், ஒன்றையே இரண்டாகப் பகுத்துடுக்கும் காரணத்தினால் பக்குடுக்கை நன் கணியார் எனப்பட்டார் என்றற்கும், ஒருவரது வறுமை நிலையைப் பக்குடுக்கை எனச் சிறப்பித்துரைத்த நலங்கண்டு சான்றோர் இவ்வாறு சிறப்பித்துப் பாராட்டினர் என்றற்கும் இடனுண்டு' என்று எழுதுவாரும் உளர்.

**நூல்:** புறம்: 194.

## பக்தவச்சலம் பிள்ளை (20-நூ)

**ஊர்:** திருநின்றவூர்.

**தந்தை:** தேவராசபிள்ளை, சீர்கருணீகர்.

**வாழ்ந்தகாலம்:** 1878 – 1930.

இவர் சென்னைக் கிறித்துவக் கல்லூரியிற் படித்துப் பி.ஏ., பட்டம் பெற்றவர். மேனாட்டுத் தத்துவம், விஞ்ஞானம் ஆகிய துறைகளில் காணப்பெறும் அரிய கருத்துக்களைத் தமிழிலும் பரவச் செய்ய வேண்டுமென்னும் நோக்கத்தில் தொண்டாற்றியவர்; பேச்சிலும் எழுத்திலும் தமக்கெனத் தனி நடையை வகுத்துக் கொண்டவர். சென்னை லயோலாக் கல்லூரியின் தொடக்கத்திலிருந்து 1930 ஆம் ஆண்டுவரையில் தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

**நூல்:** கிருஷ்ண சைதன்ய சரித்திரம், இந்திய தேசத்து இணையில்லா மகான்கள், இராமாயணம், முக்தமாலா, மன மோகன மாணிக்கம், முருகன் ஒரு தமிழ்த் தெய்வம், பச்சையப்ப முதலியார் சரித்திரம், நாராயணவரத்தில் வாழ்ந்த ஒரு பெரியாரின் வரலாறு.

இந்தியா தேசத்து இணையில்லா மகான்கள் என்ற நூல் ஆங்கிலத்திலும் Indian Saints என்ற தலைப்பில் வெளி வந்துள்ளது.

இராமாயணம், நடிப்புக் கேற்ற முறையில் சீதாகலியாணம் சுக்கிரீவர் ஆக்ஞை, ஸ்ரீராமபட்டாபிஷேகம் என்ற மூன்று பகுதிகளாக இயற்றப் பெற்றுள்ளது.

முருகன் ஒரு தமிழ்த் தெய்வம் என்ற நூல் கந்த புராணத்தை ஒட்டி உரைநடையில் அமைந்துள்ளது.

## பகடாலு நரசிம்மலு நாயுடு (20-நூ)

இவர் கொங்குநாட்டினர், 'கலாநிதி' என்ற இதழின் ஆசிரியர்.

**நூல்:** தென்னிந்திய சரித்திரம், பலிசவாரு புராணம்.

## பகழிக் கூத்தர் (16-நூ)

**ஊர்:** இராமநாதபுரம் பிரிவைச் சேர்ந்த சன்னுசி என்ற சிற்றூர்.

**தந்தை:** திருப்புல்லாணி மாலடியான் தர்ப்பாதனன்

இவர் வைணவக் குடும்பத்தில் பிறந்து சைவ சமயத்தைத் தழுவியவர் ஆவர். சேதுபதிகளின் பழைய தலைநகரான புகலூரில் உள்ள விநாயகரின் பெயர் பகழிக் கூத்தர் என்பதாகும். இப்பெயராலேயே இப்புலவரும் அழைக்கப் பெற்றுள்ளார். சீவக சிந்தாமணிச் சுருக்கம் என்ற பெயர் கொண்ட நூலின் முகப்பில் 'செம்பி நாட்டுச் சன்னுசிக் கிராமத்துத் திருப்புல்லாணிமாலடியான் தர்ப்பாதனன் மகன் பகழிக் கூத்தன் வாக்கு' என்ற தொடர் காணப் படுகின்றது. எனவே சன்னுசி என்பது சேதுநாட்டைச் சேர்ந்த ஊராகும்.

**நூல்:** 'திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்', சீவக சிந்தாமணிச் சுருக்கம்.

**திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்:** இந்நூல் செந்தில் முருகனைப் பிள்ளையாகக் கொண்டு பாடப்பெற்றது 10 பருவங்களில் 100 செய்யுட்களலாகியது. இந்நூல் மிக இனிய நடையும் சொல்லழகும் உடையதாய்ப் புலவர்களால் பாராட்டப் பெறுவது. திண்டிமம் என்னும் இசைக் கருவியைத் தம் கவிப் புலமைக்கு அறிகுறியாக முழங்கிக் கொண்டு புலவர் சிலர் திருச்செந்தூர் முருகன் திருமுன்பு மங்கலக் கவிபாடி வந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**சீவக சிந்தாமணிச் சுருக்கம்:** இந்நூல் 300 விருத்தப்பாக் களால் இயன்றது.

## பகீர் முகியித்தீன் (19-நூ)

**நூல்:** நான்மணிமாலை (1876)

இந்நூல் நாகைப்பட்டினப் பள்ளி வாசலைச் சிறப்பிப்பது; நாகூர் ஆண்டவரின் புகழ் பேசுவது; பாயிரச் செய்யுட் களுட்பட 44 செய்யுட்களுள்ளன.

## பகீர் முகியித்தீன், க (        )

**நூல்:** அல்லி மரைக்காயர், மீ. என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பங்காருப்பத்தர், சி. (20-நூ)

**நூல்:** சுந்தராச்சாரியார் கி. என்பவர் இயற்றிய கலைவாணி சதகம், சரசுவதி பஞ்சரத்தினம் முதலிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பங்காரு ரெட்டியார் (19-நூ)

**நூல்:** ஆரோக்கிய நாயகர் இயற்றிய தேம்பாவணிக் கீர்த்தனை என்ற நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பச்சையப்ப நாயகர், சி. (19-நூ)

**ஊர்:** சென்னை, சிந்தாரிப்பேட்டை.

**தந்தை:** அண்ணாமலை நாயகர்.

இவர் சைவசித்தாந்த சண்டமாருதம் சோமசுந்தர நாயகரிடம் தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்றார்.

**நூல்:** வல்லாள மகாராசன் சரித்திரக் கீர்த்தனை, சிவநாம கீர்த்தனை.

இவற்றுள் முதல் நூல் வல்லாள மகாராசனுக்குச் சிவ பெருமான் மகனாய்த் தோன்றி அருள் சுரந்த வரலாறு பற்றி உரைப்பது. இக்கதை திருவண்ணாமலை தலபுராணத் திலுள்ளது. இந்நூல் கீர்த்தனைக் கவிதைகளும் உரைநடையு மாக அமைந்துள்ளது.

## பச்சையப்ப முதலியார் (19-நூ)

**ஊர்:** குமாரசாமிப்பேட்டை.

**நூல்:** குமாரசாமி முதலியார் என்பவர் இயற்றிய திருப்பத் தூர்ப் புராணம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பசுபதி நாயகர் (20-நூ)

**நூல்:** ஆறுமுக நாயகர், கா. என்பவர் இயற்றிய 'வருண தருப்பணம்' என்னும் நூலினைப்பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பஞ்சநத சாத்திரிகள் (19-நூ)

**ஊர்:** தஞ்சாவூரைச் சேர்ந்த கருந்திட்டைக் குடி.

இவர் வடமொழி தென்மொழி தெலுங்கு மொழிகளில் பயிற்சி பெற்றவர்.

**நூல்:** பிரம வித்தியாமுத சாகரம்.

இந்நூல் வேதாந்தக் கருத்துக்களைக் கொண்ட உரைநடை நூல். வீடுபேற்றிற்கு வேண்டிய செய்திகளனைத்தும் இந் நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

## பஞ்சாட்சரக் கவிஞர் (17-நூ)

**வே.பெ.** நமச்சிவாயக் கவிஞர்.

இவர் பாண்டிய நாட்டினர்.

**நூல்:** கலியுகப் பெருங் காவியம்.

இந்நூல் வீரபாண்டிய கட்ட பொம்மன் ஆங்கிலேயர் களுடன் நிகழ்த்திய போரைப் பற்றி விரிவாகக் கூறுவது. ஆற்றுப் படலம், நாட்டுப்படலம், நகரப்படலம் என்ற வகையில் பழைய புராண அமைப்பில் இயற்றப் பெற்றது. 4000 க்கு மேற்பட்ட செய்யுட்கள் உள்ளன.

## பஞ்சாட்சரக் குருக்கள், சிவ (20-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணத்தில் புலோலி.

**தந்தை:** சிவசங்கரக் குருக்கள்.

இவர் இலக்கண இலக்கிய நூல்களிலும் சிவாகமங்களிலும் வல்லவர்.

**நூல்:** யாழ்ப்பாணம் வடமராட்சி மேற்கைச் சேர்ந்த வல்லிபுரத்தில் கோயில் கொண்டுள்ள மாயவப் பெருமாள்

மீது மும்மணிமாலை, போற்றி விருத்தம் முதலிய நூல்கள். கதிர்காமக் கந்தன் மீதான நூல்கள்.

## பட்டர் - 1 ( )

**ஊர்:** பாண்டிய நாட்டில் வேம்பத்தூர்; சோழிய அந்தணர்.

இவர் தென் மொழியிலும் வடமொழியிலும் சிறந்த புலமை பெற்றவர்.

**நூல்:** பகவத் கீதை (தமிழாக்கம்).

இந்நூல் வடமொழியிலிருந்து 545 பாடல்களடங்கிய தமிழ் நூலாக மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இந்நூலிற்குப் பொன்னம்பல சாமிகள் விரிவுரை எழுதியுள்ளார்.

## பட்டர் - 2 (13-நூ)

**வே.பெ.** பராசர பட்டர்; சீ பட்டர்.

**தந்தை:** கூரத்தாழ்வார்.

இவர், பகவத் கீதையைத் தமிழில் விருத்தப்பாவால் இயற்றியவரினும் வேறானவர்.

**நூல்:** பட்டர் பத்தர்த்தம், கைசிக புராணவுரை, மைவண்ணனுர் நறுங்குஞ்சி உரை, அட்டசுலோகி வியாக்கியானம்.

## பட்டர் பிரான் சீயர் ( )

**நூல்:** அந்திமோபாய நிட்டை.

## பட்டினத்தடிகள் (10-நூ)

**வே.பெ.** திருவேங்கட செட்டியார், திருவெண்காடர், பட்டினத்துப் பிள்ளையார்.

**ஊர்:** காவிரிப்பூம்பட்டினம்.

**தந்தை:** சிவநேசர். **தாய்:** ஞானகலை அம்மையார், வைசியர் மரபு.

இவர் காவிரிப்பூம்பட்டினத்தில் கப்பல் வாணிகம் செய்த பெருஞ்செல்வக் குடும்பத்தில் பிறந்தவர். திருவெண்காடர் என்பது இவரது பிள்ளைப் பெயர்; காவிரிப் பூம்பட்டினத்தில் பிறந்தமையால் பட்டினத்துப் பிள்ளையார் என்று அழைக்கப் பெற்றார்; துறவு நிலை ஏற்றபிறகு பட்டினத்தடிகள் என்று வழங்கப் பெற்றார். இன்று இப்பெயரே வழக்கில் உள்ளது.

அடிகளாரின் திருப்பாடல்களில் 'தோடுடைய செவியன்' என்னும் தேவாரப்பதிகம் எழுந்த வரலாறும், சுந்தர மூர்த்திகளின் வரலாறும், வரகுண பாண்டியரின் அருஞ் செயல்களும் குறிப்பிடப் பட்டுள்ளமையால் இவர் தேவார ஆசிரியர்க்கும் வரகுண பாண்டியர்க்கும் காலத்தால் பிற் பட்டவர் என்பது தெளிவு. நம்பியாண்டார் நம்பி அடிகளாரின் திருப்பாடல்களைத் தொகுத்திருத்தலால் அடிகளார் அவருக்கு முற்பட்டவராதல் வேண்டும். வரகுண பாண்டியரின் காலம் கி.பி. 9 ஆம் நூற்றாண்டென்று துணி வதாலும், கல்வெட்டுக் குறிப்புக்களாலும், பிறசான்று களாலும் நம்பியாண்டார் நம்பியின் காலம் கி.பி. 11 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று துணியப் பெறுவதாலும் அடிகளாரின் காலம் இடைப்பட்ட கி.பி. 10 ஆம் நூற்றாண்டாகுமென்று ஆராய்ச்சியாளர் துணிகின்றனர்.

இவர் சிவகலை என்ற அம்மையாரை வாழ்க்கைத் துணைவி யாக ஏற்று இல்லற வாழ்வில் ஈடுபட்டார். மணவாழ்வில் பல ஆண்டுகளாகியும் மகப்பேறு வாய்க்கப் பெறவில்லை. இவருடைய குடும்பத்தினர் திருவிடைமருதூர் இறைவனையே தங்கள் வழிபடு கடவுளாக வணங்குபவர்கள். அவ்விறை வனின் திருவுளப்படி சிவசருமர் என்ற திருவிடைமருதூர் அந்தணரின் பிள்ளையாகிய மருதவாணரை வளர்ப்புப் பிள்ளையாக ஏற்று மகப் பேற்றுக் குறையை நீக்கிக் கொண்டார். மருதவாணர் பிள்ளைப் பருவம் கடந்து தந்தையின் செல்வத்தைப் பெருக்கக் கடல் வாணிபத்தில் ஈடுபட்டார். ஒருநாள் திடீரென்று "காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே" என்று எழுதி வைத்து விட்டு மறைந்து விட்டார். இதனைக்கண்ட திருவெண்காடர்

நிலையாமை உணர்வு தோன்றப் பெருஞ்செல்வத்தையும் மனைவாழ்வையும் துறந்து பிச்சையேற்று உண்ணும் துறவியாகித் தலயாத்திரை மேற்கொண்டார்.

இந்திய நாடு முழுவதும் மேற் கொண்ட திருத்தலப் பயணத்தில் ஆங்காங்கே பல அற்புதங்களை நிகழ்த்தி, இறுதியில் திருவொற்றியூரில் கடற்கரையில் விளையாட்டுச் சிறுவர்களுடன் கூடி விளையாடி சிவலிங்க நிலையில் திருவுருக் கரந்து முத்தி நிலையில் கலந்தார். இவரது திருக் கோயில் இன்றும் திருவொற்றியூரில் உள்ளது.

சைவத் திருமுறையில் ஒன்றாகிய திருவிசைப்பா, திருப் பல்லாண்டு பாடிய சேந்தனாரடிகளும், வடநாட்டில் உச்சயினி மன்னராய் விளங்கிய பத்திர கிரியாரும் அடிகளாரின் அருள் வாக்கால் மெய்ஞ்ஞானம் பெற்று அடியாராயினர் என்று கூறப்படுகின்றது.

**நூல்:** கோயிற்றிருவகவல்... 

இந்நூல்களேயன்றி 'பட்டினத்துப் பிள்ளையார் பிரபந்தத் திரட்டு' என்ற பெயரில் ஒரு நூல் இவரியற்றியதாகக் கூறப்படுகிறது. இந்நூலுள் கோயில் திருவகவல், கச்சித் திருவகவல், திருவேகம்ப மாலை, திருவேகம்ப விருத்தம், பல தனிப் பாடல்கள், முதல்வன் முறையீடு, அருட்புலம்பல், இறந்த காலத்திரங்கல், நெஞ்சொடு புலம்பல், பூரணமாலை, நெஞ்சொடு மகிழ்தல், உடற் கூற்று வண்ணம், ஆகிய நூல் களும், பாடல்களும் உள்ளன. 'சித்தர் ஞானக் கோவை, என்றநூலிலும் இவரது பாடல்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. பதினோராம் திருமுறையிலுள்ள அடிகளாரின் பாடல் களுக்கும் இப்பிரபந்தத் திரட்டிலுள்ள பாடல்களுக்கும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. இவை பேச்சு மொழிச் சொற்கள் பயின்றனவாய் பாமரரும் பயிலும் பிற்காலப் பாவகைகளைத் தழுவி எளிய நடையில் அமைந்துள்ளன.

எனவே இவை பிற்காலத்தில் வாழ்ந்த வேறொரு பட்டினத்தாரால் பாடப்பட்டிருக்கலாம் என்று ஒரு கருத்து உள்ளது.

**கோயினுன் மணிமாலை:** இது பதினோராந் திருமுறையில் இருபத்தாறும் நூல். தில்லைப் பெருமாளைப் பற்றிய தோத்திரப் பிரபந்தம் 40 செய்யுட்கள் உள்ளன.

**திருக்கழுமல மும்மணிக் கோவை:** இது பதினோராந் திருமுறையில் இருபத்தேழாம் நூல். சீகாழிப் பெருமானைப் பற்றிய தோத்திரப் பிரபந்தம்; 30 செய்யுட்கள் உள்ளன.

**திருவிடை மருதூர் மும்மணிக் கோவை:** இது பதினோராந் திருமுறையில் இருபத்தெட்டாம் நூல். திருவிடை மருதூர்ப் பெருமானைப் பற்றிய துதிப்பாமாலை; 30 செய்யுட்கள் உள்ளன.

**திருவேகம்பமுடையார் திருவந்தாதி:** இது பதினோராந்திருமுறையில் இருபத்தொன்பதாம் நூல்; 100 செய்யுட்கள் உள்ளன.

**திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது:** இது பதினோராந் திருமுறையில் முப்பதாவது நூல்; 10 செய்யுட்கள் உள்ளன.

## பட்டுவையங்கார் (19-நூ)

**ஊர்:** மணலூர், வைணவ அந்தணர்.

இவர் சூரியனார் கோயில் ஆதீனம் முத்துக்குமார தேசிக சாமிகள் என்ற பெரியவரிடத்தில் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றார்.

**நூல்:** திருப்பனந்தாள் காசிமடத் தலைவர் மீது இயற்றிய பாடல்கள்.

## படம்பக்க நாதன் ( )

**நூல்:** ‘திருவொற்றியூர்ச் செங்குந்த விநாயகர் மாலை’.

இந்நூல் 30 பாடல்களால் ஆகியது. கட்டளைக் கலித்துறையானியன்றது.

## படிக்காசுப் புலவர் (17-நூ)

**வே.பெ.** படிக்காசுத்தம்பிரான்.

**ஊர்:** தொண்டைநாட்டிலே களத்தூர்.

இவர் இலக்கண விளக்கம் வைத்திய நாத தேசிகரிடம் தமிழ் நூல்களைக் கற்றுத் தேர்ந்தார். இவர் வல்லை என்ற ஊரிலிருந்த காளத்தி முதலியாரை அடுத்து, அவர்மேல் பல கவிகள் பாடிப் பல பரிசுகளைப் பெற்ருர். புதுக்கோட்டைப் பகுதியிலிருந்த வைத்தூரையும் அதனைச் சுற்றிய நாடு களையும் சிவந்தெழுந்த பல்லவரையர் என்னும் சிற்றரசர் கி.பி. 1681 முதல் 1686 வரை ஆண்டுவந்தனர். இப் பல்லவரையர் பெருங் கல்வியுடன் கொடையுள்ளமும் படைத்தவர். இவ்வரசர் மேல் படிக்காசுப் புலவர் உலாவும் பிள்ளைத் தமிழும் பாடினர். நெல்வேலியில் காரிய கர்த்த ராக இருந்த மாதைத் திருவேங்கடேச ஐயரும் அரியலூர் மழவரங்க பூபனும் கோயம்புத்தூரை அடுத்த கவசை என்ற ஊரைச் சேர்ந்த மசக்காளி மன்ருடியும் படிக்காசுப் புலவரை வரவேற்றுப் பாக்கள் பல பெற்றுப் பரிசுகள் பெற்றதாக வரலாறுள்ளது. மோரூர் என்ற ஊரில் எழுந்தருளியிருக்கும் பாம்பலங்காரர் மீது வருக்கக்கோவை பாடினர். மாவண்டூர் என்னும் மாவையில் வாழும் கறுப்ப முதலியார் வேண்டு கோளின்படி தொண்டை மண்டல சதகம் பாடினர். இந் நூல் பாடி முடிக்கப்பட்டவுடன் கறுப்ப முதலியார் புலவருக்குப் பெரும் பரிசளித்தார். பல்லக்கு முதலிய விருதுகளையுங் கொடுத்து வீதிவலஞ்செய்வித்தார். கி.பி. 1678 முதல் 1710 வரை சேது நாட்டை ஆண்ட கிழவன் சேதுபதி என்னும் இரகுநாத சேதுபதியைப் பாடி அவரால் பல பரிசுகள் பெற்ருர். புலவர் சீதக்காதி வள்ளலின் பெருங் கொடையைக் கேள்வியுற்று கீழக்கரை சென்று அவரது வள்ளற்றன்மை, அருமை பெருமை ஈகை புகழ் முதலாய குணங்களைப் புகழ்ந்து இனிமையாகப் பல பாடல்களைப் பாடினர். அங்குச் சில நாட்கள் தங்கியிருந்து பின்னர் மதுரை, திருவாரூர், திருவாஞ்சியம் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு தருமபுரத்திற்குச் சென்ருர். அங்கு அப்பொழுது பட்டத்திலிருந்த திருநாவுக்கரசு தேசிகரிடத் தில் சந்நியாசம் பெற்று, வைத்தீசுவரன் கோயிலில் கட்டளைத் தம்பிரானுக நியமிக்கப் பெற்ருர். அங்கிருந்து கோயிற்

காரியங்களையும் சிவத்தொண்டுகளையும் புரிந்துகொண்டிருந்த போது இறைவன் திருவடி நிழலை எய்தினார்.

**நூல்:** சிவந்தெழுந்த பல்லவன் உலா, சிவந்தெழுந்த பல்லவன் பிள்ளைத்தமிழ், உமைபாகர் பதிகம், பாம்பலங் காரர் வருக்கக் கோவை, தொண்டைமண்டல சதகம், புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம்.

**உமைபாகர் பதிகம்:** திருச்செங்கோட்டில் எழுந்தருளி யிருக்கும் அர்த்தநாரீசுரர் என்ற உமைபாகரிடம் தமது குறைகளை விண்ணப்பித்துக் கொள்வது.

பாம்பலங்காரர் வருக்கக் கோவை 600 செய்யுட்களை யுடையது.

**தொண்டை மண்டல சதகம்:** இது தொண்டை மண்டலத் தில் வாழ்ந்த பல பெரியார்களுடைய வரலாற்றினை மேற் கோளோடு சுருங்கக் கூறுவது.

**புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம்:** இது 100 பாக்களையுடைய சிறு பிரபந்தம்; மிக்க சுவையுடையது.

பழமொழி விளக்கம் என்னும் தண்டலையார் சதகம் படிக்காசுப் புலவரால் பாடப் பெற்றதென்று ஒரு கருத் துண்டு. தமிழ்ப் புலவர்கள் வரலாறு எழுதிய ச. சோம சுந்தர தேசிகர் இதனை மறுத்துள்ளார். இச் சதகம் சாந்த லிங்கக் கவிராயரென்பவரால் பாடப் பெற்றதென்பது அவர் கருத்து. மகாமகோபாத்தியாய உ. வே. சாமி நாதையர் கருத்தும் இதுவேயாகும்.

## படுமரத்து மோசி கீரனார் (சங்க காலம்)

இவர் 'கீரன்' என்ற பெயர் பெற்ற சங்கப் புலவர்களுள் ஒருவர். இவர் பெயருக்கு முன்னால் உள்ள படுமரம் என்ற அடைமொழிக்கு விளக்கம் தெரியவில்லை. மோசி என்பது ஊர்ப்பெயர் என்பர். இவர், படுமரத்து மொழி கீரனார், படுமாற்று மோசி கீரனார் என்றும் காணப்படுகின்றது.

**நூல்:** குறுந்தொகை 33, 75, 383.

## படுமரத்து மோசி கொற்றனுர் (சங்க காலம்)

இவர் பெயர் படுமாற்றூர் மோசி கீரன் கொற்றனுர் என்றும் சில படிகளில் காணப்படுகின்றது. படுமரம் என்ற அடைமொழியைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. மோசி என்பது ஓரூர் என்று கருதப்படுகின்றது. குறுந்தொகையில் மோசி கொற்றனுர் என்று ஒருபுலவர் பெயர் குறிப்பிடப் படுகின்றது. இவ்விருவரும் ஒருவரா, வேறு என்பது தெரியவில்லை.

**நூல்:** குறுந்தொகை: 376.

## பண்டாரக் கவிராயர் (18-நூ)

**ஊர்:** திருக்குற்றுலத்தை அடுத்த மேலகரம்.

**தந்தை:** திரிகூடராசப்ப கவிராயர்.

**நூல்:** திரு இலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ், திரு இலஞ்சி முருகன் உலா.

திருக்குற்றுலத்திற்கு வடக்கேயுள்ளது திரு இலஞ்சி. இப் பகுதியில் எழுந்தருளிய முருகன் மீது இயற்றப் பெற்றவையே இந்நூல்கள்.

திரு இலஞ்சி முருகன் உலா என்னும் நூல் 460 கண்ணிகள் அமைந்தது.

## பண்டிதராசர் (18-நூ)

**ஊர்:** இலங்கைத் திருகோணமலை.

இவர் திருகோணமலையில் திருக்கோணேசராலயத்தில் அருச்சகராக இருந்தவர்; வடமொழி தென் மொழிகளில் புலமை பெற்றவர். இவர் தம் நூலின் சிறப்புப் பாயிரக் கவி ஒன்றினுல் செகராச சேகரமன்னன் காலத்தில் இருந்தவ ரென்பது புலனுகின்றது.

**நூல்:** தக்கண கைலாச புராணம் என்னும் சோணுசல புராணம்.

## பணவிடுதூது ஆசிரியர் (17-நூ)

இப்புலவரின் இயற்பெயர் தெரியவில்லை. இந்நூல் மாதைத் திருவேங்கட நாதர் மீது பாடப்பட்டது. இத்திருவேங்கட நாதரே குட்டித் தொல்காப்பியம் என்ற இலக்கண விளக்கம் என்ற நூலினை வைத்திய நாத நாவலரைக் கொண்டு செய் வித்தவராவர்.

பணவிடுதூது, திருவேங்கட நாதருடைய இரண்டாவது மகனார் வேங்கடேசையர் மேல் பாடப்பட்டது.

## பத்தராவி ஐயங்கார் (19-நூ)

**ஊர்:** ஸ்ரீவில்லிபுத்தூர்.

**நூல்:** தேவராச பாரதிகள். உ.வே. என்பவர் இயற்றிய 'சந்திரகலா மாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பத்திரகிரியார் (10-நூ)

**ஊர்:** துளுவ நாட்டில் உஞ்சேனை மாகாளம்.

பட்டினத்தடிகளின் மாணவராகக் கருதப்படும் இவர் துளுவ நாட்டில் உஞ்சேனை மாகாளம் என்னும் நகரில் அரசராக இருந்தவர். இவர் பட்டினத்தடிகள் மாணவ ரானது குறித்து ஒரு கதை வழங்கப்படுகிறது. அக்கதையாவது:- ஒரு முறை இவர் அரண்மனையிலே திருடிய கள்வர்கள் சில நகைகளை ஒரு பிள்ளையார் கழுத்தில் போட்டனர். அந்த நகைகள் பிள்ளையார் அருகில் நிட்டையி லிருந்த பட்டினத்தடிகள் கழுத்தில் விழுந்தன. காவலர்கள் பட்டினத்தடிகளைத் திருடர் என்று கருதி அரசனிடம் அழைத்துச் செல்ல, அரசன் அவரைக் கழுமரத்தில் ஏற்ற ஆணையிட்டான். அரசன் ஆணைப்படி கழுவிலேற்றக் கொண்டு சென்ற போது அடிகள் பாடிய பாடலால் கழுமரம் தீப்பற்றி எரிந்தது. பத்திரகிரியார் இதனைக் கேட்டதும் அடிகளாரை வந்து பார்த்துப் பணிந்து பொறுத்தருள வேண்டித் துறவு பூண்டார்.

**நூல்:** 'பத்திரகிரியார் புலம்பல்'.

இப்பாடல்கள் சித்தர் நூல் வகையிற் சேர்க்கத்தக்க தென்பர். இப்பாடல்கள் கண்ணிகளில் அமைந்தன. ஆசையை ஒழித்து ஆன்ம போதத்தை நாடுமாறு கூறுவன. பாடல் தோறும் 'எக்காலம்' எனக்கூறி இரங்குவதாக உள்ளன; 232 செய்யுட்கள் உள்ளன.

## பத்மநாப ஐயர் ( )

**ஊர்:** கோயமுத்தூர்.

**நூல்:** தேடச் சிறந்த தரிசனம். (1894).

இந்நூல் நிரோட்டக யமக அந்தாதியில் அமைந்தது. 30 பாடல்களையுடையது.

## பத்மநாப பாரதியார் (20-நூ)

**ஊர்:** தாமரைக்குளம்.

**நூல்:** சங்கர நாராயண பாரதியார் என்பவர் இயற்றிய 'கன்னியாகுமரி பகவதியம்மன் பதிகம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பத்மநாப பிள்ளை (20-நூ)

**ஊர்:** தாழக்குடி.

**நூல்:** மாணிக்க வாசகம் பிள்ளை, தா. என்பவர் இயற்றிய 'திருச் செந்தில் பதிற்றுப் பத்தந்தாதி', 'கந்தர் கலிநீங்கு வெண்பா' என்னும் நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பத்மநாபாச்சாரியார் (19-நூ)

**நூல்:** மெய்ஞ்ஞான கீத ரசம் (1885)

இந்நூல் அத்வைத கீதங்கள் அடங்கியது; துதிப்பாடல் போல் உள்ள கீர்த்தனங்களும் பலவாகும்.

## பத்மநாபாசாரி, பூ. (19-நூ)

**ஊர்:** கொல்லமாநகர்.

இவர் கொச்சி எர்ணுகுளத்தில் வணிகத் தொழிலில் ஈடு பட்டிருந்தார். சிறந்த தமிழ்ப்புலமையும் பெற்றிருந்தார்.

**நூல்:** சிறுத்தொண்டர் கதாப்பிரசங்கம் (1889) 'விசுவப் பிரம புராணம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

இந்நூல் சிறுத்தொண்டநாயனாரின் வரலாறு கூறுவது; இசையுடன் கதை சொல்லுவோர்க்கு ஏற்றது; கீர்த்தனம் விருத்தம் முதலிய செய்யுட்களும் உரைநடைப் பகுதியுமாக நூல் அமைந்துள்ளது.

## பதஞ்சலி (          )

**நூல்:** பதஞ்சலி மதி வெண்பா, பதஞ்சலி பாடல்கள் 50, பதஞ்சலி வாதத்திறவு கோல் 20.

## பதடி வைகலார் (சங்ககாலம்)

இவர் உருவகத்தாற் பெயர் பெற்ற சங்கப் புலவர்களுள் ஒருவர். பதடி வைகல் என்ற உருவகச் சொற்றொடரோடு 'ஆர்' என்ற உயர்வுப் பன்மை விகுதி சேர்க்கப்பட்டு பதடி வைகலார் என்று அழைக்கப் பெற்றார். இவர் பாடிய குறுந்தொகைப் பாட்டில் (323) தலைவியோடு பயிலாத நாளைத் தலைவன் வீணான நாள் - பதடி வைகல் என்று குறிப்பிடுவதன் சிறப்பால் இப்பெயர் பெற்றார்.

**நூல்:** குறுந்தொகை; 323.

## பதுமநாப பிள்ளை, வ. (20-நூ)

**ஊர்:** விழுப்புரம் பகுதி ஆரியூர்.

**தந்தை:** வரதராசபிள்ளை; வைணவர்.

இவர் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத்தேர்ந்தவர். இதழ்களில் பல கட்டுரைகள் எழுதியுள்ளார். தனிப்பாடல் கள் பல இதழ்களில் வெளியாகியுள்ளன.

**நூல்:** 'இல்லற ரகசியம்'.

## பதுமநாபன் கவிராசர் (19-நூ)

இவர் திருவிதாங்கூர் சமத்தானப் புலவராக இருந்தவர்.

**நூல்:** தம்பா உபாத்தியாயர், ச. என்பவர் இயற்றிய 'அருணசலேசர் தோத்திரப் பாமாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பதுமனர் - 1 (சங்ககாலம்)

இவர் பெரும்பதுமனர் என்ற புலவரினும் வேருனவர். இவர் பெயர் சமணரைக் குறிக்கும் என்பர். நாலடியாருக்குப் பால், இயல், அதிகாரம் வகுத்து உரை இயற்றிய பதுமனர் கி.பி. 9ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தவராவர்.

**நூல்:** குறுந்தொகை 6.

## பதுமனர் - 2 ( )

இவர் நாலடியார் என்னும் நூலைத் தொகுத்துப் பால் இயல் அதிகாரம் வகுத்து உரை இயற்றினர் என்று தெரிய வருகிறது. இவர் வாழ்ந்த காலம் முதலியவை தெரியவில்லை; சமணர் என்று கருதப்படுகின்ருர்.

## பதுறுத்தீன் புலவர் ( )

இவர் பெரும்புலவர் என்று பெயர் பெற்றவர்.

**நூல்:** முகியித்தீன் புராணம்.

இப்புராணத்தின் முதற்பாகத்தில் பாயிரம் முதல் சேணம் உயிர் பெற்ற படலம் ஈருக 40 படலங்களும் இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட செய்யுட்களும் உள்ளன.

## பர்நாந்து சவியர்க் குருசு (19-நூ)

**நூல்:** ஞான சௌந்தரியம்மாள் நாடகம் (1889)

இந்நூல் கிறித்துவ சமயந் தொடர்பான கதை விருத்தம் கீர்த்தனை முதலிய கவிகளினால் நாடகமாக இயற்றப் பெற்றது.

பரகாலசாமி (பெரியவர்) (        )

**நூல்:** திருவிருத்த உரை.

பரகால சீயர் (பெரியவர்) (        )

**நூல்:** திருவாய்மொழி 18000 படி உரை.

பரகாலையர் (பெரியவர்) (        )

**நூல்:** திருவாய் மொழி-18000 படி வியாக்கியானம்.

பரங்கிரிவேல் (19-நூ)

**நூல்:** சிறுத் தொண்டநாயனார் திவ்விய சரித்திரக் கும்மி. (1890)

இந்நூல் சிறுத் தொண்டநாயனார் வரலாற்றினை எளிய கும்மிப் பாடல் அமைப்பிற் கூறுவது; 144 செய்யுட்களை உடையது.

பரசிவானந்த குரு சாமிகள் (19-நூ)

**ஊர்:** சிங்கபுரி.

இவர் திருத்தில்லை, திருமுது குன்றம், திருவதிகை, திருப் பாதிரிப் புலியூர் என்னும் நான்கு சிவப்பதிகளையும் நான்கு எல்லையாகக் கொண்டு விளங்கும் வேலுடையாள் பட்டணம் என்ற சத்திபுரியில் எழுந்தருளிய முருகக் கடவுளிடத்தில் பேரன்பு கொண்டு அங்கேயே தங்கியிருந்தார்.

**நூல்:** 'பஞ்சரத்தினர் திருப்புகழ்'.

இந்நூல் சத்திபுரி முருகன் மீது இயற்றப் பெற்றது. இவ்வூர் திருப்படை வீடுகள் முப்பத்தாறனுள் ஒன்றாக எண்ணப்படும்.

பரசுராம கவிராயர் (        )

**ஊர்:** சென்னை புரசைவாக்கம்.

**நூல்:** சிறுத் தொண்டர் புராண விலாசம்.

சிறுத் தொண்டர் புராணம் நாடக நூலாக இயற்றப் பட்டுள்ளது.

பரசுராமன் ( )

**நூல்:** சர்வார்த்தசபூடணம்.

பரஞ்சோதி ஆசாரியார் (20-நூ)

இவர் முருகதாச சாமிகளிடம் கல்வி கற்றவர்.

**நூல்:** முருகக் கடவுள் மீது பாடிய புகழ் நூல்கள்.

பரஞ்சோதி முனிவர் (16-நூ)

**ஊர்:** தஞ்சைமாவட்டத்திலுள்ள திருமறைக்காடு.

**தந்தை:** மீனுட்சிசுந்தர தேசிகர்.

இவர் மதுரை சொக்கநாதர் செய்த திருவிளையாடல்களை வடமொழியிற் கூறியபடி தமிழில் திருவிளையாடற் புராணம் என்னும் பெயரால் பாடியுள்ளார். சைவ சித்தாந்தத்திலும் இசையிலும் வல்லவரென்பது இவர் நூலால் உணரப்படும். இவர் பரம்பரையினர் திருத்துறைப்பூண்டிக்கு அருகிலுள்ள குறுக்கை முதலிய சிற்றூர்களில் இன்றும் வாழ்ந்து வருகின்றனர்.

**நூல்:** திருவிளையாடற் புராணம், அறுபத்து நான்கு திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா, மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி. வேதாரணிய புராணமும் இவரால் இயற்றப் பட்டது என்பர்.

திருவிளையாடற்புராணம் மதுரைக் காண்டம், கூடற் காண்டம், ஆலவாய்க் காண்டம் என முப்பெருங் காண்டங்களைக் கொண்டது. இந்நூல் சொன்னேக்கம், பொருள் நோக்கம், சாமுத்திரிகா லட்சணம், அசுவலட்சணம், இரத்தினப்பரீட்சை ஆகியவற்றிற்கு இலக்கியமாக விளங்குகிறது. இந்நூலில் பெருங்காப்பிய நயங்கள் சிறந்துள்ளன; 68 படலங்களும் 3363 பாடல்களும் உள்ளன.

## பரஞ்சோதியார் (16-நூ. முற்பகுதி)

**ஊர்:** தில்லை.

**தந்தை:** திருமலை நாதர். இவர் புராணத் திருமலை நாதர் என்றும் கூறப்படுவர்.

**நூல்:** சிதம்பரப் பாட்டியல், மதுரை உலா.

சிதம்பரப் பாட்டியல், தனி நிலையும் தொடர் நிலையுமான செய்யுளிலக்கணங்களை விளக்கிக் கூறுவது. இந்நூல் உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல், பொருத்தவியல், மரபியல் என்ற ஐந்து இயல்களையுடையது; 51 செய்யுட்களைக் கொண்டது.

## பரண தேவ நாயனார் (10-நூ)

இவர் சங்க காலப் பரணரின் வேறானவர்.

**நூல்:** சிவபெருமான் திருவந்தாதி.

இந்நூல் பதினோராம் திருமுறையில் இடம் பெற்றுள்ளது.

## பரணர் (சங்ககாலம்)

இவர் சங்கப் புலவராகிய கபிலருடன் நெருங்கிய நட்புக் கொண்டிருந்தமை பற்றி இலக்கண உரைகளில் 'கபிலபரணர்' என்ற தொகைநிலைத்தொடர் வழங்கப் படுகின்றது. பதினோராம் திருமுறையில் இடம்பெற்ற சிவபெருமான் திருவந்தாதியைப் பாடிய பரணர் இவரினும் வேறானவர். இவர் கபிலருக்கு முற்பட்டவர். பரணி நாளில் பிறந்தமையால் இவருக்குப் பரணர் என்னும் பெயர் இடப்பட்டதென்று சிலர் கூறுவர்.

பரணர் பிறந்த குலம் எது என்பது தெரியவில்லை. பரணர் பேகனைப் பாராட்டிய பாக்களில் "சீறியாழ் செவ்வழி பண்ணியாழநின், காரெதிர் கானம் பாடினேம்" எனவும், "களங்களியன்ன கருங்கோட்டுச் சீறியாழ், நயம்புரிந் துறையுநர் நடுங்கப்பண்ணி' எனவும், சேரமான்கடலோட்டிய வேல்கெழுகுட்டுவனைப் பாராட்டிய பாட்டில் "அரிக்குரல் தடாரி, உருப்ப ஒற்றிப் பாடி வந்திசின் பெரும" எனவும்

பாடியிருப்பதைக் கொண்டு பரணர் பாணர் குடியில் பிறந்தவரென்பர். இக்குடியில் பிறந்து புலமை பெற்றதால் இவரது இயற்பெயர் மறைந்து பாணர் என்றே அழைக்கப் பெற்றார் என்றும், பின்னர் ஏடு பெயர்த்து எழுதுவோர் பாணர் என்பதனைப் பரணர் எனப்பிழைபட எழுதிவிட்டனர் என்றும் சிலர் கூறுவர். அரிசில்கிழார் என்ற புலவர் பேகனைப் பாடிய பாட்டொன்றில் பாணரைப் போல் யாழிசைத்துப் பாடியதாகப் பாடியுள்ளார். நக்கீரர் சோழநாட்டுப் பிடவூர் கிழான் பெருஞ்சாத்தனைப் பாடிய பாட்டில் தடாரிப்பறை முழக்கிப் பாடி நின்றதாகப் பாடியுள்ளார். ஆற்றுப்படைப் பாடல்களில் இது போன்ற வழக்கினைக் காண்கின்றோம். ஆதலால் பரணரைப் பாணர் குடியில் பிறந்தார் என்பதும் பாணர் என்பதே பரணர் எனத்திருத்தப்பட்டு விட்டது என்பதும் பொருந்தாது.

இவர் கடல் பிறகோட்டிய வேல்கெழு குட்டுவனைப் பதிற்றுப் பத்து ஐந்தாம் பத்திற்பாடி உம்பற் காட்டு வருவாயைப் பரிசிலாகப் பெற்றார். சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியைப் புகழ்ந்து பாடியுள்ளார். நெடுஞ் சேரலாதனும் பெருவிறற்கிள்ளியும் போர்புரிந்து மடிந்த செய்தியைப் புறப்பாடலில் கூறியுள்ளார். வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும், அதியாமனஞ்சியும் இவரால் பாடப் பெற்றுள்ளனர். வையாவிக் கோப்பெரும் பேகனை பாணற் றுப் படையும் இயன் மொழியும் பாடிச் சிறப்பித்துள்ளார். 'மாலுங்குறளாய்' என்னும் திருவள்ளுவமாலைச் செய்யுள் இவர் பாடியதாகக் காணப்படுகின்றது:

இவர் பாடல்கள் வரலாற்றுக் குறிப்புக்களைப் பெற்றவை.

**நூல்:** அகம்: 6, 62, 76, 116, 122, 125, 135, 142, 148, 152, 162, 178, 181, 186, 196, 198, 208, 212, 222, 226, 236, 246, 258, 262, 266, 276, 322, 326, 356, 367, 372, 376, 386, 396, குறுந்தொகை: 19, 24, 36, 60, 73, 89, 120, 128, 165, 199, 258, 292, 298, 328, 393, 399. நற்றிணை; 6, 100, 201, 247, 260, 265, 270, 280, 300, 310, 350, 356.

பதிற்றுப் பத்து: ஐந்தாம் பத்து. புறம்: 4, 63, 141, 142, 144, 145, 336, 341, 343, 348, 352, 354, 369.

## பரத சூடாமணி (        )

**நூல்:** தாள சமுத்திரம்.

இவர் 'தாள சமுத்திரம்' என்னும் நூல் செய்தாரென்பது,

"திண்மை பெரிய திருவடிநா யன்மங்கை
வண்மை ...... வளநாடன் — மண்மகள் சேர்
தோள்துளன் வன்பரத சூடாமணி யுரைத்தான்
தாள சமுத்திர நூல் தான்" என்னும் பாடலாற் பெறப்படும்.

## பரத சேனபதியார் (        )

**பார்க்க:** ஆதி வாயிலார்.

## பரதேசியர் பிள்ளை, கு. (20-நூ)

**ஊர்:** சேர நாட்டில் கோட்டாறு வடிவை மாநகர்.

**தந்தை:** குமார வேலுப்பிள்ளை.

இவர் இலக்கண இலக்கியங்களைக் கற்றுப் புலமை பெற்றவர்.

**நூல்:** திருவனந்தபுரம் பத்மநாப சாமி மீது தோத்திரம். கன்னியகுமரிப் பகவதி அம்மன் அருள் மணிமாலை, திருவாங்கூர் அரசர் மீது மகாராசா பதிகம்.

## பரமசிவ சாமிகள் (19-நூ)

**வாழ்விடம்:** திருப்பனந்தாள்

**நூல்:** சிவானுபவ சாரம்; திருப்பனந்தாள் விசுவநாதர் பேரில் தோத்திரப் பாமாலை.

**சிவானுபவ சாரம்:** இந்நூல் இல்வாழ்க்கை இழிவு தொடங்கி, அணைந்தோர் தன்மை ஈறுகப் பத்து அதிகாரமாகவும், அதிகாரத்திற்கும் பப்பத்துச் செய்யுளாகவும் ஆக 100 நேரிசை வெண்பாக்கள் கொண்டது.

## பரமசிவத் தம்பிரான் (19-நூ)

இவர் தருமபுர ஆதினத்துத் தம்பிரான் சாமிகளில் ஒருவர். காசியில் சில ஆண்டுகள் தங்கியிருந்த பிறகு, திருவாவடு துறை ஆதினத் தலைவர் சுப்பிரமணிய தேசிகரிடம் மிகுந்த அன்பு கொண்டு திருவாவடுதுறை ஆதினத்தில் தங்கினார். அங்கு அவர் மாணவர்களுக்குப் பல நூல்களைக் கற்பித்து வந்தார். தமிழறிஞர் உ.வே. சாமிநாதையர், சண்பகக் குற்றாலக் கவிராயர் முதலியோர் இவரிடத்தில் நன்னூல் விருத்தியுரை முதலிய நூல்களைப் பாடங் கேட்டனர். பலருக்குப் பாடஞ்சொல்லிய இவர் சுப்பிரமணிய தேசிகரிடம் சில தமிழ் நூல்களையும் சைவ நூல்களையும் பாடங்கேட்டார். மடத்திலிருந்த வடமொழிப் புலவர்களிடம் வியாகரணமும் படித்தார். தமிழில் செய்யுளியற்றும் ஆற்றலும், சொற் பொழிவாற்றும் திறனும் பெற்றார்.

**நூல்:** சுப்பிரமணிய தேசிகர் மீது மும்மணிக் கோவை.

இந்நூல் தேசிகர் திருமுன்பே அரங்கேற்றஞ் செய்யப் பெற்றுப் பரிசளிக்கப்பட்டது. தில்லையம்பூர்ச் சந்திரசேகர கவிராச பண்டிதர் இந்நூலினை அச்சிட்டு வெளிப்படுத்தி யுள்ளார்.

## பரமசிவப் புலவர் (19-நூ)

**ஊர்:** கடிகை.

எட்டையபுரத்தில் பெருநிலக்கிழாருடைய அவைக்களப் புலவராகப் பணியாற்றியவர். நமச்சிவாயப் புலவர், வேங்கடபதி ஐயங்கார், எட்டீசுரக் குருக்கள், சிவகாமி நாத பிள்ளை முதலியோர் இவருடன் அவைக்களப் புலவர் களாக இருந்தனர்.

**நூல்:** நமச்சிவாயப் புலவர் இயற்றிய ‘வல்லீ பரதம்’ என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பரமசிவம் பிள்ளை பொ. (19-நூ)

**ஊர்:** பொன்னேரி.

**தந்தை:** சுந்தரம்பிள்ளை.

இவருடைய தந்தையார் சுந்தரம்பிள்ளை வடலூர் இராமலிங்க அடிகளாரின் தமையனார் மருகராவர். இவர் தமிழ் ஆங்கில மொழிகளில் தேர்ச்சி பெற்றவர். தமிழில் சொற்பொழிவாற்றும் திறம் பெற்றவர். செய்யுளியற்றும் ஆற்றலும் உண்டு. சென்னை உதவிக் கணக்காய்வாளருடைய அலுவலகத்தில் எழுத்தாளராகவும் பணி புரிந்துள்ளார்.

**நூல்:** செய்யப்ப முதலியார் இயற்றிய மும்மணிமாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பரமசிவ முதலியார் (20-நூ)

**ஊர்:** மாருந்தை.

**நூல்:** செண்பகக் குமாருபிள்ளை, மா.அ. என்பவர் இயற்றிய 'சற்குரு நாதர் சரித்திரம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பரமசிவானந்த குருசாமிகள் (19-நூ)

**ஊர்:** சிங்கபுரி.

**நூல்:** வேலுடையான்பட்டினம் முருகக் கடவுள் பஞ்ச ரத்தினத் திருப்புகழ் (1893).

முருகன் படைவீடுகள் முப்பத்தாறினுள் ஒன்றாகிய சத்தி புரி என்னும் வேலுடையான் பட்டினத்தில் எழுந்தருளி யிருக்கும் முருகப் பெருமானைப் பற்றிய துதிமாலை.

## பரம முனிவர் (19-நூ)

**நூல்:** சித்தாந்த சாரம்.

இந்நூல் சைவசித்தாந்த தத்துவ நெறிகளைக் கூறுவது; பதிபசு பாசம் என்னும் முப்பொருளையும் விளக்குவது; 31 செய்யுட்களைக் கொண்டது.

## பரமானந்த தேவர் ( )

**நூல்:** ஆனந்த இரகசியம்.

## பரமானந்தபாரதி ( )

**ஊர்:** கடம்பை; அந்தணர்.

**நூல்:** பாரதிதீபம்.

இது ஒரு நிகண்டு நூல்; கலித்துறைப் பாவினால் இயன்றது. 12 தொகுதிகளையும் 737 பாடல்களையுங் கொண்டது.

பரமானந்த முனிவர் (        )

**நூல்:** உத்தரபோதம்.

பரமானந்தர் (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம் நல்லூர்.

**தந்தை:** கந்தப் பிள்ளை.

ஆறுமுக நாவலரின் உடன் பிறப்பாளராகிய இவர், இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றுத் தேறியவர்; பல ஆண்டுகள் அரசாங்க அலுவலில் இருந்தார்.

**நூல்:** விநாயக மூர்த்திச் செட்டியார் இயற்றிய கதிரை யாத்திரை விளக்கம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

பரமேசுவர ஐயர் சு. (20-நூ)

**நூல்:** சங்கீத சாத்திரம் (1905).

பரமேசுவரப் புலவர் (16-நூ)

**வாழ்விடம்:** திருவண்ணாமலை.

இவர் திருவண்ணாமலையிலிருந்த பல மடங்களில் ஒரு மடத்திற்கு அதிபதியாயிருந்தார் என்பது உண்ணாமலை எல்லப்ப நயினார் பாடிய வசைப் பாட்டால் விளங்குகிறது. ஆசு கவிராச சிங்கம் என்ற விருதுடைய சேறைக் கவிராசப் பிள்ளை திருவண்ணாமலை யார் மேல் வண்ணம் ஒன்று பாடி அரங்கேற்றினார். அப்பொழுது அவ்வூரினர் அவருக்குப் பல சிறப்புக்கள் செய்து அவரைச் சிவிகையில் வைத்து ஊர்வலம் செய்வித்தனர். அதனைக் காணப்பொறாத எல்லப்ப நயினார் தெருவில் ஒரு மூலையில் நின்று ஊர்வலச் சிறப்புக்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவரைக் கண்ட பரமேசுவரப் புலவர்,

"கண்ணாய் மதிக்கும் கவிராச சிங்கம் கடந்து திரு
அண்ணாமலையப்பர் மேல் வண்ணம் பாடி முத்தாலத்தி
கொண்
டெண்ணாயிர மடவார் சூழப் பல்லக்கிலேறி வந்தான்
உண்ணாமுலையெல்லன் மூலைகள் தோறும் ஒதுங்கினனே"

என்று பாடினர். அதனைக் கேட்ட உண்ணாமுலை எல்லப்ப நயினார் இவர் மீது வசைபாடினார்.

## பரராசசேகரன் (15-நூ)

இவன் யாழ்ப்பாணத்தில் நல்லூரில் கி.பி. 1410 ஆம் ஆண்டில் அரசு செலுத்திய குணவீர சிங்கையரின் மகனான கனக சூரிய சிங்கையரின் மகன். இவனுடைய தந்தை பகைவர்களுக்கு அஞ்சி இந்திய நாட்டிற்கு வந்தபோது இவனையும் இவன் தம்பி செகராசசேகரனையும் அழைத்து வந்தான். இவ்விருவரையும் திருக்கோவலூரில் ஓர் ஆசிரியரிடம் கல்வி பயில விடுத்திருந்தானென்றும் பதினான்கு ஆண்டுகள் கழித்து இருவரையும் அழைத்துக் கொண்டு யாழ்ப்பாணம் வந்து பரராசசேகரனின் உதவியுடன் பகை அரசனை வென்று இவனை இளவரசனாக்கித் தானரசு செலுத்தினான். தந்தைக்குப் பின் பரராசசேகரனே ஆட்சிப் பொறுப்பினை ஏற்றானென்று யாழ்ப்பாண வரலாறு கூறுகின்றது. இவன் காலத்தேதான் அந்தகக் கவி வீரராகவ முதலியார் இலங்கைக்கு வந்து தமது கவியினை அரங்கேற்றிப் பரிசு பல பெற்றார். இவன் பொற்பந்தம் அளித்ததனை வீர ராகவ முதலியார் தம்செய்யுளில் பாராட்டியுள்ளார். இவனும் அவரைப் புகழ்ந்து சில செய்யுட்கள் பாடியுள்ளான்.

**நூல்:** அந்தகக் கவி வீரராகவ முதலியாரைப் புகழ்ந்து பாடிய செய்யுட்கள்.

## பரவாதி கேசரியார் (    )

**நூல்:** ஸ்ரீசைல வைபவம்.

## பராங்குச இராமாநுச ஏராங்கி சாமிகள் (20-நூ)

**வே.பெ.** கிருட்டினராமாநுசர்.

**ஊர்:** சோழ நாட்டில் திருவழுந்தூர்.

இவர் மன்னார்குடியில் வைணவ அறிஞரிடத்தே வைணவ சம்பிரதாய நூல்களையும் இலக்கிய இலக்கணங்களையும் கற்றுத் தேர்ந்தார். பின்னர்த் தில்லையை வாழ்விடமாகக் கொண்டார்.

**நூல்:** திருவரங்கத் திருப்பதிகம்; தனித்வயம்.

## பராங்குசதாச அடிகள் (19-நூ)

**நூல்;** அரிபஜனை கீர்த்தனை, திவ்யநாம சங்கீர்த்தனைகளும் விருத்தங்களும், நரசிம்ஹ மேதா நாமாங்கித ஸுதீமணி சரித்திர வைபவம், விஷ்ணுதரிசன ஸுகீதம்.

**அரிபஜனை கீர்த்தனை:** திருமால் அடியார்கள் ஒருங்கு கூறப் பாடும் பசனைக்காகப் பாடப்பெற்ற கீர்த்தனைகள் இவை. கீர்த்தனங்களுக்கு இராக தாளக் குறிப்புக்களும் அமைந்துள்ளன.

**திவ்யநாம சங்கீர்த்தனைகளும், விருத்தங்களும்;** திருமாலின் புகழ்பாடும் 154 கீர்த்தனைகள் இதன்கண் உள்ளன. இறுதியில் 7 விருந்தங்களும் இதில் சேர்ந்துள்ளன.

**விஷ்ணு தரிசன ஸுகீதம்;** வைணவசமய சித்தாந்தங்களை உரைக்கும் முறையிலும், திருமால் துதியாகவும் அமைந்த கீர்த்தனைகள் பல அமைந்துள்ளன. பசனைப் பாடல்களுக்கு ஏற்ற கீர்த்தனங்கள் பல உள்ளன.

## பராங்குச தாசர் 1 (12-நூ)

**வே.பெ;** பெரிய நம்பி.

இவர் ஆளவந்தார் என்னும் யாமுனாசாரியாருடைய மாணாக்கர்கள் பலருள் ஒருவர். இராமானுசருக்குப் பஞ்ச சமஸ்காரங்களையும் செய்தருளித் திருமந்திரம், துவயம், சரமஸ்லோகங்களை அறிவுறுத்தி இராமானுசன் என்னும் திருநாமத்தையும் சாற்றி அவரைத் தரிசனப் பிரவர்த்த கராம்படி செய்த சிறப்பு இவருக்கே உண்டு.

**நூல்:** வைணவ குருபரம்பரை (மூலமும் பூர்வார்த்த வசனமும்)

இந்நூல் வைணவ ஆசாரிய பரம்பரையைப் பற்றிக் கூறுவது. இந்நூலுக்குச் சர்வார்த்த சங்கிரக சார விளக்கம் என்ற மற்ரெரு பெயருமுண்டு.

## பராங்குச தாசர் 2 ( )

**நூல்:** அரிநாம சங்கீர்த்தனம்.

## பராங்குச நாவலர் 1 (19-நூ)

**நூல்:** திருக்கோவலூர் தேகளீசப் பெருமாள் தீர்த்தவாரி வைபவ தரிசனப் பல சந்தக் கொம்மி. (1888).

இந்நூலில் 68 செய்யுட்கள் உள்ளன.

## பராங்குச நாவலர் 2 (20-நூ)

**ஊர்:** புதுச்சேரி.

**நூல்:** நிச்சல இராமாநந்த சாமிகள் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பராங்குசர்

**பார்க்க:** நம்மாழ்வார்.

## பராசர பட்டர் (13-நூ)

**தந்தை:** கூரத்தாழ்வார்

**நூல்:** சகத்திர நாமம், சீரங்க சத்வம்,

## பராசர முனிவர் ( )

**நூல்:** பராசரியம்

## பராயனார் (சங்க காலம்)

**நூல்:** நற்றிணை 155.

## பரிதிமாற் கலைஞர்

**பார்க்க:** சூரிநாராயண சாஸ்திரியார்.

## பரிதியார் (13-நூ)

இவர் திருக்குறளுக்கு உரை எழுதிய பதின்மருள் ஒருவர். இவர் பருதி என்றும் வழங்கப்படுகின்றார். "தருமர் மணக் குடவர்" என்ற பாடலில் தருமர் என்ற எதுகை நோக்கிப் பருதி என்றிருத்தலே பொருத்தம் என்றெண்ணுவர் சிலர். பருதி, பரிதி என்ற இரண்டுமே கதிரவனை உணர்த்தும் பெயர்கள். 'நற்றாள்' என்பதற்கு 'அறிவாளனான சிவன் சீபாதம்' என்றும், இருள்சேர் இருவினையும் என்ற குறளுக்கு 'மும்மல வித்தாகிய பாவமானது சிவகீர்த்தி பாராட்டு வானிடத்து இல்லை' என்றும் 'அறவாழி அந்தணன்' என்ப தற்குப் 'பரமேசுரன்' என்றும் 'மெய்யுணர்வில்லாதார்க்கு' என்பதற்கு 'மெய்யுணர்வாகிய சிவஞானம் அறியாவிடில்' என்றும் எல்லா இடங்களிலும் சிவனையே குறித்துச் செல்வ தால் இவரைச் சைவரென்பர்.

இவர் பரிமேலழகர்க்கு முற்பட்டவரென்று கருதப் படுகின்றார். 'செவ்வி முப்பாலுக்கு ஒருரையின்றி ஒன்பது சென்றும் ஐயுறுவாக நையுறு காலை' என்ற பரிமேலழகர் உரைப் பாயிரத்தால் உணரலாம். திருக்குறளுக்கு ஒன்பது உரைகள் வெளிவந்தும் ஐயந்தெளியமாட்டாமல் தமிழுலகம் வருந்தியதால் பரிமேலழகர் திருக்குறளுரையை இயற்றினார் என்று கருதப்படுவதால் 13-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பரிமேலழகர்க்குப் பரிதியார் முற்பட்டவராவர்.

**நூல்:** திருக்குறள் உரை.

இவ்வுரை பதவுரையாகவோ, பொழிப்புரையாகவோ அமையவில்லை; கருத்துரையாகவே அமைந்துள்ளது. இவர் உரையால் திருக்குறட் கருத்தை விளங்கிக் கொள்வது அரிது. சில இடங்களில் இலக்கண முடிவுகளும் சரியாக அமையவில்லை.

## பரிப்பெருமாள் (12-நூ)

**வே.பெ:** கவிப்பெருமாள்.

**ஊர்.** பாண்டிமண்டலத்துச் சேது நாட்டிலுள்ள தென் செழுவை.

திருக்குறளுரையாசிரியர்கள் பதின்மர் பெயரைக் குறிப்பிடும் தொண்டை மண்டல சதக மேற்கோள் பாடல் இவரை 'கவிப்பெருமாள்' என்று குறிப்பிடுகின்றது. இவரது திருக்குறள் உரை இறுதியில் காணப்படும் வெண்பா ஒன்றில் இவர் மொழியியல், காமநூல் என்ற இரண்டு நூல்களை இயற்றினார் என்ற குறிப்புக் காணப்படுகிறது.

மணக்குடவருக்குப்பின் திருக்குறளுக்கு உரை இயற்றியவர் பரிப்பெருமாள். காமத்துப்பாலின் தொடக்கத்தில் வாத்சாயனம் என்ற காம நூலைக் குறிப்பிடுகின்றார். அந்நூலாசிரியர் காலம் கி.பி. 11 ஆம் நூற்றாண்டாதலால் இவர் அவருக்குப் பிற்பட்டவர். எனவே கி.பி. 12 ஆம் நூற்றாண்டு என்று இவர் விளங்கிய காலத்தைக் கருதலாம்.

இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களில் புலமை நிரம்பப் பெற்றவர். தம் உரையில் ஏற்ற இடங்களில் தொல்காப்பியம், இறையனாரகப் பொருள் முதலிய தமிழ் நூல்களை மேற்கோள் காட்டுகின்றார். இவரது புதிய உரையை அக்காலத்தவர் புறக்கணித்துள்ளனர் என்பது தெரிகிறது. வடமொழியிலுள்ள காம நூலையும் அரசியல் நூலையும் ஆழ்ந்து பயின்று அவற்றைப் பயன்படுத்தியுள்ளார். தம் காலத்துப் பழக்க வழக்கங்களை உலகியலறிந்து போற்றுகின்றார். 'குற்றங்கடிதல்' என்ற அதிகாரத்தில் பல கதைகளை எடுத்துக் காட்டுகின்றார்.

**நூல்:** திருக்குறள் உரை.

இவர் உரை மணக்குடவர் உரையினைப் பெரிதும் பின்பற்றியது. தேவையான இடங்களில் மட்டும் விளக்கம் எழுதிச் சேர்த்துள்ளார். பல இடங்களில் மணக்குடவருரை அப்படியே எடுத்தாளப்பட்டுள்ளது. மணக்குடவரைப் பின்பற்றினாலும் மிகச் சில இடங்களில் வேறுபாடுகளைக் கொண்ட புதிய பொருள்களைக் காண்கின்றார்.

## பரிபூரணனர் ( )

**ஊர்:** கானூர் விருத்தாசலம்.

**நூல்:** பரிபூரண சித்தி.

## பரிமளக்கார பக்கீறுப்புலவர் ( )

**ஊர்:** இராமநாதபுர மாவட்டம், பரமக்குடி.

**நூல்:** இசைப்பாடல்கள்.

## பரிமாணனார் ( )

இவர் யாவர்? எக்காலத்தில் இருந்தவர் என்ற செய்திகள் தெரியவில்லை. இவர் இயற்றிய ஒரு யாப்பிலக்கண நூலை யாப்பருங்கல விருத்தியுரைகாரரும், மயிலைநாதரும் தமது உரைகளில் குறிப்பிடுகின்றனர். பரிமாணனார் நூலிலிருந்து நூற்பாக்களையும் மேற்கோள் காட்டுகின்றனர். ஆனால் இந்நூலின் பெயர் என்ன என்ற விபரம் தெரியவில்லை.

## பரிமேலழகர் (13-நூ)

திருக்குறளுக்கு உரைகண்ட பழைய உரையாசிரியர்கள் பதின்மருள் இவர் மிகவும் சிறப்புடையவராகக் கருதப் படுகின்றார். இவ்வுரையாசிரியர் பதின்மருள் காலத்தால் பிற்பட்டவர் இவரேயாவர்.

இவர் பரிமேலழகர், பரிமேலழகியார், பரிமேலழகியன், பரிமேலழகரையன் என்று பலவாறு வழங்கப்பட்டுள்ளார். சிவஞான முனிவர் இவரைப் பரிமேலழகியார் என்றே குறிப்பிட்டுள்ளார். பரிமேலழகர் என்ற பெயர் திருமாலுக் குரியது. திருமால் பெயரைத் தாங்கிய இவர் வைணவ சமயத்தைச் சார்ந்தவராவர்.

இவர் மதுரையில் வாழ்ந்தாரென்று சிலரும் காஞ்சி புரத்தில் வாழ்ந்தாரென்று சிலரும் கூறுகின்றனர். இவருடைய உரையில் நெல்லை மாவட்டத்துப் பேச்சு வழக்கு இடம் பெற்றுள்ளதால் இவர் பாண்டிநாட்டைச் சேர்ந்தவ ரென்பது உறுதியாகின்றது. தொண்டைமண்டல சதகம், "திருக்காஞ்சி வாழ் பரிமேலழகன் வள்ளுவர் நூற்கு வழி காட்டினான்" என்று கூறுவது கொண்டு காஞ்சிபுரத்தில் வாழ்ந்திருக்கலாம் எனச் சிலர் கருதுகின்றனர்.

இவர் வாழ்ந்த காலம் 13 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி யாகும். சேனாவரையர் கருத்தைத் தழுவி "வானோக்கி

வாழும் உலகெல்லாம்'' (542) என்று தொடங்கும் குறளுக்குச் சேனாவரையரைத் தழுவி உரை கூறுகின்றார். சொல்லெச்சத் திற்கும் சேனாவரையர் கருத்தையே தழுவியுள்ளார். எனவே சேனாவரையர் வாழ்ந்த 13 ஆம் நூற்றாண்டிற்கும் பிற் பட்டவராவர்.

**நூல்:** திருக்குறள் உரை, பரிபாடல் உரை.

**திருக்குறள் உரை:** இவ்வுரையின் தொடக்கத்தில் உரைப் பாயிரம் எழுதி, நூலின் பொருட்பாகுபாடுகளை விளக்கு கின்றார். பால் தோறும் விரிவுரை தருகின்றார். இயல்களுக்குப் பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது. அதிகாரந்தோறும் இயைபு கூறப் பட்டுள்ளது. பத்துக் குறள்களும் கருத்து வகையால் பிரிந்து நிற்பதைக் காட்டி இன்னின்ன பொருள் களை உணர்த்தின என்பர்.

குறட்பாக்களுக்குப் பரிமேலழகர் பொழிப்புரை எழுதிப் பின்னர் அருந்தொடரை விளக்குகின்றார். பொழிப்புரையில் அதிகாரத்திற்கு ஏற்பத் தேவையான சொற்களை வருவித்தும் வேற்றுமை உருபு முதலிய இடைச் சொற்களை விரித்தும் உரைக்கின்றார். பொழிப்புரையின் கீழ் எழுதும் விளக்கவுரை யில் பல அரிய ஆராய்ச்சிக் கருத்துக்களைக் கூறுகின்றார். பழைய இலக்கியத் தொடர்களை உரை நடையாக்கியும் உவமை காட்டியும் இலக்கியக் கதை வரலாறு முதலியன தந்தும் அழகுபடுத்துகின்றார். தேவையான இலக்கணக் குறிப்புகள் தந்து தெளிவுபடுத்துவதோடு தமக்கு முன்னிருந்த உரையாசிரியர்கள் கருத்தைக் குறிப்பிடுகின்றார், மாறுபட்ட கருத்துக்களை மறுக்கின்றார். தவறான பாடத்தைக் கடிவ தோடு பொருத்தமானவற்றைப் போற்றுகின்றார். வட மொழி தமிழ் ஆகிய இருமொழி இலக்கியங்களிலிருந்தும் கருத்துக்களைக் கூறுகின்றார். வடசொற்களைத் தமிழ் மொழிக்கு ஏற்ப மொழிபெயர்க்கின்றார். தமிழ் மரபையும் பண்பாட்டையும் நினைவுறுத்துகின்றார். இவருடைய உரை விருத்தியுரை எனவும் வழங்கியது.

**பரிபாடல் உரை:** ''இவ்வுரை பலவிடத்துப் பொழிப்புரையா யும் சிலவிடத்துப் பதவுரையாயும் சிலவிடத்துக் கருத்துரை

யாயும் சிறிதும் புலப்படாத சொற்களின் பழைய வடிவங்களைப் புலப்படுத்தியும் உரிய இடங்களில் இலக்கணக்குறிப்புக்களைப் பெற்றும் சிலவிடத்து மிக அழகான பத சாரத்துடன் கூடியும் விளங்காத சிலவற்றைத் தக்க தமிழ்நூல் மேற்கோள்களாலும் வேதம் உபநிடதம் முதலியவற்றின் கருத்துக்களாலும் விளக்கியும் மிக விரிவாக அமைந்துள்ளது.

பரிபாடலின் 11 ஆம் பாட்டில் வான நூலைப்பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது. இதனைத் தெளிவுபடுத்தும் இவரது உரைப் பகுதி கொண்டு இவருக்கு வானநூலிலிருந்த புலமையை அறியலாம்.

## பரூஉ மோவாய்ப் பதுமனூர் (சங்ககாலம்)

இவர் உறுப்பாற் பெயர் பெற்ற சங்கப்புலவர்களுள் ஒருவர். இவருடைய மோவாய் பருத்திருந்தமையால் இப் பெயர் பெற்றூரென்பர்.

**நூல்:** குறுந்தொகை: 101.

## பல் காப்பியனூர் ( )

இவர் தொல்காப்பியருக்குப் பிற்பட்ட காலத்தில் வாழ்ந்தவர் என்று கருதப்படுகின்றூர். பல் காப்பியம், பல் காப்பியப் புறநடை என்ற நூல்களை இயற்றியுள்ளார் என்பது பேராசிரியர், நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்களின் உரையால் தெரிய வருகின்றது.

**நூல்:** பல் காப்பியம், பல் காப்பியப் புறநடை.

**பல் காப்பியம்:** இந்நூல் நூற்பாக்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. செய்யுளிலக்கணம் உணர்த்துவதாகும். தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரியர் 'வழியெனப் படுவது அதன் வழித்தாகும்' (தொல் - பொருள் - மரபு) என்னும் நூற்பா உரையில் இந்நூலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

**பல் காப்பியப் புறநடை:** பல் காப்பியனூர் இயற்றிய பல் காப்பியம் என்னும் நூலுக்கே இது புறநடையாக அமைந்தது. 'வினையினீங்கி விளங்கிய வறிவின், முனைவன்

கண்டது முதனூலாகும் (தொல் - பொருள் - மரபு) என்னும் நூற்பாவிற்கு உரையெழுதிய பேராசிரியர் பல் காப்பியப் புறநடையிலிருந்து ஒரு நூற்பாவை மேற்கோள் காட்டியுள்ளார். அவிநயம் என்னும் நூலுக்கு அவிநயப் புறநடை நூல் இருந்தது போல, யாப்பருங்கலம் என்னும் நூலுக்கு யாப்பருங்கலக் காரிகை என்னும் புறநடை நூல் ஒன்று இருப்பது போலவும் பல் காப்பியம் என்னும் இலக்கண நூலுக்குப்பல் காப்பியப் புறநடை என்னும் நூல் இருந்தது என்பது தெரிகிறது.

## பல்காயனுர் (        )

இவர் பழைய இலக்கண நூலாசிரியருள் ஒருவர். "தூக்கும் பாட்டும் யாவும் மொன்றென நோக்கிற் றென்ப நுணங்கி யோரே என்றுர் பல் காயனுர்" என யாப்பருங்கல விருத்தி குறிப்பிடுகின்றது. யாப்பருங்கலக் காரிகைக்கு உரை எழுதிய குணசாகரர் தமது உரையில் பல்காயனுர் நூற்பாக்களை மேற்கோள் காட்டியுள்ளார். யாப்பருங்கல விருத்தியுரைக்காரர் தமது உரையில் 37 நூற்பாக்களைத் தமது நூலிலிருந்து மேற்கோள் காட்டியுள்ளார். பன்னிரு பாட்டியலில் பல்காயனுர் நூற்பாக்கள் நான்கு காணப் படுகின்றன.

**நூல்:** பல்காயம்.

இது யாப்பிலக்கணத்தை உணர்த்துவது. தொல்காப்பியர் விரித்துரைத்தவற்றைப் பகுத்துரைத்துள்ளார்.

## பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் (        )

**பார்க்க:** சொக்கநாதப் புலவர்.

## பலராம ஐயர் (20-நூ)

**ஊர்:** தென்னுர்க்காடு மாவட்டம் கடலூர்.

**தந்தை:** கோதண்டராம ஐயர்; **தாய்:** சிவகாம சுந்தரி.

**வாழ்ந்த காலம்:** 1875-1943.

இவர் சென்னை கிறித்தவக் கல்லூரியில் பி.ஏ., வரை பயின்று தந்தையார் இறந்ததால் இடையில் படிப்பை நிறுத்தினார். சூரிய நாராயண சாத்திரி என்ற பரிதிமாற் கலைஞரால் தமிழார்வம் பெற்று, பின்னர் அவரையே ஆசிரியராகக் கொண்டு தமிழ் நூல்களைக் கற்றார். இளம் பருவத்திலேயே செய்யுள் இயற்றும் திறம் பெற்றார். சாத்திரியாரிடம் பாடங்கேட்க இயலாதவர்கள் இவரிடம் பாடங் கேட்பதை ஒப்பாக மதித்தனர் என்பது பெருமைக் குரியதாகும். கடலூர் நகர உயர்நிலைப் பள்ளியிலும், காரைக்குடி மீனாட்சி சுந்தரேசுவரர் வித்தியாசாலையிலும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் தமிழாசிரியராக அமர்ந்து பணியாற்றினார். இராமாயணச் சொற்பொழிவு செய்வதில் வல்லவராக விளங்கினார். 1911ஆம் ஆண்டில் கள்ளிக் கோட்டைக்குச் சென்று வாணிபக் கல்வி, சுருக்கெழுத்து முதலியவற்றைக் கற்றுப் பட்டம் பெற்றார். 1935ஆம் ஆண்டில் அலுவலிலிருந்து ஓய்வு பெற்றார்.

**நூல்:** தசரதன் தவறு, வல்லீபரிணயம், மத்தவிலாசப் பிரகசனம், சூளாமணி உரைநடை, சிலப்பதிகாரக்கதை, ஆத்திசூடி நீதிக்கதைகள், தசகுமார சரித்திரம், யௌவனாம்பிகை பிள்ளைத்தமிழ், தாமரை நாண்மலர்.

## பலராம ஐயர், ந (20-நூ)

**நூல்:** மாணிக்க முதலியார், சு. என்பவர் இயற்றிய 'சங்கீத சந்திகை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பவணந்தி முனிவர் (13-நூ)

**ஊர்:** கர்நாடக மாநிலம், நரசிபுரம் கோட்டத்திலுள்ள சனகை என்ற சனநாதபுரம்; சமண சமயம்.

இவர் கங்க நாட்டினை ஆண்ட குறுநில மன்னன் சீயகங்கன் என்பவனால் ஆதரிக்கப் பெற்றவர். இச் சீயகங்கன் மூன்றாங் குலோத்துங்கனுக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசன் என்று தெரிதலால் அவன்காலம் அக் குலோத்துங்கன் காலமாகிய

(1178 — 1216) 12ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியும் 13ஆம் நூற்றுண்டின் முற்பகுதியுமாகும். ஆகவே பவணந்தி முனிவரின் காலமும் 13ஆம் நூற்றுண்டு என்று கொள்வது பொருந்தும்.

"முன்னோ ரொழியப் பின்னோர் பலரினுள், நன்னூலார் தமக்கு எந்நூலாரும், இணையோ என்னும் துணிவே மன்னுக" என இலக்கணக் கொத்தாசிரியராகிய சுவாமிநாத தேசிகரும், "பல்கலைக் குரிசில் பவணந்தி என்னும் புலவர் பெருமான்" எனச் சங்கர நமச்சிவாயப் புலவரும் பாராட்டியுள்ளமையால் இவருடைய இலக்கணப்புலமை நன்கு விளங்கும்.

**நூல்:** நன்னூல்.

இந்நூல், பொதுப்பாயிரம் சிறப்புப்பாயிரம் என்னும் பாயிரங்களைத் தவிர, எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் என்ற இரண்டு அதிகாரங்களையும் 406 நூற்பாக்களையும் உடையது. ஒவ்வோர் அதிகாரமும் ஐந்து இயல்களை யுடையது. எழுத்ததிகாரத்தில் உள்ள பதவியல் வடமொழி இலக்கணத்தை நோக்கி அமைக்கப்பட்டது. தொல்காப்பியத்தில் ஆறு இயல்களில் கூறப்பட்டுள்ள புணர்ச்சி விதிகள் இந்நூலில் மூன்று இயல்களில் சுருக்கி விளக்கமாகக் கூறப் பட்டுள்ளன.

சீயகங்கன் என்னும் அரசன் பவணந்தி முனிவரை எழுத்து முதலிய ஐந்திலக்கணங்களையும் தொகுத்தும் வகுத்தும் செய்து தருமாறு வேண்டினுன் என்று பாயிரங் கூறுவதால், நன்னூல் ஐந்திலக்கணங்களையும் உடையது என்றும், பொருள், யாப்பு, அணி என்னும் மூன்று அதிகாரங்கள் இப்போது கிடைக்கவில்லை என்றுங் கூறுவர்.

நன்னூலுக்கு உரை எழுதியவர்கள் பலர். இவர்கள் உரைகளுள் மயிலைநாதர் உரையும் சங்கர நமச்சிவாயர் உரையுமே சிறந்தவை. சங்கர நமச்சிவாயர் உரை மிகவும் விரிவானது. சிவஞான முனிவர் சங்கர நமச்சிவாயருரையில் இடையிடையே தங்கருத்தினைச் சேர்த்து விருத்தியுரை யொன்று எழுதியுள்ளார். இராமாநுசக் கவிராயர், விசாகப்

பெருமாளையர், ஆறுமுக நாவலர், வை. மு. சடகோப ராமாநுசாச்சாரியார் ஆகியோர் நன்னூலுக்குக் காண்டிகையுரை வரைந்துள்ளனர்.

## பவபூதி ( )

**நூல்:** *உத்தரராம சரித்திரம், மாலதி மாதவம்.*

## பவர் ஐயர் (20-நூ)

இவர் யூரேஷிய நாட்டினர். சாத்திரம் ஐயர் என்ற சைனப் புலவரிடம் இவர் தமிழ் மொழி கற்றார், திருநெல்வேலி வேதியர் புரத்தில் சமயப் பணியாற்றினர். புதிய ஏற்பாட்டுத் தமிழ் மொழி பெயர்ப்பு இவரால் திருத்தியமைக்கப் பெற்றுள்ளது.

**நூல்:** வேத அகராதி, நியாயப் பிரமாண விளக்கம், விசுவாசப் பிரமாண விளக்கம், தரும சாத்திர சாரம், இந்து மதத்துக்கும் பரப்பு மதத்துக்கும் இருக்கிற சம்பந்த விளக்கம்.

## பவல் (19-நூ)

**நூல்:** யதுவம்சத்தார்களின் குலகாயம் (1889).

இந்நூல் யதுகுலத்தாரின் சபை விவரங்களையும் அக்குலத்தாரிடம் அமைந்துள்ள கட்டுப்பாடுகளையும் விளக்குவது.

## பவழக் கொடி சாமிகள் (19-நூ)

**ஊர்:** சோம்பட்டு

**நூல்:** சௌந்தரி அந்தாதி.

இந்நூல் கலித்துறை, அறுசீர் விருத்தம், எழுசீர் விருத்தம், எண்சீர் விருத்தம் முதலியவைகளைக் கொண்டு பாடப் பெற்றுள்ளது.

## பவளப் பாடிய புலவர் (19-நூ)

**நூல்:** சானந்த கணேசர் புராணம் மூலமும் உரையும் (1869).

இந்நூலுள் உற்பத்திச் சருக்கம் தொடங்கிக் கைலைச் சருக்கம் ஈறாக 7 சருக்கங்கள் உள்ளன. இதன் உரை பொழிப்புரையாக அமைந்துள்ளது.

## பவானந்தம் பிள்ளை, ச. (20-நூ)

**வாழ்விடம்:** சென்னை.

**தந்தை:** முத்துச்சாமிப் பிள்ளை.

**தாயார்:** சந்திரமதி.

இவர் தமிழும் ஆங்கிலமும் கற்ற அறிஞர். வழக்கறிஞர் படிப்புக்கு இங்கிலாந்து செல்ல விரும்பிய இவர், தம் தாய் அதனை விரும்பாமையால் அக்கருத்தினை விடுத்தார்.

நகரக் காவற் படையின் திறத்தையும் உரத்தையும் வளர்க்கக் கருதிய கர்னல் டி. வெல்டன் சி.ஐ.இ. என்னும் நகரக் காவற்படை அதிகாரத் தலைவர் கல்வியில் தேர்ந்த இளைஞரை நகரக் காவற்படையில் சேர்க்க விரும்பிப் போட்டித் தேர்வு ஒன்று நடத்தினர். அத்தேர்வில் இவர் முதல்வராகத் தேர்ந்தார். ஆதலின் கர்னல் வெல்டன் துரை தாம் புதிதாக ஏற்படுத்திய குற்றவர்த்தமான விசாரணை வகுப்பில் இவரைத் தமது நேர்முக அலுவலராக (Personal Officer) நியமித்தார்.

இவர் தென்னிந்தியாவில் பற்பல இடங்களில் ஏற்பட்ட குழப்பங்களைத் திறம்பட அடக்கி அதனால் பெரும்புகழ் பெற்றார். இவர் தம் நுண்ணறிவால் கொலை, கொள்ளை, பொய்க் கையெழுத்து, மோசம் முதலிய சிக்கலான வழக்குகளைக் கண்டுபிடித்து அவற்றின் உண்மைகளை வெளிப்படுத்திய படியால் மேலதிகாரிகளால் மிகவும் பாராட்டப் பெற்றார். இவர் சட்ட நூல்களை நன்கு ஆராய்ந்து சட்ட அறிஞராகவும் விளங்கினர்.

1904-ஆம் ஆண்டு முதல் 1912-ஆம் ஆண்டு வரை இவர் சென்னை நகரக் குற்றவர்த்தமான வகுப்புத் தலைவரா யமர்ந்து பெருந் தொண்டாற்றினர். இவர் சென்னைத் தென் பகுதி நகரக் காவற்படை அதிகாரத் தலைமைப் பிரதிநிதி

யாகவும் இருந்து அரசியலார் மெச்சும்படி அரிய தொண்டாற்றினார். இவர் சென்னை ஷெரீபாகவும் விளங்கினார்.

இவர் நாட்டு மக்களின் நலன் கருதி அறிவுத் துறையிலும் பற்பல தொண்டுகளாற்றினார். இவர் தம் பெயரால் 'பவானந்தர் கழகம்' என்னும் கல்விக் கழகம் ஒன்றை நிறுவி, அதற்குத் தாம் ஈட்டிய பொருள்களை எழுதி வைத்துள்ளார். அக் கழகச் சார்பில் இவரால் நூல் நிலையம் ஒன்றும் நிறுவப் பெற்றது. இவரால் அரிதின் முயன்று தொகுக்கப் பட்ட பல்லாயிரம் நூல்களும் ஏட்டுச் சுவடிகளும் அதன்கண் உள்ளன.

தமிழரிடத்தும் தமிழ் மொழியிடத்தும் இவர் அளவற்ற அன்பு கொண்டிருந்தார். இவர் தம் பெயரால் நிறுவப்பட்ட கழகச் சார்பில் தமிழ் இலக்கணங்களில் தொன்மை வாய்ந்தனவும் சிறந்தனவுமாகிய தொல்காப்பியம் பொருளதிகாரம் (நச்சினார்க்கினியர் பேராசிரியர் உரையுடன்) யாப்பருங்கல விருத்தியுரை, இறையனாரகப் பொருளுரை, பேரகத்தியத் திரட்டு, இராமாநுச கவிராயர், சங்கர நமச்சிவாயப் புலவர், சிவஞான முனிவர், முதலிய உரையாசிரியர்களின் உரைகளைத் தழுவி எழுதப்பட்ட நன்னூற் காண்டிகையுரை முதலியவற்றைத் தம் பொருளால் வெளியிட்டார்.

இவர் சென்னைப் பல்கலைக்கழகத் திராவிட வாசக சங்கத்திற்குத் தலைவராகவும், திராவிடச் சொற்றொடராக்கச் சங்கத்தின் உறுப்பினராயுமிருந்திருக்கிறார். தென்னிந்திய ஆராய்ச்சிக் கழகத்தின் துணைத் தலைவராகவும் இருந்திருக்கிறார்.

இவர் 1908 ஆம் ஆண்டு போலீஸ் அசிஸ்டெண்டு கமிஷனர் பதவியை ஏற்றார். புலவரும் கவிஞரும் போற்ற வாழ்ந்த அறிஞர் பெருமகனாகிய இவர் 20.5.1922இல் இம்மண்ணுலகை விட்டு மறைந்தார்.

**நூல்:** காணாமற் போன கணையாழி (சாகுந்தலம்) பாதுகா பட்டாபிஷேகம்.

## பவானிப் புலவர் (19-நூ)

**ஊர்:** பாலக்காடு.

**நூல்:** அப்துல் ரகுமான் அறபிச்சதகம்.

இச்சதகம் பற்பல உலகியல் அறங்களை எடுத்துரைப்பது; 100 செய்யுட்களைக் கொண்டது.

## பவுல் ஐயர், எஸ். (19-நூ)

**நூல்:** இஸ்லாம் மார்க்கம் (1898).

இந்நூல் ஒரு மொழி பெயர்ப்பு நூல். இ. செல் ஐயர் ஆங்கிலத்தில் எழுதியது. இஸ்லாம் மதக் கோட்பாடுகளையும் உபதேசங்களையும் சடங்குகளையும் ஆதரிப்புக்களையும் திருநாட்களையும் தெளிவாக விளக்கிக் காட்டுவது. இது முகம்மதியரையும் அவர்கள் மதக் கோட்பாடுகளையும் குறித்துப் புதியதும் உண்மையுமான பல செயல்களைத் தெரிவிக்கவல்லது.

## பழநி உபாத்தியாயர் (20-நூ)

**வே.பெ.** பழநிமலை உபாத்தியாயர்.

**ஊர்:** கொங்கு நாட்டில் குருலூர்.

**நூல்:** தென்சேரிமாலை.

## பழநிக் காங்கயக் கவுண்டர் (19-நூ)

**ஊர்:** கண்ணபுரம்.

**நூல்:** இளையான் கவிராயர் இயற்றிய சுப்பரமேசர் புராணம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பழநிக்குமார பண்டாரம் ( )

**ஊர்:** வீரவநல்லூர்.

**தந்தை:** சுப்பிரமணிய பண்டாரம்; வீரசைவர்.

இவர் எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும் ஐந்திலக்கணங்களையும் நன்கு கற்றவர்; கோட்டாறு என்ற

ஊரில் வாழ்ந்ததால் கோட்டாறு வித்துவான் என வழங்கப் பெற்றார்.

**நூல்:** திருச்சுசிந்தைக் கலம்பகம், திருச்சுசிந்தை மும்மணி மாலை, கன்னியாகுமரி இன்னிசைப் பாமாலை, திருமங்கை ஒருதிணைமாலை, திருவீரைக் கலம்பகம், திருவீரைப்புராந்தக மாலை, திருவீரை மரகதவல்லியம்மை பிள்ளைத் தமிழ்; திருவீரை மரகதவல்லியம்மை இன்னிசைப் பாமாலை.

இந்த எட்டு நூல்களும் "பழநிக் குமாருப் பண்டாரம் பிரபந்தங்கள்" என்ற பெயருடன் வழங்குகின்றன.

## பழநிச்சாமி அடிகள் (20-நூ)

**ஊர்:** தஞ்சாவூர் மாவட்டம் தண்டாங்கோரை; அகம்படியர்.

இவர் ஈசூர் சச்சிதானந்த சுவாமிகளின் மாணவர்; வேதாந்த நூல்களில் புலமை பெற்றவர்.

**நூல்:** வேதாந்த தீபிகை.

இந்நூல் சிவஞான போதத்திற்கு வரையப்பட்ட உரையாகும்.

## பழநிச்சாமிக் கவுண்டர் (19-நூ)

**ஊர்:** புளியமாநகர்.

**நூல்:** பழநியப்பக் கவிராயர் என்பவர் இயற்றிய 'தோத்திர மாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பழநிச்சாமிச் சிவாச்சாரியார் - 1 (20-நூ)

**தந்தை:** ஆறுமுக சிவாச்சாரியார்; துளுவவேளாளர்.

இவர் தந்தை திருக்கோவலூரர் பாணியாத்திர தேசிகர் ஆதினத் தலைவராவர். இவர் திண்டிவனம் உயர் தரப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றியவர்.

**நூல்:** மதுரை இராமையாபிள்ளை எழுதிய துளுவ வேளாளர் வரலாறு என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பழநிச்சாமிச் சிவாச்சாரியார் - 2 (20-நூ)

**ஊர்:** திண்டிவனம்.

**நூல்:** திம்மப்ப அந்தணனார் என்பவர் இயற்றிய 'திரு வேங்கட மும்மணிக் கோவை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பழநிச்சாமிப் பிள்ளை (20-நூ)

**ஊர்:** தடாகப்பிறகுசுஞ்சுவாடி.

**நூல்:** முக்கூட்டுப்பள்ளு.

## பழநிச் செட்டியார் (20-நூ)

**நூல்:** இராசு முதலியார் என்பவர் இயற்றிய கணிதவிளக்கம் என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பழநி சிவகுருநாத ஐயர் ( )

**நூல்:** பொன்னுபாத்தியாயர்-சாமி என்பவர் இயற்றிய வைத்தீஸ்வரன் கோயில் தையல்நாயகி அந்தாதி என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பழநி நாயகர் (19-நூ)

**ஊர்:** சென்னை, எழும்பூர்.

**நூல்:** இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவருக்கு எழுதிய கவி.

## பழநி நாவலர் (20-நூ)

**ஊர்:** ஏரகாம்பட்டி.

இவர் இளமையிலேயே கல்வி கற்றுப் புலமையடைந்தவர்; செய்யுள் பாடுந்திறனும் சொற்பொழிவாற்றும் ஆற்றலும் பெற்று விளங்கியதால் நாவலர் என்று அழைக்கப்பெற்றார். நாகேசுர சாமிக்குக் கோவில் கட்டி அக்கடவுள் மீது பல செய்யுட்களை இயற்றியுள்ளார்.

**நூல்:** வருகைப் பதிகம், நாகமாலை.

## பழநிமலை உபாத்தியாயர் ( )

**ஊர்:** கொங்கு நாட்டில் குருவூர்.

**நூல்:** தென்சேரிமாலை.

## பழநிமாமுனிவர் ( )

இவர் சிவப்பிரகாச ஐயரின் மாணவர்.

**நூல்:** பஞ்சமலக்கழற்றி.

## பழநிமுத்தாச்சாரியர் (20-நூ)

**நூல்:** சுந்தராச்சாரியர், கி. என்பவர் இயற்றிய 'கலைவாணி சதகம்', சரசுவதி பஞ்சரத்தினம்', முதலிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பழநிமுத்து உபாத்தியாயர், சி. ( )

இவர் புதுச்சேரி பு.அ. பெரியசாமிப் புலவர்பால் தமிழ் நூல்களைக் கற்றார். ஆசிரியத் தொழில் புரிந்தார். செய்யு ளியற்றும் திறன் பெற்றவர்.

**நூல்:** பு. அ. பெரியசாமிப் புலவர் இயற்றிய நூல்களுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பழநியப்ப அடிகள் (20-நூ)

இவர் வாலை சமுத்திரம் என்ற ஊரிலிருந்த குப்பானந்த அடிகள் என்ற பெரியாரிடம் அருளுரை பெற்றுச் சிறந்தார். இவர் இயற்றிய நூல்களுள் சில அச்சாகியும் சில அச்சாகா மலும் இருப்பதாகத் தெரிகிறது.

**நூல்:** பவானி சங்கமேசுவர வேதநாயகி அம்மன் பதிகம்.

## பழநியப்பஐயா, சேவு. பழ. (19-நூ)

**ஊர்:** காரைக்குடி.

இவர் கோயிலூர் வேதாந்த மடாலய வழி முறையைச் சேர்ந்தவர். அங்கு எழுந்தருளியிருந்த சிதம்பர ஞான தேசிகர் என்ற பெரியாரிடம் அருளுரை பெற்றார்.

**நூல்:** முத்துராமலிங்க ஞானதேசிகர் வரலாறு, தோத்திரப் பாமாலை.

தோத்திரப் பாமாலை என்னும் நூலில் அறிவு, அம்மானை, அடைக்கலம் முதலிய பலவகையான 800 பாடல்கள் அடங்கியுள்ளன.

## பழநியப்ப ஐயா சொ. (19-நூ)

**ஊர்:** சொர்ணநாதபுரம்.

**நூல்:** வெயிலுகந்த விநாயகர் பதிகம், பழநிமலைச் செட்டியார் மாலை, கல்லுளி மாலை, பொன்மாரி அந்தாதி, விடுதிக் கவிகள்.

## பழநியப்பக் கவிராயர் (19-நூ)

**ஊர்:** புளியனூர்.

**நூல்:** தோத்திரமாலை.

## பழநியப்பக் குருக்களையர் (19-நூ)

**ஊர்:** பாறை நகர் என வழங்கிய பிரமபுரி.

**தந்தை:** முத்துசாமிக் குருக்களையர்.

தமிழ்ப் புலமை நிரம்பப் பெற்ற இவர் மாணவர்களுக்குப் பாடஞ் சொல்லும் பணியினை மேற்கொண்டார்.

**நூல்:** உய்யற்பத்து, திருப்பழநியங்கிரிப் பதிகம், முருகர் உயிர் வருக்கமாலை.

இம் மூன்று நூல்களும் ஒரே நூலாக 1883 ஆம் ஆண்டில் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. திருப்பழநியங்கிரிப் பதிகம் பழநிமாமலையில் வாழ் பரனைக் குறித்த புகழ் மாலை; விருத்தப்பாவினால் இயன்றது.

## பழநியப்பச் செட்டியார் (20-நூ)

**நூல்:** பிட்டுத் திருவிழா யாகமண்டபச் சிங்காரக் கும்மி, மதுரைச் சொக்கேசர் வந்து பிட்டுக்கு மண்சுமந்த காதற் கண்ணிகள்.

## பழநியப்பச் செட்டியார் நா.மு.ம. (19-நூ)

**நூல்:** ஐயாச்சாமி பிள்ளை என்பவர் இயற்றிய 'திருக் கல்யாண ஊசல்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பழநியப்பச் செட்டியார் வா. (19-நூ)

**ஊர்:** வாகரை.

**நூல்:** பழநியப்பக் கவிராயர் என்பவர் இயற்றிய தோத்திர மாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பழநியப்ப பிள்ளை, தி. பொ. (20-நூ)

**ஊர்:** மதுரை மாவட்டம் பழநி.

**தந்தை:** பொன்னுச்சாமிப்பிள்ளை, **தாய்:** அரங்கம்மாள்.

**வாழ்ந்த காலம்:** கி.பி. 29-8-1893—1-2-1951.

இவர் தமது பாட்டனாரிடம் தமிழ் நூல்களைக் கற்றார். கொன்னக்கோல் மருதநாயகம் பிள்ளை என்பவரிடம் இசைக்கலையறிவு பெற்றார். 1911ஆம் ஆண்டு முதல் 1915ஆம் ஆண்டு வரை பயின்று திருச்சி நேஷனல் உயர்நிலைப்பள்ளியில் பள்ளி இறுதி வகுப்பை முடித்தார். தமிழ் இலக்கண இலக்கியங்களைத் தாமே பயின்று மதுரைத் தமிழ்ச்சங்கத் தேர்வில் பொற்பதக்கம் பெற்றார். திருச்சி நேஷனல் உயர்நிலைப் பள்ளியில் 1916ஆம் ஆண்டு தமிழாசிரியர் பணியினை ஏற்றபோது பிச்சை இபுராகிம் புலவரிடம் தமிழ்க் கல்வி கற்றுப் பன்னூல்களை ஆராய்ச்சி செய்தார். 1917ஆம் ஆண்டில் இராசமன்னாரம்மாள் என்ற அம்மையாரை மணந்து கொண்டார்.

1932ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகப்புலவர் தேர்வில் முதல்வராகத் தேறி ஆயிரம் வெண்பொற்காசுகள் பெற்றார். ஆங்கிலத்தில் பி.ஓ.எல் பட்டம் பெற்றார்.

1932ஆம் ஆண்டு முதல் 1941ஆம் ஆண்டு வரை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழாசிரியராகப் பணி யாற்றினார். 1941ஆம் ஆண்டில் திருப்பதி திருவேங்கடவன்

கீழ்க்கலை ஆராய்ச்சித் துறைத் தலைவராகப் பொறுப்பேற்றார். அது காலை பதிப்பாளராகவும், ஆராய்ச்சி அறிஞராகவும் திகழ்ந்தார். திருவேங்கடத்தல புராணம், எம்பெருமானார் நெஞ்சுவிடு தூது, சேடமலைப் பதிற்றுப் பத்தந்தாதி, திருக்குறள் காளிங்கர், பரிப்பெருமாள் உரை முதலியன இவர் பார்வையில் வெளிவந்தன.

இவர், ஆராய்ச்சி முடிவுகளை மறுக்கச் சிறிதும் தயங்க மாட்டார். மறைமலையடிகள் அறுதியிட்ட மாணிக்க வாசகர் காலத்தைத் துணிவுடன் மறுத்துள்ளார். சித்திரகவி இயற்றுதலுடன் கல்வெட்டுப் பயிற்சியும் பெற்றிருந்தார்.

## பழநியப்பன் சேர்வைக்காரர் (17-நூ)

**ஊர்:** நொச்சியூர்.

**நூல்:** திருவுசாத்தான் புராணம்.

## பழநியாண்டி ஆசாரி (19-நூ)

**ஊர்:** பாண்டிய நாட்டில் கடலாடி.

**தந்தை:** வேலாச்சாரி: விசுவப்பிராமணர்.

இவர் சங்க நூல்களையும் பிற தமிழ் நூல்களையுங் கற்றுப் புலமை பெற்றவர்.

**நூல்:** பெருநாழி இராமலிங்கம் பிள்ளை இயற்றிய கந்த புராண வண்ணத்திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பழநியாண்டிப் புலவர் (19-நூ)

**ஊர்:** திருக்குற்றாலத்திற்கு அண்மையிலுள்ள வாசுதேவ நல்லூர்.

**நூல்:** பெரிய சுப்பா ரெட்டியார் இயற்றிய அன்னதான மகத்துவ புராணம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பழநியாண்டி பிள்ளை (20-நூ)

**ஊர்:** சேலம் மாவட்டம் காக்காவேரி.

**தந்தை:** கந்தசாமிப்பிள்ளை.

இவர் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் புலமை பெற்று இருசாலூர் என்ற இடத்தில் பள்ளியமைத்துப் பணியாற்றினார்; செய்யுள்பாடுந்திறம் பெற்றவர்.

**நூல்:** கருணீகர் புராணத்திற்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பழநிவேல் உபாத்தியாயர் (19-நூ)

**ஊர்:** திருச்செங்கோடு.

இவர் சிற்றம்பல நாவலர் என்பவரிடத்தில் இலக்கிய இலக்கணங்களைக் கற்றுப் புலமை பெற்றார்.

**நூல்:** பழநி மாம்பழக் கவிச்சிங்க நாவலர் இயற்றிய 'சந்திர விலாசம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பள்ளிகொண்டான் பிள்ளை, கொ. (19-நூ)

**வே.பெ.** எதிராஜ தாசர்.

**வாழ்விடம்:** சென்னை.

இவர் சென்னைப் புரசைப்பாக்கம் அட்டாவதானம் சபாபதி முதலியாரிடம் தமிழ் நூல்களைக் கற்றார். செய்யுள் இயற்றும் திறம் பெற்றுப் பல பிரபந்த நூல்களை இயற்றியுள்ளார். தொண்டை நாட்டு 22 வைணவத் திருப்பதிகளின் மேலும் பஞ்சரத்தினங்கள் இயற்றியுள்ளார். இவருடைய நூல்கள் "பிரபந்த வித்வான் கொ. பள்ளிகொண்டான் பிள்ளையவர்கள் இயற்றிய பிரபந்தத் திரட்டு" என்னும் பெயரால் 1899 ஆம் ஆண்டு பதிப்பிக்கப் பெற்றுள்ளன. நூலாசிரியர் தமது ஆசிரியர் சபாபதி முதலியார் மீது துதி கவியொன்றும் பாடியுள்ளார்.

**நூல்:** மணவாள மாமுனிகள் நான்மணி மாலை, எதிராச மாமுனிகள் நான்மணி மாலை, நம்மாழ்வார் நான்மணி மாலை, முதலாழ்வார் மும்மணிக் கோவை, அத்திகிரி அந்தாதி, சேடகிரி அந்தாதி, கோதை நாயகியார் மாலை, வேதவல்லித் தாயார் மாலை, கருப்பிணித் தாயார் மாலை, அணி மாமலர் மங்கைத் தாயார் மாலை, என்னைப் பெற்ற தாயார் மாலை, கனகவல்லித் தாயார் மாலை, அலர்மேல்

மங்கைத் தாயார் மாலை, அரங்க நகரனை அடைக்கல மாலை, பார்த்தசாரதிப் பரஞ்சுடர் மாலை, பார்த்தசாரதி மாயவன் மாலை, பார்த்தசாரதி பெருமான் மாலை, வீர ராகவப் பெருமான் மாலை, அரங்கநகரப்பனடிப் புகழ்ச்சி மாலை.

இவை ஒவ்வொன்றும் 102 செய்யுட்கள் உடையன.

## பறநாட்டுப் பெருங்கொற்றனூர் (சங்ககாலம்)

இவர் ஊரொடு தொடர்ந்த பெயர் கொண்ட சங்கப் புலவர்களுள் ஒருவர். பறநாடு என்பது பறம்புநாடு என்பதன் திரிபு என்று கருதுகின்றனர். பறம்புநாடு பாரி வேளின் நாடாகும். எனவே அந்நாட்டினர் இப்புலவர் என்று கருதலாம்.

புறநாட்டுப் பெருங் கொற்றனூர் என்றும் இவர் பெயர் காணப்பெறுகின்றது.

**நூல்:** அகம்: 323.

## பன்பன் ( )

**நூல்:** பரதேசியின் மோட்சப்பிரயாணம்.

## பன்னிரு படலமுடையார் ( )

**நூல்:** பன்னிருபடலம்.

இது ஒரு புறப்பொருள் இலக்கண நூல். அகத்தியர் மாணவர் பன்னிருவரும் ஒவ்வோர் படலமாகச் செய்த பன்னிருபடலங்களை உடையதாதலின் இது பன்னிரு படலம் எனப்பட்டது. புறப்பொருள் வெண்பாமாலை பன்னிரு படலத்தைத் தழுவிச் செய்யப்பட்டது. 'துன்னருஞ் சீர்த்தித் தொல்காப்பியன் முதல், பன்னிரு புலவரும் பாங்குறப் பயந்த' என்பது புறப்பொருள் வெண்பாமாலைப் பாயிரம். பன்னிருபடலம் அகத்தியர் மாணவரால் செய்யப் பட்டதென்பதில் ஐயுறவிருந்ததாக இளம்பூரணர் தொல் காப்பியப் புறத்திணையியல் உரையில் கூறியிருப்பது கொண்டு புலனாகும்.

அகத்தியர் மாணவர் பன்னிருவராவர்: அதங்கோட்டாசான், தொல்காப்பியர், துராலிங்கர், செம்பூட்சேய், வையாபிகர், வாய்ப்பியர், பனம்பாரர், கழாரம்பர், அவிநயர், காக்கைப்பாடினியார், நத்தத்தர், வாமனர் என்போர். பனம்பாரர், வாய்ப்பியர், அவிநயர், காக்கைப் பாடினியார், நத்தத்தர் என்போர் பெயரால் வழங்கும் இலக்கண நூற்பாக்கள் யாப்பருங்கல விருத்தியுரையில் காணப்படுகின்றன. யாப்பருங்கல விருத்தியில் பன்னிரு படலத்திலிருந்து பலவிடங்களில் மேற்கோள்கள் எடுத்தாளப் பட்டுள்ளன.

பனம்பாரனார் (சங்ககாலம்)

அகத்தியர் மாணவரும் தொல்காப்பியத்திற்குப் பாயிரம் செய்தவருமான பனம்பாரனாரும் இப்புலவரும் ஒருவரா, வேறா என்பது தெரியவில்லை.

**நூல்:** குறுந்தொகை. 52.

பனம்பாரனார் ( )

அகத்தியர் மாணவர் பன்னிருவருள் ஒருவர் பனம்பாரனார். பனம்பாரர் என்ற ஊரில் பிறந்தவராதலால் இவருக்குப் பனம்பாரனார் எனப்பெயர் வந்திருக்கக் கூடுமென்று அறிஞர்கள் சிலர் கருதுகின்றனர். இவர் தம் உடன் பயின்ற மாணவராகிய தொல்காப்பியர் இயற்றிய தொல் காப்பியத்திற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். இவர் தம் பாயிரத்தில் குமரியாறு அக்காலத்தில் தமிழ் நாட்டின் தென் எல்லையாக இருந்ததென்று குறித்துள்ளார். பனம் பாரம் என்ற இலக்கண நூலும் இவரால் இயற்றப்பட்டதாகக் கருதப்படுகிறது.

**நூல்:** தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம், பனம்பாரம்.

பனம்பாரம் என்ற நூல் மறைந்து போன தமிழ் நூல்களில் ஒன்று. யாப்பருங்கலம் அடியோத்து முப்பதாம் நூற்பா உரையில், விருத்தியுரைகாரர் இந்நூல் நூற்பா ஒன்றினை மேற்கோள் காட்டியுள்ளார். நன்னூல் உரையாசிரியர் மயிலைநாதர், நன்னூற் சிறப்புப்பாயிர நூற்பாக்களில் இரண்டைப் பனம்பார நூற்பாக்கள் என்று குறிப்பிடுகின்றார்.

## பனி அகமது மரக்காயர் (        )

**நூல்:** சின்னச் சீறா.

## பாக்கிக்கோ கபிரியல் (        )

**நூல்:** தேவபிரசையின் திருக்கதை.

## பாக்கிக்கோ பிரான்சஸ் (        )

**நூல்:** சந்தானுள் சமூக விலாசக்கும்மி (1880).

இந்நூல் யாழ்ப்பாணத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

## பாக்கியம் ஐயர் (19-நூ)

**நூல்:** ஞானுமிர்த சரிதைகள்.

இந்நூல் ஒரு மொழிபெயர்ப்பு நூல். ஏசுநாதரது வரலாறு இந்நூலுள் அடங்கியுள்ளது. இதில் 18 வரலாறுகள் கூறப்பட்டுள்ளன.

## பாகம்பிரியான் புலவர் (17-நூ)

இவர் படிக்காசுப் புலவர் காலத்தில் கொங்கு நாட்டில் குமாரசாமிக் காங்கேயரின் அவைக்களத்தில் புலவராக இருந்தவர். பல தனிப் பாடல்கள் இயற்றியுள்ளார்.

**நூல்:** படிக்காசுப் புலவர் பாடிய பாம்பலங்காரர் வருக்கக்கோவையைப் பாராட்டிப் பாடிய பாடல்கள்.

## பாகை அழகப்பன் (17-நூ)

**வே.பெ.** ஏகசந்தக்கிராகி.

ஒருவர் கூறுஞ் செய்யுளை ஒருமுறை கேட்ட அளவில் உள்ளத்தில் பற்றிவிடும் ஆற்றலால் ஏகசந்தக்கிராகி என அழைக்கப்பெற்ருர்.

இவருடைய பிறந்த ஊர் குறித்து விளக்கமான செய்திகள் இல்லை. சென்னையை அடுத்த கோடம்பாக்கம் கோடலம் பாகை என முற்காலத்திலேயே வழங்கினும், புலவரது ஊர் தென்னுட்டிலுள்ளது என்று கருதுகின்றனர். இவர்

வடமலையப்ப பிள்ளையன் என்பவர்மீது 'வடமலைவெண்பா' என்ற நூலொன்று பாடியுள்ளார். வடமலையப்ப பிள்ளை திருமலை நாயக்கரின் காரியத்தலைவராக அலுவல் பார்த்தவர்.

**நூல்:** 'வடமலை வெண்பா'.

இந்நூல் வாழ்த்து காப்புகள் நீங்கலாக 108 வெண் பாக்களால் ஆகியது; பின் இரண்டடிகள் திருக்குறளாக அமையுமாறு இயற்றப்பெற்றது.

## பாச்சா முதலியார் (17-நூ)

**ஊர்:** வேலூர்.

**நூல்:** முத்துச்சாமிப் புலவர் என்பவர் இயற்றிய 'வீரட்டே சுரர் பாமாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பாச்சில் வேள் நம்பன் (8-நூ)

இவர் கல்வெட்டாலறியப்படும் தமிழ்ப் புலவர். இவர் இயற்பெயர் நம்பன் என்று கருதப்படுகிறது. பாச்சில் என்பது இவர் பிறந்த ஊர். இது சோழ மண்டலத்தில் மழ நாட்டில் உள்ள திருப்பாச்சிலாச்சிரமம் ஆகும். இப்போது இவ்வூர் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ளது.

இவர், சுவரன் மாறனாகிய இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையனைப் பாடிய புலவர்களுள் ஒருவராதலால் மேற் குறிப்பிடப்பட்ட முத்தரையன் காலமாகிய 8 ஆம் நூற்றாண்டினராவர்.

பெரும்பிடுகு முத்தரையன் திருக்காட்டுப் பள்ளியின் அருகிலுள்ள நியமம் என்ற ஊரில் பிடாரி கோயில் ஒன்று எடுப்பித்து, அக் கோயிற்றூண்களில் தன் மீது பாடிய பாடல்களையும் பாடிய புலவர்களின் பெயரையும் குறிப்பிட் டான். அக் கோயில் இடிந்ததனால் அதிலுள்ள கற்களையும் தூண்களையுங்கொண்டு திருக்காட்டுப் பள்ளிக்கு அருகில் உள்ள செந்தலை என்ற ஊரில் ஒரு சிவன் கோயில் கட்டினர்.

அக் கோயில் தூணொன்றில் பாச்சில் வேள் நம்பன் பாடிய பாடல்கள் உள்ளன. இவை கட்டளைக் கலித்துறைகளாகவும் வெண்பாக்களாகவும் உள்ளன. சில பாட்டுக்களில் சீர்களும் அடிகளும் சிதைந்துள்ளன.

## பாஞ்சால நாதர் ( )

**நூல்:** நாலுமந்திரி கதை.

## பாட்டியன் மரபுடையார் ( )

இவர் இயற்பெயர் யாதெனத் தெரியவில்லை. "ஆரிடச் செய்யுள் பாடுதற்குரியோர், கற்றோரறியா வறிவு மிக்குடையோர், மூவகைக் காலப்பண்பு முறையுணரு, மாற்றல் சான்ற வருந் தவத்தோரே' என்று சொன்னார் பாட்டியன் மரபுடையாராகலின்" என யாப்பருங்கல விருத்தியில் குறிப்பிடப்படுகின்றார்.

**நூல்:** பாட்டியன் மரபு.

## பாடலனார் ( )

இவர் பழைய இலக்கண நூலாசிரியர்களுள் ஒருவர் என்பது யாப்பருங்கல விருத்தியினால் தெரிய வருகின்றது. யாப்பருங்கலம் ஒழிபியலில் விருத்தியுரைகாரர் 32 தந்திர உத்திகள் பற்றிய இந்நூல் நூற்பா ஒன்றினை மேற்கோள் காட்டியுள்ளார்.

**நூல்:** பாடலம்.

இது மறைந்து போன தமிழ் இலக்கண நூல்களுள் ஒன்று.

## பாண்டரங்கண்ணனார் (சங்ககாலம்)

**இ.பெ.** கண்ணன்.

**தந்தை:** பாண்டரங்கன்.

இவர் பாண்டரங்கன் என்பவரின் மகனார் ஆதலால் பாண்டரங்கண்ணனார் என்று அழைக்கப் பெற்றார்.

**நூல்:** புறம். 16.

## பாண்டி கவிராசர் (16-நூ)

புதுக்கோட்டை மாவட்டம் திருமய்யம் கோட்டம், இராங்கியம் என்ற சிற்றூரிலுள்ள, பூமிசுவரர் கோவிலின் தென்புறச்சுவரில் அமைந்த கல்வெட்டொன்றில் இப்புலவர் குறிப்பிடப்பட்டுள்ளார். இக்கல் வெட்டில், வெங்களநாயக் கரய்யன் மீது இப்புலவர் வீரமாலை என்ற நூலைப்பாடிய செய்தி பொறிக்கப்பட்டுள்ளது. வெங்கள நாயக்கர் கி.பி.16 ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் இருந்தவராதலால், இப் புலவர் அக்காலத்தே வாழ்ந்தவராவர்.

**நூல்:** வீரமாலை.

இது மறைந்து போன தமிழ் நூல்களிலொன்று.

## பாண்டித்துரைத் தேவர் (20-நூ)

**வே.பெ.** உக்கிரபாண்டியன்.

**ஊர்:** இராமநாதபுரம்.

**தந்தை:** பொன்னுசாமித் தேவர்.

**வாழ்ந்த காலம்:** 21—3—1867 — 2—12—1911.

இவர் பாலவநத்தம் பெருநிலக் கிழாராக இருந்தவர். இவ்வூர் இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ளது. இவர் தமது மூன்றுவது அகவையிலேயே தந்தையை இழந்தார். சேஷாத்திரி ஐயங்கார் என்பவரின் மேற்பார்வையில் அழகர்ராசு என்ற அறிஞர்பால் தொடக்கக் கல்வியினைப் பயின்றார். வழக்கறிஞர் வேங்கடேச சாத்திரி என்பவர் ஆங்கிலக் கல்வியினைப்புகட்டினார். இதனால் இவர் இரு மொழிப் புலமை பெற்றார். இவருடைய சிறிய தந்தையார் முத்துராமலிங்க சேதுபதி. அவருடைய மகனார் பாஸ்கர சேதுபதியும் இவரும் உயிரொன்றிப் பழகினர். பாஸ்கர சேதுபதியின் கல்வி வளர்ச்சியிலும் பாண்டித்துரை நாட்டஞ் செலுத்தினார். இவருடைய அவையில் சதாவதானம் முத்துச்சாமி ஐயங்காரென்பவர் அவைக்களப்புலவராக இருந்தார். திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த பழநிக் குமாரத் தம்பிரானென்பவர் இவருக்குச் சைவ சமய நூல்களைக் கற்பித்தார்.

இவர் கைம்மாறு கருதாது உதவும் வள்ளலாவர். பலரும் தமிழ்க் கல்வி கற்றுச் சிறந்து விளங்கத் தம்மால் இயன்ற உதவிகளை எல்லாம் செய்தார். இவ்வுதவிகளெல்லாம் சோம சுந்தர விலாசம் என்ற இவருடைய அரண்மனையின் கண்ணே நிகழ்ந்தன. இவரும் தம் தந்தையாரைப் போலவே அறிஞர்கள் நிறைந்த அவையினை அமைத்து அதன்கண் நூலாராய்ச்சி, சொற்பொழிவு முதலியவை நிகழ ஏற்பாடு செய்தார். தம் தந்தையாரைப் பின்பற்றித் தமிழ் நூல் களைப் பதிப்பிக்கப் பேருதவி செய்தார். அபிதான சிந்தா மணி இவருடைய பொருளுதவி கொண்டு பதிப்பிக்கப் பெற்றது. புறப்பொருள் வெண்பா மாலை, மணிமேகலை முதலிய நூல்களை உ.வே. சாமிநாதையரவர்கள் பதிப்பிப் பதற்குப் பெரும் பொருள் வழங்கினார். ஞானசம்பந்தப் பிள்ளை என்பவரைக் கொண்டு தேவாரத்தல முறைப் பதிப்பை வெளியிட்டார். அவ்வாசிரியர், சிவஞான சுவாமி கள் பிரபந்தத் திரட்டை வெளியிடுவதற்கும் உதவி செய்தார்.

அறத்துறைப் பாடல்கள் பலவற்றைத் தொகுத்துப் 'பன்னூற் திரட்டு' என்று வெளியிட்டார். அறம் பொருள் இன்பம் முதலிய செய்திகளைக் கூறும் பாடல்களை ஒன்று படுத்தி, அவைகளை வகைப்படுத்தி, அதிகார அடைவு முதலியவைகளை அமைத்து இந் நூலினை வெளியிட்டது பாராட்டத்தக்கது.

இவருடைய தமிழ்த் தொண்டுகள் பலவற்றிலும் தலை சிறந்தது 1901 செப்டம்பர் 14 ஆம் நாள் மதுரையில் தமிழ்ச் சங்கம் தொடங்கியதேயாகும். இச் சங்கம் நான்காம் தமிழ்ச் சங்கம் எனக் கருதப்பட்டது. மாணவர்கள் பலர் தமிழ் பயில இங்கு வாய்ப்பு ஏற்பட்டது.

இவர் சொல்வன்மையுடையவர். மதுரையில் தமிழ்ச் சங்கம் ஏற்பட்ட பிறகு பல இடங்களுக்கும் சென்று அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். எவரும் பிழைபட எழுதுதலோ பேசுதலோ கூடாது என்று கருதுபவர் இவர்.

மதுரையில் வழக்கறிஞராகத் தொழில் புரிந்த ஆங்கிலேய ரொருவர் திருக்குறளைத் தம் மனம் போனபடி திருத்தி வெளியிட்டமை கண்டு வருந்தி, அவர் வெளியிட்ட படிகள் அத்தனையையும் வாங்கித் தீயிட்டுக் கொளுத்தினர். இத்தகைய தமிழ்த் தொண்டாற்றிய இவர் தமது 44 ஆம் ஆண்டில் 2.12.1911 இல் காலமானர்.

**நூல்:** முருகன் மீது காவடிச் சிந்து, சிவஞான சுவாமிகள் தோத்திரம்.

## பாண்டிப் பெருமாள் (17-நூ)

இவர் திருநெல்வேலிப் பகுதியில் வாழ்ந்தவரென்று தெரிகிறது; சைவ சமயத்தினர்.

**நூல்:** சிவஞான போதம் விருத்தியுரை.

## பாண்டியன் ( )

**வே.பெ.** தாமஸ்.

**நூல்:** ஈசாக்கு ஆபிரகாம் ஐயரவர்களின் சீவிய சரித்திரம்.

## பாண்டியன் ஆரியப்படைக் கடந்த நெடுஞ்செழியன் (சங்ககாலம்)

**இ.பெ.** நெடுஞ்செழியன்.

இவன் சங்ககாலத்தில் வாழ்ந்த அரசப்புலவர்களில் ஒருவன். கண்ணகி தன் காற்சிலம்பினை உடைத்துத் தன் கணவன் கள்வனல்லன் என்று நிறுவ, தன் தவறு உணர்ந்து உயிர்நீத்த பாண்டிய மன்னன் இவனே யாவன். இந் நெடுஞ்செழியன், தன் காலத்தே தமிழ் நாட்டை வென்றகப் படுத்த எண்ணித் தமிழகத்திற்கு வந்த ஆரியப் பெரும் படையினரை வென்றமையால் 'ஆரியப்படை கடந்த' என்ற சிறப்பினைப் பெற்றான். இச்செயலால் இவன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்று அழைக்கப்பெற்றான்.

இவனது ஆட்சிச் சிறப்பை இளங்கோவடிகள் சிலப்பதி காரத்தில் பாராட்டியுள்ளார்.

**நூல்:** புறம் 183.

## பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் (சங்க காலம்)

இ.பெ. கண்ணன்.

பாண்டியன் என்பதனைக் கொண்டு இவரை அரசப் புலவராகக் கருதுதல் தவறு. படைத் தலைமைபூண்டு சிறப்புற்றோர்க்கு, அரசர்கள் ஏனாதி என்ற சிறப்புப் பெயரையும், அதற்கு அடையாளமாக ஏனாதி என்ற பெயர் பொறிந்த மோதிரத்தையும் அணிவித்துச் சிறப்புச் செய்வர். சோழர் படைத் தலைவன் சோழிய ஏனாதி என்று அழைக்கப் பெற்றதுபோல பாண்டியர் படைத் தலைவனாகிய இவன் பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் என்று அழைக்கப் பெற்றான்.

நூல்: அகம்: 373, குறுந்தொகை: 156.

## பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (சங்ககாலம்)

இ.பெ. நெடுஞ்செழியன்.

இவன் சங்ககால அரசப் புலவர்களுள் ஒருவன். பத்துப் பாட்டுள் நெடுநல்வாடையும், மதுரைக் காஞ்சியும் இவன் புகழ் கூறுகின்றன. இப்புகழ் அனைத்திற்கும் காரணம் இவன் தலையாலங்கானப் போரில் பெற்ற வெற்றியேயாகும். இவன் ஆட்சிப் பொறுப்பை ஏற்குங்காலை மிக இளையனாக இருந்தான். இதனைக் கண்ணுற்ற இவன் பகைவர்களாகிய யானைக் கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, சோழன் ஒருவன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் என்ற எழுவரும் கூடி எதிர்த்தனர். இவர்களை இவன் தஞ்சை மாவட்டம் தலையாலங்கானம் என்ற இடத்தில் எதிர்த்து வென்றான். இவ்வெற்றிச் சிறப்பினாலேயே இவன் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்று அழைக்கப் பெற்றான். இப்போரில் இவன் கூறிய வஞ்சினமே பாட்டாக அமைந் துள்ளது. புறநானூற்றில் இடைக்குன்றூர் கிழார் என்ற புலவர் இவன் சிறப்பை மூன்று பாடல்களில் பாராட்டி யுள்ளார்.

நூல்: புறம்: 183.

## பாண்டியன் பன்னாடு தந்தான் (சங்க காலம்)

இவன் சங்ககால அரசப்புலவர்களுள் ஒருவன். பல நாடுகளை வென்று கைப்பற்றியதால் பாண்டியன் பன்னாடு தந்தான் என்று அழைக்கப்பெற்றான். குறுந்தொகை பாடிய புலவர் வரிசையில் வரும் பாண்டியன் பன்னாடு தந்தான் என்பவனும், நற்றிணையில் பாடிய புலவர்களாக வரும் மாறன்வழுதி, பாண்டியன் மாறன்வழுதி என்பவர்களும், நற்றிணை நூலைத்தொகுத்த பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதியே என முடிவு செய்வாரும் உளர்.

**நூல்:** குறுந்தொகை: 270.

## பாண்டியன் மனைவி (16-நூ)

இவர் வரதுங்கராமபாண்டியனின் மனைவி. வரதுங்கராம பாண்டியன் பராக்கிரம குலசேகர பாண்டியனுடைய இரண்டாவது மகன்; இவர் 1588இல் முடி சூட்டப்பெற்ற வராதலால் பாண்டியனுடைய மனைவியார் 16 ஆம் நூற்றாண்டினராவர். இவர் தமிழ்ப்புலமை பெற்று நூலா ராய்ச்சி செய்தலையே இனிய பொழுது போக்காகக் கொண்டிருந்தவர்.

**நூல்:** பாண்டியன் பிரிந்திருந்தபோது பாடிய தனிப்பாடல்.

## பாண்டியன் மாறன் வழுதி (சங்ககாலம்)

**வே.பெ.** மாறன் வழுதி.

இவன் சங்ககால அரசப் புலவர்களுள் ஒருவன். மதுரைப் பாண்டியர் மரபினன்.

**நூல்:** நற்றிணை 97, 301.

## பாணெல் (          )

**நூல்:** மனங்குழம்பிய மாதவத்தோன் (1904).

## பாநுகவி, ம.தி. (19 நூ)

**நூல்:** சிவபராக்கிரமம் (1899).

இந்நூல் உரை நடையிலமைந்தது; சைவத்தின் சிறப்பினை உணர்த்தும் 90 வரலாறுகள் இதன்கண் உள்ளன.

பாப்லி, எச்.ஏ. (20-நூ)

**ஊர்:** இங்கிலாந்து நாட்டினர்.

**மறைவு:** 9-5-1960.

இவர் இங்கிலாந்து நாட்டில் பாப்லி என்ற குடும்பத்தில் பிறந்தவர். இக்குடும்பப் பெயரே இவருக்கு இயற்பெயர் போல வழங்கலாயிற்று. ஹெர்பர்ட் என்பது இவரது பிள்ளைப் பெயராகும்.

இவர் வேதியல் துறையில் பட்டம் பெற்று உலகமக்களுக்குத்தொண்டு செய்யும் நோக்கத்தில் இலண்டன் மிஷன் சங்கத்தில் சேர்ந்தார். இந்தியாவிற்கு வந்து தமிழகத்தில் தொண்டாற்றிய போது சிவபாத இருதயம் பிள்ளை என்பவரைத் தமிழாசிரியராகக் கொண்டு தமிழ் கற்றார். அறிஞர்களைச் சொற்பொழிவாற்றச் செய்ததோடு தாமும் சொற்பொழிவாற்றித் தமிழறிவைப் பெருக்கிக்கொண்டார். சேலம் மாவட்டத்திலும் கோயம்புத்தூர் மாவட்டத்திலும் இவர் ஆற்றிய தொண்டுகள் பல. ஈரோட்டில் பல ஆண்டுகள் தொடக்கப் பள்ளிகளையும் உயர்தரப் பள்ளிகளையும் நடத்தினார். தமிழையும் தமிழிசையையும் கற்றுக்கொண்டு தமிழில் சமயத் தொடர்பான கதைகளை இன்னிசையோடு நடத்திக் காட்டினார். முதல் உலகப் போர் தொடங்கியதும் இளைஞர் சங்கத்தில் சேர்ந்து பணியாற்றினார். கல்கத்தாவில் இருந்தபோது "இந்தியப் பண்பாட்டின் பாரம்பரியம்" என்ற தொடரில் பல நூல்களைப் பதிப்பித்தார். தமது நண்பர் கனகராயன் என்பவருடைய வாழ்க்கை வரலாற்றையும் வெளியிட்டார். கோவைமாவட்டத்தில் பல பள்ளிகளை நடத்திய தோடு இலண்டன் மிஷன் உயர்நிலைப் பள்ளியில் செயற்குழு உறுப்பினராக இருந்து அருந்தொண்டாற்றியுள்ளார். தென்னாட்டில் நடந்த இலக்கிய சமயக் கூட்டங்களனைத்திலும் பங்கு கொண்டார். தமிழர்களைப் போலவே தமிழ் மொழியைப் பேசும் திறம் பெற்றிருந்தாரென்பது குறிப்பிடத் தக்கது. இவர் 9-5-1960 ஆம் நாள் காலமானார்.

**நூல்:** திருக்குறள் (ஆங்கில மொழிபெயர்ப்பு) இந்திய இன்னிசைக் கலை (ஆங்கிலம்) கிறித்தவ சமய கீதங்கள் (ஆங்கிலம்).

இந்திய இன்னிசைக் கலை என்ற நூல் தமிழிசை, வடநாட்டிசை, மேனாட்டிசை என்ற மூன்றையும் ஒப்பு நோக்கி அவைகளுக்குள் உள்ள வேறுபாடுகளை அறிந்து நுட்பங்களை எடுத்துக் காட்டி எழுதப்பட்டதாகும். இது தமிழருக்கே யன்றி மேனாட்டாருக்கும் பயன் படத் தக்கது.

## பாபநாச முதலியார் (18-நூ)

**ஊர்:** கும்பகோணம்.

இவர் முத்தமிழ்க் கவிராச சேகரர் பாபநாச முதலியார் என அழைக்கப் பெற்றார். இவர் 'கும்பேச குறவஞ்சி' என்ற நூலொன்று பாடியுள்ளார். இந் நூலில் தஞ்சாவூரி லாண்ட ரக்கோஜி என்ற மகாராட்டிர அரசரைக் குறிப்பிடுவதால் அவர் காலத்தில் வாழ்ந்தவர் என்று கருதப்படுகின்றார். ரக்கோஜி துக்கோஜியின் மகன் அவர் ஆட்சிக் காலம் 1736-37 ஆதலால் பாபநாச முதலியார் 18 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் ஆவர். இவர் சிவ பிரானைப் போற்றிப் பல அழகிய தமிழ்க் கீர்த்தனங்கள் இயற்றியுள்ளார்.

**நூல்:** 'கும்பேசர் குறவஞ்சி'

இந்நூல் குடந்தையில் எழுந்தருளியுள்ள கும்பேசரைப் புகழ்ந்து குறவஞ்சி அமைப்பில் பாடப் பெற்றது.

## பாபு (19-நூ)

**நூல்:** இளவரசு ஹிஸ் ராயல் ஹைனஸ் தி பிரின்ஸ் (1875) இந்நூல் எட்வர்டு இளவரசர் சென்னைக்கு வருகை தந்த போது அவருடைய குணநலன்களை மக்கள் தெரிந்து கொள்வதற்காக எழுதப் பெற்றது.

## பாம்பாட்டிச்சித்தர் ( )

இவர் பாண்டிய நாட்டினரென்றும் சட்டைமுனி என்பவர் பால் தீக்கை பெற்றவரென்றும் கொங்கு நாட்டிலுள்ள

மருதமலையை அடைந்து அங்கு ஒருபால் நெடுங்காலந் தவமிருந்து வீடுபேறடைந்தாரென்றும் கூறப்படுகிறது.

பாம்பாட்டிச்சித்தரென்பவர் பாம்பாட்டுதலைத் தொழிலாகக் கொண்டவரல்லர். புராண வேதாந்த சித்தாந்த அறிவிலும் யோகத்திலும் தவத்திலும் பேரறிவு பெற்றவர். இவர் காட்டில் தவமிருந்தபோது இறந்து கிடந்த ஒருபாம்பைக் கண்டு இரக்கங் கொண்டு ''ஆடு பாம்பே தெளிந்தாடுபாம்பே'' என்று பாட அப்பாம்பு உயிர் பெற்று எழுந்ததாகவும் இந்த அற்புதச் செயலைக் கருதியே இவர் ''பாம்பாட்டிச் சித்தர்'' என்று அழைக்கப் பெற்ருர் என்று கருதுகின்றனர். மேலும் மெய்யறிவுக் கருத்துக்கள் செறிந்து விளங்கும் இவருடைய பாடல்களிலெல்லாம் பாம்பைக் குறிப்பிட்டே பாடியுள்ளார்.

**நூல்:** பாம்பாட்டிச்சித்தர் பாடல்கள்.

இப்பாடல்கள் பதினெண் சித்தர் ஞானக்கோவை என்னும் நூலில் சேர்த்து அச்சிடப் பட்டுள்ளன.

## பார் காப்பான் (சங்க காலம்)

இவர் பெயர் பாரகாபரன், பாரகரபரன், பார காபான் என்றும் திரித்து வழங்கப்படுகிறது.

**நூல்:** குறுந்தொகை 254.

## பார்த்த சாரதி ஐயங்கார் (19-நூ)

**நூல்:** எழுவாய் பயனிலை செயப்படுபொருள் விளக்கம் (1899).

இந்நூல் உரைநடையில் அமைந்தது. வாக்கிய இலக்கணமாகிய எழுவாய் பயனிலை செயப்படுபொருள் பற்றிச் சிறு குழந்தைகளுக்கு விளங்கும் வகையில் எழுதப்பட்டுள்ளது.

## பார்த்த சாரதி நாயுடு - 1 (20-நூ)

**நூல்:** காரைக்குடி இராமசாமிச் செட்டியார் மகன் அருணசலஞ் செட்டியார் இயற்றிய ''வலையமா நகர் மலை

யாண்டி விநாயகர் பதிகம், திருவாரூர்த்தியாகேசர் பதிகம் முதலிய நூல்களைப் பாராட்டிப் பாடிய சிறப்புப் பாயிரம்.

## பார்த்தசாரதி நாயுடு - 2 (20-நூ)

இவர் சந்தப்புலி என்று பெயர் பெற்றவர்.

**நூல்:** நாராயணசாமி நாயுடு, ப. இயற்றிய நெட்டூர்ப் புராணத்தைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பார்த்தசாரதி நாயுடு பா.மு. (20-நூ)

இவர் வண்ணச் சரபம் தண்டபாணி சாமிகளின் மாணவர்; விருதுப்பட்டி சத்திரிய வித்தியாசாலை உயர் நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி புரிந்தவர். சந்தப் பாக்களை விரைவாகப் பாடும் ஆற்றல் பெற்றிருந்ததால் 'சந்தப் புலி' என அழைக்கப் பெற்றார்.

**நூல்:** நெட்டூர் நாராயணசாமி நாயுடு இயற்றிய நெட்டூர்ப் புராணத்திற்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பார்த்தசாரதி முதலியார் (20-நூ)

**நூல்:** மதலைச் சதகம் (1900)

இந்நூல் மாணவ மாணவியருக்கேற்ற பல நீதிப் பாடல்களின் தொகுதியாகும். "மதலாய்" என விளித்துப் பாடல் தோறும் நீதிப் பொருள் கூறப்பட்டுள்ளது. 41 செய்யுட்கள் உள்ளன.

## பார்த்தசாரதி முதலியார் பொ. (19-நூ)

**நூல்:** திருவேங்கடப் பதிகம் (1873).

## பாரதம் பாடிய பெருந்தேவனார் (சங்ககாலம்)

பெருந்தேவனார் என்ற பெயருடைய பிறபுலவர்களினின்றும் வேறானவர் என்று அறியப் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்று அழைக்கப் பெற்றார். தொகை நூல்களின் உள்ளே பெருந்தேவனார் பாடிய பாடல் ஒன்று கூட இல்லை ஆதலாலும், அந்நூல்களின் கடவுள் வாழ்த்தை

மட்டும் இவர் பாடினார் ஆதலாலும் இவரைப் பாயிரம் பாடிய பெருந்தேவனார் என்று அழைப்பதே பொருத்தம் என்பர் டாக்டர். மொ. அ. துரைஅரங்கசாமி. பல்லவர் காலத்தில் இருந்த பாரதம் பாடிய பெருந்தேவனார் இவருக்கு முற்றிலும் வேறானவர், பிற்காலத்தவர் இவர் இருவரையும் ஒருவராகக் கருதிக் குழப்பமுற்றுப் பாயிரம் பாடிய பெருந்தேவனார் என்ற பெயரைப் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்று திருத்தி விட்டனர் என்றும் அவர் விளக்கம் தருகிறார்.

வியாச பாரதத்தை வெண்பாவும் அகவலும் உரைநடையும் விரவிவரப் பாடி வெளியிட்டமையால் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்று அழைக்கப் பெற்றார். இவர் பிறந்தது தொண்டை நாடு எனத் தொண்டைமண்டல சதகத்தால் அறிகிறோம். இப்பொழுது அச்சிட்டு வழங்கும் பாரத வெண்பாவில் முதலில் விநாயக வணக்கமும், அடுத்துத் தெள்ளாற்றில் போர் வென்ற அரசன் சிறப்புங் கூறுவது காரணமாகப் படிக்காசுப் புலவர் இவரைத் தொண்டை மண்டலத்தார் என்று எழுதி வைத்தார். தெள்ளாற்றில் போர் வென்ற நிகழ்ச்சி கடைச் சங்கம் அழிந்த பல்லாண்டு களுக்குப் பின்னரேயாகும். ஆதலின் இப்பிற்காலப் பாரத நூலுக்கு வேறாகச் சங்ககாலத்தில் தோன்றிய பாரதநூல் ஒன்று இருந்திருத்தல் வேண்டும். நச்சினார்க்கினியராலும், தொல்காப்பியத்தின் பிற உரையாசிரியர்களாலும் மேற் கோள்களாக எடுத்தாளப் பட்ட பாரத நூற் செய்யுட்கள் முற்காலத்தனவாகலாம். பாண்டியர்களின் வேள்விக்குடிச் சாசனம், தமிழ்ச்சங்கம் நிறுவிய சில ஆண்டுகளுக்குப் பின் வந்த பாண்டிய மன்னன் ஒருவன் பெரு முயற்சியால் பாரதம் தமிழில் ஆக்கப்பட்டது என்று கூறுகின்றது. எனவே இந்நூல் சங்ககாலத்தின் முடிவில் தோன்றியிருக்கலாம் என்று கருதுகின்றனர்.

**நூல்:** ஐங்குறு நூறு, அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய ஐந்து தொகை நூல்களிலுமுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்கள்.

இக்கடவுள் வாழ்த்துப்பாடல்கள் சிவபிரான், திருமால், முருகன் ஆகிய கடவுள்களுக்குக் கூறப்பட்டவையாகும்.

## பாரதம் மொழிபெயர்த்த பாண்டியன் (9-நூ)

கி.பி. 10 ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த சின்னமனூர்ச் சாசனம் பாண்டியனொருவன் பாரதத்தை மொழிபெயர்த்த வரலாறு பற்றிக் கூறுகிறது. "மகாபாரதந் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்" என்பது இச்சாசனத் தொடராகும். இத்தொடரில் சுட்டப் படுகின்ற பாரதம் தெள்ளாறெறிந்த மூன்றும் நந்திவர்மன் காலத்தது (9-நூ). இது பாரத வெண்பாவினும் வேருனது. இப்பாடல்கள் நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில் எடுத்தாண்டுள்ள வெண்பாக்களினும் வேருனவை என்று கருதக் கிடக்கின்றன. பாண்டியன் மொழிபெய்ர்த்த பாரதம் நச்சினார்க்கினியர் எடுத்தாண்ட பாரதமோ பிறிதோ தெரியவில்லை என்று சாசனத் தமிழ்க்கவி சரிதம் கூறுகிறது.

## பாரதிதாசன் (20-நூ)

**இ.பெ.** கனக சுப்புரத்தினம்.

**சி.பெ.** புரட்சிக் கவிஞர், பாவேந்தர்.

**ஊர்:** புதுச்சேரி.

**தாய்:** இலக்குமி அம்மையார்; **தந்தை:** கனகசபை.

**வாழ்ந்த காலம்:** 29—4—1891 — 21—4—1964.

'புரட்சிக்கவிஞர்' என்று சிறப்பாக அழைக்கப்பெற்ற இவர், புதுச்சேரி வணிகர் கனகசபை முதலியாரின் மகனாராவர். தொடக்கத்தில் பிரெஞ்சு மொழிப் பள்ளியில் சேர்ந்த இவர் பின்னர் தமிழ் மொழியில் பெரிதும் நாட்டங் கொண்டு கல்வே கல்லூரியில் பயின்று தமிழ்ப் புலமை பெற்றார். புதுச்சேரியில் பெரும் புலவராக விளங்கிய பு.அ. பெரியசாமிப்பிள்ளை என்பவர் இவருக்குச் சங்கநூல் முதலிய தமிழ் நூல்களைக் கற்பித்தார். இவர், தமது பதினெட்டாவது வயதில் புலவர் தேர்வில் முதன்மையாகத் தேறினார்.

இவருக்குக் கவிதை இயற்றும் திறம் இளம் வயதிலேயே இயற்கையாக அமைந்திருந்தது. இவருடைய மொழி அறிவும், இசைத்திறனும் கவிதை இயற்றும் ஆற்றலுக்குத் துணை நின்றன.

தமிழறிவு பெற்ற இவர் எல்லாத் துறைகளிலும் தேர்ச்சி பெறக் கருதினார். இதனால் இவர் இசை நாடகம் முதலியவற்றையும் பயின்றார். குரல் இனிமை வாய்க்கப்பெற்றிருந்தமையால் பள்ளி நாடகங்களில் முதன்மையான நடிகராகத் திகழ்ந்தார். இவர் எழுத்தாற்றல் பேச்சாற்றலில் சிறந்திருந்ததோடு உடற்பயிற்சிகளிலும் தேர்ச்சிப்பெற்றார்.

திருமண நிகழ்ச்சி ஒன்றில் பாரதியாரின் நட்பு இவருக்குக் கிடைத்தது. அந்நிகழ்ச்சிக்கு வந்திருந்த பாரதியாரை யாரென்று தெரியாமலேயே அவருடைய நாட்டுப் பாடலை இவர் பாடினார். பின்னர் ஒருவரையொருவர் அறிந்து நட்புக் கொண்டனர். பாரதியாரின் பாட்டில் மோகம் கொண்ட சுப்பு ரத்தினம் தம்முடைய பெயரைப் பாரதிதாசன் என மாற்றிக் கொண்டார். அப்பெயரே இவருக்கு மிகுதியாக வழங்கிற்று.

இவர் 1920-ஆம் ஆண்டில் பழனியம்மாள் என்பவரை மணந்தார். பெண்மக்கள் மூவரும் ஆண்மகன் ஒருவரும் பிறந்தனர்.

தமது பதினெட்டாவது வயதில் தமிழ்ப்புலமை பெற்ற இவர் தமிழாசிரியராகத் தொழில்புரியக் கருதினார். காரைக்காலை அடுத்த நிரவி என்ற இடத்தில் உள்ள உயர் நிலைப்பள்ளியில் தமிழாசிரியர் பதவி பெற்றார். பின்னர், புதுச்சேரிக்கு மாற்றம் பெற்றார். புதுச்சேரிக்கு வந்த இவர் விடுதலை இயக்கத்தில் ஊக்கம் கொண்ட வ.வே.சு. ஐயர், அரவிந்தர், சுப்பிரமணியபாரதியார் ஆகியோர்பால் பற்றுக் கொண்டார். இவ்வாறு பற்றுக்கொண்ட இளைஞர்கள் கூட்டத்தோடு சேர்ந்து 'வில்லினை எடடா' என்னும் பாரதியின் பாடலைப் புரட்சி ததும்பும் படியாக எங்கும் பாடினார். இவர் சிறந்த கவிஞராக விளங்கியதோடு தமது

பதினெட்டாவது வயது முதல் ஐம்பத்தைந்தாவது வயது வரை 37 ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றியுள்ளார்.

பாரதியாரின் கொள்கைகளைப் பின்பற்றிய இவர் சில வேளைகளில் அவரையும் ஒரு படி அதிகமாக விஞ்சினார் என்றே கூறலாம். இவர் "குயில்" என்ற பெயரில் திங்கள் இதழ் ஒன்று நடத்தினார். அதில் இவருடைய கவிதைகள் அவ்வப்போது வெளியிடப்பெற்றன. இளமைப் பருவத்திலேயே இவர் புரட்சிகரமான போக்குடையவராகத் திகழ்ந்ததால் இவருடைய கவிதைகளிலும் பல்வேறு புரட்சிக் கருத்துக்கள் இடம் பெற்றன. பகுத்தறிவு எண்ணங் கொண்ட இவருடைய கவிதைகளில் மக்கள் பெரிதும் ஈடுபாடு கொண்டு புரட்சிக் கவிஞர் எனப் பாராட்டி மகிழ்ந்தனர்.

கவிஞரின் 55-வது ஆண்டு விழா சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. பேரறிஞர் அண்ணாவின் முயற்சியால் திரட்டப் பெற்ற 25000-க்கு மேற்பட்ட வெண்பொற் காசுகள் 28—7—46ஆம் ஆண்டு நடைபெற்ற நிகழ்ச்சியில் இவருக்குத் தரப்பட்டது. இவருடைய 'பிசிராந்தையார் நாடகம்' சாகித்திய அகாதமி பரிசு பெற்றது. இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டில் 1968ஆம் ஆண்டில் சென்னை கடற்கரையில் இவருக்குச் சிலை அமைக்கப்பெற்றது. அண்மையில் திருச்சியில் அமைக்கப்பெற்ற பல்கலைக்கழகத்திற்கு, தமிழக அரசினால் 'பாரதிதாசன் பல்கலைக் கழகம்' எனப் பெயர் சூட்டிச் சிறப்பித்துள்ளனர்.

**நூல்:** இருண்ட வீடு, எதிர்பாராத முத்தம், கண்ணகி புரட்சிக் காப்பியம், காதலா கடமையா, குடும்ப விளக்கு (ஐந்து தொகுதிகள்), குறிஞ்சித்திட்டு, தமிழச்சியின் கத்தி, பாண்டியன் பரிசு, இசையமுது, அகத்தியன் விட்ட புதுக் கரடி, அழகின் சிரிப்பு, இளைஞர் இலக்கியம், உரிமைக் கொண்டாட்டமா, எது பழிப்பு, எது இசை, கடவுளைக் கண்டீர், தமிழியக்கம், தாழ்த்தப்பட்டோர் சமத்துவப் பாட்டு, திராவிடர் திருமணப் புரட்சித் திட்டம், தேனருவி இசைப்பாடல்கள், நீலவண்ணன் புறப்பாடு, பாரதிதாசன்

ஆத்திசூடி, கதர் இராட்டினப்பாட்டு, கற்புக் காப்பியம், காதல் நினைவுகள், காதல் பாடல்கள், சஞ்சீவி பர்வதத்தின் சாரல், பாரதிதாசன் பன்மணித்திரள், புரட்சிக்கவி, பெண்கள் விடுதலை, பொங்கல் வாழ்த்துக் குவியல், மயிலம் சி. சுப்பிரமணியர் துதி அமுது, முல்லைக்காடு, விடுதலை வேட்கை, உயிரின் இயற்கை, வீட்டுக்கோழியும் காட்டுக் கோழியும், அமைதி, இரணியன் அல்லது இணையற்ற வீரன், கழைக்கூத்தியின் காதல், கற்கண்டு, சத்தி முத்தப்புலவர், சேரதாண்டவம், சௌமியன், தலைமலைகண்ட தேவர், நல்ல தீர்ப்பு, படித்த பெண்கள், பாரதிதாசன் நாடகங்கள்- இரண்டு தொகுதி, பிசிராந்தையார், பாரதிதாசன் கவிதைகள், பாரதிதாசன் கதைகள், கவிஞர் பேசுகிறார்.

## பாரதி ( )

**நூல்:** இராமாயணத் திருப்புகழ்.

## பாரதியார் (20-நூ)

**பார்க்க:** சுப்பிரமணிய பாரதியார், சி.

## பாரி மகளிர் (சங்க காலம்)

இவர்களைப் பற்றிய பல கதைகள் தமிழகத்தில் வழங்குகின்றன. புறநானூற்றில் 'அற்றைத் திங்கள்' (112) என்று தொடங்கும் பாடல் இவர்கள் பாடியதாகும். இப்பாட்டில் இவர்கள் பெயர் கூறப் பெறவில்லை. பிற்காலக் கதையிலே இவர்கள் பெயர் அங்கவை, சங்கவை என வழங்குகின்றன. பாரி இறந்த பின்னர் அவர் நண்பரான கபிலர் இவர்களை விச்சிக்கோ, இருங்கோவேள் என்ற குறுநில மன்னர்களிடம் அழைத்துச் சென்று மணக்க வேண்டியதாகவும், அவர்கள் மூவேந்தருக்கும் பகைவனான பாரியின் மகளிரை மணக்க அஞ்சினரெனவும், பின்னர் வேறு வழியின்றித் தம் உறவினரான பார்ப்பாரிடம் இவர்களை அடைக்கலப் படுத்தி வடக்கிருந்து உயிர் துறந்தார் என்றும் புறநானூற்றுச் செய்யுட்கள் (200, 201) கூறுகின்றன.

பாரி மகளிர் மழையில் நனைந்து வருந்திய ஔவையாருக்கு தம் சீலைச் சிற்றுடையினையும், கீரை உணவினையுங் கொடுக்க, ஔவையார் அவர்கள் அன்பினைப் பாராட்டி, மூவேந்தர் முன்னிலையில் அவர்களை மலையமான் திருமுடிக்காரியின் மக்களான தெய்விகன், கண்ணன் என்பவர்களுக்கு மண முடித்து வைத்ததாக மற்றொரு கதை வழங்குகிறது.

**நூல்:** புறம் 112.

பால் ( )

**நூல்:** கற்பனையின் மேல் கற்பனை, கூடாரமுந் தேவாலயமும், தியான சோலை, பரதேசியின் மோட்ச பிரயாணம், புதிய ஏற்பாட்டுப் புருஷர், பொதுவான ஜெப புஸ்தகத்தின் திறவுகோல், வேதாந்த சித்தாந்த பிரமாணங்கள், வேத புருஷர், வேதஸ்திரீகள்.

**கற்பனையின் மேல் கற்பனை:** இது ஒரு மொழி பெயர்ப்பு நூல். ஏசுகிறிஸ்துவின் வரலாற்றைச் சிறுபிள்ளைகளுக்குப் பாடமாக விளங்கும்படி பங்குபங்காக எளிய நடையிற் சொல்வது. 73 அதிகாரங்களில் இவ்வரலாறு முடிகிறது. ஒவ்வோரதிகாரத்திற்கும் இறுதியில் வினாக்கள் அமைந்துள்ளன.

**கூடாரமும் தேவாலயமும்:** இது ஒரு உரைநடை நூல், மோசே இயற்றிய தேவாலயக் கூடாரத்தையும் சாலமன் கட்டிய முதலாம் ஆலயத்தைப் பற்றியும் இந்நூலில் கூறப்பட்டுள்ளது.

**தியான சோலை:** இந்நூலில் தியானம் செபம் முதலியன கூறப்பட்டுள்ளன. இராப் போசனக்காரருக்காக இயற்றப் பெற்றது.

**பரதேசியின் மோட்சப் பிரயாணம்:** இது உரை நடையில் 500 பக்கங்களில் அமைந்தது. ஒருவன் பூலோகத்திலிருந்து பரலோகத்திற்கு யாத்திரை செல்வது குறித்துக் கூறப்பட்டது. ஆங்கில மொழியிலிருந்து தமிழாக்கம் செய்யப் பெற்றது.

**புதிய ஏற்பாட்டுப் புருஷர்:** இது உரை நடையில் 328 பக்கங்களில் அமைந்தது. புதிய ஏற்பாட்டிலுள்ள 18 பேர்களுடைய வரலாறுகள் ஞானபோதனைகளுடன் அடங்கியிருக்கின்றன.

**பொதுவான ஜெபபுஸ்தகத்தின் திறவுகோல்:** ஆங்கிலேயர் ஜெப முறையின் பல ஆராதனை முறைகளை நுட்பமாக அறியும்படி பல பிரபந்தங்களை ஆராய்ந்து எழுதப்பெற்றுள்ளது.

**வேதாந்த சித்தாந்த பிரமாணங்கள்:** ஆங்கிலேய திருச்சபையின் 39 பிரமாணங்களில் 19 முதல் 25 வரையுள்ள ஏழு பிரமாணங்களும் அதையடுத்த வேத ஒத்து வாக்கியங்களும் பல குறிப்புக்களும் அடங்கியுள்ளன.

**வேதபுருஷர்:** இந்நூலில் கிறித்தவ வேதத்துள் வரும் இராசஞானியார் முதலிய 14 பேர்களுடைய வரலாறுகள் ஞானபோதனைகளுடன் அடங்கியுள்ளன.

**வேதஸ்திரீகள்:** இந்நூலில் விவிலிய வேதாகமத்திலுள்ள பெண்களுள் மிகச் சிறப்பு வாய்ந்த 20 பேர்களுடைய வரலாறு ஞான போதனைகளுடன் அடங்கியுள்ளன.

## பால் வண்ண முதலியார் (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலியைச் சேர்ந்த பேட்டை.

**தந்தை:** சண்முக சுந்தர முதலியார்; தொண்டை மண்டல கொண்டை கட்டி வேளாளர்.

**வாழ்ந்த காலம்:** 1866-1908.

இவர் ஸ்ரீவைகுண்டத்தில் தம்முடைய மாதுலர் வீட்டில் இருந்து ஆங்கிலம் கற்றார். வைகுண்டபதிக் கவிராயரிடத்தில் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களைக் கற்றுத் தமிழ்ப் புலமை பெற்றார். சைவ சித்தாந்த நூல்களையும் கற்றார். திருநெல்வேலியில் சரசுவதி விலாசம் என்ற பெயருடன் நூல் நிலையம் ஒன்றை ஏற்படுத்தினார். சமய நூல்கள் பலவற்றை அச்சிட்டு வெளிப்படுத்தினார். மதுரைத் தமிழ்ச் சங்க உறுப்பினர்களில் ஒருவராக இருந்தார். தருமபுர

ஆதீனத்தின் தென்னாட்டுப் பகுதியின் காரியம் பார்ப்பவராக இருந்தார்.

**நூல்:** தருக்க சூத்திரம், பிரசங்க தீபிகை, பண்டார மும்மணிக் கோவை, மெய்ஞ்ஞான சாரம், பதிபசுபாசத் தொகையுரை, சித்தாந்த ஞானரத்னவளி.

## பால்வனம் வாழவந்த பிள்ளை ( )

**பார்க்க:** வாழவந்த பிள்ளை.

## பாலகவி கிருட்டினன் ( )

**நூல்:** இசைப்பாடற் கொத்து.

## பால காப்பியர் ( )

**நூல்:** பால காப்பியம்.

இது யானை மருத்துவம் பற்றிய நூல்.

## பாலகிருட்டின ஐயர் (19-நூ)

**ஊர்:** அம்பாசமுத்திரம்.

இவர் வழக்கறிஞராகத் தொழிலாற்றியவர். தமிழ்ப் புலமை பெற்றுப்பல நூல்களை இயற்றியுள்ளார்.

**நூல்:** பாப விநாசப் பதிகம், சிவசைலப் பதிகம், திருக்குற்றாலப் பதிகம், தேவ தானப்பதிகம், இராமேசுரப் பதிகம், திருநெல்வேலிப் பதிகம், திருப்புடைமருதூர்ப் பதிகம், பூவைப் பதிகம், கல்லிடைக்குறிச்சிப் பதிகம், அம்மைப் பதிகம்.

## பாலக்கிருட்டினக் கவிராயர் (19-நூ)

**ஊர்:** மதுரை மாவட்டம் முறையூர், அந்தணர்.

இவர் தக்கவர் பால் தமிழ் கற்றுப் புலமை பெற்றார்; வடமொழியிலும் வல்லவர். கோயிலில் மறையோதும் தொழிலை மேற்கொண்டிருந்தார். அதன் பொருட்டு இவருக்கு நிலக் கொடை வழங்கப்பட்டிருந்தது. காலக்

கணிதத்திலும் தேர்ச்சியுடையவராகத் திகழ்ந்தார். இவர் பழ. இராமன் செட்டியார், முறையூர் சண்முகஞ் செட்டியார் முதலியோருடைய அறச்செயல்கள் குறித்துத் தனிப்பாடல்கள் பல இயற்றியுள்ளார்.

**நூல்:** காதல் பிரபந்தம், விசயக் கும்மி, சித்திரகவி.

இந்நூல்கள் முறையூர் சண்முகஞ் செட்டியார், அவருடைய தந்தையார் ஆகியோர் மீது பாடப் பெற்றவையாகும்.

## பாலகிருட்டினசாமி நாயுடு ( )

**நூல்:** கந்தசாமிப்பிள்ளை, இ. என்பவர் இயற்றிய இசைப் பாடல்களைப் பாராட்டிச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## பாலகிருட்டின தாசர் (19-நூ)

**நூல்:** ஆத்மானந்தப் பதிகம் (1868).

இந்நூல் சிவபெருமானைக் குறித்த தோத்திரக் கவிகள் அடங்கியதாகும்.

## பாலகிருட்டின முதலியார் ( )

**நூல்:** வினாவிடைமாலை.

## பாலகிருட்டின முதலியார், வே. (20-நூ)

**நூல்:** பிட்சு கீதை (தமிழ்).

பிட்சு கீதை என்ற இந்நூல் ஏகநாத சாமி என்பவரால் மராட்டிய மொழியில் இயற்றப் பெற்றது. இந்நூலின் தமிழாக்கமே பாலகிருட்டின முதலியாரால் இயற்றப் பெற்றது.

## பால குமாரசாமிப் பிள்ளை (19-நூ)

**ஊர்:** தஞ்சாவூர்.

**தந்தை:** வேங்கடாசல பண்டிதர்.

இவரும் இவருடைய உடன் பிறப்பாளராகிய வைரக்கண் வேலாயுதப் புலவர் என்பவரும் சிறந்த புலவர்களாவர். இவர் அருட்கவி எனப் போற்றப் பெற்றார்.

**நூல்:** சாங்குசித்த சிவலிங்க நாயனுர் இயற்றிய பூரணனந் தோதயம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம். இச் சிறப்புப் பாயிரம் நிலைமண்டில ஆசிரியப்பாவால் அமைந்தது.

## பாலகுரு சாமிகள் (19-நூ)

**வாழ்விடம்:** சென்னை.

இவர் சைவ சித்தாந்தச் செல்வர் சோமசுந்தர நாயகரின் இளவல். தமிழ்ப் புலமை பெற்றுத் திகழ்ந்த இவர் சிவப் பதிகளுக்குத் திருத்தலப் பயணம் செய்வதனையே தமது வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தார். இவரைப் பற்றிய பிற விவரங்கள் தெரியவில்லை.

**நூல்:** சிவகிரி பதிற்றுப் பத்தந்தாதி.

இந்நூல் பழநியில் 1878 ஆம் ஆண்டில் அரங்கேற்றம் செய்யப்பட்டுள்ளது.

## பாலசித்தானந்தர் (20-நூ)

**ஊர்:** பொம்மையபாளையம்.

இவர் திருவருட்பயன் கைவந்த பெரியார்; சிறந்த அறிஞராக மதிக்கப்பெற்ருர்.

**நூல்:** பெரும்புலவர் மீனுட்சி சுந்தரம்பிள்ளையின் மாணவர் சவராயலு நாயகரைப் பாராட்டிப் பாடிய செய்யுள்.

## பாலசுந்தர நாயகர், மு. (20-நூ)

இவர் யாழ்ப்பாணம் நா. கதிரைவேற் பிள்ளை மாணவர்.

**நூல்:** துரைசாமி நாயகர் என்பவர் இயற்றிய 'சிலை யெழுபது-உரை'யினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பாலசுந்தர முதலியார் (20-நூ)

**ஊர்:** தண்டலம்.

**நூல்:** ஆறுமுகநாயகர், கா. இயற்றிய 'வருண தருப்பணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பாலசுப்பிரமணிய ஐயர் - 1 (19-நூ)

**வே.பெ.** அப்புக்குட்டி ஐயர்.

**தந்தை:** சிகிவாகன ஐயர்.

**ஊர்:** யாழ்ப்பாணம் நல்லூர்.

இவர் நினைவாற்றலில் சிறந்து விளங்கினார்.

**நூல்:** சூது புராணம்; நல்லூர்ச் சுப்பிரமணியர் பிள்ளைத் தமிழ்.

## பாலசுப்பிரமணிய ஐயர் - 2 (19-நூ)

**ஊர்:** மழவராயனேந்தல்.

**தந்தை:** சிதம்பர ஐயர்.

இவர் சதாவதானப் பயிற்சியுடையவர். இவரும் இவருடைய வழி முறையினரும் சிறந்த புலவர்கள்.

**நூல்:** கண்டனூர் மீனாட்சியம்மைபிள்ளைத் தமிழ், சுந்தரேசர் பதிகம்.

## பாலசுப்பிரமணியக் கவிராயர் (19-நூ)

**ஊர்:** பழநி

**தந்தை:** பெரியவன் கவிராயர்; துளுவ வேளாளர்.

இவர் தந்தையார் பழநியாண்டவரது அகம்படித் தொழிலில் அமர்ந்திருந்தவர். பாலசுப்பிரமணியக் கவிராயர் தம் தந்தையாரிடம் கற்பனகற்றுப் பின்னும் பலரிடம் வடமொழி தென்மொழிகளைக் கற்றார். தம் தந்தையார் கொண்ட சைவ சித்தாந்தப் பற்றில் விருப்பமில்லாதவராய் ஏகான்மவாதமே பெரிதெனக் கருதி அதனைப் பயின்று வந்தார். பின்னர் திருவாவடுதுறை சுப்பிரமணிய தேசிகரைச் சந்தித்துச் சைவ மதப் பற்றுக் கொண்டார். தஞ்சை அரசரால் மதிக்கப் பெற்றுக் கவிராசர் என்று பட்டம் பெற்றார். சேரநாடு சென்று மலையாளத்து அரசனது அவையில் நாலாயிர திவ்யப் பிரபந்த வியாக்கியானமெழுதிய பிள்ளை லோசாச்சாரியரோடு வாதஞ் செய்து வென்றதாகக் கூறுவர்.

**நூல்:** திராவிட வேத நிர்ணயம், பாஞ்சராத்திர மத சபேடிகை, அக்க தீபிகை, சைவ சித்தாந்த தரிசனம், வேதாந்த சித்தாந்த சமரசதீபம், மாயாவாத சகசிர தூஷணி குகோத்கர்ஷம், கூவிள நீப மகாத்மியம், பழநித் தல புராணம், கந்தர் நாடகம், பழநி அந்தாதி.

பழநித் தல புராணம், கிரிச் சருக்கம், மாயாத்திரி சருக்கம், பன்றிக் குட்டிக்குப் பால் கொடுத்த சருக்கம் என 23 சருக்கங்கள் கொண்ட 987 திருவிருத்தங்களையுடையது.

## பாலசுப்பிரமணிய சாமிகள் ( )

**நூல்:** கேநோப்நிஷத் தீபிகை, பகவற் கீதா தாத்பரிய தீபிகை.

## பாலசுப்பிரமணிய பிரமசாரி (20-நூ)

**ஊர்:** மதுரை.

**நூல்:** காங்கிரஸ் கீதை.

## பாலசுப்பிரமணிய பிள்ளை, அ. (20-நூ)

**ஊர்:** தஞ்சாவூர்.

இவர் குப்புச்சாமிராசு என்ற பிரமானந்த சாமிகளிடம் இலக்கண இலக்கிய நூல்களைக் கற்றுப் புலமை பெற்றார்.

**நூல்:** 'தருக்க கௌமுதி' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பாலசுப்பிரமணிய பிள்ளை, தே. (20-நூ)

**ஊர்:** திருவாங்கூர்.

இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் தேர்ச்சி பெற்றவர்.

**நூல்:** 'விவேகரச வீரன்கதை'.

இந்நூல் 1600 க்கு மேற்பட்ட கண்ணிகளால் இயற்றப் பெற்றது. கதைக்கு மூலம் ஆங்கிலம் என்று தெரிய வருகிறது.

## பாலசுப்பிரமணிய முதலியார், ச. (20-நூ)

**ஊர்:** காஞ்சிபுரம்.

**தந்தை:** சபாபதி முதலியார்.

இவர் மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்தவர்.

**நூல்:** கிருட்டிணம்பேட்டைச் சிங்காரவேலு முதலியார் பாடிய திருப்போரூர் இன்னிசைப் பாமாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பாலசுப்பிரமணிய முதலியார், நெ. (19-நூ)

**நூல்:** குமாரசாமி முதலியார் இயற்றிய திருப்பத்தூர்ப் புராணத்தைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பாலசுப்பிரமணிய முதலியார், எம். (20-நூ)

**ஊர்:** சென்னை, மயிலாப்பூர்.

**பிறப்பு:** 8—2—1896.

இவர் மயிலைகிழார் என்ற புனைபெயருடையவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் பயின்று பி.ஏ., பி.எல். பட்டம் பெற்றவர்; வழக்கறிஞராகப் பணியாற்றியுள்ளார். சென்னை சைவ சித்தாந்த சமரச அமைச்சராகப் பொறுப்பேற்று இவர் தமிழுக்குச் செய்த தொண்டுகள் பல. இவ்வமைப்பின் மூலம் திருமுறை நூல்களும் மெய்கண்ட நூல்களும் திருப்புகழ் நாலாயிர திவ்யப் பிரபந்தம், சங்க இலக்கியம் முதலியவைகள் நல்ல அச்சில் அடக்க விலைக்குப் பதிப்பிக்கப் பெற்றன. ஆங்கிலத்தில் "The Grace of Lord SIVA" என்ற நூலினை எழுதியுள்ளார்.

**நூல்:** அப்பர் நாடகம்.

## பாலசுப்பிரமணியன் (       )

**நூல்:** பழநியமகவந்தாதி.

இந்நூல் பழநி முருகப்பெருமான் மீது இயற்றப்பெற்றது.

## பாலதாத்தாரியார் (       )

**நூல்:** சிறீ பாடியார்த்த சங்கிரகம்.

## பாலபாரதி (  )

**நூல்:** இராமசெயத் திருப்புகழ்.

இந்நூலில் இராமாயணச் செய்திகள் திருப்புகழ் போன்ற பாடல்களால் பாடப்பட்டுள்ளன. இந்நூலினைத் துறையூர் கோவிந்த சாமிப்பிள்ளை அச்சிற் பதித்து வெளியிட்டுள்ளார்.

## பாலபாரதி முத்துச்சாமி ஐயர் (18-நூ)

இவர் பாலபாரதியாருடைய வழிமுறையில் பதினைந்தாவது தலைமுறையினர். இலக்கண இலக்கியங்களுடன் இசைப் பயிற்சியிலும் தேர்ச்சி பெற்றவர். கோயம்புத்தூர் மாவட்டம் ஈரோடு கூட்டம் கிழான்பாடி என்ற ஊரில் உள்ள பாம்பண கவுண்டர் மீது 'பாம்பண கவுண்டன் குறவஞ்சி' என்ற நூலினைப் பாடியுள்ளார். இக்குறவஞ்சி யில் பாம்பண கவுண்டரின் தாய் முத்தம்மாளின் கல்வி நலத்தைப் பாராட்டியுள்ளார்.

**நூல்:** 'பாம்பண கவுண்டன் குறவஞ்சி'

## பாலபாரதியார் (  )

இவர் இளமைப் பருவத்திலேயே செய்யுளியற்றும் திறம் படைத்து விளங்கினார். இளம் பருவத்திலேயே செய்யு ளியற்றும் ஆற்றல் பெற்று விளங்கியமையின் 'பாலபாரதி' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றார். இவர் காலத்தில் சிறந்து விளங்கிய புலவர் தில்லைவிடங்கன் மாரிமுத்துப் பிள்ளை.

**நூல்:** தனிப்பாடல்கள்; மாரிமுத்துப் பிள்ளையின் பெருமையைக் குறித்தும் அவர் காலமான போது வருந்தியும் பாடிய தனிப்பாடல்கள்.

## பாலவைரக்கண் வேலாயுதப் புலவர் (19-நூ)

**நூல்:** விருத்தாசலேசுரர் பஞ்சரத்தினமாலை (1880), விருத்தாம்பிகை பஞ்சரத்தினமாலை (1880).

இவற்றுள் முதல் நூல் விருத்தாசலப் பெருமானைத் துதிக்கும் ஐந்து பாடல்களையுடைய சிறு நூல்.

இரண்டாவது நூல் விருத்தாசலத்தில் கோயில் கொண்டருளும் அம்பிகையைத் துதிக்கும் சிறு நூல்.

## பாலானந்த சாமிகள் (19-நூ)

**நூல்:** ஞானக்கும்மி.

இந்நூல் கும்மிப்பாடல் அமைப்பில் தத்துவக் கருத்துக்களைப் பாடுவது; உடல் உயிர் உலகம் ஆகியவற்றைப்பற்றி உரைப்பது; ஞானப்பெண்ணே! எனப்பாடல் தோறும் விளித்துச் செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

## பாலுச்சாமி உபாத்தியாயர் (20-நூ)

**ஊர்:** கொங்கு நாட்டில் வேப்பிலைப்பட்டி; இலிங்காயத்து வகுப்பினர்.

இவர் இலக்கண இலக்கியப் பயிற்சி மிக்கவர்; இளமைப் பருவம் முதற்கொண்டே திண்ணைப் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றியவர்.

**நூல்:** 'வல்லாளராச நாடகம்', 'சாவித்திரி நாடகம்', 'இலிங்கமாம்பதி விலாசம்'.

## பாலே (19-நூ)

**நூல்:** தமிழ் செர்மன்ஸ் (1883).

இந்நூல் உரைநடையில் 432 பக்கங்களில் அமைந்தது. எல்லா ஞாயிற்றுக் கிழமைகளிலும் ஆண்டில் முக்கிய விழா நாட்களிலும் படித்தற்குத் தக்கபடி தலைப்புக்களுடன் சமயச் சொற்பொழிவுகள் அமைக்கப்பட்டுள்ளன.

## பாலைக் கௌதமனார் (சங்ககாலம்)

**வே.பெ.** பாலைக் கோதமனார், கௌதமனார், கோதமனார்.

இவர் பாலைத் திணையைச் சிறப்பித்துப் பாடுஞ் சிறப்புக் குறித்துப் பாலைக் கௌதமனார் என்று அழைக்கப் பெற்றார்.

இவர் இமயவரம்பன் தம்பி பல்யானைச்செல்கெழு குட்டுவனைப் பதிற்றுப் பத்தில் மூன்றும் பத்தில் பாடிச் சிறப்பித்துள்ளார். புலவரைச் சிறப்பிக்கக் கருதிய வேந்தனிடம் இவர் 'யானும் என் சுற்றமும் துறக்கம் புகும்படி பொருந்திய அறங்களை முடித்துத் துறக்கத்தைத் தருக' என்றார். சேரன் அவர் விரும்பிய வண்ணமே வேள்வி பல செய்து 'நீ விழையும் துறக்கத்தின் கண் நீடு வாழ்க' என உதவினான். இச் செய்தியைப் பழமொழி பாடிய மூன்றுறை யரையனார் 'தொடுத்த பெரும்புலவன் சொற்குறை தீர, அடுத்துத் தா என்றாற்கு வாழியரோ' (316) என்று குறிப்பாகச் சுட்டியுள்ளார். இந்நூலின் பழைய உரைகாரர் இதனை விளக்கியுள்ளார். இளங்கோவடிகள் இதனை 'நான் மறையாளன் செய்யுட் கொண்டு மேனிலையுலகம் விடுத்தோனாயினும்' (28: 137-138) எனச் சுட்டுகின்றார். தொல்காப்பியம் புறத்திணையியல் 25ஆம் நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரையிலும் இச் செய்தி சுட்டப்பட்டுள்ளது.

**நூல்:** பதிற்றுப்பத்து மூன்றாம் பத்து, புறம்: 366.

**குறுந்தொகை:** 16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398.

## பாலை பாடிய பெருங்கடுங்கோ (சங்ககாலம்)

இவர் சங்ககாலத்தில் வாழ்ந்த அரசப் புலவர்களுள் ஒருவர். பேய்மகள் இளவெயினியார் புறநானூற்றில் (11) பாடிய பாட்டில் இவரைச் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்று குறிப்பிடுவதால் இவர் சேர மன்னர் என்று அறியலாம். கடுங்கோன் என்ற பெயர் 'காய்சின வழுதி முதல் கடுங்கோனீறாக' எனப் பாண்டியர்க்கு வந்திருப்பினும் சேரமன்னர்களுக்கே பெரும்பாலும் வருகின்றது.

இவர் பாடியனவாக இப்பொழுது கிடைப்பன அறுபத்தேழு பாடல்கள். அவற்றுள் ஒன்று மட்டுமே புறத்திணை தழுவியது. ஏனைய அறுபத்தாறும் அகப்பொருள் தழுவி

யனவே. அகப்பொருள் பாடல்கள் அறுபத்தாறில் குறிஞ்சி பற்றியது ஒன்று; மருதம் பற்றியது ஒன்று. எஞ்சிய அறுபத்து நான்கும் பாலைப்பொருள் பற்றியே வந்துள்ளன. இவ்வாறு இவர் இப்பொருளை பிரித்துத் திறம்படப் பாடியமையால் 'பாலைபாடிய' என்ற அடையினைப் பெற்றார். இவரது பாலைத்திணைப் பாடல்களில் பழந்தமிழ் வரலாறு சிலவற்றையும் சுட்டியுள்ளார். அரசியல் நுட்பங்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

**நூல்:** அகம்: 5, 99, 111, 155, 185, 223, 261, 267, 291, 313, 337, 379. கலித்தொகை: பாலைக்கலி, நற்றிணை: 9, 48, 118, 202, 224, 256, 318, 337, 384, 391.

## பாலையாநந்த சாமிகள் (19-நூ)

**நூல்:** 'சச்சிதானந்தமாலை, ஞானக்கும்மி.

**சச்சிதானந்தமாலை:** இந்நூல் சச்சிதானந்த குருவைத் துதிக்கும் நூல். தமது குருவைப் புகழும் வகையால் அத்துவித உண்மையையும் புலப்படுத்துகின்ற 34 செய்யுட்கள் உள்ளன.

## பாவநேச தேசிகர் ( )

**ஊர்:** செங்கோட்டை.

**நூல்:** திருக்காளத்தி நாதர் கட்டளைக் கலிப்பா, திருக்காளத்தி நாதர் பதிகம்.

நூலாசிரியர் சிவப்பதிப் பயணமாகத் திருக்காளத்தியை அடைந்த போது இந்நூல்கள் இயற்றப் பெற்றன.

## பாவரீசையர் (19-நூ)

**நூல்:** சுவிசேச வாக்கியப் பிரசங்கம் (1867).

இந்நூல் உரைநடையில் 400 பக்கங்களில் அமைந்தது. கிறித்தவ சமயத்தைப் பற்றி ஆசிரியர் எழுதிப் பேசிய சொற்பொழிவுகள் அடங்கியுள்ளன.

## பாவாடைச் செட்டியார், நா. வ. (19-நூ)

**சி.பெ.** சித்திரக்கவி.

**ஊர்:** தஞ்சாவூர் மாவட்டம் பிறையாறு.

இவர் சித்திரப் பாடல்களை நன்கு பாடியதால் 'சித்திரக் கவி' எனச் சிறப்புப் பெயர் பெற்றார்.

**நூல்:** 'யாப்பிலக்கண வினாவிடை' என்னும் நூலுக்கு வழங்கிய சார்த்துக் கவி.

## பாவைக் கொட்டிலார் (சங்ககாலம்)

இவர் இப்பெயர் பெற்றதற்குரிய காரணம் விளங்கவில்லை. அகநானூற்றில் இவர் பாடிய பாட்டில் சோழருக்குரிய வல்லத்துக் காட்டில் ஆரியர் படை வீழ்ந்ததைக் குறிப்பிட்டுள்ளார்.

**நூல்:** அகம்: 336.

## பானுகவி சாமிகள் (20-நூ)

**ஊர்:** கேரள மாநிலம் திருமலை.

**தந்தை:** சிவஞானம்; **தாய்:** பார்வதி அம்மையார்; மாலை கட்டிகள் என்ற சைவ மரபினர்.

**மறைவு:** 1926.

இவரது தந்தையார் சிவஞானம் காசிக்குச் சென்றார்; காலங்கடந்து ஊர் திரும்பியதால் ஊர்க் கட்டுப்பாட்டின் படி ஊராரால் ஏற்றுக்கொள்ளப் பெறவில்லை. ஆதலால் தமிழ் நாட்டில் வட ஆர்க்காடு மாவட்டம் திருவோத்தூருக்கு வந்து அங்கு அன்பர்கள் ஆதரவில் தங்கியிருந்தார். பானுகவியார் தக்க வயதடைந்ததும் தம் தந்தையாரைத் தேடிப் புறப்பட்டுத் திருவண்ணாமலை சென்று அங்கு ஈசான மடத்தில் தங்கினார். அங்கு மகாதேவ அடிகள் என்னும் பெரியாரிடம் இரண்டாண்டுகள் வேதாந்த நூல்களைக் கற்றார். திருவண்ணாமலைக் கார்த்திகைத் திருவிழாவிற்கு வந்தவர்கள் வழியாகத் தந்தை இருக்கும் இடத்தை அறிந்து அங்கு சென்று அவரைக் கண்டார். பின்னர்த் தந்தையாரிடமே சில இலக்கண இலக்கிய நூல்களைக் கற்றார். சிதம்பரத்திற்கு வந்து மேலும் சில நூல்களைக் கற்றார்.

சிவன் பிள்ளை என்ற அறிஞர்பால் பிங்கல நிகண்டினைக் கற்றுத் தேர்ந்தார். திருவோத்தூரை அடுத்த எச்சூர் என்ற ஊரில் வடமொழி அறிஞர் ஒருவரிடம் வடமொழி நூல்கள் பலவற்றைக் கற்றார். கேசவப் பிள்ளை என்பவரிடம் சிவப்பிரகாசத்தைக் கற்றார். தம் தந்தையார் இறந்தவுடன் அவர் உடலைச் சமாதி வைத்துப் போற்றி வழிபட்டார். மாணவர்களுக்குத் தமிழ் நூல்களைக் கற்பிப்பதனையும், புதிய நூல்கள் எழுதுவதனையும் குறிக்கோளாகக் கொண் டார். சென்னையில் 'பிரபஞ்சமித்திரன்' என்ற இதழில் பல ஆண்டுகள் அசிரியராகப் பணியாற்றினார். திரு. வி. கலியாணசுந்தரனார், நா. கதிரைவேற்பிள்ளை முதலியோ ருடன் நட்புக் கொண்டார். அருட்பாவை மருட்பாவென்று கதிரை வேற்பிள்ளை தொடங்கிய போரில் பங்கு கொண்டார். இறுதிக் காலத்தில் இவர் மீண்டும் திருவோத்தூரை அடைந்தார். அங்கு இவர் பார்வையில் பல தமிழ் நூல்கள் பதிப்பிக்கப் பெற்றன. இறுதியில் 1926ஆம் ஆண்டில் இவருடைய உடல் இவரது தந்தையார் சமாதிக்கருகே அடக்கம் செய்யப்பெற்றது.

**நூல்:** சக்தித் திருப்புகழ்; இளமுலையம்மை பிள்ளைத்தமிழ், திருவோத்தூர் இரட்டைமணிமாலை, திருமாற்பேறு புராணம், திருவோத்தூர் நான்மணிமாலை, திருவோத்தூர் மும்மணிக்கோவை, இராமாயண நங்கைப்பாட்டு, ஞான வச்சிரகுடாரம், விநாயக பராக்கிரமம், சிவ பராக்கிரமம், அனுமத் பராக்கிரமம், நியாய வச்சிர குடாரம், விடோபா சாமி சரிதம், காமசாத்திரம், கர்ப்ப சம்ரட்சனை, கந்த புராணம், கலா பூடண உரை, திருவிளையாடல் அரும்பதக் குறிப்புரை, மகாராசா துறவு உரை.

## பாஸ்கரத் தொண்டைமான் (20-நூ)

**இ.பெ.** பாஸ்கரன்.

**பிறப்பிடம்:** திருநெல்வேலி மாவட்டத்தில் வீரவநல்லூர்.

**தாய்:** முத்தம்மாள்; **தந்தை:** தொண்டைமான் முத்தையா.

**வாழ்ந்தகாலம்:** 22-7-1904 — 4-4-1965.

இவருடைய தந்தையார் மதுரையிலுள்ள தொழில் நுட்பப் பள்ளியொன்றில் ஆசிரியராகப் பணியாற்றியவர். இவர் இராமநாதபுரம் அரசர் பாஸ்கரச் சேதுபதியின் கம்பராமாயணச் சொற்பொழிவில் மிகுந்த ஈடுபாடு கொண்டமையால் தம்மகனுக்குப் பாஸ்கரன் என்று பெயரிட்டு வழங்கினார். பாஸ்கரன், குடும்பப் பெயராகிய தொண்டைமான் என்பதனோடு இணைத்து பாஸ்கரத் தொண்டைமான் என்று அழைக்கப்பெற்றார்.

பாஸ்கரத் தொண்டைமான் சிறந்த கலைஞர்-தமிழறிஞர்-பேச்சாளர் - எழுத்தாளர் என்பதனோடு சிறந்த மாவட்ட ஆட்சித் தலைவராகவும் பணியாற்றியவர்.

பாஸ்கரத் தொண்டைமான் தமது இருபத்தியிரண்டாம் வயதில் பி.ஏ., பட்டம் பெற்று பாட்டனாரின் விருப்பத்திற்கு ஏற்ப, மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகத்தில் எழுத்தராகப் பணியாற்றத் தொடங்கினார். இவர் தமது பணியில் படிப்படியாக உயர்வு பெற்று, இறுதியில் மாவட்ட ஆட்சித்தலைவராகப் பொறுப்பேற்று 1959ஆம் ஆண்டில் பணியிலிருந்து ஓய்வு பெற்றார். வேலூரிலும் திருவண்ணா மலையிலும் மாவட்ட ஆட்சித் துணைத்தலைவராகப் பணி யாற்றியுள்ளார். இவர் பி.ஏ., வகுப்பில் பயின்ற காலையில் முத்தம்மாள் என்பவரை வாழ்க்கைத் துணைவியாராக ஏற்றார். இவர்களுக்கு மூன்று பெண்மக்களும் ஓர் ஆண்மகனும் மக்கட்செல்வங்களாக வாய்க்கப் பெற்றனர்.

இவர் திருநெல்வேலி இந்துக்கல்லூரியில் பயின்ற காலையிலேயே ரசிகமணி டி.கே. சிதம்பரநாதரின் அன்பர் கூட்டத்தில் சேர்ந்து அவருடைய இராமாயணச் சொற் பொழிவைக் கேட்பதில் பேரார்வம் காட்டினார். இலக்கியச் சுவையை இவர் பெரும்பாலும் அவரிடத்திலேயே பெற்ற படியால் அவரைத் தம் ஆசிரியராகவும் கொண்டார். கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, கம்பன் அடிப்பொடி காரைக்குடி சா. கணேசன், தூத்துக்குடி வழக்குரைஞர், ஏ.சி. பால் நாடார், வெள்ளக்கால் சுப்பிரமணியமுதலியார் ஆகியோர் இவருடைய நெருங்கிய நண்பர்களாவர்.

இவர், பணிநேரத்தில் முறையாக அலுவல்களைப் பார்த்து முடித்து, மாலையில் விழாக்கள் கூட்டங்களில் கலந்து கொள்வதைப் பொழுது போக்காகக் கொண்டிருந்தார். தஞ்சாவூரில் பணியாற்றியகாலை, நாட்டின் பலபகுதி களிலும் கவனிப்பாரின்றிச் சிதறிக்கிடந்த வேலைப்பாடுடைய சிலைகளையெல்லாம் தேடித் தொகுத்துக் கலைக்கூடம் ஒன்றை அமைத்தது குறிப்பிடத்தக்கது.

இவர் அலுவல் காரணமாக வெளியூர்களுக்குச் செல்லும் பொழுது, அங்குள்ள கோயில்கள், பழைய கட்டிடங்கள், சிலைகள் முதலியவற்றை நுணுக்கமாகப் பார்ப்பார்; அவற்றை நிழற்படம் எடுப்பார். அவை பற்றிய செய்தி களையும் கதைகளையும் அங்குள்ள பெரியவர்கள் வாயிலாகக் கேட்டறிவார். பின்னர் இவற்றைக் கட்டுரைகளாக எழுதி வெளியிடுவார். இக்கட்டுரைகள் 'வேங்கடம் முதல் குமரி வரை' என்ற பெயரில் பல நூல்களாக வெளிவந்துள்ளன. இவர் இக்கட்டுரைகளைத் திறம்பட எழுதத் தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருவாய்மொழி, சங்க நூல்கள், புராணநூல்கள், அருணகிரியார், பட்டினத்தார் பாடல்கள் மற்றும் கம்பராமாயணம் ஆகியவற்றில் ஆழ்ந்த பயிற்சி பெற்றார். இவருடைய மணிவிழா 1964-ஆம் ஆண்டில் சிறப்பாக நடைபெற்றது.

**நூல்கள்:** வேங்கடம் முதல் குமரி வரை, டி.கே.சி., தமிழறிஞர் முதலியார், பிள்ளைவாள்.

## பாஷிய உபாத்தியாயர், சீ. (20-நூ)

**ஊர்:** புதுச்சேரி.

இவர் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றியவர்; பொது நலப்பணிகளிலும் ஈடுபட்டவர்.

**நூல்:** பு. அ. பெரியசாமிப் பிள்ளை இயற்றிய 'புதுவைக் கலம்பகம்' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பிங்கல முனிவர் (8-நூ)

**தந்தை:** திவாகர முனிவர்.

**நூல்** பிங்கல நிகண்டு.

இந்நூல் பிங்கலந்தை எனவும் வழங்கப் பெறும். நிகண்டு நூல்களில் முற்பட்டவை திவாகரமும் பிங்கலமும். திவாகரத்தைப் போன்றே இந்நூல் சூத்திர யாப்பால் இயற்றப்பட்டது; திவாகரத்தைப் போன்றே வகைப்படுத்தப் பட்டும் உள்ளது. பிங்கலம் அக்காலத்தே மிகச் சிறந்து வழங்கியிருத்தல் வேண்டுமென்பதை நன்னூலாசிரியர், "பிங்கலம் முதலா நல்லோர் உரிச் சொலின் நயந்தனர் கொளலே" என்று கூறுவதால் அறியலாம். இந்நூல் வான், வானவர், ஐயர், அவனி, ஆடவர், அனுபோகம், பண்பிற் செயலின் பகுதி, மாப்பெயர், மரப் பெயர், ஒரு சொற்பல் பொருள் என்னும் பத்து வகைகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளது. இந்நூலில் உள்ள நூற்பாக்கள் 4121 ஆகும்.

## பிச்சு சாத்திரிகள் (19-நூ)

**ஊர்:** திருவிடைமருதூர்.

இவர் தென்மொழி, வடமொழிகளில் வல்லவர்.

**நூல்:** 'முத்தி காண்டம்' (தமிழ்).

இது சூதசங்கிதையின் மூன்ருவது பகுதியாகும்.

## பிச்சு சாத்திரிய சாமிகள் (20-நூ)

**நூல்:** சூதசங்கிதை முத்திகாண்டம் (மொழி பெயர்ப்பு-1900).

சமிவன சேஷத்திர மான்மிய வசனம் (மொழி பெயர்ப்பு).

**சூதசங்கிதை - முத்திகாண்டம்:** இந்நூல் வடமொழி யினின்று தமிழ்ச் செய்யுள் வடிவில் மொழிபெயர்க்கப் பெற்றது; பாயிரம் உள்பட 9 அத்தியாயங்களை உடையது; 370 செய்யுட்கள் உள்ளன.

**சமிவன சேஷத்திர மான்மிய வசனம்:** 'கோயிலூர்ப் புராணம் என்னும் சமிவன சேஷத்திர மான்மியம் என்பது இதன் முழுப்பெயர். வடமொழி ஸ்காந்த புராணத்தினின்று மொழிபெயர்க்கப் பெற்றது. 12 அத்தியாயங்களைக் கொண்டுள்ளது. 375 சுலோகத்தில் இப்புராணம் முடிவுறு கிறது.

**பிச்சுவையங்கார் (20-நூ)**

**நூல்:** நம்மாழ்வார் தாலாட்டு (1900).

**பிச்சுவையர் 1. (19-நூ)**

**ஊர்:** பாண்டிய நாட்டில் கல்போது.

இவர் சொற்களைச் சிதைத்துப் (பிச்சு) பாடுவதால் பிச்சுவையர் என 'அழைக்கப் பெற்றிருக்கலாம் என மாம்பழக் கவிச்சிங்க நாவலர் ஒரு செய்யுளில் தெரிவித்துள்ளார். இவரது பாடல்கள் சுவையுடையன; வேடிக்கையானவை; எளிதிற் பொருள் விளங்காதவை. இவர் விடுகதைச் செய்யுள்களும் பாடியுள்ளார். சுந்தரராசுத் தேவர் என்பவர் இவரை ஆதரித்த புரவலர் ஆவர். அவர் மீது இவர் 'ஒரு துறைக் கோவை' என்ற நூலைப் பாடியுள்ளார். இவர் பாடிய தனிச் செய்யுட்கள் தனிச் செய்யுட் சிந்தாமணியில் இடம் பெற்றுள்ளன.

**நூல்:** ஒரு துறைக் கோவை, திருவாடானை அந்தாதி.

**பிச்சுவையர் - 2 (19-நூ)**

**ஊர்:** பாண்டிய நாட்டில் வேம்பத்தூர்.
**வாழ்ந்த காலம்:** 1850-1910.

இவருடைய வழிமுறையினர் கல்விச் சிறப்பினால் 'பாரதி' என்ற சிறப்புப் பெயர் பெற்றனர். இவர் சிலேடைச் செய்யுட்களை விரைவாக இயற்றும் ஆற்றல் பெற்றிருந்தமையால் சிலேடைப்புலி பிச்சுவையர் என அழைக்கப் பெற்றார். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் மாணவர் வன் தொண்டரிடத்தில் கல்வி கற்றார். இவர் வள்ளல்கள் மீது செய்யுட்கள் இயற்றி நன்கொடை பெற்றுத் தமது வாழ்க்கையை நடத்தி வந்தார். முறையூர் சண்முகஞ் செட்டியார், முகவையரசர் பாற்கரசேதுபதி, சிவகங்கை நாட்டுத் தலைவர் முத்துவடுக நாத துரை, ஊற்றுமலைப் பெருநிலக்கிழார் இருதாயாலய மருதப்பத் தேவர் முதலியோர் இவரை ஆதரித்த வள்ளல்கள் ஆவர். இவர்களைப் புகழ்ந்து பிச்சுவையர் பல பாடல்களைப் பாடியுள்ளார். மதுரை சோமசுந்தரப் பெருமானுக்கும் திங்களுக்கும் சிலேடையாட ஒரு

வெண்பாவும், மீனாட்சி அம்மைக்கும் திருமண மண்டபத்திற்கும் சிலேடையாக ஒரு வெண்பாவும் பாடியுள்ளார். முத்துவடுகநாத துரையின் அவைக்களப் புலவராக அமர்ந்து அவர் மீது காதல் பிரபந்தம் என்ற நூலைப் பாடியுள்ளார்.

**நூல்:** முத்துவடுகநாததுரை மீது காதல் பிரபந்தம், திருப்பரங்குன்றம் முருகன் ஆநந்தக் களிப்பு, பனங்குடிப் பெரியநாயகி அம்மை பதிகம், சங்கராச்சாரியார் பதிகம், பொன்மாரிச் சிலேடை வெண்பா, மதுரை நிரோட்டகயமக வந்தாதி, குன்றக்குடி சண்முகநாதர் உலா.

## பிச்சை இபுராகிம் புலவர் (20-நூ)

**ஊர்:** அரசங்குடி.

**தந்தை:** காதிறுசாராவுத்தர்; **தாய்:** மதார்பீபி.

**வாழ்ந்தகாலம்:** 1863-1908.

இவர் இளமையிலேயே தம் தந்தையை இழந்தார். பின்னர் இவர் தம் தாயுடன் திருச்சிராப்பள்ளிக்கு வந்தார். அங்கு வணிகராக இருந்த ஆசியார் ராவுத்தர் என்பவரை இவருடைய தாய் மறுமணஞ் செய்து கொண்டார். ஆசியார் ராவுத்தர் இவருடைய வளர்ப்புத் தந்தையாவர். சிறுவயதில் முரட்டுத்தனமாக இருந்த பிச்சை இபுராகிம் தக்க வயதடைந்ததும் முத்து வீரியம் என்ற இலக்கண நூலைச் செய்த முத்துவீர ஆசாரி என்பவரை அடுத்துத் தமிழ் நூல்களைக் கற்றார். பின்னர் ஆண்டவன் மீது புகழ் நூல்கள் பாடியதோடு சிறந்த புலவராகவும் திகழ்ந்தார். எஸ். பி.சி. கல்லூரியில் தமிழாசிரியராக ஒன்பது ஆண்டுகள் பணியாற்றினார். இராமநாதபுரம் அரசர், எட்டையபுரம் அரசர் முதலியோரிடம் தமது புலமையைப் புலப்படுத்திப் பரிசுகள் பல பெற்றார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் உறுப்பினராகச் சேர்ந்து அதன் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டார். கல்லூரி ஆசிரியராக இருந்ததோடு தனிப்பட்ட முறையில் இலக்கணப் பாடத்தைப் பலருக்கு எளிதாகக் கற்பித்தார். இவர் கிறித்தவக் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றியபோது 1908 ஆம் ஆண்டில் காலமானார்.

**நூல்:** பகுதாதுபாமாலை, ஆதமலை திருப்புகழ், வெள்ளாங் குளத்தூர் அவுலியாமாலை, திருமதீனத்துக் கலம்பகம், திருமதீனத்துப் பதிற்றுப்பத்தந்தாதி, நாகூர் பிள்ளைத்தமிழ் மகபூப் சுபகாணி மாலை, நாயகத் திருப்புகழ், நத்தகறேலி யாண்டவர்கள் பிள்ளைத்தமிழ், சீதக்காதிப் பதிகம், மொகிதீன் ஆண்டவர் மாலை, திருமதீனத்து வெண்பா வந்தாதி, திருமதீனத்துமாலை, திருமதீனத்து யமகவந்தாதி.

## பிச்சைப் பிள்ளை ( )

மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயர் இவரைத் தமது திருக்குற்றாலக் குறவஞ்சியில் பாராட்டியிருப்பதால் இவருடைய காலம் அவருக்கு முற்பட்டதாகும்.

**நூல்:** திருக்குற்றாலத்திறைவன் அந்தாதி.

இவ்வந்தாதியில் வரலாற்றுக் குறிப்புக்கள் சிலவும் உள்ளன.

## பிச்சையா நாவலர் (19-நூ)

**ஊர்:** பாண்டிய நாட்டில் பொதிய மலையை அடுத்த மலையடிக் குறிச்சி.

**தந்தை:** அருணாசலம் பிள்ளை; சைவ வேளாளர்.

இவர் தக்காரிடம் கல்வி பயின்று இலக்கண இலக்கியங் களையும், கணக்கினையுங் கற்றார். முன்னோர்களைப் பின்பற்றிக் கணக்கப் பிள்ளை வேலை பார்த்தார். அதுகாலை நூல்களை ஆராய்ந்து தமது அறிவினை வளர்த்துக் கொண்டார். முருகப் பெருமானிடத்தில் பேரன்பு கொண்டு அக்கடவுளர் மீது பலபாடல்களைப் பாடியுள்ளார். அன்பர்கள் வேண்டு கோளுக்கு ஏற்பத் தாருகாபுரம் என்ற ஊரிற்குத் தல புராணம் பாடியுள்ளார். அதனை அச்சிட்டும் வெளிப்படுத்தி யுள்ளார். செய்யுள் இயற்றுவதோடு அன்பர்கள் பலருக்குத் தமிழ்க் கல்வி அளித்தார். இவருடைய மகன் சங்கர நாராயணபிள்ளை என்பவரும் சிறந்த தமிழ்ப்புலவர் ஆவர்.

**நூல்:** தாருகாபுரத் தலபுராணம், நாதகிரிப் பதிகம், நாதகிரிமாலை, நாதகிரியந்தாதி, நாதகிரி மான்மியம், நெஞ்சறி விளக்கம், வண்ணக்கவி.

பிச்சையாப்பிள்ளை (20–நூ)

**நூல்:** அருணாசல ஆச்சாரி, க. என்பவர் இயற்றிய முருகப் பெருமான் வெண்பாவந்தாதி, இரட்டைமணிமாலை என்னும் நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

பிசிராந்தையார் (சங்ககாலம்)

**ஊர்:** பாண்டியநாட்டில் பிசிர்.

ஆதன் தந்தையென்பது ஆந்தை என மருவியது. இவரோ அல்லது இவருடைய முன்னோர்களுள் ஒருவரோ ஆதன் என்பவனுக்குத் தந்தையாக இருந்திருக்கலாம். இவர் பாண்டியநாட்டவராயினும் உறையூரை ஆட்சிசெய்த கோப்பெருஞ் சோழனுக்குச் சிறந்த நண்பராவர். கோப்பெருஞ் சோழன் தன் மக்களோடு மனம் வேறுபட்டு வடக்கிருந்து உயிர் நீத்தபோது உடன் வடக்கிருந்து உயிர் நீத்தவர்களில் இவரும் ஒருவர். இவர்களுடைய நட்பைக் கண்ணகனார் என்ற புலவர் பாராட்டியுள்ளார் (புறம், 218). இவர் பாண்டியன் அறிவுடை நம்பிக்கு அறிவுரை கூறிய செய்தி புறம் (184) ஆம் பாட்டால் அறியப்படுகிறது.

**நூல்:** அகம்: 308; நற்றிணை: 91; புறம்: 67, 184, 191, 212.

பித்தாமத்தர் ( )

**வே.பெ.** பித்தாமக்கர்.

இவர், பரிபாடல் ஏழாம் பாடலுக்கு இசை வகுத்தவர்.

பியர்சன் (19–நூ)

**நூல்:** விசுவாசப் பிரமாணத்துக்குப் பொருளடக்கம் (1896).

இந்நூல் உரைநடையில் அமைந்தது; விசுவாசப் பிரமாணம் பற்றி 12 உபதேசங்கள் அடங்கியுள்ளன.

## பிரகாசா நந்த அடிகள் (20-நூ)

**ஊர்:** இராமநாதபுரம் மாவட்டம் அருப்புக் கோட்டை.

இவர் சுப்பிரமணிய தேசிகர் என்ற பெரியாரிடம் அருளுரை பெற்றுச் சிறந்து விளங்கியவர்.

**நூல்:** நடனகணபதி மாலை, நடனகணபதி பஞ்சகம்.

## பிரணதார்த்திஹரசிவன் ( )

**நூல்:** வியாச மஞ்சரி.

## பிரதந்திர சுவதந்திரர் ( )

**நூல்:** குருபரம்பரைப் பிரபாவம்.

## பிரதிவாதி பயங்கரமண்ணன் (15-நூ)

இவர் நயினாராசாரியரிடம் ஸ்ரீ பாஷ்யம் சேவித்தவர். காஞ்சியில் புகழோடு விளங்கினார். மணவாள மாமுனிகள் இவருக்கு முப்பத்தீராயிரப்படி அருளிச்செய்து பஞ்சசம்ஸ்காரமும் செய்தார். அட்ட திக்கஜங்களில் ஒருவர்.

**நூல்:** அமலனாதி பிரான், பிரதிவாதி பயங்கர மண்ணன் பிரபந்தம்.

**அமலனாதிபிரான்:** பத்துக் கட்டளைக் கலித்துறைகளில் மணவாள மாமுனிகள் துதியாகும்; பாதாதி கேசமாக வருணிப்பது.

## பிரமசாரி (சங்ககாலம்)

இவர் பெயரினால் இவர் மணம் புரிந்து கொள்ளாது பிரமசரியம் காத்திருந்தவர் என்று அறியலாம்.

**நூல்:** நற்றிணை: 34.

## பிரமதந்திர சுவதந்திரசீயர் ( )

**நூல்:** வாழித்திருநாமம்.

இந்நூல் 34 பாடல்களால் அமைந்தது. இந்நூலில் வைணவ சமயப் பெரியார்கள் பலர் வாழ்த்தப்பெறுகின்றனர்.

## பிரமயனப்புலவர் ( )

இவர் கொங்கு நாட்டில் இருந்தவர்.

**நூல்:** 'பொங்கலூர்க் குறவஞ்சி'.

பிரமனார் (சங்ககாலம்)

இவரைப் பற்றிய வரலாறொன்றும் தெரியவில்லை.

**நூல்:** புறம்: 357.

பிரமாதாராயன் ( )

**நூல்:** சௌந்தரிய லகரி.

பிரமாதிராயர் (18-நூ)

இவர் வீரசோழன் என்னும் ஊரில் வாழ்ந்த கவிராச பண்டிதருக்கு, சௌந்தரிய லகரி என்ற வடநூலைத் தமிழிற் பொருள் கூறிய ஆசிரியராவர். சத்தி அருள் பெற்றவர் என்று கருதப்பட்டார். மீனாட்சி அம்மை அடியிட்ட பூமாலை திருக்கழுத்தில் தானே ஏறப்பாடி, தன்னொடு வாதித்த புலவனை வென்று நல்லூர், கடம்பை என்ற ஊர்களைப் பரிசாகப் பெற்றவர்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

பிரமாநந்த அடிகள் ( )

**ஊர்:** மதுரை.

**தந்தை:** இராமசாத்திரிகள்.

இவர் அசுவத்தநாதர் என்ற பெரியாரிடம் அருளுரை பெற்று மெய்ஞ்ஞானியாக விளங்கியவர். தமிழ்மொழியிலும், வடமொழியிலும் தேர்வு பெற்றவர். இவருடைய சமாதி மதுரைமாநகரின் தெற்கு வாசலில் அமைந்துள்ளது. .

**நூல்:** 'சொரூப இலட்சண விருத்தி', விவேக சூடாமணி,' 'சர்வவேதாந்த சித்தாந்த சாரசஸ்கிரகம்', 'தட்சணாமூர்த்தி வீட்சாவிலாசம்,' அசுவத்தநாத சரித்திரம்' 'பிரமானந்த அனுசந்தாளயுத்தி ரத்தினகரம்'.

பிராணாதிகார சிவன் (19-நூ)

இவர் பி.ஏ., பட்டம் பெற்றவர்; தொண்டை மண்டலம் உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராகப் பணியாற்றியவர்.

**நூல்:** தமயந்தி நாடகம், வியாச மஞ்சரி.

## பிரான் சாத்தனுர் (சங்க காலம்)

பெருஞ்சாத்தனுர், பேரி சாத்தனுர் என்ற புலவர்களினின்றும் வேறுபடுத்தி அறிய இவர் பிரான் சாத்தனுர் என்று அழைக்கப் பெற்ருர்.

**நூல்:** நற்றிணை 68.

## பிரான்சிஸ் கிங்ஸ்பெரி

**பார்க்க:** அழக சுந்தரம்.

## பிரான்சீசுப் பிள்ளை (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணத்தில் வயாவிளான்.

இவர் வேளாள சமயத்தவர். பின்னர் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவியவர். இலக்கண இலக்கியங்களைத் தக்கார்பால் கற்றுப் புலமை பெற்ருர்.

**நூல்:** மூவிராசர் வாசகப்பா, தசவாக்கிய விளக்கப் பதிகம் இரட்சயப் பதிகம், திருவாசகம் கிறித்து நாதர் பிள்ளைத் தமிழ், பச்சாத் தாபப் பதிகம்.

## பிருகான் ( )

**நூல்:** காசிம்படை வெட்டு.

## பிருங்கி ஞானியார் ( )

**நூல்:** பிருங்கி ஞானத்திரட்டு.

## பிலிப்பு ( )

**நூல்:** மஸ்கொல்லை அர்ச் ஆனுளீஸ்பரி பேரில் பதிகம்.

## பிலிப்பு ஜே ( )

**நூல்:** இந்துமத பாப்புமத சம்பந்த தீபம் (1842).

## பிலிப்புமெல்லோ (18-நூ)

**ஊர்:** கொழும்பு.

**தந்தை:** சைமன் தெமெல்லோ; கிறித்தவர்.

இவர் தமிழ், எபிரேயம், கிரீக்கு, இலத்தீன், டச்சு, போர்ச்சுகீஸ் முதலிய மொழிகளை நன்கு கற்றவர். இவர்

பள்ளி ஆசிரியராகத் தொழில் புரிந்ததன்றி மதகுருவாகவும் பணிபுரிந்துள்ளார். இவர் சூடாமணி நிகண்டின் இரண்டாம் பகுதிக்கு 20 பாடல்களையும் 12 ஆம் பகுதிக்கு 100 பாடல் களையும் புதிதாகச் சேர்த்துள்ளார்.

**நூல்:** சத்தியத்தின் செயம், மருதப்பக் குறவஞ்சி, பைபிளின் பல பகுதிகளுக்குத் தமிழ் மொழி பெயர்ப்பு.

பிள்ளான் (        )

**தந்தை:** திருமலை நம்பி.

**நூல்:** திருவாய் மொழிக்கு ஆறுயிரப்படி உரை.

பிள்ளைப் பெருமாளையங்கார் (17-நூ)

**சி.பெ.** திவ்வியகவி, அழகியமணவாள தாசர், இரங்கநாத தாசர்.

**ஊர்:** சோழநாட்டில் மங்கை என்னும் ஊர்.

இவர் தமிழ், வடமொழி இரண்டும் கற்று வல்லராய் விளங்கினார். இவர் காலத்தில் விளங்கிய மன்னன் இவரு டைய தகுதிகளையறிந்து இவரை அரசியற் பணிகளில் அமர்த்திக் கொண்டான். இவர் அரசியல் காரியத்தில் ஈடு பட்டிருந்தபோது திருவரங்கத்தில் தேர்ச்சீலை தீப்பற்றிக் கொண்டதைத் தம் ஞான நோக்கால் அறிந்து தம் மேலாடையைத் தேய்த்தார். இவரது செயலின் உண்மையை அறிந்த அரசன் பிள்ளைப் பெருமாளையங்கார் விருப்பப்படி அவர் திருவரங்கத்திலிருந்து இறைபணியில் ஈடுபடும்படி செய்தார்.

இவர் திருவரங்கப் பெருமான் மேல் ஈடுபாடுடையவராய் வேறு மூர்த்திகளைப் பாடாமல் திருவரங்கப் பெருமான் மேலேயே திருவரங்கத்து மாலை, திருவரங்கத்தந்தாதி, சீரங்க நாயகருசல், திருவரங்கக் கலம்பகம் என்னும் நூல் களைப் பாடினார். "அரங்கனைப் பாடிய வாயால் குரங்கனைப் பாடேன்" என்னும் இவருடைய பிடிவாத குணத்தை மாற்றத் திருவேங்கட முடையான் இவருக்குக் கண்டமாலை என்னும் கொடிய நோயை உண்டாக்கினன். அதன்விளைவாக

எழுந்த நூல்களே திருவேங்கடத்தந்தாதியும் திருவரங்க மாலையும். பின்னர் இவர் அழகரந்தாதியும் நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியும் பாடினர். இந்த எட்டு நூலும் அஷ்டப் பிரபந்தம் எனப்படும்.

இவர் பரப்பிரம்ம விவேகம் என்றொரு நூலும் செய்தா ரென்பர். இந்நூல் கிடைக்கவில்லை. திரு நறையூர் நம்பி மேகவிடு தூது இவரால் இயற்றப் பட்டதென்பர்.

இராமாநுசரின் சீடர் கூரத்தாழ்வான். அவருடைய சீடர் பட்டர். பிள்ளைப் பெருமாளையங்கார் பட்டரைத் தம் ஆசிரியராகப் போற்றியிருத்தலின் அவர் வாழ்ந்த காலமான 13 ஆம் நூற்றாண்டென்பர் சிலர். கல்குளம் கோவிந்தசாமி முதலியார் 12 ஆம் நூற்றாண்டென்பர்.

கா. சுப்பிரமணியப்பிள்ளை, சுன்னாகம் குமாரசாமிப்பிள்ளை ஆகியோர் அஷ்டப் பிரபந்தம் 17 ஆம் நூற்றாண்டில் இவரால் செய்யப்பட்டதென்பர். வைணவர்களில் பெரும் பாலோர் அஷ்டப் பிரபந்தம் இவரால் இயற்றப்பட்ட தெனவே கருதுகின்றனர்.

17 ஆம் நூற்றாண்டுத் தமிழ்ப்புலவர் வரலாறு எழுதிய ச. சோமசுந்தரதேசிகர் திருவரங்கத்தந்தாதி. திருவேங்கடத் தந்தாதி, திருவேங்கடமாலை, நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி ஆகிய நான்கு நூல்களையும் செய்தவர் பட்டர்பிரான் மாணவரான மணவாள தாசரென்றும் அவர்காலம் 12 ஆம் நூற்றாண்டென்றும் கூறுகின்றார்.

சிரங்கநாயகருசல் என்னும் நூலினைப்பாடியவர் வெண்மணி என்னும் ஊரினரான பிள்ளைப்பெருமாள் என்றும் அவர் 13ஆம் நூற்றாண்டினரென்றும் குறிப்பிட்டுள்ளார்.

அழகரந்தாதி, திருவரங்கத்துமாலை இயற்றிய மணவாள தாசர் 17ஆம் நூற்றாண்டினரென்று கருதியுள்ளார்.

பிள்ளைப் பெருமாளையங்கார் சிலேடை திரிபு யமகம் பாடுவதில் வல்லவராக விளங்கினர். திவ்வியகவி என்ற பட்டப்பெயரே இதனை வலியுறுத்தும். இவரியற்றிய நூல்கள் பெரும்பாலும் தோத்திர உருவில் அமைந்தவை. எண்வகை

வனப்புக்களுள் விருந்து என்னும் வகையைச் சேர்ந்தவை. எண்வகைப் பாக்களும் அமைய இவர், தம் நூல்களை யாத்துள்ளார்.

**நூல்:** திருவரங்கத்து மாலை, திருவரங்கத்தந்தாதி, சீரங்க நாயகரூசல், திருவரங்கக் கலம்பகம், திருவேங்கடத் தந்தாதி, திருவேங்கட மாலை, அழகரந்தாதி நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி.

**திருவரங்கத்து மாலை:** இந்நூல் திருவரங்கத்துப் பெருமானைப் போற்றும் துதிப்பாமாலை; கலித்துறைச் செய்யுளில் அமைந்தது; அவதார நிகழ்ச்சிகள் பலவற்றையும் கூறிப் போற்றுவது. கோயில்மாலை எனவும் இது வழங்கும். 114 செய்யுட்களை உடையது.

**திருவரங்கத் தந்தாதி:** இந்நூலில் தனியன் ஒன்றும் காப்பு ஐந்தும் ஆகிய ஆறு செய்யுட்கள் முதற்கண் உள. இது கலித்துறை அந்தாதி, யமகம் திரிபு வகையான பாடல்களையுடையது. இதற்கு நம்மாழ்வார் தாசரால் இயற்றப்பட்ட பிரதிபதம் எனப்படும் பதவுரை அமைந்துள்ளது. தனியன், காப்புச் செய்யுட்கள் உளப்பட 106 செய்யுட்கள் உள்ளன.

**சீரங்கநாயகர் ஊசல்:** இது பெருமாளைப் புகழ்ந்து பாடல் தோறும் 'ஆடீர் ஊசல்' எனப் போற்றித் துதிப்பது.

**திருவரங்கக் கலம்பகம்:** திருவரங்கம், கோயில் என்னும் பெயருடைய தாதலின் இது கோயிற் கலம்பகம் எனவும் வழங்கும். இது திருவரங்கப் பெருமாள் புகழினைப் பல படியாக விரித்துக் கூறுவது. ஆசிரியரைப் புகழும் இரண்டு தனியன்கள் நூலின் முகப்பில் உள்ளன. நூலில் 101 செய்யுட்கள் உள்ளன.

**திருவேங்கடத்தந்தாதி:** இந்நூலின் தொடக்கத்தில் சிறப்புப் பாயிரமும் காப்புமாக இரண்டு செய்யுட்கள் உள்ளன. இந்நூல் அந்தாதித் தொடையாலமைந்த நூறு கட்டளைக் கலித்துறைகளையுடையது. இந்நூலிலுள்ள கலித்துறைகள் யாவும் பெரும்பாலும் திரிபு என்னும் சொல்லணியையும் சிறுபான்மை யமகம் என்னும் சொல்லணியையும் உடையன.

**திருவேங்கடமாலை:** திருவேங்கடமுடையானது திருவடிகளிலே சூட்டும் திருமாலை போலுதலால் திருவேங்கட மாலை எனப்பட்டது. இங்கு வேங்கடம் என்பது அப்பதியில் எழுந்தருளியிருக்கும் எம் பெருமானையும் குறிக்கும். இம்மாலை, தொல்காப்பியர் செய்யுளியலிற் கூறிய விருந்து என்பதன்பாற்படும். இந்நூல் காப்புச் செய்யுள் இரண்டும் அவையடக்கச் செய்யுள் ஒன்றும் நூலின் இறுதியிலுளள சிறப்புப் பாயிரச் செய்யுள் ஒன்றும் நீங்கலாக 100 செய்யுட்களுடையது. இந் நூல் வெண்பாவினுல் அமைந்தது. இந் நூற் செய்யுட்களெல்லாம் முன்னிரண்டடிகளில் திருவேங்கடத்தின் சிறப்பையும் பின்னிரண்டடிகளில் திருவேங்கடமுடையானது சிறப்பையுங் கூறி, ஊர் என்னும் துறை அமைய, திருவேங்கட என்பது திருமாலின் திருப்பதி என்னும் வாய்பாடு பொருந்த இயற்றப்பட்டுள்ளன. இந் நூலின் பிற்பாதியாகிய ஐம்பது செய்யுட்களின் முன்னிரண்டடிகள் சிலேடை என்னும் அலங்காரமுடையன. இந் நூற் செய்யுட்கள் எல்லாவற்றினும் பின்னிரண்டடிகள் பெரும்பாலும் திரிபு என்னும் சொல்லணியும் சிறுபான்மை யமகம் என்னும் சொல்லணியும் அமையக் கூறப்பட்டுள்ளன.

**அழகரந்தாதி:** இது திருமாலிருஞ்சோலை அழகரைத் துதிக்கும் பிரபந்தம். தனியன் ஒன்று முதலில் உள்ளது. இந்த அந்தாதி கலித்துறைச் செய்யுட்களாலாகியது.

**நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி:** திருவரங்கம் முதல் வைகுந்தம் வரையிலும் திருமால் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள நூற்றெட்டுத் திருப்பதிகளையும் புகழ்ந்து பாடுவது. இது வெண்பா அந்தாதி. ஆசிரியரைப் பற்றிய தனியன் ஒன்றும் முகப்பில் உள்ளது.

## பிள்ளையுறங்கா வில்லிதாசர் (        )

**நூல்:** பிள்ளையுறங்கா வில்லிதாசர் அந்திம திசை,

## பிள்ளை லோகஞ்சீயர் (        )

**நூல்:** இராமானுச திவ்ய சூரி சரிதை, சிறீ வைணவ சமாயாசார நிட்சர்சம், உபதேசத் திருநாமம், யதீந்திரப்

பிரணவப் பிரபாவம், அந்தாதிப் பிரபந்த உரை, இராமானுச நூற்றந்தாதி உரை, முமுட்சுப்படி உரை, நாலாயிரத் தனியன்கள் உரை, சப்த காதை உரை, திரு மந்திரார்த்தம் உரை, திருவாய்மொழி நூற்றந்தாதி உரை.

## பிள்ளை லோகாச்சாரியார் (14-நூ)

**ஊர்:** முடும்பை.

**வாழ்விடம்:** திருவரங்கம்.

**தந்தை:** வடக்குத் திருவீதிப்பிள்ளை. **தாய்:** சீரங்க நாச்சியார்.

**வாழ்ந்த காலம்:** 1264 — 1369.

இவர் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் மூத்த மகன். தந்தையார் இவருக்குத் தமது ஆசிரியர் நம்பிள்ளையின் பெயர்களில் ஒன்றான உலோகாசாரியன் என்பதனைப் பெயராக இட்டு வழங்கினர். வடமொழி தமிழ் இரண்டிலும் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தவர். எனவே "அஷ்டாதச ரகசியங்கள்" என்னும் 18 நூல்களை வடமொழியும் தென் மொழியுங் கலந்த மணிப்பிரவாள நடையில் அழகாக எழுதியுள்ளார். திருமாலுக்குரிய திருவோண நாளிற் பிறந்தமையாலும் வைணவ சமய ஞான விசேடத்தினலும் இவரைத் திருமாலின் அமிசமென்று கருதினர்.

இவர் பரந்த நோக்கினர். மக்களுக்கிடையே உள்ள உயர்வு தாழ்வுகள் சாதியைப் பொறுத்தவையல்ல; ஞான பத்திவைராக்கியத்தைப் பற்றியவையே என்று உரைத்து வந்தார். இவர் காலத்தில் திருவரங்கம் கோயிலுக்கு முகம் மதியர்கள் தீங்கு செய்ய முற்பட்டபோது மூலத்தானத் திற்குக் கல் காப்பிட்டு வைத்து உற்சவரோடு வெளிப்போந்து சோதிடக்குடி என்ற கிராமத்தில் வைத்துக் காப்பாற்றினர் என்பர்.

இவர் திருவரங்கத்தில் வாழ்ந்த போது மாணவர்கள் பலர் இருந்தனர். இவர்களுள் அழகிய மணவாளப்பெருமாள் நயினர் என்பவர் இவருடைய தம்பியாவர். விளாஞ்சோலைப்

பிள்ளை என்பவர் தாழ்ந்த குலத்தில் பிறந்து சிறப்புப்பெற்று விளங்கியவர். வேதாந்த தேசிகரும் இவரும் ஒருகாலத்தவர்.

ஈசனுக்குத் தொண்டாற்றுவதினும் அவன் அடியார்களுக்குத் தொண்டு புரிவதே நலம் என்பது இவருடைய கொள்கையாகும்.

**நூல்:** முமுக்ஷுப்படி, தத்துவத்ரயம், அர்த்த பஞ்சகம், ஸ்ரீவசன பூஷணம், அர்ச்சிராதி, பிரமேய சேகரம், பிரபந்ந பரித்ராணம், சாரசங்கிரகம், சம்சார சாம்ராஜ்யம், நவரத்தினமாலை, நவவித சம்பந்தம். யாத்ருச் சிகப்படி, பரந்த படி, ஸ்ரீயப்பதிப்படி, தத்துவசேகரம், தனித்வயம், தனிச்சரமம், தனிப்ரணவம், தத்துவவிவேகம், நாலுவார்த்தை.

**முமுக்ஷுப்படி:** இது மந்திரப்பகுதி, துவயப் பகுதி, சரமசுலோகப் பகுதி என்ற மூன்று பிரிவினது. மோட்சத்தில் இச்சையுடையவன் முமுட்சு. அவன் அறிய வேண்டிய சொரூபம், உபாயம், புருஷார்த்தம் என்ற மூன்று இரகசியங்களைக் கூறுவதால் இந்நூலுக்கு இப்பெயர் வந்தது.

**தத்வத்ரயம்:** சித்து அசித்து ஈசுரன் என்ற தத்துவங்களைக் கூறுவது.

**அர்த்த பஞ்சகம்:** உயிரின் இயல்பாகிய தன்னிலை, இறைவன் நிலை, உயிர் இறைவனை அடையாது தடை செய்து நிற்கும் வினையின் இயல்பு, புருடனால் வேண்டப்படும் பேற்றின் நிலை, பேற்றின் தடையைப் போக்கி இறைவனை அடைதற்குரிய உபாயத்தின் நிலை என்பனவற்றைக் கூறுவது. இவ் அர்த்த பஞ்சக ஞானம் நம்மாழ்வார் திருவாய்மொழியால் ஏற்படுகிறதென்று பட்டர் கூறுகிறார்.

**ஸ்ரீவசனபூஷணம்:** இந்நூல் தென்கலை வைணவ ஆசாரிய சம்பிரதாயங்களை மிகத் தெளிவாக விளக்கி உரைப்பது. இதன் சிறப்பை மணவாள மாமுனிகள் உபதேச ரத்தின மாலையில் போற்றியுள்ளார்.

**அர்ச்சிராதி:** இந்நூல் சேதனன் பிறவியிலிருந்து பரமபதம் அடைந்து வைகுந்தநாதன் தாளில் சேர்ந்து பல்லாண்டு பாடி இன்புற்றிருப்பது வரை கூறுவது.

**பிரமேய சேகரம்:** சேதனன் உலக வாழ்க்கையை அனுபவித்து அதனை விட்டு முறையே திவ்விய நகரம் சேர்ந்து சர்வேசுவரனைத் தரிசித்து எல்லாக் கைங்கரியமும் பண்ணுதலைக் கூறுவது.

**பிரபந்த பரித்ராணம்:** சர்வேசுவரனைத் தவிர வேறு ரக்ஷகர் இல்லையென்று அறிந்து நம் காரியத்திற்கு நாம் கடவோமல்லோம் என்றிருந்து ஈசுவரன் பக்கல் பாரத்தைப் போட்டிருத்தல்.

**சாரசங்கிரகம்:** த்வயம் என்ற இரு வாக்கியங்களிலுள்ள பத்து அர்த்தம் கூறுவது.

## பிள்ளை லோகாச்சாரியார் மாணவர் (14-நூ)

**நூல்:** சித்தோபாய நிர்ணயம்.

## பிள்ளை லோகார்ய சீயர் (16-நூ)

இவர் வைணவ நூல்களுக்கு உரை செய்தவர்.

## பிளாம்ஸ்டிராண்ட் எ. (19-நூ)

**நூல்:** ஞானப் பூமாலை (1895).

இந் நூல் உரைநடையில் அமைந்தது; சுவிசேஷக் கிறித்தவர்கள் செய்யத் தகுந்த பலவகைச் செபங்கள் அடங்கியுள்ளன. எட்டுப் பெரும்பகுதிகளாக நூல் அமைந்துள்ளது.

## பிறவா நெறி காட்டியார் (14-நூ)

இவர் திருமலைராயன்பட்டின அவைக்களப் புலவர்களில் ஒருவர். அதிமதுரகவிக்கு அடுத்தபடியாகப் பெருமை பெற்றவர். காளமேகப் புலவர் எமகண்டம் பாடிய போது "கடுங்காற்று மழை காட்டும் கடுநட்புப் பகை காட்டும்" என்பது இறுதியில் அமைய ஒரு வெண்பா பாட வேண்டுமென்று கேட்கக் காளமேகப் புலவர், "நீரோ பிறவா நெறி காட்டி" என்று தொடங்கும் வெண்பாவைப் பாடியதாகக் கூறுவர்.

## பிறவா நெறிப் புராண ஆசிரியர் (17-நூ)

இவர் பிறவா நெறிப் புராணம் என்ற நூலினை இயற்றியவர். இவரது இயற்பெயர் தெரியவில்லை. திருப்பேரூர்ப்

புராண முகவுரையில் இந் நூல் கி.பி. 1608இல் இயற்றப் பட்டதென்ற குறிப்புக் காணப்படுதலால் இந் நூலின் ஆசிரியர் கி.பி. 17 ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவராவர்.

**நூல்:** பிறவா நெறிப் புராணம்.

இந்நூல் 6 சருக்கங்கள் 342 திருவிருத்தங்களை உடையது. பேரூர்ப்பட்டிப் புராணம் என்ற பெயரும் இந் நூலுக்கு உண்டு.

பின்பழகிய பெருமாள் சீயர் (15-நூ)

**நூல்:** குரு பரம்பரைப் பிரபாவம்; ஆறுயிரப்படி உரை.

பின்வேலப்ப தேசிகர் (18-நூ)

வேலப்பதேசிகர் என்ற பெயரில் இருவர் இருந்தனர். இவர்களுள் பின் வேலப்ப தேசிகர் என்பவர் திருவாவடு துறை ஆதீனத்தில் 11 ஆவது பட்டத்திலிருந்தவராவர். இக்காலத்தில் விளங்கிய சிவஞான சாமிகள் தாம் எழுதிய சிவஞான போத மாபாடியத்தை அரங்கேற்றிப் பாராட்டுப் பெற்றுர். இவர் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருந்து சிவபெருமான் திருவடி நிழலை அடைந்தார்.

**நூல்:** திருப்பறியலூர்ப் புராணம்.

இந்நூல் வடமொழியிலிருந்து தமிழாக்கம் செய்யப் பெற்றது.

பின்ஞக் (        )

**நூல்:** திருச்சபையின் சரித்திர வினு-விடை (1856).

பீட்டர், பி. (        )

**நூல்:** இயேசு கிறிஸ்து கொடுத்த ஞானஸ்நானக் கட்டளை.

பீட்டர், ஜெ. எஸ். (19-நூ)

**நூல்:** விக்டோரியா சக்கரவர்த்தினியின் சரித்திரம் (1893).

இந்நூல் ஒரு மொழிபெயர்ப்பு நூல்; செய்யுள் நடையில் அமைந்தது. விக்டோரியா மகாராணியாரின் வரலாறு படங்களுடன் அமைந்துள்ளது.

### பீதாம்பரப்புலவர் (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணம் நீர்வேலி.

**தந்தை:** சண்முகம் பிள்ளை; வேளாளர்.

இவர் இருபாலைச் சேனாதிராய முதலியாரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்.

**நூல்:** மறைசைக் கலம்பகம், மறைசைத் திருப்புகழ். நீர்வை வெண்பா, வல்லிபுரநாதர் பதிகம்.

### பீமகவிப் புலவர் (19-நூ)

**ஊர்:** பாண்டி நாட்டுக் குன்றக்குடியை அடுத்த செந்நெற் குடி.

**பிறப்பு:** 1858.

இவர் திருவாவடுதுறை நமச்சிவாய தேசிகரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். பின்னர்த் தமது ஊரில் மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்தார். சிலேடைப் புலி பிச்சுவை யரிடம் நட்புக் கொண்டிருந்தார். முறையூர் சி. சண்முகஞ் செட்டியார் என்ற வள்ளலால் ஆதரிக்கப் பெற்றுப் பல தனிச் செய்யுட்கள் இயற்றியுள்ளார்.

**நூல்:** காரிகை வெண்பா, விசய சிந்தாமணி, கோட்டி மாதவன் பிள்ளைத் தமிழ், சிவபுர மான்மியம், சிவபுரம் மீனும்பிகை பிள்ளைத் தமிழ், செந்நெற்குடி சண்முக நாதன் பிள்ளைத் தமிழ், வாலநைடதம்.

### பீம கவிராயர் (        )

**நூல்:** ஸ்ரீ ராமர் அஸ்வமேதயாகம்.

### பீர் முகம்மது சாகிப் (18-நூ)

**ஊர்:** தென்காசி.

**வாழ்விடம்:** மலையாளத்தைச் சேர்ந்த தக்கலை.

**நூல்:** மஹரிபத்து மாலை, ஆநந்தக் களிப்பு, ஞானப்புகழ்ச்சி, ஞானமணி மாலை, ஞானரத்தின குறவஞ்சி, பிசுமில் குறம், மெய்ஞ்ஞானத் திருப்பாடற் திரட்டு, முச்சுடர்ப் பதிகங்கள்.

**மஹ்ரிபத்து மாலை:** இந்நூல் பொருட்பால், அருட்பால், காமத்துப்பால் என முப்பாலாகவும் 613 பாடல்கள் அடங்கியதாகவும் செய்யப்பட்டுள்ளது.

**ஆநந்தக் களிப்பு:** இறைவனைக் குறித்த துதிப்பாமாலை.

**ஞானப் புகழ்ச்சி:** இந்நூல் இறைவனைத் துதித்துத் தமது குறை இரந்து வேண்டும் பாடல்களின் தொகுதியாகும்; 573 செய்யுட்கள் உள்ளன.

**ஞானமணி மாலை:** இந்நூல் சமய ஞானம், தத்துவம் முதலியன பற்றி அமைந்தது; 242 செய்யுட்கள் உள்ளன.

**ஞானரத்தின குறவஞ்சி:** இந்நூல் சிங்கன் சிங்கி உரையாடும் முறையில் அமைந்தது. இவர்களின் உரையாடல்மூலமாக ஞானப் பொருள் பற்றிய செய்திகள் வெளிப்படுத்தப்படுகின்றன; 65 செய்யுட்கள் உள்ளன.

**பிசுமில் குறம்:** மஹ்ரிபத்து மாலை என்ற நூலே குறவஞ்சியமைப்பில் பிசுமில் குறம் என்ற பெயரோடு இயற்றப் பெற்றுள்ளது; 590 கண்ணிகள் உள்ளன.

**மெய்ஞ்ஞானத் திருப்பாடற் திரட்டு:** இந்நூலில் மெய்ஞ் ஞானப் பாடல்கள் பல 28 பகுதிகளாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

## பீரங்கி ஞானியார் (        )

**நூல்:** பீரங்கி ஞானத்திரட்டு.

## புகழேந்தி (13-நூ)

**வே.பெ.** புகழேந்தி ஆண்டான்.

**ஊர்:** பொன் விளைந்த களத்தூர்; வேளாளர்.

இவரது புகழேந்தி என்ற பெயர் புகழை ஏந்தியமையால் பெற்ற காரணப் பெயர் எனக் கருதுகின்றனர். சித்தூர் மாவட்டத்திலுள்ள மகாதேவ மங்கலத்துத் திருக்கண்டீசுரர் கோயில் கல்வெட்டொன்றில் "ஐந்நூற்றுவ தேச வள்ளுவன் புகழேந்தி" என ஒருவன் குறிக்கப்படுகின்றான். இக்கல் வெட்டின் காலம் 13ஆம் நூற்றாண்டாதலால் அக்காலத்தில்

புகழேந்தி என்று பெயரிடும் பழக்கம் உண்டு எனத் தெரிகிறது. எனவே பெற்றோரிட்ட இயற்பெயரைப் பின்னர் இவர் மெய்ப் பெயராக விளங்கச் செய்திருக்கலாம்.

இவர் பிறந்த பதியை "மாலார் களந்தைப் புகழேந்தி, காரார் களந்தைப் புகழேந்தி எனத் தொண்டைமண்டலச் சதகச் செய்யுள்கள் பாராட்டுகின்றன. இக் களந்தையே பொற்களந்தையாகும். இவ்வூர் பொன் விளைந்த களத்தூர் என வழங்கப்படுகிறது. தமிழ் நாட்டில் களத்தூர் என்ற பெயரில் பல ஊர்கள் இருந்ததால் வேறுபாடு தெரிதற்காக இவர் பிறந்த ஊர் பொற்களந்தை என்று அழைக்கப் பெற்றது. இவ்வூர் செங்கற்பட்டுக்குத் தெற்கில் ஐந்துகல் தொலைவில் ஒத்திவாக்கம் என்ற பெயரில் இன்று வழங்கி வருகிறது. சிலர் இவர் பிறந்த ஊர் பாண்டி நாட்டிலுள்ள முதுகளத்தூர் என்பர். இக்கருத்து வலியுடையதன்று.

இவரது சமயம் சைவம் என்றும் வைணவம் என்றும் அரனையும் அரியையும் ஒப்ப நினைக்கும் அத்வைதி எனவும் மூவகையாகக் கூறப்படுகிறது. காண்டந்தோறும் பாடும் கடவுள் வாழ்த்துப்பாக்களில் திருமாலை முன்னர் வாழ்த்தியே பின்னர்ச் சிவபெருமானை வாழ்த்துகின்றார். நளனைக் கலி தொடர்கின்ற போதும் கலி நீங்குகின்ற போதும் தன்னைப் பேணிய சந்திரன் சுவர்க்கியைப் பேணுகின்ற போதும் திருமாலையே சுட்டுகின்றார். மேலும் தொண்டை மண்டல சதகம் இவர் பிறப்பிடத்தைப் போற்றும் போது, "மாலார் களந்தை" என்று திருமாலுடன் இணைத்துக் கூறுகின்றது. எனவே இவர் வைணவ சமயத்தார் என்று கொள்ளுதல் நேரிது.

இவர் வாழ்ந்த காலம் கி.பி. 11ஆம் நூற்றாண்டு, 12ஆம் நூற்றாண்டு, 13ஆம் நூற்றாண்டு என்று மூன்று கருத்துக்கள் உண்டு. புகழேந்தியார் ஈழநாட்டுக்குச் சென்று ஆரிய சேகரனைப் பாடிப்பரிசு பெற்றுத் திரும்பி வரும் போது பாண்டியவேந்தன் இவருக்குச் சிறப்புச் செய்ததாகத் தமிழ் நாவலர் சரிதை கூறுகின்றது. இவ்வாரிய சேகரன் கி.பி. 1268 முதல் கி.பி 1311 வரையில் பாண்டிய நாட்டை ஆண்ட

முதலமாறவர்மன் குலசேகர பாண்டியன் படைத்தலைவர்களுள் ஒருவனுதலால் புகழேந்தியார் கி.பி. 13ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் என்பது தெளிவு.

புகழேந்தியையும் ஒட்டக் கூத்தரையும் இணைத்து வழங்கும் கதைகள் கற்பனையானது என்பது ஆராய்ச்சியாளர் முடிவு.

"வெண்பாவிற் புகழேந்தி என்று பாராட்டப்படுவதால் வெண்பாவிலமைந்த நள வெண்பா இவர் இயற்றியதென்பது உள்ளங்கை நெல்லிக் கனி. இது தவிர செஞ்சிக் கலம்பகம், இரத்தினச் சுருக்கம், அல்லி அரசாணி மாலை, புலந்திரன் களவு மாலை, புலந்திரன் தூது, அபி மன்னன் சுந்தரி மாலை, விதுரன் குறம், துரோபதை குறம், மின்ஞெளியாள் குறம். வித்துவான் குறம், பவளக் கொடி மாலை, ஆரவல்லி சூரவல்லி கதை, சித்திர புத்திர நாயனுர் கதை, நல்லதங்காள் கதை, மதுரை வீரன் கதை, தேசிங்கு ராசன் கதை, சிறுத்தொண்ட பக்தன் கதை, கோவலன் கதை, கர்ண மகாராசன் சண்டை, பஞ்சபாண்டவர் வனவாசம், ஏணி ஏற்றம் முதலிய நூல்கள் இவர் பெயரில் வழங்குகின்றன. இந் நூல்களின் நடையமைப்பும் பொருளமைப்பும் தரமும் இவர் பாடியனவல்ல என்பதனை ஆராய்ச்சி முடிவுகள் தெரிவிக்கின்றன. இவை தவிர இவர் பாடியனவாக 31 தனிப் பாடல்கள் வழங்குகின்றன. இத் தனிப் பாடல்கள் தமிழ் நாவலர் சரிதை, விநோதரச மஞ்சரி, தனிப் பாடற் திரட்டு, தனிச் செய்யுட் சிந்தாமணி, பெருந் தொகை நூல்களில் காணப்படுகின்றன.

**நூல்:** நளவெண்பா.

இந் நூல் நள தமயந்தி கதையைச் சுயம் வர காண்டம், கலி தொடர் காண்டம், கலி நீங்கு காண்டம் என மூன்று காண்டங்களில் 405 செய்யுட்களில் கூறுகின்றது. இந் நூல் முழுமையும் நேரிசை வெண்பாவால் இயன்றது என்ற ஒரு பொதுக் கருத்து உண்டு. ஆனுல் இந் நூலில் ஐந்து வெண்பாக்கள் இன்னிசை வெண்பாக்களாதலால் பெரும்பான்மை பற்றி இவ்வாறு வழங்கப் படுகிறதென்று கொள்ளலாம்.

இந் நூலின் பல்வேறு பதிப்புக்களை நோக்கினால் குறைந்தது 378 பாடல்களிலும் மிகுதி 525 பாடல்களிலும் நளவெண்பா காணப்படுகிறது. ஆனால் பல பாடல்கள் மிகைப் பாடல் களாகும்.

## புட்கரனார் ( )

**நூல்:** மந்திர நூல்.

இந்நூல் யாப்பருங்கல விருத்தி உரைகாரரால் குறிப்பிடப் பெற்றுள்ளது. யாப்பருங்கலம் செய்யுளியல் 40ஆம் நூற்பா உரையில் ஆரிடப்போலி அல்லது ஆரிட வாசகம் என்பதைக் கூறும் போது,

"வச்சிரம் வாவி நிறைமதி முக்குடை
நெற்றி நேர் வாங்கல் விலங்கறுத்தல்
உட்சக்கர வட்டத் துட்புள்ளி என்பதே
புட்கரனார் கண்ட புணர்ப்பு"

என்று குறிப்பிடுகின்றார் உரையாசிரியர். இதுமந்திர நூலுள் புட்கரனார் கண்ட எழுத்துக் குறிவெண்பா என்றும், இஃது இரண்டாமடி குறைந்து வந்ததென்றும் குறிக்கப்பட்டுள்ளது. இம் மந்திர நூலை இயற்றிய புட்கரனார் யார் என்பதும் அவர் வரலாறு என்ன என்பதும் புலனாகவில்லை.

## புத்ததத்த மகாதேரர் ( )

இவர் சோழநாட்டில் பிறந்தவர். காவிரிப்பூம்பட்டினம், உறையூர், பூதமங்கலம், காஞ்சிபுரம், இலங்கை, அநுராத புரம் முதலிய இடங்களில் தங்கியிருந்தவர். தம்முடைய மாணவர்களின் வேண்டுகோள்களுக்கு ஏற்பப் பல நூல்களை இயற்றியுள்ளார். புத்தசிகா, சுமதி என்பவர்கள் இவருடைய மாணவர்களில் புலமை மிக்கவர்கள் ஆவர்.

**நூல்:** 'மதுராத்த விலாசினீ', அபிதம்மாவதாரம்', 'ஷனய வினிச்சயம்', 'உத்தர வினிச்சயம்', 'சினாலங்காரம்'.

**மதுராத்தவிலாசினீ:** இந்நூல் சூத்திர பிடகத்தின் ஐந்தாவது பிரிவாகிய குட்ட நிகாய என்னும் நிகாயத்தின் உட்பிரி

வாகிய புத்த வம்சம் என்னும் 14 ஆவது பிரிவுக்கு எழுதப் பட்ட உரை.

**அபிதம்மாவதாரம்:** இஃது அபிதம்ம பிடகத்திற்குப் பாயிரம் போன்றது.

## புத்தமித்திரனர் (11-நூ)

**ஊர்:** பொன்பற்றியூர்.

இவர் பிறந்த பொன்பற்றியூர் மழலைக் கூற்றத்தைச் சார்ந்தது. இவ்வூர் இப்பொழுது தஞ்சாவூர் மாவட்டம் அறந்தாங்கிக் கோட்டத்தில் பொன்பேத்தி என வழங்கப் படுகிறது. இவர் பொன்பற்றியூரில் சிற்றரசராக இருந்தவர். தமது பேரரசர் வீரராசேந்திரன் என்னும் வீரசோழன் (1063-1070) விருப்பப்படி வீர சோழியம் என்னும் நூலை இயற்றியவராதலால் வீரசோழன் காலமாகிய 11 ஆம் நூற்றாண்டே இவர் வாழ்ந்த காலமாகும். இவர் பௌத்த சமயத்தைச் சார்ந்தவர்.

**நூல்:** வீரசோழியம்.

இந்நூல் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணமும் கூறும் நூலாகும். இவ்வைந்தனுள் பொருளிலக்கணம் ஒழிந்த மற்றவற்றுள் பெரும்பாலான வடமொழி விதிகளே. இதிலுள்ள கலித்துறைகள் 181. இதற்குப் பெருந்தேவனரென்பவர் உரை இயற்றியுள்ளார்.

## புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர் கிழான் (சங்ககாலம்)

**ஊர்:** கம்பூர், வேளாளர்.

வண்ணக்கன் - நாணய சோதகன், நோட்டக்காரன் என்று பொருள்படும். இவர் புதுக்கயம் என்ற ஊரில் நோட்டக் காரராய் வந்து தங்கியமையால் இப்பெயர் பெற்றாரென்பர்.

**நூல்:** நற்றிணை 294.

## புதுமைப்பித்தன் (20-நூ)

**இ.பெ.** விருத்தாசலம்.

**ஊர்:** திருநெல்வேலி.

**தந்தை:** சொக்கலிங்கம்பிள்ளை. **தாய்:** பர்வதத்தம்மாள்.
**வாழ்ந்த காலம்:** 25-4-1906 — 30-6-1948.

இவருடைய தந்தை திருப்பாதிரிப்புலியூரில் தாசில்தாராக வேலை பார்த்துக் கொண்டிருந்தபோது புதுமைப்பித்தன் பிறந்தார். இவர் ஓரிடத்திலிருந்து நிலையாகக் கல்வி கற்க முடியவில்லை. தந்தை வேலையிலிருந்து ஓய்வு பெற்றபின் நெல்லையை அடைந்து இந்துக் கல்லூரியில் கல்வி கற்கத் தொடங்கித் தம் இருபத்தைந்தாம் அகவையில் பி.ஏ., தேர்வில் தேர்ச்சியுற்றார். இவருக்கு 1931 ஆம் ஆண்டில் திருமணம் நடைபெற்றது. இவருடைய மனைவியின் பெயர் கமலாம்பாள்.

புதுமைப் பித்தன் புனைந்துரைக் கதைகளை எழுதி இலக்கியத் தொண்டு செய்ய வேண்டு மென்று விரும்பினார். இதனால் தந்தைக்கும் இவருக்கும் கருத்து வேறுபாடுண்டாயிற்று. இவர் வீட்டை விட்டு வெளியேறிச் சென்னையை அடைந்தார். சென்னையிலிருந்து கொண்டு கதைகள் எழுதினார். இவருடைய கதைகள் விறுவிறுப்பாகவும் வியக்கத்தக்க வகையிலும் அமைந்திருந்தமையின் அக்காலத்தில் பெயர் பெற்று விளங்கிய மணிக்கொடி முதலிய இதழ்களில் வெளிவந்தன. ஆயினும் நல்ல பொருள் வருவாய் இவருக்குக் கிட்டவில்லை. இவருடைய படைப்புக்கள் மக்கட் சமுதாயத்தின் ஏற்றத் தாழ்வு, மனித வாழ்க்கையின் துன்பங்கள், அறியாமை இருள் ஆகிய இவற்றை அடிப்படையாகக் கொண்டு எழுந்தன. கதைகள், கட்டுரைகள், விமரிசனங்கள், கவிதைகள், புதினங்கள் எனப் பல துறைகளிலும் இவருடைய படைப்புக்கள் பரவியிருந்தன. இவருடைய நடை உணர்ச்சியுடையது; மனித குலத்தின் அவலத்தையும் கூட நகைச் சுவைபடச் சித்திரிப்பது; படிப்பவர்களுக்கு எளிதில் பதியக் கூடியது. இவர் சிறுகதை எழுத்தாளராக இருந்ததோடு தினமணி, ஊழியன், தினசரி முதலிய பத்திரிகைகளிலும் உதவியாசிரியராகச் சிறிது காலம் பணிபுரிந்தார். இவர் வறுமையில் உழன்று, இருமல் நோயால் வருந்தித் தம் நாற்பத்திரண்டாம் அகவையில் 1948 ஆம் ஆண்டில் திருவனந்தபுரத்தில் காலமானார்.

**நூல்:** புதுமைப் பித்தன் கதைகள், இன்று இரவு, மணி யோசை, புதிய ஒளி, காஞ்சனை, தெய்வம் கொடுத்தவரம், முதலும் முடிவும், ஆண்மை, பளிங்குச் சிலை, பிரேதமனிதன், அவளும் அவனும், உயிராசை, வேடிக்கை மனிதர்கள், சிற்றன்னை, பலிபீடம், வாக்கும் வக்கும், உலக அரங்கு, கபாடபுரம், விபரீத ஆசைகள், நாசகாரக் கும்பல், பக்த குசேலா, ஆறுகதைகள், பேஸிஸ்ட் சடாமுனி, கப்சிப்தர்பார், புதுமைப்பித்தன் கவிதைகள், புதுமைப்பித்தன் கட்டுரைகள்.

## புராணத் திருமலை நாதர் (16-நூ)

**ஊர்:** சிதம்பரம்; சைவ வேளாளர்.

இவர் சொற்பொழிவாற்றுவதில் திறம் பெற்றிருந்தமையால் புராணத் திருமலை நாதர் என அழைக்கப் பெற்றார். இளமையிலேயே கல்வி கேள்விகளில் சிறப்புப் பெற்றார். காஞ்சி ஞானப் பிரகாச மடத்து அதிபரிடம் சைவ சமய தீட்சை பெற்றார்.

இவர் மதுரைச் சொக்க நாதர் உலா, சிதம்பர புராணம் என்ற இரு நூல்களை எழுதியுள்ளார். இவற்றுள் முதல் நூல் திருநெல்வேலிச் சீமையை அரசாண்ட வீரமாறன் (1473 — 1506) அவையில் அரங்கேற்றப் பட்டதாகத் தெரியவருவதால் இவர் 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வராவார். இவர் சிறப்பாக இல்லற வாழ்க்கை நடத்திய வரென்பதும் சைவ சமயப் பற்றும் சைவ சமயாச்சாரியப் பற்றும் மிக்குடையவரென்பதும் இவரது பாக்களால் புலனாகின்றன. இவருக்குப் பரஞ்சோதி என்ற புதல்வர் இருந்தார்.

**நூல்:** மதுரைச் சொக்க நாதர் உலா, சிதம்பர புராணம்.

முதல் நூல் நூலாசிரியர் தலயாத்திரை சென்ற காலத்தில் மதுரைச் சொக்கநாதர் மேல் பாடப் பெற்றது. 516 கண்ணிகளைக் கொண்டது. இந் நூல் உ.வே. சாமி நாதையரால் அச்சிடப் பெற்றுள்ளது. எளிய சொற்களையும் சொற்றொடர்களையும் கொண்டது. பல தலங்களைப் பற்றிய செய்திகளும் அழகுற அமைந்துள்ளன.

**சிதம்பர புராணம்:** இந் நூல் சிதம்பரத் தலத்தின் பெருமையைக் கூறுவது. மான்மியச் சருக்கம், துன்மதச் சருக்கம், துச்சகச் சருக்கம், நியமச் சருக்கம், சோம நாதச் சருக்கம், தீர்த்தச் சருக்கம், திருச்சிற்றம்பலச் சருக்கம், சமாதிச் சருக்கம், துற்றெரிசனச் சருக்கம் என்ற பத்துச் சருக்கங்களில் 813 திருவிருத்தங்களைக் கொண்டது.

## புருடோத்தம நம்பி (11-நூ)

இவர் பன்னிரு திருமுறை ஆசிரியர்களில் ஒருவர். இவர் இயற்றிய திருவிசைப்பாவின் திருக்கடைக் காப்புச்செய்யுளில் வரும் 'மாசிலா மறைபல ஓதும் நாவன் வண்புருடோத்தமன்' என்று குறிப்பிடுவதால் மறையவர் எனத்தெரிய வருகிறது. தில்லையம்பதியைத் தமது வாழ்விடமாகக் கொண்டார். இங்கிருந்து இறைவன் மீது பல பதிகங்கள் பாடியுள்ளார். இவற்றுள் இரண்டு பதிகங்கள் ஒன்பதாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளன.

**நூல்:** 9ஆம் திருமுறையில் இருபதிகங்கள்.

## புருடோத்தம நாவலர் (19-நூ)

**ஊர்:** நாகபட்டினம்.

**நூல்:** கிருட்டின சாமி உபாத்தியாயர் என்பவர் இயற்றிய 'நீலாயதாட்சியம்மை பிள்ளைத்தமிழ்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## புருடோத்தமப்பிள்ளை தம்பி (20-நூ)

**ஊர்:** புதுச்சேரி.

**தந்தை:** அவோக்காத் தம்பி; **தாய்:** அம்மணிஅம்மை.

இவர் தமிழ், ஆங்கிலம், பிரஞ்சு மொழிகளில் பயிற்சி பெற்றவர்.

**நூல்:** 'காரைக்கால் அம்மையார் புராணம் மூலமும் அரும் பொருள் உவமைச் செய்யுட்டிரட்டும்'

சேக்கிழார் இயற்றிய பெரியபுராணத்தின் பகுதியாகிய காரைக்கால் அம்மையார் புராணச் செய்யுட்கு ஒப்பான

செய்யுட்களைச் சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய பல நூல்களில் இருந்து திரட்டி ஒன்றுபடுத்தி வெளியிட்டது.

## புருடோத்தம முதலியார், கூ (19-நூ)

**ஊர்:** கூடலூர்.

**தந்தை:** இராமசாமி முதலியார்.

இவர் சென்னை திருவல்லிக்கேணி உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்தவர்.

**நூல்:** இராமாயணக் கருப்பொருள் உரை, பால திராவிட பாஷா சந்திரிகை.

## புருனோவெர்க்குரீஸ் (19-நூ)

**நூல்:** வருஷானுதின அனுசரனைக்குரிய புதுத்தியானங்கள் (1893).

இந்நூல் உரைநடையில் அமைந்தது; இயேசு கிறிஸ்து நாதரின் ஜீவியத்தையும், போதத்தையும் ஆதாரமாகக் கொண்டு இயற்றப்பெற்றது. பூசைகாணும் வகையும் தியானங்கள் முதலியனவும் அமைந்துள்ளன. ஜூலை மாதம் தொடங்கி டிசம்பர் மாதம் ஈருக மேற்கொள்ள வேண்டும் தியானங்கள் முதலியவை உள.

## புல்லங்காடனார் (5-நூ)

**ஊர்:** முள்ளிநாட்டு நல்லூர்.

இவர் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகிய 'கைந் நிலை' என்னும் நூலினைப்பாடியவர். இவரது பெயர் மாறோ கத்து முள்ளிநாட்டு நல்லூர்க் காவிதியார் மகனார் புல்லங் காடனார் எனக் குறிக்கப்படுகின்றது. எனவே இவரது இயற் பெயர் புல்லங் காடனார் என்பது. இவருடைய தந்தையார் காவிதியார் என்ற பட்டம் பெற்றவராயிருத்தலால் இவர் பாண்டியர்க்கு வழி வழி அமைச்சுரிமை பூண்டொழுகிய ஒரு தொல்பெருங் குடியில் தோன்றியவர் என்பது தெளிவு.

இவரது ஊர் மாறோகத்து முள்ளி நாட்டு நல்லூர் என்று கூறப்பட்டிருத்தலால், அது திருநெல்வேலி மாவட்டத்தில்

பாண்டியரின் பழைய தலைநகரான கொற்கையின் பக்கத்திலிருந்த தோர் ஊராதல் வேண்டும் என்பர் பண்டாரத்தார். மேலும் இவர் தென்பாண்டி நாட்டில் கொற்கைக்கண்மையில் வாழ்ந்தவராதல் வேண்டும் என்பதை கைந்நிலையின் இறுதிப் பாடல் உறுதி செய்கின்றது. இவர் கி.பி. 5 ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவராதல் வேண்டும்.

**நூல்:** கைந்நிலை.

இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. ஐந்திணைக்குரிய அகவொழுக்கத்திற்கு இலக்கியமாக அமைந்தது. 60 வெண்பாக்களை உடையது. எனவே ஒவ்வொரு திணையும் 12 பாடல்களை உடையதாகும். இந் நூலில் குறிஞ்சித் திணையில் 1, 8 ஆம் செய்யுட்களும், பாலைத்திணையில் 2 முதல் 8 வரையில் உள்ள செய்யுட்களும் முல்லைத் திணையில் 2 முதல் 11 ஆம் செய்யுள் வரையில் 10 செய்யுட்களும் காணப்படவில்லை. இவை சிதைந்து அழிந்து போய் விட்டன.

## புல்லாற்றூர் எயிற்றியனார் (சங்க காலம்)

**ஊர்:** புல்லாற்றூர். இவ்வூர் காவிரியின் வட கரையிலுள்ள ஊர்களுள் ஒன்றுகும். இவர் தன் மக்களோடு மனம் வேறுபட்டுப் பகைமை கொண்டு போரிடச் சென்ற கோப்பெருஞ்சோழனைப் போர்க்களத்தே கண்டு, தக்க அறிவுரை கூறிப் போரை விடுவிக்கச் செய்தார்.

**நூல்:** புறம் 213.

## புலத்தியர் ( )

**நூல்:** தட்சிணமூர்த்தி சௌமிய சஞ்சிரகம்.

## புலிக்குட்டிப் புலவர் (19-நூ)

**ஊர்:** திருப்பூர்.

இவர் பட்டுக் கோட்டைக்கு அண்மையில் உள்ள சில்லத்தூர்ப் பெருநிலக்கிழார் ஒருவரின் அவைக்களப் புலவராக

இருந்தவர். அப்போது இவரிடம் மாணவர்கள் பலர் கல்வி கற்றுத் தேர்வு பெற்றனர்.

**நூல்:** தனிப் பாடல்கள்.

## புலிப்பாகை மூர்த்தியார் ( )

**ஊர்:** தாதையூர்.

**நூல்:** வள்ளியம்மை புராணம்.

இந் நூல் திருச்செந்தூர் சிறப்பையும் கந்த புராணக் கருத்தையும் விளக்கி வள்ளியம்மை திருமணத்துடன் முடிவது. 60 சருக்கங்களையும் 1345 செய்யுட்களையும் கொண்டுள்ளது.

## புவனேகவாகு ( )

இவர் யாழ்ப்பாணத்தில் அரசு செலுத்திய விசய கூழங்கைச் சக்கரவர்த்திக்கு அமைச்சராக இருந்தவர். கல்வியில் மிகச் சிறந்து விளங்கினர். இவர் தமது அரசருடன் தெல்லிப்பழைக் கோயிற்பற்றைச் சேர்ந்த மாவிட்டபுரத்துக்குச் சென்றபோது அங்குள்ள கந்தசாமி கோயில் அருச்சகர் அளித்த விருந்தினைப் பாராட்டிப் பல செய்யுட்கள் பாடியுள்ளார்.

**நூல்:** தனிப் பாடல்கள்.

## புன்னைவனக் கவிராயர் (19-நூ)

**ஊர்:** பாண்டிய நாட்டில் கல் போது.

இவர் ஊற்றுமலைப் பெருநிலக்கிழார் இருதயாலய மருதப் பத்தேவர் காலத்தில் வாழ்ந்தவர்.

**நூல்:** இருதயாலய மருதப்பத்தேவர் மீது இயற்றிய தனிப் பாடல்கள்.

## பூங்கண்ணன் (சங்க காலம்)

இவர் உறுப்பாற் பெயர் பெற்ற சங்கப் புலவர்களுள் ஒருவர். காண்பார்க்கு இனிய கண் பெற்றமையால் இப் பெயர் பெற்றார் என்று கருதுகின்றனர்.

**நூல்:** குறுந்தொகை 253.

## பூங்கணுத்திரையார் (சங்ககாலம்)

இவர் சங்க காலத்தில் வாழ்ந்த பெண்பாற் புலவர்களில் ஒருவர். உத்திரையென்பது இவரது இயற் பெயரென்றும் பூப்போன்ற அழகிய கண்களைப் பெற்றிருந்தமையால் பூங் கணுத்திரையார் என்று அழைக்கப் பட்டார் என்றும் கூறுவர். பூங்கண் என்ற பெயருடைய ஊர் ஒன்று காவிரி யின் வடகரைக் கண் உள்ளதெனக் கல்வெட்டுக்களால் அறியப்படுவதால் இவரை அவ்வூரினராகக் கொள்வாரும் உளர். டாக்டர். சாமிநாதையரின் குறுந்தொகைப் பதிப்பில் இவர்பெயர் 'பூங்கணுத்தரையார்' என்று காணப்படுகின்றது.

**நூல்:** குறுந்தொகை 48, 171. புறம்: 277.

## பூங்காவனக் கவிராயர் (19-நூ)

**ஊர்:** சென்னை பூவிருந்த வல்லி.

இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேர்ந்தவர். பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துப் பலருக்குக் கல்வி கற்பித்தார். பூவை கலியாண சுந்தர முதலியார் இவரிடம் இளமைக் காலத்தில் கல்வி கற்றார் என்பது குறிப் பிடத்தக்கது.

**நூல்:** காஞ்சிபுரம் பச்சையப்ப முதலியாரைப் பாராட்டிப் பாடிய தனிப்பாடல்.

## பூங்கோதை (18-நூ)

இவள் மதுரையில் வாழ்ந்த ஒரு தாசி; கல்வியில் தேர்ச்சி பெற்றவள். சீதக்காதி என்னும் செல்வருக்குக் காமக் கிழத்தியாக இருந்தமையால் இவளை இனத்தவர் நீக்கினர். ஒருமுறை இவளுடைய உடைமைகளைக் கள்வர்கள் பறித்துச் செல்லத் தம் நிலையை வள்ளல் சீதக்காதியிடம் எடுத்துக் கூறி ஒரு தனிப்பாடல் பாடியுள்ளார்.

**நூல்:** தனிப்பாடல்.

## பூங்கோதையார் (19-நூ)

**ஊர்:** கொங்கு நாட்டில் சங்ககிரித் துர்க்கம்; ஆயர்குலம்.

இவர் தங்கை இராமாயணம் பாடிய எம்பிரான் கவிஞர் என்பவரின் மனைவியாவர்; சிறந்த புலமையாளர்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## பூங்கோயில் நம்பி (11-நூ)

இவர் வீரசோழன் என்ற வீரராசேந்திரன் காலத்தவர். (1063-1070).

**நூல்:** வீரணுக்க விசயம்.

இந்நூல் வீரசோழன் மகன் வீரசோழவணுக்கர் மேல் பாடப்பெற்றது. இது மறைந்து போன தமிழ் நூல்களுள் ஒன்று. இந்நூலை இயற்றியதற்காக இவருக்குச் சோழஅரசன் நிலத்தைத் தானமாக வழங்கினன் என்று திருவாரூர் தியாகராசசாமி கோவில் சாசனம் கூறுகின்றது.

## பூசைத் தாயார் (20-நூ)

இவர் ஊற்றுமலையில் பெருநிலக்கிழாராயிருந்தவரின் மனைவியாவர். இவருடைய கணவர் பகைவரால் கொல்லப் பட்ட பின்பு தம்மக்கள் மருதப்பத்தேவன், சிவலவதேவன் ஆகியோருடன் தென்காசியில் மறைவாகத் தங்கியிருந்தார். அது காலை தன்பிள்ளைகளுக்கிடையே நடைபெற்ற சண்டை யைக் கண்டு வருந்தி ஒரு தனிப்பாடல் பாடியுள்ளார். பின்னர் பொன்னம்பலம்பிள்ளை என்பவருடைய முயற்சியால் பழைய நிலைமையை அடைந்து ஊற்றுமலையில் வாழ்ந்தார். அப்போது அவ்வரைப் பாராட்டி ஒரு பாடல் பாடியுள்ளார்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## பூசைப்பிள்ளை (19-நூ)

**நூல்:** முத்துவீரக் கவிராயர் என்பவர் இயற்றிய 'சங்கர நாராயண சுவாமி கோயிற் புராணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பூதங்கண்ணனார் (சங்ககாலம்)

இவர் இயற்பெயர் கண்ணன் என்பதாகும். இவர் பூதன் என்பாருடைய மகனாராகவோ அல்லது பூதன் என்னும்

மற்றொரு பெயருடையராகவோ இருக்கலாம் என்று கருது கின்றனர்.

**நூல்:** நற்றிணை 140.

## பூதஞ்சேந்தனர் (        )

**வே.பெ.** மதுரைத் தமிழாசிரியர் மகனர் பூதஞ்சேந்தனர்.

**தந்தை:** பூதன்.

பூதஞ்சேந்தனர் என்பது பூதனுக்கு மகனுகிய சேந்தனர் எனப் பொருள்படும். எனவே இவர் பூதனர் மகனுகிய சேந்தனர் எனக்கருதுகின்றனர். 'தங்கண் மரபுடையார்' என்ற திருவள்ளுவ மாலைச் செய்யுளும் இவரால் இயற்றப் பட்டதே.

**நூல்:** இனியவை நாற்பது.

இந்நூல் கடவுள் வாழ்த்துச் செய்யுள் உட்பட 40 வெண் பாக்களையுடையது. இதில் இனியனவாகிய நாற்பதைக் கூறும் நாற்பது வெண்பாக்கள் உள்ளமையின் இனியவை நாற்பது எனப் பெயர் பெற்றது. இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கு என்ற தொகுப்பினைச் சேர்ந்தது.

## பூதத்தாழ்வார் (8-நூ)

**ஊர்:** திருக்கடன்மல்லை எனப்படும் மாவலிபுரம்.

இவர் முதலாழ்வார் மூவருள் ஒருவர். ஒருமுறை பொய்கையார் திருக்கோவலூருக்குச் சென்று திருமாலை வழிபட்டு ஓரன்பர் வீட்டின் இடைக் கழியில் துயிலக் கருதி யிருந்தபோது பேயாழ்வாரும் பின்னர்ப் பூதத்தாழ்வாரும் அவண் வந்து படுக்க இடம் வேண்டினர். ஒருவர் படுக்கவும் இருவர் இருக்கவும் மூவர் நிற்கவும் போதிய இடமே அது. இந்நிலையில் இருட்காலத்தில் அம்மூவருக்கும் இடையில் யாரோ ஒருவர் வந்து நெருக்குவது போல் தெரிந்தது. யார் என்று மூவரும் ஆராய்ந்த போது அவர் திருமால் என்றறிந்தனர். அப்போது பூதத்தாழ்வார் பாடிய பாடலே இரண்டாம் திருவந்தாதியாகும்.

**நூல்:** இரண்டாம் திருவந்தாதி.

இது நாலாயிரப் பிரபந்தத்தில் மூன்ருவது ஆயிரமாக நாதமுனிகளால் வகுக்கப்பட்ட இயற்பாவில் இரண்டாவது பிரபந்தமாகும். பொய்கையாழ்வாருடைய திருவந்தாதிப் பிரபந்தத்திற்கு அடுத்தபடியாக இத் திருவந்தாதி தோன்றியது பற்றி இரண்டாந் திருவந்தாதி என்று பெயர் பெற்றது.

இத் திருவந்தாதியில் பூதத்தாழ்வார் பொய்கையாழ்வாரோடே கூட இருந்து திருமாலுடைய குணங்களை அநுபவித்ததனுல் அவனுடைய அருளாலே வந்த தமது பிரபத்தியானது பரஞான நிலையை அடையும்படி பக்குவப்பட்டுவளர, அந்த அன்பின் பெருக்காலே இறைவனுடைய தன்மைகளை நேரே கண்டு அநுபவித்தார். தம்முடைய அந்த அநுபவத்தை எல்லோரும் அறிந்து இன்புற்று வாழுமாறு இத்திருவந்தாதியை அருளிச் செய்தார். இது 100 பாடல்களையுடையது.

## பூதபாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு.

(சங்ககாலம்)

இவர் சங்ககால அரசப்புலவர்களுள் ஒருவர். அரசனுடைய பட்டத்தரசிரியர் பெருங்கோப் பெண்டு என்று அழைக்கப் பெறுவர். பாண்டிய மன்னர்களில் பூதபாண்டியன் என்பவன் ஒருவன். இவன் பாண்டியருக்குரிய ஒல்லையூரைப் பகைவரிடமிருந்து மீட்டமையால் ஒல்லையூர் தந்த பூதபாண்டியன் என அழைக்கப் பெற்ருன். இவன் சிறந்த புலவனுகவும் திகழ்ந்தான். இவன் பாடிய பாடல்கள் எட்டுத்தொகை நூல்களில் இடம் பெற்றுள்ளன. இவன் மனைவியே பூதபாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு ஆவர். இவ்வம்மையார் கணவரைப் போலவே சிறந்த புலவராகத் திகழ்ந்தார். இவர் கணவர் பாடிய வஞ்சினப் பாடலொன்று இவரது அழகையும், மனைவிபால் கணவன் கொண்டிருந்த அன்பினையும் புலப்படுத்தும். போரில் பூதபாண்டியன் இறந்தபோது இவ்வம்மையார் பாடிய கையறுநிலைப் பாடலொன்று புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. இதன்கண் இவர் கைம்மை நோன்பின் கடுமையைக் கடிந்துரைத்துள்ளார்.

இவர் தீப்பாய்தல் கண்டு வருந்தி பேராலவாயர் என்ற புலவர் செய்யுளொன்று (புறம் 247) இயற்றியுள்ளார்.

**நூல்:** புறம். 246

பூதபுராணமுடையார் (          )

இவர் இயற்பெயர் தெரியவில்லை. 'பூதபுராணம்' என்னும் நூலினை இயற்றியமையால் பூதபுராணமுடையார் என்று அழைக்கப் பெற்றார். நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பாயிரவுரையில் "முந்துநூல் அகத்தியமும் மாபுராணமும், பூதபுராணமும், இசைநுணுக்கமும்; அவற்றுட் கூறிய இலக்கணங்களாவன: எழுத்துச் சொற்பொருள் யாப்புஞ் சந்தமும் வழக்கியலும் அரசியலும், அமைச்சியலும், பார்ப்பனவியலும், சோதிடமும், காந்தருவமும் கூத்தும் பிறவுமாம்" என்று குறிப்பிட்டுள்ளார். பேராசிரியர் தொல் காப்பிய மரபியல் 97ஆம் நூற்பா உரையில் "இனிப்படர்ந்து பட்ட பொருண்மையவாகிய மாபுராணம், பூதபுராணம் என்பன சில வாழ்நாட்சிற்றறிவின் மாக்கட்கு உபகாரப் படாமையின் தொகுத்துச் செய்யப்பட்டு வழக்கு நூலாகிய தொல்காப்பியம் இடைச்சங்கம் முதலாக இன்று காறும் உளதாயிற்று" என்று குறிப்பிட்டுள்ளார்.

பூதம் புல்லனார் (சங்ககாலம்)

இவர் பெயர் பூதம்புலவர் என்றும் வழங்கப்படுகின்றது.

**நூல்:** குறுந்தொகை 190.

பூதலிங்க உபாத்தியாயர் (          )

**ஊர்:** தெங்கம்புதூர்.

**நூல்:** மாணிக்கவாசகம் பிள்ளை, தா. என்பவர் இயற்றிய 'திருச்செந்தில் பதிற்றுப்பத்தந்தாதி', 'கந்தர் கலிநீங்கு வெண்பா' என்னும் நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

பூதன் தேவனார் (சங்ககாலம்)

சங்கப்புலவர்களுள் ஈழத்துப் பூதன் தேவனார் என்பவர் ஒருவர். இவரும் பூதன் தேவனாரும் ஒருவரா வேறா என்று

ஓர் ஐயம் நிலவுகின்றது. இவர் மருதத்திணையைச் சிறப்பித்துப் பாடியவர் ஈழத்துப் பூதன் தேவனார் பாடியதெல்லாம் குறிஞ்சித்திணையே. ஆதலால், இருவரும் வேறுவேறு புலவர்கள் என்பது அறிஞர்கள் துணிபு.

பூதன், தேவன் என்ற பெயர்கள் தெய்வங்களைக் குறித்து வழங்கும் பெயர்கள். எனவே பூதன் என்பதனைத் தந்தை பெயராகவும், தேவன் என்பதனை மகன் பெயராகவும் கருத இடமுண்டு.

**நூல்:** குறுந்தொகை 285; நற்றிணை 80.

## பூதனார் (சங்ககாலம்)

**நூல்:** நற்றிணை 29.

## பூந்துருத்தி நம்பி காடவநம்பி (11-நூ)

**ஊர்:** திருப்பூந்துருத்தி; ஆதிசைவர்.

இவர் தேவாரம் பாடிய மூவருக்கும் பிற்பட்டவர். இராசராசனது 35 ஆம் ஆட்சி ஆண்டில் அமைந்த சாசனமொன்றில் இவரைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. ஆத்திரேய கோத்திரத்தவராக அவ்வரசன் காலத்தில் வாழ்ந்த அடியாரென்பதே அக்குறிப்பு. இதனால் இவர் இராசராசன் ஆட்சிக் காலமாகிய 11 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியினராவர். காடவர் கோன் என்று கூறப்படுதலால் இவர் பல்லவர் மரபைச் சேர்ந்தவரென்றுங் கூறுவர்.

**நூல்:** திருவிசைப்பா.

இத்திருவிசைப்பா திருவாரூருக்கும் தில்லைக்கும் உரியது; இது ஒன்பதாந் திருமுறையிலுள்ளது.

## பூபதி பழநியப்பநாயகர் (20-நூ)

**நூல்:** துரைசாமி நாயகர் என்பவர் இயற்றிய 'சிலையெழுபது உரை' யினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பூபாலபிள்ளை, ச. (20-நூ)

**ஊர்:** ஈழநாட்டில் மட்டக்களப்பில் புளியந்தீவு.

**தந்தை:** சதாசிவபிள்ளை; வேளாளர்.

**வாழ்ந்த காலம்:** 1856-1920.

இவர் தமிழும் ஆங்கிலமும் கற்றவர்; கவிபாடும் ஆற்றல் பெற்றவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் உறுப்பினராக இருந்து பணியாற்றியுள்ளார்.

**நூல்:** சீமந்தனி புராணம், விநாயகமான்மியம், தமிழ் வரலாறு.

பூரணதிருமலை நாதன் (        )

**நூல்:** சிதம்பர புராணம், சொக்கநாதர் உலா.

பூரணலிங்கம்பிள்ளை, எம். எஸ். (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி மாவட்டம் முந்நீர்ப்பள்ளம்.

**தந்தை:** சிவசுப்பிரமணிய பிள்ளை. **தாய்:** வள்ளியம்மை.

**வாழ்ந்த காலம்:** 24-5-1866 — 10-6-1947.

இவர் திருநெல்வேலி இந்துக்கல்லூரியில் மெட்ரிக்குலேஷன் வரை பயின்றார். சென்னை கிறித்தவக் கல்லூரியில் பயின்று பி.ஏ., பட்டம் பெற்றார். பாளையங் கோட்டை, ஈரோடு முதலிய இடங்களில் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரிய ராகவும், சென்னை கிறித்தவக் கல்லூரி, கோயம்புத்தூர் செயின்ட் மைக்கேல் கல்லூரி, திருநெல்வேலி இந்துக்கல்லூரி ஆகியவற்றில் ஆங்கிலப் பேராசிரியராகவும் பணியாற்றி யுள்ளார்.

இவர் ஆங்கிலப் பேராசிரியராயினும் தமிழில் நிறைந்த புலமை உடையவர். ஆங்கிலத்தில் தமிழ் இந்தியா, தமிழ் இலக்கிய வரலாறு என்னும் நூல்களை எழுதியுள்ளார். தமிழாக்கத்தின் பொருட்டுப் பெரிதும் உழைத்துள்ளார். 1897 ஆம் ஆண்டில் 'ஞான போதினி' என்ற திங்கள் இதழின் ஆசிரியராகத் தொண்டாற்றியுள்ளார்.

**நூல்:** தமிழ்க் கட்டுரைகள், மருத்துவன் மகள், தப்பிலி, கதையும் கற்பனையும், செய்யுள்கோவை, வாசகத் திரட்டு, விவேக விளக்கம்.

தமிழ் இந்தியா, தமிழ் இலக்கிய வரலாறு (ஆங்கில நூல்கள்).

**செய்யுள் கோவை:** கடவுள் வாழ்த்து முதல் பன்னெறி ஈறாக 42 பொருட்பகுதிகளை உடையது. தமிழ் இலக்கியங் களில் தெரிந்தெடுக்கப்பட்ட 1055 செய்யுட்கள் உள்ளன.

**வாசகத் திரட்டு:** பல ஆசிரியர்கள் எழுதிய உரைநடைகளின் தொகுப்பு. ஆங்கில நூலைப் பின்பற்றிய கதை முதலியனவும் உள்ளன.

**விவேக விளக்கம்:** விவேக சிந்தாமணி, நீதிநெறி விளக்கம் முதலிய பல நூல்களிலிருந்தும் தெரிந்தெடுக்கப் பட்ட பாடல்களின் தொகுப்பு. பாடல்களுக்குக் குறிப்புரையும் ஈற்றில் கொடுக்கப் பட்டுள்ளது.

## பூரணநந்த அடிகள் (20-நூ)

**வாழ்விடம்:** திருவண்ணமலையை அடுத்த வட்டாரப்புத்தூர்

இவருக்கு மாணவர் பலர் இருந்தனர்.

**நூல்:** 'சிவயோக சாரம்'.

## பூரணநந்த ராசயோகி (19-நூ)

**நூல்:** பூரணனந்தர் என்பவர் இயற்றிய 'சமரச கலைக் கியானம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பூரணனந்தர் (19-நூ)

**ஊர்:** கோவலூர்.

இவர் மெய்யறிவு மிக்கவர். பல அற்புதச் செயல்களைச் செய்து காட்டியுள்ளார். பிறவிப் பிணி மருத்துவராகவும் விளங்கினர். பேய், பிசாசு முதலியவற்றை விரட்டுவதில் வல்லவர் என்று கருதப்பட்டார். சில பிணிகளைத் திருநீறு அளித்தே நீக்கி விடுவார் எனப் பாராட்டப் பெற்றார்.

**நூல்:** 'சமரச கலைக்கியானம்'.

இந்நூல் 2500 செய்யுட்களை உடையது.

## பூலோகசிங்க முதலியார் (19-நூ)

**வே.பெ.** அருளம்பல நாவலர்.

**ஊர்:** யாழ்ப்பாணம் காரைத்தீவு.

**வாழ்விடம்:** தெல்லிப்பழை; கத்தோலிக்கர்.

**நூல்:** திருச்செல்வராசர் காப்பியம்.

இந்நூலில் 25 படலங்களும் 1900 செய்யுட்களும் உள்ளன.

## பூவர் (19-நூ)

**நூல்:** வேதமொழி அறிவித்தல் (1844), உண்மை நாட்டம் (1842).

## பூவராகம் பிள்ளை, ஆ. (20-நூ)

**ஊர்:** சிதம்பரம்.

**தந்தை:** ஆதிமூலம் பிள்ளை; வேளாளர்.

**வாழ்ந்த காலம்:** 27-11-1899 — 27-5-1953.

இவர் இளமையில் தில்லையிலுள்ள ஆறுமுக நாவலர் பள்ளியிலும் நடுநிலைப் பள்ளியிலும் தொடக்கக் கல்வி பயின்றார். பின்னர் இராமாநுச தரிசன வித்தியா சாலையிற் சேர்ந்து பயின்றார். 1917 ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் சேர்ந்து பாலபண்டிதம் தேர்வெழுதி இரண்டாம் இடத்தினைப் பெற்றார்.

கல்வி கற்றபின் திருப்பாதிரிப் புலியூர் நகரசபை உயர் நிலைப்பள்ளியில் ஆறு திங்கள் தமிழாசிரியராகப் பணியாற்றினார். பின்னர் மேலைச் சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் தொண்டாற்றினார். கரந்தைத் தமிழ்ச் சங்கத்தை நிறுவிய தமிழவேள் உமாமகேசுவரம்பிள்ளையின் நட்பினால் அச்சங்க ஆண்டு விழாக்கள் எல்லாவற்றிலும் இவருடைய சொற்பொழிவுகள் இடம் பெற்றன.

மேலைச் சிவபுரியில் பணியாற்றிய பின்னர்ச் சிதம்பரம் இராமசாமி செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றியதோடு வித்துவான் முதல் நிலைத் தேர்வுக்கும் பயின்று வந்தார். 1930 ஆம் ஆண்டில் வித்துவான் இறுதி நிலைத் தேர்வில் முதல்வராகத் தேர்வு பெற்று ஆயிரம் ரூபாய் பரிசு பெற்றார். 1930 ஆம் ஆண்டில்

அண்ணுமலைப் பல்கலைக் கழகப் புலவர் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்து பணியாற்றினுர். 1938 ஆம் ஆண்டில் புலவர் வகுப்பு ஆசிரியராஞர். கேட்டார் நெஞ்சம் பிணிக்கும் வகையில் கல்விகற்பிக்கும் திறம் பெற்றவர். இவர் பல கட்டுரைகள் எழுதியுள்ளார். தொல்காப்பியச் சொல்லதிகாரம் சேஞவரையருரைக்கு இவரெழுதிய விளக்கவுரை மிகச்சிறந்ததாகக் கருதப்படுகிறது.

**நூல்**: தொல்காப்பியச் சொல்லதிகாரச் சேஞவரையருரைக்கு விளக்கம், திருவாய் மொழி விளக்கம்.

## பூழியன் குடிப்புலவர் (        )

இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. இப்புலவர் ஊர்ப் பெயரொடு சேர்த்து வழங்கப் படுகின்ருர். பூழியன் குடி என்பது தற்போது புளியன்குடி என வழங்குகின்றது.

**நூல்:** ஆரியங்கா ஐயஞர் மீது பாடிய பாடல்.

இவ் ஆரியங்கா செங்கோட்டைக்கு மேற்கே உள்ளது.

## பெத்த நாயகம் பிள்ளை சி. (19-நூ)

இவர் திருநெல்வேலியில் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றியவர். செய்யுள் இயற்றுவதில் திறம் பெற்றவர்.

**நூல்:** இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவர் வெளியிட்ட சேது மான்மியம், தனிப் பாடற்றிரட்டு, திருக்கோவையார் முதலிய நூல்களைக் கேட்டு எழுதிய சீட்டுக் கவி.

இச் சீட்டுக் கவி ஆசிரிய விருத்தம், நேரிசை வெண்பா, நேரிசை ஆசிரியப் பாக்களால் இயன்றது.

## பெர்சிவல் (19-நூ)

இவர் கிறித்தவப் பாதிரியார். யாழ்ப்பாணத்திற்கு 1823 ஆம் ஆண்டில் வந்தார். இங்கு இவர் தொடங்கிய பாடசாலையே இன்று மத்திய கல்லூரியாக வளர்ச்சி பெற்றுள்ளது. 1833 ஆம் ஆண்டில் இந்தியாவிற்கு வந்த இவர் ஆறுமுக நாவலரிடம் தமிழ் நூல்கள் பலவற்றைக் கற்ருர். அவர்

துணையுடன் பைபிளைத் தமிழில் மொழி பெயர்த்தார். கிறித்தவ சமயத் தொடர்பான சிறு சிறு நூல்களைத் தமிழில் எழுதி வெளியிட்டார். 1843 ஆம் ஆண்டில் திருட்டாந்த சங்கிரகம் என்ற பெயரில் இரண்டாயிரம் பழமொழிகளைத் தொகுத்து ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிட்டார். இது ஆறுயிரம் பழமொழிகள் கொண்ட நூலாக 1875 இல் அச்சிடப் பெற்றது. சென்னை மாநகரில் இவர் தங்கியிருந்தபோது தினவர்த்தமானி என்னும் கிழமை இதழினை வெளியிட்டார். இதில் வந்த கட்டுரைகள் தொகுக்கப்பட்டு விநோதரச மஞ்சரி என்ற பெயரில் 1876 ஆம் ஆண்டு வீராசாமி செட்டியார் என்பவரால் வெளியிடப் பட்டது. இவர் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், வெற்றி வேற்கை, மூதுரை, நல்வழி, நன்னெறி, நீதி நெறி விளக்கம் முதலிய நூல்களை 1872 ஆம் ஆண்டில் ஆங்கில மொழி பெயர்ப்புடன் வெளியிட்டார்.

**நூல்:** நீதி நூற்றிரட்டு, ஆங்கில தமிழகராதி.

## பெரியகருப்பன் செட்டியார், ஏ. (20-நூ)

**ஊர்:** இராமநாதபுரம் மாவட்டம் தேவகோட்டை.

**தந்தை:** ஏகப்பச் செட்டியார்.

இவர் திரிசிரபுரம் மு. நடேச முதலியாரிடம் தமிழ் நூல்களைக் கற்றார்.

**நூல்:** அமிர்தம் சுந்தர நாதப்பிள்ளை பாடிய 'வயலூர் வெண்பா அந்தாதி' என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பெரியகாரிரத்தினக் கவிராயர் (        )

**பார்க்க:** இரத்தினக் கவிராயர் 1.

## பெரியசஞ்சீவி நாதசாமி (17-நூ)

**நூல்:** அண்டபிண்ட வியாக்கியானம், உலகப் பிரமாண சாத்திரம்.

முதல் நூலில் வானமண்டல விவரமும், பஞ்சபூதங்களின் இயல்புகளும், உடலியற் கூறுகளும் பற்றிய விஞ்ஞானச்

செய்திகள் அடங்கியுள்ளன. இது மொழியாக்கம் செய்யப் பெற்ற நூல். ஆனால் எம்மொழியிலிருந்து பெயர்க்கப் பெற்றது என்ற செய்தி தெரியவில்லை.

## பெரியசரவணக் கவிராயர் (18-நூ)

**ஊர்:** முதுகுளத்தூர்.

இவர் அவதானப் பயிற்சி மிக்கவர். வள்ளல்கள் பலரால் பரிசளித்துப் பாராட்டுப் பெற்றவர். சோமசுந்தர குருவினிடம் அளவிலா அன்பு பூண்டவர். சேதுபதி நன்றியை அனைவரிடமும் புகழ்ந்து பேசும் இயல்பினர். சேதுபதியின் பிரதானி முத்திருளப்ப பிள்ளை மீது காதற் பிரபந்தம் ஒன்று பாடியுள்ளார். பணவிடுதூது என்ற நூலும் இவரால் பாடப்பெற்றதாகும்.

## பெரியசாமிச் சேர்வை வெ. (20-நூ)

**ஊர்:** இராமநாதபுரம் மாவட்டம் சிவகங்கை.

**தந்தை:** வெள்ளைச் சாமிச் சேர்வை.

இவருடைய தந்தையார் அறுவை வாணிகம் செய்தவர். இவர் முத்துக் கிருட்டிண பிள்ளை என்பவரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்.

**நூல்:** 'கீர்த்திரச மஞ்சரி'.

இந் நூல் ஆண்டிப் பட்டிப் பெருநிலக்கிழார் பெத்தாச்சி செட்டியார் மீது இயற்றப் பெற்றது. இந் நூலில் இராமன் செயல்களைக் கூறி அவனே பெத்தாச்சி மன்னன் என்று பாராட்டியுள்ளார்.

## பெரியசாமித் தேவர் (19-நூ)

**ஊர்:** சொக்கம்பட்டி.

**நூல்:** முத்து வீரக் கவிராயர் என்பவர் இயற்றிய 'சங்கர நாராயண சுவாமி கோயிற் புராணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பெரியசாமிப் பிள்ளை (19-நூ)

**ஊர்:** புதுப்பாளையம்.

**நூல்:** சிவசிதம்பர முதலியார் க.ரா. என்பவர் இயற்றிய 'கறையேற விட்ட நகர்ப் புராணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பெரியசாமிப்பிள்ளை, அ. (19-நூ)

**நூல்:** இராமசாமி முதலியார், சுப்பு என்பவர் பாடிய வில்வவனத்தந்தாதி, கோகிலாம்பிகை மாலை, முத்துக் குமாரக் கடவுள் பஞ்சரத்தினம் என்னும் நூல்களைப் பாராட்டிப் பாடிய சிறப்புப்பாயிரம்.

## பெரியசாமிப்பிள்ளை, கோ. (19-நூ)

**நூல்:** அழகர் வர்ணிப்பு (1894).

## பெரியசாமிப்பிள்ளை, தே. (20-நூ)

**ஊர்:** உறையூர்.

இவர் சைவசித்தாந்த நூல்களிலும், தமிழ் இலக்கண இலக்கிய நூல்களிலும் பயிற்சி மிக்கவர்.

**நூல்:** பசுபதீசுரர் பாமாலை, திருவானிலை நாதர் போற்றிப் பதிகம், சௌந்தரிய நாயகி சதகம்.

## பெரியசாமிப்பிள்ளை, பு. அ. (20-நூ)

**ஊர்:** புதுச்சேரிக்கு அண்மையிலுள்ள புதுப்பாளையம்.

**தந்தை:** அப்பாசாமிப்பிள்ளை. **தாய்:** பூரணம்அம்மையார்.

**வாழ்ந்த காலம்:** 1843 — 1920.

இவர் நாகலிங்க அடிகள் என்னுந் துறவியிடம் தமிழ் நூல்கள் பலவற்றைக் கற்றுணர்ந்தார். சமய நூலறிவும் செய்யுளியற்றுந் திறனும் கைவரப்பெற்றார். இவர் பலருக்குத் தமிழறிவுறுத்தினார். புதுவையில் புலவர்களாக விளங்கிய அனைவருமே இவருடைய மாணவர்களென்று சொல்லலாம். புரட்சிக் கவிஞர் பாரதிதாசனும் இவருடைய மாணவரேயாவர். திருப்பாதிரிப் புலியூர் ஞானியாரடிகள்

இவருடைய புலமையைப் பாராட்டி இவருக்குப் பெரும் புலவரென்னும் பட்டத்தை வழங்கினர். 1912 ஆம் ஆண்டில் 'கலைமகள் கழகம்' என்னுங் கழகத்தை ஏற்படுத்தி அதன் தலைவராக இருந்து பல தொண்டுகள் செய்தார். அக் கழகத்தின் சார்பில் 'கலைமகள்' என்னும் இலக்கியத் திங்கள் இதழ் ஒன்றையும் வெளியிட்டார். அவ்விதழில் அரிய பல கட்டுரைகள் வெளிவந்தன.

**நூல்:** மயிலக் கலம்பகம், மயிலச் சிலேடை வெண்பா, மயிலஞ் சுப்பிரமணியர் நிரோட்டக வெண்பா, மயிலந்தாதி, புதுவை வெண்பா, புதுவைக் கலம்பகம், இராமாயண சங் கிரகம், புரூரவச் சக்கரவர்த்தி வாசகப்பா, தனிப்பாடல்கள் பல.

## பெரியசாமிப்புலவர், அ. (20-நூ)

**ஊர்:** சோழநாட்டில் வேளபூண்டித் துறப்பு.

இவர் இராம நாடகம் பெரியசாமிப் புலவர் என அழைக் கப்பட்டுள்ளார். குமரகுருபர ஐயர் என்பவரை ஆசிரிய ராகக் கொண்டிருந்தார். மேலக் கடம்பூர் என்ற ஊரில் எழுந்தருளியுள்ள சுப்பிரமணியர் பேரில் இசைப்பாடல்கள் பல பாடியுள்ளார்.

**நூல்:** திருமேலக்கடம்பூர் சுப்பிரமணியசாமி பேரில் கீர்த்தனைகள்.

## பெரியசாமியா பிள்ளை க. (19-நூ)

இவர் சங்கரநயினர் கோயில் கோட்டம் வெள்ளாளகுளம் மாணிக்க வாசகம் பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு தமிழ் நூல்களைக் கற்றார்.

**நூல்:** சரவணப் பதிகம்.

இந் நூல் முருகப் பெருமானைக் குறித்து அவனது அருளை வேண்டிப் பாடிய பதிகப் பாமாலை.

## பெரிய சீயர் (        )

**பார்க்க:** மணவாள முனிகள்.

## பெரிய சுப்பா ரெட்டியார் ( )

**ஊர்:** பாண்டி வள நாட்டுப் பால் வளம்.

இவர் அருணாசல தேசிகர் என்பவரிடத்தில் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ச்சி பெற்றவர்.

**நூல்:** அன்ன தான மகத்துவ புராணம்.

## பெரியண்ண பிள்ளை க. (19-நூ)

**வாழ்விடம்:** திரிசிரபுரம்.

இவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் கல்வி கற்றுத் தேர்ந்தவர்.

**நூல்:** தியாகேசர் மீதும் அல்லியங் கோதை அம்மை மீதும் பஞ்சரத்தினங்கள்.

## பெரிய தம்பிப் பிள்ளை (20-நூ)

**ஊர்:** திரிசிரபுரம்.

இவர் பாரதச் சொற்பொழிவில் சிறந்து விளங்கியமையால் பாரதப் பிரசங்கம் பெரிய தம்பிப் பிள்ளை எனவும் அழைக்கப் பெற்றார்.

**நூல்:** சரவணப் பிள்ளை பெ. என்பவர் இயற்றிய 'காந்த சார வெண்பா' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பெரிய திருமலை நம்பி ( )

**நூல்:** பெரிய திருமொழி நம்பி அருளிச் செயல்.

## பெரிய திருவடிக் கவிராசர் (19-நூ)

**ஊர்:** ஆழ்வார் திருநகரி.

இவர் அட்டாவதானம் செய்வதில் வல்லவர்.

**நூல்:** முத்தம்மாள் என்னும் பெண்மணி இயற்றிய திருச் செந்தில்மாலை என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

பெரிய நம்பி மாணவர் (     )

**நூல்:** திருவாய்மொழி அருஞ்சொல் விளக்கம்.

பெரிய நூகுலெப்பை ஆலிம் சாயபு (     )

**ஊர்:** காயற்பட்டினம்.

**நூல்:** வேதபுராணம்.

இந் நூல் தொழுகைப் படலம், அல்கம்துப் படலம், நோன்புப் படலம் முதலான 28 படலங்களில் 922 பாடல்கள் அடங்கியது.

பெரிய நாயகன் (     )

**நூல்:** மாய இராவணன் கதை.

பெரிய பிள்ளை (     )

**ஊர்:** சிவபுரம்.

இவர் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கியவர். திருவாவடுதுறை அம்பலவாண தேசிகரைக் குருவாகக் கொண்டு மூவகைத் தீக்கையும் பெற்றுச் சைவ சித்தாந்த நூல்களைக் கற்றுத் தேர்ந்தார். தம்முடைய ஆசிரியரைப் போற்றிப் பல பாடல்கள் பாடியுள்ளார்.

**நூல்:** திருவெண்பா.

பெரியவன் கவிராயர் (     )

**நூல்:** திருமலை அதிபர் பள்ளு.

பெரியவாச்சான் பிள்ளை (15-நூ)

**வே.பெ.** ஸ்ரீகிருஷ்ணபாதர், அபயப்பிரதானர்.

**ஊர்:** குடந்தைக்கு அண்மையிலுள்ள சேங்கநல்லூர்.

**வாழ்விடம்:** திருவரங்கம்.

இவர் நம்பிள்ளையின் மாணவர். வடக்குத் திருவீதிப்பிள்ளை, பின்பழகிய பெருமாள் சீயர், ஈயுண்ணி மாதவப் பெருமாள்

என்போர் இவருடன் பயின்றவர்கள். பிள்ளை என்ற பட்டம் இவர்கள் காலத்தில் அந்தணர்க்கும் வழங்கிற்று.

**நூல்:** திருவாய்மொழிக்கு இருபத்து நாலாயிரப்படி வியாக்கியானம், தனிசுலோகி, பரந்த ரகசியம், மாணிக்கமாலை, நவரத்தினமாலை, சகலபிரமாண தாத்பரியம், அபயப் பிரதான வியாக்கியானம், சரம ரகசியம், அனுசந்தானரகசியம், நிகமனப்படி, சத்தியத்திரயஉரை, பாசுரப்படி ராமாயணம்.

## பெரியாழ்வார் (8-நூ)

**இ.பெ.** விட்டுணு சித்தர்.

**ஊர்:** ஸ்ரீ வில்லிபுத்தூர்.

**தந்தை:** முகுந்தபட்டர். **தாய்:** பதுமவல்லி; அந்தணர் வேயர்குடி.

இவர் ஆனித்திங்கள் சுவாதி நட்சத்திரத்தில் அவதரித்தவர். எல்லா விருப்பமும் நிறையப் பெற்றவனான இறைவன், கிருஷ்ணவதாரத்தில் ஸ்ரீ மாலாகாரரிடம் சென்று, மலர் மாலை இரந்து பெற்று அணிந்து கொண்ட செயலில் ஈடுபட்டு, திருநந்தனவனம் உண்டாக்கித் திருமாலை கட்டி அணிதல் முதலிய செயல்களைச் செய்து, திருமாலிடம் தீவிர ஈடுபாடு கொண்டு வாழ்ந்த பெரியார். திருமகள் நாதனைப் பல்லாண்டு பாடி வாழ்த்தினமையின் இவரை வைணவப் பெரியார்கள் பெரியாழ்வார் என்று அழைத்தனர்.

பாண்டியன் அவைக்களத்தில் திருமாலே பரம்பொருள் என்று அறுதியிட்டு அவன் நிறுவிய பொற்கிழியைப்பெற்றவர். திருவரங்கம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருக்குறுங்குடி, ஸ்ரீ வில்லிபுத்தூர், திருப்பேரை, திருக்கண்ணபுரம், திருவெள்ளறை, திருக்குடந்தை, திருக்கோட்டியூர், சாளக்கிராமம், வடமதுரை, பாற்கடல் என்பன இவர்பாடிய திவ்விய தேசங்களாகும். இவருடைய பாசுரங்கள் 'பெரியாழ்வார் திருமொழி' என்ற பெயரால் வழங்கப்படுகின்றன.

**நூல்:** பெரியாழ்வார் திருமொழி, திருப் பல்லாண்டு, நித்தியாநு சந்தானம்.

**பெரியாழ்வார் திருமொழி:** நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் முதலில் அமைக்கப்பட்டுள்ளது. கண்ணனது குழவிப் பருவத்தின் அரிய விளையாட்டுக்கள் முதலியவைகளையே பொருளாகக் கொண்டு பாடப்பட்டது. இதில் 44 திருமொழிகள் உள்ளன. இவற்றின் மொத்தப் பாசுரங்கள் 461, திருப்பல்லாண்டில் பாசுரங்கள் 12, ஆகப்பாசுரங்கள் 473.

**நித்தியாநு சந்தானம்:** நாள்தோறும் ஓதுவதற்குரிய ஒரு பாமாலை.

## பெரியான் ஆதிச்சதேவன் (13-நூ)

இவர் கல்வெட்டாலறியப்படும் புலவர். இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூர்க் கோட்டம் பெரிச்சிகோவில் என்ற ஊரிலுள்ள சுந்தரவனேசுவரர் கோயிற் சாசனம் ஒன்று காங்கேயன் பிள்ளைக் கவி என்ற நூலினைக் குறிப்பிடுகின்றது. கண்டன் உதயஞ்செய்தான் காங்கேயன் என்ற சிற்றரசன் மீது பெரியான் ஆதிச்சதேவன் என்ற புலவரால் பாடப்பட்டதே இப்பிள்ளைத்தமிழ் நூல். இதற்காக இப் புலவருக்குச் சாத்தனேரி என்ற ஊரில் நிலம் பரிசளிக்கப் பட்டதாக இச்சாசனம் கூறுகின்றது. இச்சாசனம் பாண்டியன் மாறவர்மனான திரிபுவன சக்கரவர்த்தி சுந்தர பாண்டிய தேவரின் 14 ஆவது ஆட்சியாண்டில் எழுதப் பட்டது. இச்சாசனங் கூறும் பாண்டியன் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவனாதலால் அவனைப் பாடிய புலவரும் இக்காலத்தினரேயாவர்.

**நூல்:** காங்கேயன் பிள்ளைக்கவி.

இந்நூல் இப்போது கிடைக்கவில்லை.

## பெரியான் பிள்ளை ( )

**ஊர்:** சோழநாட்டில் மாந்தைநகர் ஆக்காடு; வேளாளர்.

**நூல்:** அரிச்சந்திரன் கதை.

இந்நூல் 511 செய்யுட்களால் இயன்றது. இது வீரகவிராயர் இயற்றிய அரிச்சந்திர புராணத்தினும் வேறானது.

## பெருங்கண்ணனார் (சங்ககாலம்)

இவர் மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார், மருங்கூர் கிழார் பெருங்கண்ணனார், விளிக்கட்பேதைப் பெருங்கண்ணனார் என்ற சங்கப்புலவர்களினின்றும் வேறானவர். பெருங்கண்ணன், இளங்கண்ணன் என்ற பெயர்கள் சங்க இலக்கியத்துள் காணப்படுகின்றன. இவற்றுள் பெருங்கண்ணன் என்ற பெயருடையார் வயதில் மூத்தவர் என்றும், இளங்கண்ணன் என்ற பெயருடையவர் வயதில் இளையவர் என்றும் ஒரு கருத்துண்டு.

**நூல்:** குறுந்தொகை 289; 310; நற்றிணை 137.

## பெருங்கருணை முத்தழகர் (19-நூ)

சேதுநாட்டில் பிறந்த இவர் அட்சராவதானஞ் செய்வதில் வல்லவர். ஆயிரம் அட்சரங்களை எவ்வகையில் மாற்றினும் முறையாக அமைத்துப் படிக்கக் கூடியவர்.

**நூல்:** திருக்கோட்டியூர்க் கலம்பகம்.

## பெருங்குன்றூர் கிழார் (சங்ககாலம்)

**ஊர்:** பெருங்குன்றூர்.

இவர் ஊராற் பெயர்பெற்ற சங்கப்புலவருள் ஒருவர். இவர் குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை என்னும் சேர மன்னனைப் பாடிய புலவராவர். சேரமன்னன் பற்றிய பத்துச் செய்யுட்கள் பதிற்றுப் பத்தில் ஒன்பதாம் பத்தாக அமைந்துள்ளன. இப்பாடல்களைப் பாடியமைக்காகப் புலவர் சேரமன்னனிடம் பெற்ற பரிசில் முப்பத்திரண்டாயிரம் பொற்காசும் வேறுசிலவும் என்று தெரிகிறது. கடைச்சங்கம் இருந்து தமிழ் ஆராய்ந்த புலவர்களில் இவர் ஒருவர் என்று இறையனார் களவியலுரை கூறுகின்றது. பரிசில் கொடாமைக்காகக் குடகோச்சேரல் இரும்பொறை என்பவனை இவர் இகழ்ந்து பாடிய பாடல்கள் புறநானூற்றில் காணப்படுகின்றன. பதிற்றுப் பத்தில் கூறப்படும் சேரமன்னனும், இங்கு குறிப்பிடப்படும் சேரமன்னனும் ஒருவரா என்று சிலர் ஐயுறுகின்றனர். இளஞ்சேரல் என்பதனால் தம்பியாக

இருக்கலாம் என்று கருதுபவரும் உண்டு. இவர் உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னியையும், பேகன் என்ற வள்ளலையும் பாடியுள்ளார்.

**நூல்:** அகம் 8; குறுந்தொகை 338; நற்றிணை 5, 112, 119, 347; பதிற்றுப்பத்து 9ஆம்பத்து; புறம் 147, 210, 211, 266, 318.

## பெருங்கௌசிகனார் (சங்ககாலம்)

இவரும் தொண்டைநாட்டு இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனாரும் ஒருவரா என்று ஓர் ஐயம் உண்டு. இருவரும் ஒருவரே என்பது பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் போன்றோருடைய கருத்தாகும். இவ்வாறாயின் மலைபடுகடாம் பாடியவரும் இவரேயாவர். சமாசப் பதிப்பினர் இருவரையும் வெவ்வேறு புலவர்கள் என்று கருதுகின்றனர்.

**நூல்:** நற்றிணை 44, 139.

## பெருஞ்சாத்தனார் (சங்ககாலம்)

சாத்தன் என்ற பெயருடைய சங்கப் புலவரினின்றும் வேறுபடுத்தியறிய இவர் பெருஞ்சாத்தனார் என்று அழைக்கப் பெற்றார். இப்புலவரும் தொடித்தலை விழுத்தண்டினாரால் பாடப்பெற்ற ஒல்லையூர்கிழார் மகன் பெஞ்சாத்தன் என்ற வள்ளலும் ஒருவராக இருக்கலாமோ என்று ஓர் ஐயம் உண்டு.

**நூல்:** குறுந்தொகை 263.

## பெருஞ்சித்திரனார் (சங்ககாலம்)

இவர் குமணன் என்ற வள்ளலைப்பாடிப் பரிசு பெற்றவர். வெளிமான் என்ற வேந்தன்பால் சென்றபோது அவன் துஞ்சினான்; துஞ்சுங்கால் தன் தம்பி இளவெளிமானை அழைத்துப் பரிசில் வழங்கப் பணித்தான். ஆனால் அவன் இவர் வரிசை நோக்காது சிறிது வழங்கவே குமணனைப் பாடிப் பரிசுப்பெற்றார். அவன் கொடுத்த பகட்டினை வெளிமானது ஊர்க்கடிமரத்தில் கட்டி அதன் பின்னர் இளவெளிமானைக் கண்டு தாம் குமணன்பால் பெற்ற பெரு

வளத்தைப் புலப்படுத்தினார். இவர் குமணனை வாழ்த்திப் பாடிய பாட்டில் பாரி, ஓரி, காரி, எழினி, பேகன், ஆய், நள்ளி என்ற வள்ளல்கள் எழுவரையும் எடுத்தோதி இவ் வள்ளல்களுக்குப் பின்னே வள்ளலாகத் திகழ்ந்தவன் குமணன் என்று சிறப்பித்துள்ளார்.

**நூல்:** புறம் 158, 159, 160, 161, 162, 163, 207, 208, 237, 238.

## பெருந்தலைச் சாத்தனார் (சங்ககாலம்)

இவர் ஊருப்பாற் பெயர் பெற்ற சங்கப்புலவர்களுள் ஒருவர். இவர் பெயர் ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார் எனவும், மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார் எனவும் காணப்படுகின்றது. இதனை ஏற்பின் இவர் தந்தையார் ஆவூரினர் என்றும் மூலங்கிழார் என்ற பெயரினர் என்றும் தெளியலாம்.

பெருந்தலை என்ற பெயருடைய ஊர்கள் தமிழகத்தில் பல உள. இவ்வாறாயின் இவர் ஊராற் பெயர் பெற்ற சங்கப் புலவராவர். குமணன் தலையைக் காத்தவர் என்பது பற்றிப் பிற்காலத்தில் இப்பெயர் வழங்கியிருக்கலாம் என்றும் சிலர் கருதுகின்றனர்.

**நூல்:** அகம் 13, 224; நற்றிணை 262; புறம் 151, 164, 165, 205, 209, 294.

## பெருந்தேவனார் - 1 (சங்ககாலம்)

சங்கப்புலவர்களுள் பெருந்தேவனார் என்ற பெயருடைய புலவர்கள் பலராவர். பாரதம் பாடிய பெருந்தேவனார், கடுகு பெருந்தேவனார், கவிசாகரப் பெருந்தேவனார் என்ற புலவர்களினின்றும் வேறானவர் பெருந்தேவனார் என்பவராவர் என பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் குறிப்பிடுகின்றார். சமாசத்தார் பாரதம் பாடிய பெருந்தேவனாரைத் தவிர்த்து ஏனைய புலவர் பெயர்களை ஒரே புலவரின் பெயர்களாகக் கொண்டுள்ளனர்.

**நூல்:** அகம் 51; குறுந்தொகை 255; நற்றிணை 83.

## பெருந்தேவனுர் - 2 (9-நூ)

கடைச்சங்க காலத்தில் இயற்றப்பட்ட பாரதம் மறைந்த பிறகு பிற்காலத்தில் பாரதத்தைத் தமிழில் பாடியவர் இருவர். இவர்களுள் கி.பி. ஐந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்தவ ரென்று கருதப்படுபவர் ஒருவர். இவர் அகநானூறு, புற நானூறு, நற்றிணை, குறுந்தொகை முதலிய தொகை நூல் களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடியவர். இங்குக் குறிப்பிடப் பெறும் பெருந்தேவனுர் கி.பி. 9ஆம் நூற்றுண்டில் தெள் ளாறெறிந்த நந்திவர்மன் (3ஆம் நந்திவர்மன்) காலத்தவர். அவனுல் ஆதரிக்கப்பட்டவருமாவர்.

**நூல்:** பாரத வெண்பா.

இந்நூல் இடையிடையே ஒரு சில ஆசிரியப்பாக்களைக் கொண்டு பெரிதும் வெண்பாவினுல் இயற்றப்பட்டது. இது உத்தியோக பருவம், வீடுமபருவம், துரோணபருவம் என்னும் மூன்று பருவங்களையுடையது.

## பெருந்தேவனுர் - 3 (12-நூ)

இவர் சங்க நூல்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடிய பெருந்தேவனுர். கி.பி. 9ஆம் நூற்றுண்டில் வாழ்ந்து பாரத வெண்பாப் பாடிய பெருந்தேவனுர் ஆகியோரினும் வேறுனவர். கி.பி. 12ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவர், சமணசமயத்தைச் சார்ந்தவர்.

**நூல்:** வீரசோழியம் – உரை.

வீரசோழியம் என்ற நூல் பொன்பற்றியூர் புத்தமித்திரனுர் என்பவரால் இயற்றப்பட்டது. இந்நூலுக்கு வரையப் பட்டதே இவருடைய உரை.

## பெருந்தோட் குறுஞ்சாத்தன் (சங்ககாலம்)

இவர் உறுப்பாற் பெயர் பெற்ற சங்கப்புலவர்களுள் ஒருவர். பெருந்தோளையும், குறுகிய மெய்யையும் உடைய வராய் இருத்தல் பற்றி இவ்வாறு அழைக்கப்பட்டார் என்பர்.

**நூல்:** குறுந்தொகை 308.

## பெரும்பதுமனூர் (சங்ககாலம்)

மீளிப்பெரும்பதுமனூர் என்ற பெரும்புலவரும் இவரும் ஒருவரே என்று கருதலாம் என்பது பின்னத்தூர் நாராயண சாமி ஐயர் கருத்து. இருவரும் வேறு வேறு புலவர்கள் என்ற கருத்தும் உண்டு.

**நூல்:** குறுந்தொகை 7; நற்றிணை, 2, 109; புறம் 199.

## பெரும்பற்றப் புலியூர் நம்பி (13-நூ)

**வே.பெ.** தில்லை நம்பி.

**ஊர்:** பாண்டிய நாட்டில் வேம்பத்தூர் என்னும் செல்வி நகர்; சோழியர் குலம்.

இவர் கி.பி. 13ஆம் நூற்றாண்டிற்குப் பின் விளங்கியவர் என்றுங் கூறுகின்றனர்.

இவர் பிறந்த வேம்பத்தூர் நிம்பை எனவும் குலசேகர சதுர்வேத மங்கலம் எனவும் வழங்கப்படும். இவர் மரபினர் தில்லை நடராசப் பெருமானிடம் பேரன்பு கொண்டவ ராதலால் தில்லை நம்பி என வழங்கப் பெற்றார். இவருடைய ஞானாசிரியர், சிதம்பரம் மாளிகை மடத்திலிருந்த வெண் காடருடைய மாணவராகிய விநாயகரென்பவர். இவர் காலத்திலிருந்த பாண்டியனொருவன் வேண்டிக் கொண்டதற் கிணங்கத் திருவிளையாடற் புராணம் என்ற நூலினைப் பாடினார். இது திருவாலவாயுடையார் திருவிளையாடல் என வழங்குகிறது. இதனை நம்பி திருவிளையாடல், பழைய திருவிளையாடல், வேம்பத்தூரார் திருவிளையாடல் என்ற பெயர்களாலும் குறிப்பிடுவர். இவரது திருவிளையாடல் அரங்கேறிய பொழுது பாண்டியன், இவர் பிறந்த செல்வி நகரை முற்றூட்டாகக் கொடுத்துப் பல்லக்கு முதலிய சிறப்புக்களையும் செய்து பாராட்டினான்.

**நூல்:** திருவாலவாயுடையார் திருவிளையாடல்.

இத் திருவிளையாடல் பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடலினும் வேறானது. இவை இரண்டு திரு விளையாடற் புராணங்களும் திருவிளையாடல் முறை

வைப்பிலும் வரலாற்றுப் பகுதிகளிலும் பாண்டிய மன்னர்களின் பெயர் கூறும் முறைகளிலும் ஒன்றற்கொன்று மாறுபட்டுச் செல்கின்றன.

## பெரும்பாக்கன் (சங்ககாலம்)

**ஊர்:** பெரும்பாக்கம்.

தமிழகத்தில் பெரும்பாக்கம் என்ற பெயருடைய ஊர்கள் பல. அவற்றுள் இவர் எவ்வூரினர் என்று தெரியவில்லை.

**நூல்:** குறுந்தொகை 296.

## பெருமாள் செட்டியார் (19-நூ)

**ஊர்:** உறையூர்.

**நூல்:** சுப்பராய ஆச்சாரியார் என்பவர் இயற்றிய அகம் புற ஆராய்ச்சி விளக்கம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பெருமாள்பிள்ளை, ஆ. (20-நூ)

**ஊர்:** திரிசிரபுரம்.

**நூல்:** ஆதிதிராவிடர் வரலாறு, அறிவானந்தன்.

அறிவானந்தன் என்பது ஒரு புனைந்துரைக் கதை.

## பெருமாள் கவிராயர் (18-நூ)

**ஊர்:** இராயநல்லூர்.

**தந்தை:** இராமச்சந்திர கவிராயர்.

இவருடைய தந்தையார் நாடக நூல்கள் சிலவற்றை இயற்றியுள்ளார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரம் தெரியவில்லை.

**நூல்:** கொற்றமங்கலம் இராமசாமிப் பிள்ளை வெளியிட்ட கொக்கோகம் என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பெருமாள் தொண்டர் (19-நூ)

**நூல்:** பலமுறைத் திரட்டு.

இந்நூல் வாணி புரியில் உள்ள சுப்பிரமணியரைப் பற்றிய தோத்திரப் பிரபந்தங்கள் அடங்கிய தொகுதி. இதில் வாணி புரி பஞ்சரத்தினம், வாணிபுரி ஏகமணி மாலை, வாணிபுரி கேள்விப்பத்து, வாணிபுரி வேண்டுபத்து, வாணிபுரி விண்ணப்ப முறை, வாணிபுரி வஞ்சி விடு தூது, வாணி மாநகரம் வஞ்சித் துறை, வாணிபுரி போற்றிப் பத்து, வாணிபுரி மணமொடு மகிழ்தல், வயலூர் மும்மணி மாலை, வாணிபுரி அடைக்கலப் பத்து, தணிகாசலம் கந்தரன்பது, வாணிபுரி வடுகப்பத்து, தணிகாசலம் கிருத்திகை சேவை, ஒயிற் கும்மி, கீர்த்தனை ஆகியவை அடங்கியுள்ளன.

## பெருமாளையங்கார் (20-நூ)

**ஊர்:** பாண்டி நாட்டு விழுப்ப நல்லூர்.

**தந்தை:** சுந்தரராச ஐயங்கார்.

**நூல்:** விட்டுணு துவாதசமாலை, இராம நித்திய மங்கள சரித்திரம், நவக்கிரகமாலை, ஆஞ்சநேய மாலை, சடகோய மாலை, திருக்குறுங்குடிப் பதிகம்.

## பெருமாளையர் ( )

**நூல்:** தேரூர்ந்த நாடகம்.

## பெருவழுதி (சங்ககாலம்)

கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, இளம்பெருவழுதி ஆகியவரும், இப்புலவரும் ஒருவரே என்பர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர். சமாசத்தார் கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, இளம்பெருவழுதி ஆகியோரை ஒரு புலவ ராகவும் இவரை வேறொரு புலவராகவும் கொண்டுள்ளனர்.

**நூல்:** நற்றிணை 55, 56.

## பெருவாயின் முள்ளியார் (5-நூ)

இவர் ‘ஆசாரக் கோவை’ என்ற நூலின் ஆசிரியர். இதன் கடவுள் வாழ்த்தினால் இவர் சைவ சமயத்தினர் எனத் தெரிய வருகிறது.

**நூல்:** 'ஆசாரக் கோவை'.

இந்நூல் பதினென் கீழ்க்கணக்கு நூல்களைச் சேர்ந்தது. இதில் கடவுள் வாழ்த்து உள்பட 101 செய்யுட்கள் உள்ளன.

பெரைரா (        )

**நூல்:** திருத்தலை வில்லின் (தலை வில்லா) வழிநடைப் பதிகம்.

பெஸன்ட் அன்னி (        )

**நூல்:** ஆரிய பாலகர்களின் வித்தியாப் பியாஸத்தைப் பற்றிச் செய்த ப்ரஸங்கங்கள் (1897).

இந்நூல் ஒரு மொழி பெயர்ப்பு நூல்; இது உரைநடையில் அமைந்தது. பரதகண்டத்தில் சிறுவர்கள் பெண்கள் முதலியோரின் கல்விபற்றி உரைப்பது.

பேச்சியப்ப பிள்ளை        )

**நூல்:** சங்கர நாராயண சாமி கோயில் மான்மியம் (1988).

பேய்மகள் இளவெயினி (சங்ககாலம்)

இவர் பெயர் பேய்மகள் இளவினி என்ற பாடவேறு பாட்டுடனும் காணப்படுகின்றது. இவர் எயினர் குடியினர் என்றும், குறவர் குடியினர் என்றும் இரு கருத்துக்கள் உண்டு. இவர் பெயருக்கு முன்வரும் பேய்மகள் என்னும் தொடர் எதனால் வந்தது என்பது குறித்துப் பல்வேறு கருத்துக்கள் உண்டு. புறநானூற்றில் பழைய உரையாசிரியர் பேயே ஒரு மகள் வடிவம் கொண்டு வந்து பாடியிருக்கலாம் என்று குறிப்பிடுகின்றார். இதுபோன்ற கதை தன் காலத்தில் வழக்கில் இருந்ததாகவும் சுட்டுகின்றார். பேய்மகள் என்பது தெய்வமுற்று ஆடும் தேவராட்டி அல்லது பூசாரிச்சியைக் குறிக்கும். தெய்வமுற்றுற் போல வந்து நின்று குறி கூறுவது இவர்கள் தொழிலாகையால் அத்தகைய தேவராட்டியருள் இளவெயினியும் ஒருவராக இருக்கலாம் என்று ஒரு கருத்தும் உண்டு. போர்க்களத்தில் பிணந்தின்னும் பேய் மகளிரை வியந்து விரிவாகப் பாடிய சிறப்பால் இளவெயினியார்க்கு பேய் மகள் என்ற சிறப்புப் பெயர் அமைந்திருக்கலாம்

என்பதும் சிலர் கருத்தாகும். இவர் சேரமான் பாலைபாடிய பெருங் கடுங்கோவைப் பாடியுள்ளார்.

**நூல்:** புறம் 11.

## பேயனார் (சங்ககாலம்)

பேயார் என்ற புலவரும், இவரும் ஒருவரே என்பது சமாசத்தார் கருத்து.

**நூல்:** அகம் 234; ஐங்குறுநூறு முல்லைத் திணைப் பாடல்கள் (401 — 500); குறுந்தொகை 233, 339, 359, 400.

## பேயாழ்வார் (8-நூ)

**ஊர்:** திருமயிலை.

இவர் திருமாலிடத்து ஒப்பற்ற பக்தியுடையராய் கண்டவர்கள் யாவரும் 'இவர் பேய் பிடித்தவர்' என்னும்படி நெஞ்சழிந்து கண் சுழன்று அழுதும் சிரித்தும் தொழுதும் எழுந்தாடியும் மகிழ்ந்து பாடியும் பொழுது போக்கிக் கொண்டிருந்தபடியால் பேயாழ்வார் என்று பெயர்பெற்றார்.

**நூல்:** மூன்றாந் திருவந்தாதி.

இது நாலாயிரப் பிரபந்தத்தில் மூன்றாவது ஆயிரமாக நாத முனிகளால் வகுக்கப்பட்ட இயற்பாவில் மூன்றாவது பிரபந்தமாகும். பொய்கையார், பூதத்தார் திருவந்தாதிகளுக்குப் பிறகு இத்திருவந்தாதி தோன்றிய படியால் மூன்றாந் திருவந்தாதி எனப் பெயர் பெற்றது. இது வெண்பா அந்தாதி; 100 வெண்பாக்களையுடையது.

## பேரம்பலநாடார் வே. க. (20-நூ)

**ஊர்:** பாண்டிய நாட்டில் சாலிச் சந்தை.

இவர் பரங்கிரி நாடார் என்பவரின் மாணவர்; இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றவர்; செம்பாகமாகச் செய்யுள் இயற்றுவதில் வல்லவர்.

**நூல்:** இராமலிங்கக் கவிராயரென்பவர் மதுரைமாநகரில் அட்டாவதானம் செய்தபோது புகழ்ந்து பாடிய பாடல்கள்.

## பேரம்பலப்புலவர் (20-நூ)

**ஊர்:** ஈழத்தில் வேலணை.

**தந்தை:** கோணமலை; வேளாளர்.

**வாழ்ந்த காலம்:** கி.பி. 1859 — 1935.

இவர் வேலணையில் அமெரிக்கன் மிஷன் பள்ளியில் தொடக்கக் கல்வி பயின்றார். அப்பள்ளியின் தலைமை ஆசிரியர் கனகசபைப் பிள்ளையிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். பின்னர் கந்தப்பிள்ளை என்பவரிடம் சந்தான சைவ சித்தாந்த நூல்களைக் கற்றார். குமரகுரு என்பவரிடம் காலக் கணிதம் கற்றார்.

கல்வி கற்றபின் நொத்தாரிசு முருகேசு என்பவரிடம் விகிதராய்ப் பணியாற்றினார். அதுகாலை பல தனி நிலைக் கவிகளும், கையறு நிலைச் செய்யுளும் பாடியுள்ளார். பின்னர் அத்தொழிலை விடுத்துத் தமக்குரிய வேளாண் தொழிலை மேற் கொண்டார். அதுகாலை மாணவர்களுக்குக் கல்வி கற்பிக்கும் பணியையும் மேற்கொண்டார்.

**நூல்:** வண்ணைச் சிலேடை வெண்பா; வேலணை இலந்தைக் காட்டுச் சித்திவிநாயகர் இரட்டைமணிமாலை; கடம்பரந்தாதி.

இவற்றுள் முதலிரண்டு நூல்களும் இவரது வரலாறும் இவர் மறைவிற்குப் பின்னர் பண்டிதர். பொ. இரத்தினம் அவர்களால் அச்சிடப் பட்டுப் 'பேரம்பலப் புலவர் நினைவு மலர்' என்னும் பெயரில் வெளியிடப் பட்டுள்ளது.

## பேராசிரியர் (13-நூ)

இவர் தொல்காப்பிய உரையாசிரியர்களுள் ஒருவர். ஆசிரியர் பலருள்ளும் சிறந்து விளங்கிய புலமையான் பேராசிரியர் என்ற சிறப்புப் பெயர் பெற்றார். யாப்பருங்கல விருத்தியில் குறிப்பிடப்படும் பேராசிரியர் திருக்கோவையாருக்கு உரை எழுதிய பேராசிரியர் ஆகியோரினும் வேறானவர். இவர் நன்னூல் நூற்பாக்களையும், நூற்பாக் கருத்துக்களையும் தமது உரையில் எழுத்தாண்டுள்ளமையால்

13 அம் நூற்ருண்டினரான பவனந்தி முனிவருக்குப் பிற்பட்டவர். நச்சினுர்க்கினியர் இவரைத் தமது உரையில் குறிப்பிடுவதால் அவருக்கு முற்பட்டவர் என்பது தெளிவு. இவர் இறையனுரைப் 'பெருமானடிகள்' என்று சிறப்பாகக் குறிப்பிடுவதால் சைவசமயத்தினர் என்று கொள்ளலாம்.

பொருளதிகாரத்தில் மெய்ப்பாட்டியல் முதலிய நான்கியல்களுக்கே உரை அச்சாகியுள்ளது. இவ்வியல்களுக்கு எழுதும் உரையில் 'அகத்திணையியலுங் கூறினும்' என்று எழுதியுள்ளமையாலும், பிற குறிப்பாலும் பொருளதிகாரம் முழுமைக்குமே இவர் உரைசெய்தவர் என்று தோன்றுகிறது. நச்சினுர்க்கினியர் உரைப் பாயிரத்தால் அறியப்படும் குறுந்தொகைக்கு இவர் எழுதிய உரை கிடைத்திலது.

இவர் தமது உரையில் தொல்காப்பிய அதிகாரங்களின் அமைப்பைப் பற்றியும், அவற்றின் பெயர்களைப் பற்றியும் குறிப்பிடுகின்ருர். இவருரை உயர்ந்த நடையினது. தடைவிடைகளோடு கருத்தை விளக்கும் தன்மையது. நூற்பாக்களுக்கு ஆற்ரெழுக்காகப் பொருள் விளக்கிச் செல்வது. இவரது உரையால் மெய்ப்பாட்டியலும், உவம இயலும் பெரிதும் விளக்கம் அடைந்தன. மெய்ப்பாட்டியலை மிக விரிவாக ஆராய்ந்து பல நுட்பமான கருத்துக்களைக் கூறியுள்ளார். இளம் பூரணருடன் மாறுபட்டு உரை எழுதும்போது, மாறுபட்ட இடங்களை மிக நயமாக மறுப்பார். பழைய மரபையும், பழைய நூற்கொள்கைகளையும் பெரிதும் போற்றுவார். புதிய நூல் வழக்கையும் கொள்கைகளையும் கடிந்து ஒதுக்கி விடுவார். இவரது உரையில் ஆராய்ச்சித் திறன் வெளிப்படும்.

**நூல்:** தொல்காப்பியம் பொருளதிகார உரை (பின் நான்கியல்களுக்கு மட்டும்).

## பேராசிரியர் - 2 (12-நூ)

இவர்தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரியரினும் வேருனவர். யாப்பருங்கல விருத்தியில் சுட்டப் பெறுபவர் ஆவர். யாப்பருங்கல விருத்தியில் பேராசிரியர் நூற்பாக்கள்

சில மேற்கோளாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன. எனவே இவர் யாப்பு நூலொன்று செய்தவரென்பது தெளிவு. 'பிறைமுடிக் கறைமிடற்றரனுர் பெயர்மகிழ்ந்த பேராசிரியர்' 'நீர்மலிந்த கார் சடையோன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்', திரிபுரமெரித்தவர் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்'' 'கறை மிடற்ருேன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்', பெண்ணெருரு பாகன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்'. 'பெருமான் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்', 'வாமமேகலை மாதையோர் பாகனுர் நாமம் மகிழ்ந்த பேராசிரியர்', 'காமனைக் காய்ந்தவர் நாமம் மகிழ்ந்த நல்லாசிரியர்', என இவர் யாப்பருங்கல விருத்தி ஆசிரியரால் கூறப்படுகின்ருர். இவ் விருத்தியுரையில் சில ஏடுகளில் பேராசிரியர் என வருமிடங்களில் 'மயேச்சுரர்' என்று காணப்படுதலால் இவர்தம் இயற்பெயர் மயேச்சுரர் என்று கருத இடமுண்டு. மயேச்சுரர் என்பது சிவபெருமான் பெயர்களுள் ஒன்ருதலாலும், பேராசிரியருக்குக் கொடுக்கப் பட்டுள்ள அடைமொழிகளெல்லாம் சிவபெருமான் பெயரையே குறிப்பனவாதலாலும் இக்கூற்று வலிவுபெறும். மேலும் மயேச்சுரரால் யாப்பிலக்கணமொன்று இயற்றப் பட்டுள்ளதென யாப்பருங்கலக் காரிகை உரையில் குணசாகரரால் கூறப்படுதலாலும் இதனை அறியலாம். யாப்பருங்கலக் காரிகையில் மயேச்சுரர் நூற்பாக்களாகக் காட்டப்பட்டவற்றுள் சில, இவ்விருத்தியுரைகாரரால் பேராசிரியர் நூற்பாக்களெனக் காட்டப்படுகின்றன. எனவே இப்பேராசிரியர் விருத்தியுரை காரரால் பெரிதும் மதிக்கப்பட்டவராவர்.

**நூல்:** யாப்பருங்கல விருத்தியில் மேற்கோளாகக் காணப் படும் சில நூற்பாக்கள்.

## பேராசிரியர் - 3 ( )

இவர் தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரிய ரினும் வேருனவர். திருக்கோவையாருக்கு உரைகண்டவர்.

தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரியர் நூலாசிரியரைக் குறிக்குங்கால 'செய்வான் ஆசிரியன்' என்று ஒருமைப் பாலால் குறிக்கும் பழக்கமுடையவர்.

திருக்கோவையார் உரையாசிரியர் 'கூறிற்றிலர்' 'சிறப் பின்மையினீக்கினுர்' என்று பன்மைப் பாலால் குறிக்கும் பழக்கமுடையவர். மேலும் திருக்கோவையார் உரையில் பல இடங்களில் இலக்கண மேற்கோளாகத் தொல்காப்பிய நூற்பாக்களைக் காட்டுகின்றுர். அவ்விடங்களில் தொல் காப்பிய உரை செய்ததாய் எவ்விதக் குறிப்பும் காட்ட வில்லை. பொருளதிகார உரையாசிரியராகிய பேராசிரியர் செய்யுளியலில் (155) 'இனி கோவையாக்கி எழுத்து எண்ணி அளவியற் படுத்துச் செப்பினும் அவையேயாம்' என்று குறிப்பிட்டு, 'காண்பான் அவாவினுல்' என்று தொடங்கும் கோவைச் செய்யுள் ஒன்றைக் காட்டுகின்றுர். எவ் விடத்திலும் திருக்கோவையார் செய்யுள் ஒன்றையும் மேற்கோள் காட்டவில்லை. ஆதலால் இருவரும் வேறு வேறுனவர் என்பது தெளிவு. இவர் காலத்தால் பரி மேழலகருக்கு முற்பட்டவர்.

**நூல்:** திருக்கோவையார் உரை.

இவ்வுரையில் அகப்பொருள் துறைகளை விளக்கக் கொளுக் கள் அமைத்துத் தரப்பட்டுள்ளன. பல பெரிய அகப் பொருள் நூற்பாக்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டு உள்ளன. உரையாசிரியர் திருக்கோவையார் உவமைகளில் பெரிதும் ஈடுபட்டு ஆராய்ந்து விளக்கம் கூறுகின்றுர்.

## பேராசிரியர் - 4 ( )

இவர் தொல்காப்பியத்திற்கு உரை வரைந்த பேராசிரி யரினும் வேறுனவர். நச்சினுர்க்கினியர் தமது உரைச் சிறப்புப் பாயிரத்தில் குறுந்தொகைக்கும் பேராசிரியர் எழுதிய உரைபற்றிக் குறிப்பிடுகின்றுர். இவ்வுரை மறைந்துவிட்டது.

பொருளதிகாரத்திற்கு உரையியற்றிய பேராசிரியரே குறுந்தொகைக்கும் உரை இயற்றினுர் என்பதற்குத் தக்க சான்றுகள் இல்லை.

## பேராசிரியர் - 5 ( )

இவர் தமிழ் நாவலர் சரிதையால் குறிப்பிடப்படும் பேராசிரியர் ஆவர். ஒட்டக்கூத்தர் உலாப்பாடியபோது,

பேராசிரியர் நேமிநாதர் பட்டோலை பிடிக்கப் பாடியது என்ற தலைப்புடன் ஒரு செய்யுள் காணப்படுகின்றது. நேமிநாதர் என்பவருக்கும் பேராசிரியர் என்ற பெயர் வழங்கியது என்பதை இதனுல் அறியலாம்.

## பேராலவாயர் (சங்ககாலம்)

**ஊர்:** மதுரை.

இவரும் மதுரைப் பேராலவாயர் என்ற புலவரும் ஒருவரேயாவர். மதுரைத் திருக்கோயிலுக்கு ஆலவாய் என்ற பெயரும் அங்கு கோயில் கொண்டிருக்கும் பெருமானுக்கு ஆலவாயன் என்ற பெயரும் உண்டு. எனவே இப்புலவர் தெய்வத்தாற் பெயர் பெற்ற புலவராவர். இவர் ஒல்லையூர் தந்த பூதபாண்டியன் காலத்திலே வாழ்ந்தவர். அவனுக்குரிய வையையாறு, கொற்கைத்துறை, மதுரைத் தலைநகர் ஆகியவற்றைப் பாராட்டியுள்ளார். அவன் இறக்க அவன் மனைவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்தல் கண்டு வருந்திப் பாடியுள்ளார்.

**நூல்:** அகம் 87, 296; நற்றிணை 51, 361; புறம் 247, 262.

## பேரிசாத்தனுர் (சங்ககாலம்)

**வே.பெ:** வடவண்ணக்கன் பேரிசாத்தனுர், வடமவண்ணக்கன் பேரிசாத்தனுர்.

வண்ணக்கன் என்பது நாணய சோதனையாளனக்குரிய பெயர். வடமன், வட என்ற அடைகளால் இவர் வடக்கிலிருந்து வந்த நாணய சோதனையாளர் என்று கொள்ளலாம்.

**நூல்:** அகம் 38, 214, 242, 268, 305; குறுந்தொகை 81, 159, 278, 314, 366; நற்றிணை 25, 37, 67, 104, 199, 299, 323, 378; புறம் 125, 198.

## பேரூர் வாத்தியார் (19-நூ)

**நூல்:** கச்சியப்ப முனிவர் இயற்றிய விநாயக புராணத்திற்கு வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பேரெயின் முறுவலார் (சங்ககாலம்)

**ஊர்:** சோழநாட்டின் தென்கரையில் உள்ள பேரெயின்.

இவர் ஊராற் பெயர் பெற்ற சங்கப் புலவர்களுள் ஒருவர்.

**நூல்:** குறுந்தொகை 17; புறம் 239.

## பேலி ஐயர் (19-நூ)

**நூல்:** கிறிஸ்து மார்க்க உதாரணங்களின் பொருளடக்கம் (1897).

இந்நூல் உரைநடையில் அமைந்தது; கிறிஸ்து மார்க்க உதாரணங்களைத் தேவன் உண்டென்றும், மறுமை உண்டென்றும் ஒப்புக்கொள்ளுகிறவர்களுக்காக எழுதப்பட்டது. இதில் மூன்று பங்குகளும் அவற்றுள் முறையே 10, 10, 8ஆக 28 அதிகாரங்களும் உள்ளன. விவிலிய நூலிலிருந்து ஏற்ற எடுத்துக்காட்டுக்கள் காட்டி விளக்கம் கூறப்பட்டுள்ளது.

## பொத்தியார் (சங்ககாலம்)

**ஊர்:** உறையூர்.

இவர் கோப்பெருஞ்சோழனின் உயிர்த்தோழர். கோப்பெருஞ்சோழன் தன் மக்கள் தகாவொழுக்கத்தால் தன் மீது போர்தொடுத்ததற்கு நாணி வடக்கிலிருந்து உயிர் துறக்கச் சென்றபோது இவர் தாமும் உடன் வடக்கிருக்க விழைந்தார். ஆனால் கோப்பெருஞ்சோழன் 'நீர் உம்மகவு பிறந்தபின் வடக்கிருக்கலாம்' என்று கூற இவர் அவ்வாறே காத்திருந்து மகவு பிறந்தபின் வடக்கிருந்து உயிர் நீத்தார். கண்ணகனார், கருவூர்ப் பெருஞ் சதுக்கத்துப் பூத நாதனார், பிசிராந்தையார், புல்லாற்றூர் எயிற்றியனார் என்ற புலவர்கள் இவர் காலத்து வாழ்ந்த புலவர்கள் ஆவர். இவருடைய நட்பின் திறத்தைப் பிசிராந்தையார் பாராட்டிய பாடலொன்று புறநானூற்றில் காணப்படுகிறது.

**நூல்:** புறம் 217, 220, 221, 222, 223.

## பொதுக்கயத்துக் கீரந்தை (சங்ககாலம்)

பொதுகயம் என்பது இவருடைய ஊராக இருக்கலாம் என்று கருதுகின்றனர். எனவே கீரந்தையார் என்ற பெயருடைய புலவர்களிலிருந்து பிரித்து அறிய இவர் பொதுக்கயத்துக் கீரந்தையார் என்று அழைக்கப்பட்டார் என்பர்.

**நூல்:** குறுந்தொகை 337.

## பொதும்பில் கிழார் (சங்ககாலம்)

**ஊர்:** பாண்டிய நாட்டில் மதுரைக் கோட்டத்திலுள்ள பொதும்பல்.

இவர் ஊராற் பெயர்பெற்ற சங்கப் புலவர்களுள் ஒருவர். இவர் பிறந்த ஊர் இப்பொழுது பொதும்பு என்று அழைக்கப்படுகிறது. இவ்வூரில் சங்ககாலத்தில் பல புலவர்கள் வாழ்ந்தனர் என்று சங்கநூல்களால் அறிகிறோம்.

**நூல்:** நற்றிணை 57.

## பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணியார் (சங்ககாலம்)

**தந்தை:** பொதும்பில் கிழார்.

அக நானூற்றில் காணப்பெறும் வெண்கண்ணனார் என்ற புலவரும் இவரும் வேறு வேறு புலவர்களாவர்.

**நூல்:** நற்றிணை 375, 387.

## பொதும்பிற் புல்லாளங்கண்ணியார் (சங்க காலம்)

இவர் ஊரொடு தொடர்ந்த பெயர் கொண்ட சங்கப் புலவர்களுள் ஒருவர்.

**நூல்:** அகம் 154.

## பொய்கையார் - 1 (சங்க காலம்)

இவர் ஊராற்பெயர் பெற்ற சங்கப்புலவர் என்பது பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் கருத்து. இவ்வாறாயின் இவர் ஊர் பொய்கை என்பதாகும். இவர் சேரன்

கணைக்கால் இரும்பொறையின் அரசவைப் புலவராவர். இவ்வேந்தனின் தலைநகரம் தொண்டி என்பதாகும். களவழி நாற்பது என்ற நூல் இவரால் பாடப்பட்டது என்பர். இந்நூல் சோழன் செங்கணான் சேரமான் கணைக்கால் இரும்பொறையோடு செய்த போரைப் புகழ்ந்து பாடப்பட்டதாகும்.

**நூல்:** நற்றிணை 18; புறம் 48, 49.

## பொய்கையார் - 2 (8-நூ)

இவர் 'இன்னிலை' என்னும் நூலினை இயற்றியவர்; மதுரை யாசிரியர் இந்நூலைத் தொகுத்துக் கடவுள் வாழ்த்துப் பாடிச் சேர்த்து அறப்பால், பொருட்பால், இன்பப்பால், வீட்டிலக்கப்பால் என நான்கு பால்களாகப் பிரித்துள்ளார்.

**நூல்:** இன்னிலை.

இந்நூல் அறப்பாலில் 10, பொருட்பாலில் 9, இன்பப் பாலில் 12, வீட்டிலக்கப்பாலில் 14 என்று 45 வெண்பாக் களில் அமைந்தது. தொல்காப்பிய உரையாசிரியர்களாகிய இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்கள் இந்நூலின் செய்யுட்களை எடுத்தாண்டுள் ளனர். இந்நூலின் முகவுரையில் வ.உ. சிதம்பரம் பிள்ளை யவர்கள், இந்நூலாசிரியரே முதல்திருவந்தாதி பாடிய வரென்று குறிப்பிட்டுள்ளார்.

## பொய்கையாழ்வார் (8-நூ)

**ஊர்:** காஞ்சிபுரம்.

இவர் முதலாழ்வார் மூவர்களுள் முதல்வர்; பொற்றா மரைப் பொய்கையில் தோன்றிய காரணத்தால் பொய்கை யார் என அழைக்கப் பெற்றார்.

**நூல்:** முதல் திருவந்தாதி.

தொல்காப்பியத்துச் செய்யுளியலிற் கூறப்பட்ட அம்மை அழகு முதலிய எண்வகை வனப்பினுள் இது விருந்து என்னும் வனப்பின் பாற்படும். மற்றைத் திருவந்தாதி

களுக்கு முன்னே இது தோன்றியபடியால் முதல் திரு வந்தாதி எனப் பெயர் பெற்றது. இது 100 செய்யுட்களை யுடையது.

## பொய்யா மொழியார் (13-நூ)

**ஊர்:** தொண்டை மண்டலம், செங்காட்டுக் கோட்டம், துறையூர், அமண்பாக்கிழார்குடி.

இவருடைய இயற்பெயர், பெற்றோர் முதலிய விவரங்கள் தெரியவில்லை. இவர் தூய உள்ளமும் பெரும் புலமையும் படைத்துப் பொய்யாச் செந்நா உடையவராய் இருந்தமை பற்றிப் பொய்யா மொழியார் என அழைக்கப் பெற்றார்.

இவர் கி.பி. 9ஆம் நூற்றாண்டினரெனவும் 11ஆம் நூற்றாண்டினரெனவும் பலவாறு கருதப்படுகிறார். தமிழ் இலக்கிய வரலாறு எழுதிய சதாசிவப் பண்டாரத்தாரவர்கள் பல்வேறு வகையான ஆதாரங்களை எடுத்துக் காட்டி இவர் வாழ்ந்த காலம் கி.பி. 13ஆம் நூற்றாண்டு என்று நிறுவி யுள்ளார்.

இப்புலவர் தஞ்சை நகருக்கு அண்மையிலுள்ள கண்டியூரில் வாழ்ந்த சீநக்கன் என்ற வள்ளலின் ஆதரவில் அங்குப் பல ஆண்டுகள் தங்கியிருந்தார். பின்னர் அவ்வூரில் தமக்கு ஏற்பட்ட பொய்ப்பழி காரணமாக வள்ளலைப் பிரிந்து பாண்டிய நாட்டில் பாண்டிய வேந்தனிடம் தங்கியிருந்தார். அவ்வரசன் வேண்டியவாறு மதுரைப் பொற்றாமரைக் குளத்தில் பழைய சங்கப் பலகை மிதந்து தோன்றும் படி "பூவேந்தர் முன்போற் புரப்பாரிலை" என்று தொடங்கும் பாடலைப் பாடினார் என்று தமிழ்நாவலர் சரிதை கூறுகின்றது.

இதன் பின்னர் இவர் தென்பாண்டி நாட்டிற்குச் சென்று அந்நாட்டின் உள்நாடுகளுள் ஒன்றாகிய மாறை நாட்டின் தலைவனாகிய வாணனின் ஆதரவு பெற்றார். பின்னர் அவன் மேல் தஞ்சைவாணன் கோவை என்ற நூலைப் பாடினார். இவ்வள்ளலின் ஆதரவுக்குப் பின்னர் மீண்டும் கண்டியூருக்குத் திரும்பி அவன் ஆதரவைப் பெற்றார். சீநக்கன் இறந்த

போது அவன்மீது கையறுநிலைப் பாடலொன்று பாடி வள்ளலுக்கு அடுக்கிய சிதையில் தானும் இடங்கேட்டுப் பெற்று வீழ்ந்து உயிர் துறந்தார்.

**நூல்:** தஞ்சைவாணன் கோவை.

இந்நூல் மாறை நாட்டுத் தஞ்சையில் வாழ்ந்து கொண் டிருந்த வாணன் என்பவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்றது. இது திருச்சிற்றம்பலக் கோவை யாருக்கு அடுத்த நிலையில் வைத்துப் பாராட்டப்படும் பெருமை வாய்ந்தது. நாற்கவிராச நம்பியின் அகப்பொருள் விளக்கத்திற்குச் சிறந்த இலக்கியமாகத் திகழும் சிறப் புடையது. களவியல், வரைவியல், கற்பியல் என்ற மூன்று பகுதிகளையுடையதாய் 425 பாடல்களில் அமைந்தது.

## பொருந்தில் இளங்கீரனார் (சங்ககாலம்)

**ஊர்:** பொருந்தில்.

இவர் ஊரொடு தொடர்ந்த பெயர் கொண்ட சங்கப் புலவர்களுள் ஒருவர். கிடங்கில் விளங்கில் என்பது போல பொருந்தில் என்பது ஓர் ஊராகும். இளங்கீரன் என்பது இவர் பெயர். இவர் கபிலரின் புலமைத் திறத்தை "பொருள் செறிந்த செய்யுளை இயற்றவல்ல செவ்விய நாவினையும், மிக்க கேள்வியையும் விளங்கிய புகழையும் உடைய கபிலன்" (புறம் 53) என்று பாராட்டியுள்ளார் எனவே இவர் கபிலரின் சமகாலத்தில் வாழ்ந்த சான்றோர் ஆவர்.

**நூல்;** அகம் 19, 351, புறம் 53.

## பொல்லாப் பிள்ளையார் (        )

**நூல்:** சிவஞானபோதச் சூரணைக் கொத்து.

இந்நூல் சிவஞானபோத நூற்பாக்களின் பொருளினைச் சுருக்கமாக எடுத்துக் கூறுவது.

## பொன்மணியார் (சங்ககாலம்)

இவர் பொன்னும் மணியும் பெருகக் கொண்டுள்ளமை யால் இப்பெயர் பெற்றிருக்கலாம் என்று ஒரு கருத்து

உண்டு. இவர் பெண்பாற் புலவர்களுள் ஒருவர்' என்று சிலர் கருதுகின்றனர். ஆனால் சான்று எதுவும் இல்லை.

**நூல்:** குறுந்தொகை 391.

## பொன்முடியார் (சங்ககாலம்)

இவர் சங்ககாலப் பெண்பாற் புலவர்களுள் ஒருவர். இப் புலவர் சேரநாட்டு குட்ட நாட்டின் வாழ்ந்தவர் என்றும் இவர் பெயரால் இந்நாட்டில் பொன்முடி என்றோர் ஊர் உள்ளது என்றும் ஔவை துரைசாமிப் பிள்ளை கூறியுள்ளார். இப்போது இப்பகுதி வெள்ளாத்திரி நாடு என்று மக்களிடையே வழங்குகின்றது. இதனை முன்னோர் பொன்முடிநல்லூர் என வழங்கியதாகத் தெரிகிறது.

இப்புலவர் சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறை என்னும் மன்னன் காலத்தவர். தகடூர் யாத்திரை என்னும் நூலில் இவர் பாடிய சில செய்யுட்கள் காணப் படுகின்றன. இவர் அதியமான் நெடுமானஞ்சியைப் பாடிய பல புலவர்களுள் ஒருவர்.

**நூல்:** புறம் 299, 310, 312.

## பொன்னப்ப பிள்ளை (19—நூ)

**ஊர்:** பெரிய காவணம்.

**நூல்:** அங்கப்ப நாவலர் என்பவரியற்றிய 'பரசமய கோளரி யார் பிள்ளைத் தமிழ்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பொன்னம்பல அடிகள் (19-நூ)

இவருடைய முன்னோர் இராமநாதபுரம் மாவட்டம் அநுமந்தக்குடியில் வாழ்ந்தவர்கள்; அகம்படியர் குலத்தைச் சேர்ந்தவர்கள். அடிகளாரின் தந்தை விசய நகரமன்னரின் போர்ப்படையில் பணியாற்றியபோது அடிகளார் விசய நகரத்தில் பிறந்தார். இவருடைய தாயார் அங்கம்மாள். இவர் இளமையிலேயே தெய்வ வழிபாட்டில் மிகுந்த ஈடு பாடு கொண்டிருந்தார். தமக்குத் தம் தாயார் அளிக்கும் எண்ணெயினை ஆனைமுகக் கடவுளுக்கு முழுக்காட்டி இன் புறுவார். தமது பதினாறுவது வயதில் தில்லைக்கு வந்து

இறைபணியில் ஈடுபட்டார். இந்நாளில் தில்லையிலிருந்த பெத்தாச்சி அடிகள் என்ற துறவியாரிடம் இவர் துறவு பெற்றார். கோயிலூர் முத்துராமலிங்க அடிகளின் மாணவ ரான சிதம்பர அடிகள் தில்லையை அடைந்தபோது பொன்னம்பல அடிகள் அவரைக் கண்டு அறிவு நூல்களைப் போதிக்க வேண்டினார். பின்னர் இவர் கோயிலூருக்குச் சென்று வேதாந்த நூல்களைக் கற்றுப் பிறருக்கும் கற் பித்தார். பின்னர்த் தம் ஆசிரியரின் உடன்பாட்டுடன் காசிநகரை அடைந்து வடமொழியையும் இந்தியையும் கற்றார். பின்னர்க் கோயிலூரை அடைந்து ஆசிரியருடன் இருந்தார். ஆசிரியர் காலமான பின் சிக்கல், திருவாரூர், திருப்புனவாசல், ஆகிய இடங்களில் தங்கியிருந்து, இறுதியில் தில்லைக்கு வந்து பலரின் உதவியுடன் மடம் ஒன்றை ஏற் படுத்தினார். இம் மடத்திற்கு கோ. சித. மடம் என்று பெயர்.

இவர் தில்லையிலிருந்த போது கூத்தப்பெருமான் திருக் கோயிலைப் புதுப்பித்துப் பொன்தகடு வேய்ந்தார். எறும்பூர் என்னும் பதியில் தத்துவராயர் திருக்கோயிலை அழகுபட அமைத்துக் குடமுழுக்குச் செய்தார். இவர் அன்பர்களுக்குத் திருநீறு வழங்கிப் பல நோய்களைக் குணப்படுத்தினரென்பர்.

**நூல்:** கைவல்ய நவநீதம், பகவத் கீதை பதவுரை, விசார சாகரம் (தமிழாக்கம்) வேதாந்த சூடாமணி—உரை.

இவர் இந்நூல்களுடன் பஞ்சதசி, பாடுதுறை முதலிய பல நூல்களை ஆய்ந்து அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

## பொன்னம்பல அடிகள் 2 (19-நூ)

**வாழ்விடம்:** காஞ்சி.

இவர் காஞ்சிபுரம் ஞானப்பிரகாச தேசிகராதீனத்தில் அடியாராக இருந்து அருளுரை பெற்றவர். இலக்கிய இலக்கணப் புலமையில் சிறந்து விளங்கியவர். சென்னை நகரில் தங்கிப் பலருக்கு ஆன்மபோத விளக்கம் செய்தார்.

**நூல்:** இரு சமய விளக்க சோதி.

## பொன்னம்பல உபாத்தியாயர் (20-நூ)

**ஊர்:** குலசை.

**நூல்:** நமச்சிவாயப் பிள்ளை, ப. என்பவர் இயற்றிய 'கைலாசப் பெருமாள் பதிற்றுப் பத்தந்தாதி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பொன்னம்பலக் கவிராயர் (      )

**ஊர்:** பரம்பக்குடி.

இவர் புலமைத் திறமை பெற்றிருந்தும் வறுமையில் உழன்றார்; பரிசில் வாழ்க்கையை மேற்கொண்டிருந்தார். மதுரை மீனாட்சியம்மையின் மீதும் சொக்கநாதர் மீதும் பாடிய பாடல்களில் தமது வறுமைத் துயரை எடுத்துக் கூறியுள்ளார்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## பொன்னம்பல சிவம் (20-நூ)

**ஊர்:** தென்பாண்டிநாட்டில் கொம்பாடி.

இவர் இளம்பருவத்தில் குலசேகரன் பட்டினத்தில் பள்ளிப்படிப்பைத் தொடங்கினர். பின்னர் திண்ணைப் பள்ளி அமைத்துச் சிறுவர்களுக்குக் கல்வி கற்பித்தார். இல்வாழ்வை வெறுத்தமையால் பள்ளியை நிறுத்தி மடாலயங்களில் சென்று தங்கினர். அறிஞர்கள்பால் வேதாந்த நூல்களை ஓதியுணர்ந்தார். செய்யுள் இயற்றும் திறமும் பெற்றுப் பல தனிப்பாடல்கள் பாடினர். சிறிது காலம் திருமறைக்காட்டில் தங்கியிருந்தபோது இறைவன் மீது 'மறைவனத் திறைமாலை' என்னும் நூலைப் பாடினர். பின்னர் காளையார் கோவிலுக்குச் சென்று வேதாந்த மடாலயத்தில் தங்கினர். உலகம்பட்டி இலக்குமண அடிகளிடம் சைவசித்தாந்த நூல்களைக் கற்றார். பலவான் குடியில் திருவாசகப் பாடசாலையில் தங்கி அன்பர்களுக்கு இலக்கண இலக்கியங்களைக் கற்பித்தார். அங்கு எழுந் தருளிய குமார விநாயகர் என்னும் பிள்ளையார்மீது 'குமார விநாயகர் பதிகம், என்னும் நூலினையும் குன்றக்குடி முருகப்

பெருமான்மீது 'குமரபஞ்சகம்', 'அகராதி மாலை' என்னும் நூல்களையும் பாடினார். கூத்தப்பிரான் மீதும், பழநித் தண்டாயுதபாணிக் கடவுள் மீதும் மற்றும் பல செல்வர்கள் மீதும் அவ்வப்போது பல தனிப்பாடல்கள் பாடியுள்ளார். பழநியில் 1952-ஆம் ஆண்டில் காலமானார்.

**நூல்:** மறைவனத் திறைமாலை, தேசியகீதக் கொத்து, குமார விநாயகர் பதிகம், குமார பஞ்சகம், அகராதி மாலை, அகராதிக் குறள்.

## பொன்னம்பல தாசர் (19-நூ)

இவர் தில்லையில் பர்தபூசை அம்பலத்தாடுஞ் சாமிகள் ஆதீனத்தில் இருந்தவர்.

**நூல்:** தில்லைச் சிவகாம சௌந்தரி திருவிரட்டை மணி மாலை, திருநாமாவளி, பனையபுரேசர் பஞ்சரத்தினம்.

**தில்லைச் சிவகாம சௌந்தரி திருவிரட்டை மணிமாலை:**

இந்நூல் தில்லைப்பதியில் கோயில் கொண்டருளும் சிவகாம சௌந்தரியம்மன் மேல் பாடப்பெற்றது. 20 செய்யுட்களைக் கொண்டது.

**பனையபுரேசர் பஞ்சரத்தினம்:** இந்நூல் ஆசிரிய விருத்தம் ஐந்துகொண்ட சிறுபிரபந்தம்.

## பொன்னம்பல நாயகர் (19-நூ)

**ஊர்:** மெய்யூர்.

**நூல்:** காஞ்சிபுரம் இரகுநாதையர் என்பவர் இயற்றிய காமாட்சியம்மைப் பதிற்றுப் பத்தந்தாதி, ஏகாம்பரநாதர் சதகம் முதலிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பொன்னம்பலப் பிள்ளை (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணத்தில் மாவிட்டபுரம்; வேளாளர்.

**நூல்:** மாவையந்தாதி, சித்திரகவி.

மாவையந்தாதி மாலை போலவரும் யமக வரிசை யுடையது.

## பொன்னம்பலப் பிள்ளை, ந.ச. (19-நூ)

**ஊர்:** யாழ்ப்பாணத்து நல்லூர்.

**தந்தை:** சரவண முத்துச் செட்டியார்.

**பிறப்பு:** 1836 — 18 — 12 — 1897.

இவர், இளமையில் தந்தை காலமானபடியால் தம் மாமன்மார்களால் வளர்க்கப் பட்டார். ஆறுமுக நாவலர் இவருடைய மாமன்மார்களுள் ஒருவர். கல்வியறிவிற் சிறந்த கார்த்திகேயர் என்பவரிடம் அறநெறி நூல்களையும் இலக்கண நூல்களையும் கற்றுத் தேர்ந்தார். ஆறுமுக நாவலரிடம் நன்னூற்காண்டிகையுரை, விருத்தியுரை, திருக்குறள் பரிமேலழகருரை, திருவிளையாடற் புராணம், கந்தபுராணம், பாரதம், இராமாயணம் தொல்காப்பிய இளம்பூரணம், நச்சினார்க்கினியம், இலக்கணக் கொத்து, இலக்கணச் சூறாவளி முதலிய நூல்களைக் கற்றுத் தேர்ந்தார்.

யாழ்ப்பாணத்துக்கோயில்களில் புராணச்சொற்பொழிவுகள் பல இவரால் இயற்றப்பெற்றன. இவரிடம் கல்வி கற்றுப் பெருஞ் சிறப்படைந்தவர்கள் பலர். இவருடைய மாணவர் களுள் ம.க. வேற்பிள்ளை என்பவர் சிறந்த உரையாசிரிய ராகத் திகழ்ந்தார். ச. பொன்னம்பலம்பிள்ளை த. கைலாச பிள்ளை, சி. கணேச பண்டிதர், காரைக்குடி சொக்கலிங்கச் செட்டியார் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் முதலியோர் இவருடைய மாணவர்களுள் குறிப்பிடத்தக்கவராவர்.

**நூல்:** மயூரகிரிப் புராண உரை, வில்லிபாரதம் ஆதி பருவ உரை.

## பொன்னம்பல பிள்ளை ச. (       )

**ஊர்:** யாழ்ப்பாணம் சாவகச்சேரி.

**நூல்:** இராமநாதமான்மியம், அருணாசலமான்மியம்.

## பொன்னம்பல பிள்ளை பூ. (20-நூ)

**வே.பெ.** பூதப்பிள்ளை.

**ஊர்:** ஈழநாட்டில் தெல்லியம் பதி.

இவர் சென்னையில் ஆசிரியத் தொழிலை மேற்கொண்டவர்.

**நூல்:** மாவையந்தாதி.

இந்நூல் இலங்கைத்தீவில் விளங்கும் மாவை நகர் முருகன் மேல் அமைந்த கலித்துறை அந்தாதி.

## பொன்னம்பலம் பிள்ளை, தி. (19-நூ)

**நூல்:** சாரதி புரிவாசர் பதிகம் (1898).

## பொன்னம்பலம் அருணசலம்

**பார்க்க:** அருணசலம் பொன்னம்பலம்: சர்.

## பொன்னம்பல முதலியார் (19-நூ)

**வாழ்விடம்:** சென்னைப் புரசவாக்கம்.

இவர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் புலவராகப் பணியாற்றியவர்; பல நூல்களை ஆய்ந்து அச்சிட்டவர்; பல நூல்களுக்குச் சிறப்புப் பாயிரம் வழங்கியுள்ளார்.

**நூல்:** செங்குந்தர் ஊசல்.

## பொன்னம்பல முதலியார், தி. (20-நூ)

**நூல்:** சுப்பிரமணியபிள்ளை, ரா.சு. என்பவர் இயற்றிய 'புண்ணியராற்றுப் படை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பொன்னம்மாள் (20-நூ)

இவ்வம்மையார் இரங்கநாத அடிகளென்னும் இயற்பெயருடைய சச்சிதாநந்த அடிகளின் மாணவர்களுள் ஒருவர்.

**நூல்:** சிவானந்த சாரம்.

இந்நூல் பிரமகாருண்யநிதி, மதிநாதபரமகுரு, சச்சிதாநந்தகுரு, சோமசுந்தரத் தெய்வம், நித்தியானந்தகுரு, யாருமறியாத பொருள், சச்சிதாநந்த சிவம், சம்போசற்குரு, ஓங்காரமணி விளக்கு, வரதன், சோமநாதகுரு, போற்றி விருத்தம், தஞ்சம், அடைக்கலம் போற்றி, பரம்பொருள்,

சோமசுந்தர குரு, பரமசற்குரு, திருவருட்குரு, ஞானசற்குரு, உத்தமகுரு, அற்புதகுரு, மாதவகுரு, நெல்லையப்ப மூர்த்தி, காந்திமதியம்மை கைலாசநாத சிவம், நெஞ்சம். சுந்தரேசர், நெஞ்சே, மனமே முதலிய பல பிரிவுகளுள்ளன, பாடல்கள் தாயுமானவர் பாடலைப் பெரும்பாலும் அடியொற்றியுள்ளன.

## பொன்னரங்கம் பிள்ளை, தி. அ. (20-நூ)

**ஊர்:** நடுநாட்டில் திருவெண்ணெய் நல்லூர்.

இவர் தொடக்கப் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றியவர்; செய்யுள் பாடுந்திறம் பெற்றவர்.

**நூல்:** இராசப்ப நாவலர் என்பவர் இயற்றிய "திருவெண்ணெய்க் கலம்பகம்" என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பொன்னவன் (14-நூ)

இவர் சைனர்; அம்பர் என்ற இடத்தில் இருந்த கணபுரத் தேவன் என்பவன் விரும்பியபடி கணு நூல் செய்துள்ளார்.

**நூல்:** கணு நூல்.

## பொன்னாகன் (சங்க காலம்)

இவர் வரலாறு பற்றிய செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை.

**நூல்:** குறுந்தொகை 114.

## பொன்னுச்சியார் (        )

**நூல்:** பொன்னுச்சியார் ரகசியம்.

## பொன்னியார், வெ. (19-நூ)

**ஊர்:** புதுச்சேரி.

**நூல்:** பிறைசை அருணசல சுவாமிகள் என்பவர் இயற்றிய 'வேதாந்த சூடாமணி உரை' யினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பொன்னுகுடி கிழார் (19-நூ)

**ஊர்:** சோழநாட்டில் பொன்னிகுடி.

இவர் பெயர் இடப்பெயரோடு மருவி வழங்குகிறது. இயற்பெயர் தெரியவில்லை. இவர் பாடிய உரைச் சிறப்புப் பாயிரம் ஒன்று காணப்படுகிறது. இது திட்பநுட்பம் செறிந்தது: ஆனால் இப்பாயிரம் எந்நூலுக்குரிய தென்று தெரியவில்லை.

## பொன்னுச்சாமி, சி. (20-நூ)

**ஊர்:** பொள்ளாச்சி.

**நூல்:** புறநானூறும் மகளிரும்.

## பொன்னுச்சாமிக் கவிராயர் (19-நூ)

**ஊர்:** மதுரைமாவட்டம் புதுப்பட்டி.

இவர் இலக்கிய இலக்கண நூற் புலமை நிரம்பியவர்.

**நூல்:** காதற்பிரபந்தம்.

இந்நூல் வாராப்பூர் பெருநிலக் கிழார் பேரில் இயற்றப் பெற்றது.

## பொன்னுச்சாமிச் செட்டியார் (19-நூ)

**ஊர்:** திருவாவடுதுறை.

**தந்தை:** முத்துச்செட்டியார்; சைவவேளாளர்.

இவர் திருவாவடுதுறை ஆதீனப் புலவர் மேலகரம் சண்பகக் குற்றாலக் கவிராயரிடத்தில் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். இவ்வாதீனத்தில் ஆதீனப் புலவராகவும் இராயசமாகவும் இருந்துள்ளார். இவர் செல்வர்கள் மீதும் பெருநிலக்கிழார்கள் மீதும் பல பாக்கள் பாடிப் பரிசு பெற்றுள்ளார்.

**நூல்:** துறைசைச் சிலேடைவெண்பா, துறைசைவேலவர் இங்கிதமாலை.

## பொன்னுச்சாமிச் செட்டியார் - 2 (20-நூ)

**ஊர்:** புதுச்சேரி.

**தந்தை:** பெரியதம்பிச் செட்டியார்.

**நூல்:** திருப்போரூர் முருகர் வழிநடைப் பாசுரம்.

இந்நூல் இராயபுரத்திலிருந்த சிங்காரவேலுப்பிள்ளை என்பவர் வேண்டிக் கொண்டதற்கேற்பப் பாடப்பெற்றது.

## பொன்னுச்சாமிச் செட்டியார், பு. ப. (19-நூ)

**நூல்:** 'மதுரைப்பிள்ளை - மும்மணிமாலை' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பொன்னுச்சாமித் தேவர் (19-நூ)

**ஊர்:** புதுமடம்.

**தந்தை:** சிவஞானத்தேவர்; தாய்; முத்துவீராயி நாச்சி.

**பிறப்பு:** 1837 — 1870.

இவரும் இவருடைய தம்பியான துரைராசாவும் தக்க காலத்தில் தக்கவாறு கல்விப்பயிற்சி அளிக்கப்பட்டனர். அந்நாளில் சேதுமன்னராக இருந்த இராமசாமி சேதுபதி என்பவர் ஆண்மக்கட் பேறில்லாமல் இறந்த காரணத்தால் அவருடைய மனைவியார் பர்வதவர்த்தனி நாச்சியார் அரசாட்சியைத் தம் தமையனரான கோட்டைச்சாமித் தேவரின் துணைக் கொண்டு நடத்தி வந்தார். கோட்டைச் சாமித் தேவர் பொன்னுச்சாமித் தேவரின் தாய் மாமனுவர். கோட்டைச்சாமித் தேவரும் பர்வதவர்த்தினி நாச்சியாரும் கலந்து எண்ணி துரைராசாவை சேது மன்னராக்கினர். பின்னர் அவர் முத்துராமலிங்க சேதுபதி என்று அழைக்கப் பட்டார். தந்தையாகிய சிவஞானத் தேவர் சேதுநாட்டின் அரசியல் அலுவல்களைத் திறம்படக் கவனித்து வந்தார். சிவஞானத் தேவரின் மறைவுக்குப் பின் பொன்னுச்சாமித் தேவரே அரசியல் அலுவல்களைக் கவனித்து வந்தார்.

பொன்னுச்சாமித் தேவர் அரசியல் அலுவல்களுக்கிடையே தமிழ் நூல்களையுங் கற்றுணர்ந்து பெருந்தமிழ்ப் புலவராகவும் விளங்கினுர். புலவர்களின் அறிவுத்திறமையைச் சீர்தூக்கிப் பார்ப்பதில் பொன்னுச்சாமித் தேவர் வல்லவராக விளங்கி னுர். இவரும் இவருடைய இளவலாகிய முத்து ராமலிங்க

சேதுபதியும் உரையாடுதல் கூடச் செய்யுளாக இருக்கும். 'மாம்பழக் கவிச் சிங்க' நாவலர் இவரால் பாராட்டப் பெற்றுச் சிறப்புப் பெற்றவரேயாவர்.

தில்லையம்பூர் சந்திரசேகர கவிராயரிடம் தாம் திரட்டி வைத்திருந்த தனிப்பாடல்களைக் கொடுத்து, மேலும் அகப் படும் தனிப்பாடல்களையும் தொகுத்துத் தனிப்பாடல் திரட்டு என்னும் பெயருடன் வெளிப்படுத்துமாறு கூறிப் பொரு ளுதவியுஞ் செய்தார். ஆறுமுக நாவலரைத் தம்முடைய அவையில் அழைத்துச் சொற்பொழிவுகளாற்றச் செய்து சிறப்புப் பல செய்தார். நாவலரிடம் திருக்குறள் பரி மேலழகர் உரை, திருக்கோவையார் உரை, இலக்கணச் கொத்து, பெரியபுராணம் முதலிய நூல்களைப் பிழையற ஆராய்ச்சி செய்து வெளிப்படுத்த வேண்டும் என்று வேண்டிக் கொண்டு அதற்காகப் பொருளுதவியுஞ் செய்தார். நாவலரால் பதிப்பிக்கப்பட்ட நூல்களில் நூற்றுக்கணக்கான படிகள் தேவருக்கு அனுப்பப்பட்டு, அவை தமிழறிஞர்களுக்கு இலவசமாக வழங்கப்பட்டன.

பொன்னுச்சாமித் தேவர் சமயப் பொது நோக்குடையவர். கலைத்துறையில் முழுக் கருத்தையும் செலுத்தியிருந்த இவர் ஆட்சித் துறையிலும் வல்லவராக விளங்கினுர். இவருக்கு மூன்று மனைவியரும் மூன்று ஆண்மக்களும், மூன்று பெண் மக்களும் இருந்தனர்.

இவர் இராமநாதபுரத்தில் தம் முப்பத்து மூன்றுவது அகவையில் (1870-ஆம் ஆண்டில்) இவ்வுலகை விட்டு மறைந்தார்.

**நூல்:** பலதனிப்பாடல்கள், இராசமன்னர் கோயில் தல புராணம், இராசமன்னர் அலங்காரக் கோவை.

## பொன்னுச்சாமி நாயகர் - 1 (19-நூ)

**ஊர்:** புதுச்சேரி.

**தந்தை:** நாகமுத்து நாயகர்.

இவர் மாணிக்க உபாத்தியாயர் என்பவரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்.

**நூல்:** *நிசலிங்கசிக்கையர் சரிதம்.*

*இந்நூல், நாடகமுறையில் கீர்த்தனம் முதலிய செய்யுட்களும் உரைநடையுமாகக் கலந்து வருகிறது.*

## பொன்னுச்சாமி நாயகர் 2 (20-நூ)

**நூல்:** *'சன்ம ரகித போதினி — தமிழாக்கம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.*

## பொன்னுசாமி நாடார், அ.க. (19-நூ)

**நூல்:** *பாண்டிய குல விளக்கம் (1883).*

*இந்நூல் நாடார் குலம் பற்றிய வரலாறு உரைப்பது.*

## பொன்னுசாமிப் பத்தர், சு. ( )

**நூல்:** *திருப்போர்க்களம் கூத்தாண்டவர் கும்மி (1900).*

*இந்நூல் தில்லைச் சிதம்பரத்தின் கீழ்பாலுள்ள திருப்போர்க்களத்தே விளங்கும் கூத்தாண்டவரைப் பற்றிய துதிப்பாடல். கும்மிப்பாட்டில் இறைவன் புகழினைப் பேசுவது.*

## பொன்னுச்சாமிப் பிள்ளை - 1 (19-நூ)

**ஊர்:** *காரைக்கால்.*

**நூல்:** *'மனுச்சோழச் சக்கரவர்த்தி வாசகப்பா' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.*

## பொன்னுச்சாமிப் பிள்ளை - 2 (19-நூ)

**ஊர்:** *புதுப்பாளையம்.*

**நூல்:** *சிவசிதம்பர முதலியார் க.ரா. என்பவர் இயற்றிய 'கரையேறவிட்ட நகர்ப்புராணம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்,*

## பொன்னுச்சாமிப் பிள்ளை - 3 (20-நூ)

**ஊர்:** *புதுச்சேரி.*

**நூல்:** *'கண்ணப்ப நாயனார் கலம்பகம்' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.*

## பொன்னுச்சாமிப் பிள்ளை - 4 (19-நூ)

**ஊர்:** முத்துப்பேட்டை.

**நூல்:** 'அத்வைத சிந்தாமணி' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பொன்னுச்சாமிப் பிள்ளை - 5 (20-நூ)

**ஊர்:** திரிசிரபுரம்.

**நூல்:** "சுவாமி ஓம்பிரகாசநாதர்" என்பவர் இயற்றிய "சத்சம்பாஷிணி" என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பொன்னுசாமிப் பிள்ளை, தி. (20-நூ)

**ஊர்:** மதுரையைச் சேர்ந்த உத்தங்குடி.

இவர் வேடிக்கைக் கதைகள், வேடிக்கைச் செய்யுட்கள் இயற்றுவதில் வல்லவர்.

**நூல்:** கோடாங்கிமாலை.

இந்நூல் பூசாரி குறிசொல்லுகின்ற முறையில் அமைந்தது. குறி விகற்பங்களும் பயன்களும் சுருக்கமாகக் கூறப் பட்டுள்ளன. அகவற்பா முதலிய பலபாக்களும் அடங்கி யுள்ளன.

## பொன்னுசாமிப் பிள்ளை, பு. அ. (19-நூ)

**ஊர்:** புதுச்சேரிப் புதுப்பாளையம்.

இவர் சு. வேலாயுத உபாத்தியாயர் என்பவரிடம் கல்வி கற்றூர்.

**நூல்:** புதுவை வேதபுரீசர் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள முருகக் கடவுள் மீது இரட்டை மணிமாலை.

## பொன்னுசாமிப் பிள்ளை, ம. (1237)

**ஊர்:** திரிசிரபுரம்.

இவர் இரங்கூன் நாணயச்சாலை அலுவலகத்தில் பொருளாளராக இருந்தவர். இலக்கியப் புலமை மிக்கவர்.

**நூல்:** கமலாட்சி, விசய சுந்தரம், ஞான சம்பந்தம், ஞானம்பிகை, அரிச்சந்திரன்.

இவையனைத்தும் நாடக நூல்கள்.

## பொன்னுச்சாமி முதலியார் (19-நூ)

**ஊர்:** புதுச்சேரி.

**நூல்:** சாமுவேல் பிள்ளை இ. என்பவர் இயற்றிய நூல்களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப்பாயிரம்.

## பொன்னுசாமி முதலியார், அ. க. (20-நூ)

**ஊர்:** காஞ்சிபுரம்.

**நூல்:** அருணாசல முதலியார் இயற்றிய உரை நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பொன்னு செட்டியார் (19-நூ)

**ஊர்:** திருவில்லிப் புத்தூர்.

**நூல்:** இராம கிருட்டின கவிராயர் இயற்றிய "தென் சேறைத் தடாக சிங்காரமாலை" என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பொன்னுத்துரை ஐயர் (20-நூ)

**ஊர்:** ஈழநாட்டில் வண்ணார்பண்ணை.

**மறைவு:** 1929.

இவர் ஆறுமுக நாவலரிடத்தும் பொன்னம்பலப் பிள்ளையிடமும் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். சிற்றிலக்கியங்களிலும் புராண இதிகாசங்களிலும் மிகுந்த பயிற்சியுடையவர். செய்யுளியற்றுந் திறம் படைத்தவர்.

**நூல்:** நல்லை நிரோட்டகயமக அந்தாதி.

## பொன்னுப் பிள்ளை (19-நூ)

**ஊர்:** புதுச்சேரி.

**நூல்:** இராமசாமி முதலியார், சுப்பு என்பவர் மீது பாராட்டிப் பாடிய தனிப்பாடல்.

## பொன்னுப் பெருமாள் செட்டியார் (20-நூ)

**ஊர்:** பாண்டிய நாட்டில் திருவில்லிப் புத்தூருக்கு அண்மை யிலுள்ள ஐயபட்டி.

**தந்தை:** சிதம்பரஞ் செட்டியார்.

**நூல்:** சண்முகம்பிள்ளை என்பவர் பாடிய "திருவிளையாடற் புராண சங்கிரகம்" என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பொன்னுபாத்தியாயர், சாமி. (1247)

**ஊர்:** புதுச்சேரி.

**நூல்:** வைத்தீசுவரன் கோயில் தையல்நாயகி அந்தாதி.

## பொன்னுமுடியாசாரியார், அ (     )

**நூல்:** சிவசுப்பிரமணியப் பெருமாள் மீது செய்யுட் பதிகம் (1900), கைலாய நாதர் பேரில் ஐம்மணிமாலை, திருத்தீவனூர் பொய்யா விநாயகர் பேரில் ஐம்மணி மாலை, திருத்தீவனூர் பொய்யா விநாயகர் பேரில் திருப்பள்ளியெழுச்சி.

**சிவசுப்பிரமணியப் பெருமாள் மீது செய்யுட் பதிகம்: (1900).**

சுப்பிரமணியக் கடவுள் மீது கீர்த்தனைகளும், நாமாவளியும், ஆசிரிய விருத்தத்தாலாகிய பதிகச் செய்யுளுமாக அமைந் துள்ளது; 10 செய்யுட்களைக் கொண்டது.

**திருத்தீவனூர் பொய்யா விநாயகர் பேரில் திருப்பள்ளியெழுச்சி:**

விநாயகப் பெருமானைக் குறித்துப் பள்ளி எழுந்தருளுமாறு வேண்டுவது.

## பொன்னுவேற் பிள்ளை (20-நூ)

**ஊர்:** பிரம்பை.

**நூல்:** அருளாநந்த அடிகள் என்பவர் இயற்றிய "குரு தோத்திரப்பா", "உண்மை நிலை விளக்கம்" என்ற நூல் களைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பொன்னைய சாமிகள் (19-நூ)

**ஊர்:** சிவகங்கை.

இவர் இல்லற ஒழுக்கத்தை மேற்கொண்டு துறவியானவர். வீரமாகாளியம்மன், குணங்குடி மஸ்தான், உலகநாதசாமி என்பவர்களின் திருவருளைப் பெற்றவரென்று தம்மைக் கூறிக் கொள்வது வழக்கம்.

**நூல்:** சதானந்தர் சதகம்.

சதானந்த சோதிமயமே என முடியும் இச் சதகச் செய்யுட்கள் தோத்திரமாகவும் தத்துவப் பொருள்பற்றியும் அமைந்துள்ளன.

## பொன்னைய முதலியார் (19-நூ)

**நூல்:** அருணாசலக் குருக்கள் என்பவர் எழுதிய "சோடச கணபதி மாலை" என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## பொன்னையாபிள்ளை க. (20-நூ)

**ஊர்:** தஞ்சாவூர்.

**தந்தை:** கண்ணுச்சாமிப்பிள்ளை.

**வாழ்ந்த காலம்:** கி.பி. 1887 — 1945.

இவர் ஓர் இசைப்புலவர். இவரது தந்தையார் கண்ணுச் சாமிப்பிள்ளை பரோடா சமஸ்தான வித்துவானாக விளங்கிய வர். இவருடைய மாமனாரான பந்தணைநல்லூர் கு. மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடம் இளமை முதல் இவர் இசையும் நாட்டியமும் பயின்றார். மிருதங்கம் வாசிப்பதிலும் பயிற்சி யுண்டு. இவர் தொடக்கத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழக இசைக் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றினார். பின்னர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் இசை ஆசிரியராகப் பணியாற்றினார். 1943 ஆம் ஆண்டில் மீண்டும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இசைக்கல்லூரிப் பேராசிரியர் பதவியை ஏற்றார்.

இவர் பலதாளவர்ணம், கீர்த்தனை, தில்லானா முதலிய வற்றைத் தமிழிலும் தெலுங்கிலும் இயற்றியுள்ளார். தொடக்க இசைப் பயிற்சிக்கு வேண்டிய சஞ்சாரிகீதம், இலட்சணகீதம் முதலியவற்றைத் தமிழில் இயற்றியுள்ளார்.

சென்னை சங்கீத வித்வத்சபை இவருக்குச் சங்கீத கலாநிதி என்ற பட்டத்தை வழங்கியுள்ளது. இவர் 30-6-1945ல் காலமானார்.

**நூல்:** இசையியல், தஞ்சைப் பெருவுடையான் பேரிசை.

இசையியல், என்பது இசை இலக்கண நூல். 'தஞ்சைப் பெருவுடையான் பேரிசை' என்ற நூல் நூலாசிரியரின் முன்னோர்கள் இயற்றிய பாடல்களின் தொகுப்பு.

## பொன்னையா முதலியார் (19-நூ)

**வே.பெ.** சிவானந்த மூர்த்தி, சிவானந்தசாமி.

**ஊர்:** புதுச்சேரி.

இவர் வடமொழியிலும் வல்லவர்; அறிவு நூல்களைக் கற்று மெய்யறிவு கைவரப் பெற்றவர். மாணவர்களுக்கு வேதாந்த சித்தாந்த நூல்களைக் கற்பித்தவர். இவர் வடமொழியில் ஆத்மபோதம் என்ற நூலைத் தமிழாக்கம் செய்து வெளியிட்டுள்ளார்.

**நூல்:** விநாயகர் அநுபூதி, விநாயகர் அலங்காரம், விநாயகர் திருப்புகழ்ப் போற்றிக் கலிவெண்பா, மயிலாச முருகர் மும்மணிக் கோவை, குருதோத்திர பஞ்சகம், இலக்குமி அந்தாதி, சிவாநந்தலகரி, தேவிமானதபூசை, சிற்சத்தி அட்டகம், தட்சணாமூர்த்தி அட்டகம், சுகாட்டகம், மோட்ச சாதன பஞ்சகம், சிவோக பஞ்சகம், மநீடா பஞ்சகம், திருக்குத்திருசிய விவேகம், ஞானவாசிட்ட உரை, ஈட்டி எழுபது உரை.

## பொன்னோதுவார், சு. (20-நூ)

**தந்தை:** சுப்பிரமணிய ஓதுவார்.

இவர் திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்தவர். சே.ரா. சுப்பிரமணியக் கவிராயரை ஆசிரியராகக் கொண்டு தமிழ் நூல்களைக் கற்றார். சீர்காழி முதலிய இடங்களில் ஆசிரியராகப் பணியாற்றியதுடன் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். இவர் பல நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

**நூல்:** 'திருஞான சம்மந்த மூர்த்தி நாயனுர் புராண வசனம்'.

இந்நூலில் ஞானசம்பந்தர் வரலாறு விரிவாக அமைந்துள்ளது.

## போக்கியார் (        )

இவர் திருவள்ளுவமாலை 22-ஆம் செய்யுளைப் பாடியவர். 'போக்கியம்' என்ற பெயரில் ஒரு நூல் உண்டென்பது "புணர்ப் பாவையுள்ளும், போக்கியத்துள்ளும், கிரணியத்துள்ளும், வதுவிச்சையுள்ளும் கண்டு கொள்க" என யாப்பருங்கல விருத்தியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## போகர் (8-நூ)

திருமூலர் மாணவர்கள் எழுவருள் காலாங்க நாதர் என்பவரின் மாணுக்கர் போகர். இவரும் இவருடைய மாணுக்கர் புலிப்பரணியும் பழநிமலை அடிவாரத்தில் உள்ள வைகாவூரில் வாழ்ந்ததாகக் கொங்கு மண்டல சதகம் கூறுகிறது. பாண்டிய நாட்டில் உள்ள சதுரகிரி, சிவகிரி என்னுமிடங்களில் இவர் வாழ்ந்ததாகவும் தெரிகிறது. இவர் மருத்துவ நூல்கள் பல இயற்றியுள்ளார். உலகத்தில் உள்ள யாவற்றையும் தாம் கண்டதாகத் தமது பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். மற்றும் கண்ணபிரான் கோபிகைகளோடு விளையாடல் புரிந்த மண்டபத்தையும் அங்கு சித்தர்களையும் கண்டதாகப் பாடுகின்ருர்.

**நூல்:** சத்த காண்டம், நிகண்டு 1700, பலதிரட்டு 700, வயித்தியம் 700, வயித்திய காவியம் 1000.

**சத்த காண்டம்:** இது 7 காண்டங்களாக அமைந்துள்ள மருத்துவ நூல். அந்தாதியாக அமைந்துள்ளது. 7000 செய்யுட்கள் உடையது. இதில் மருத்துவ முறைகளோடு முனிவர்கள் வரலாற்றுச் செய்திகளும் கூறப்படுகின்றது.

**நிகண்டு 1700:** இது போக முனிவர் நிகண்டு என்னும் பெருநூலின் இரண்டாவது பகுதி. மூலிகை முதலியவற்றின் பெயர்த் தொகுதியாக உள்ளது.

## போசராச பண்டிதர் (13-நூ)

இவர் எழுநூறு ஆண்டுகளுக்கு முன் இலங்கையில் தம்பை மாநகரத்தில் அரசு செலுத்திய பாராக்கிரமவாகு என்ற அரசனுடைய அவையில் புலவராக இருந்தவர். இலக்கண இலக்கியங்களிலும் காலக் கணிதத்திலும் வல்லவர்.

**நூல்:** சரசோதிமாலை.

## போத்தி ஐயங்கார் (19-நூ)

**நூல்:** ஆழ்வார் திருநகரியில் வாழ்ந்த அநந்தாச்சாரியார் என்பவர் இயற்றிய "சடகோபன் சந்திரகலாமாலை" என்னும் நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## போத்திலிங்கம் பிள்ளை (20-நூ)

**நூல்:** 'சங்கர நயினர் கோவில் அலங்காரச் சிந்து' என்னும் நூலினைப் பாராட்டி வழங்கிய சிறப்புப் பாயிரம்.

## போதனர் (சங்ககாலம்)

இவர் பெயர் இயற்பெயரா அல்லது காரணப்பெயரா என்பது விளங்கவில்லை. மதுரைச் சுள்ளம் போதனர் என்ற புலவர் இவரினும் வேறானவர்.

**நூல்:** நற்றிணை 110.

## போந்தைப் பசலையார் (சங்ககாலம்)

இவர் பெண்பாற் புலவர்களுள் ஒருவர். இவருடைய பெயர்க்காரணம் விளங்கவில்லை. இவர் பாடிய அகநானூற்றுப் பாடலில் (110) புகார்த் தெய்வத்தைப் பற்றிக் கூறியுள்ளார்.

**நூல்:** அகம் 110.

## போப்பையர் (20-நூ)

**வே.பெ.** ஜியார்ச் யுக்ளோ

**ஊர்:** நோவாஸ்கோஷியாவில் உள்ள பிரின்ஸ் எட்வர்டு தீவு.

**தந்தை:** ஜான் போப்; கிறித்தவர்.
**வாழ்ந்த காலம்:** கி.பி. 1820 — 1908.

இவர் இளம் வயதிலேயே சமயத் தொண்டு புரிய வேண்டுமென ஆர்வங் கொண்டார். இவருடன் பிறந்தவர்கள் அனைவரும் சமயத் தொண்டாற்றியமையால் இவருக்கு இவ்விழைவு இயல்பாக ஏற்பட்டது. கிறித்தவ மறையை நன்கு ஆராயும் பொருட்டு எபிரேய மொழியையும் கிரேக்க மொழியையும் பயின்றார். 1838 ஆம் ஆண்டில் தமிழ் மொழியையும் வடமொழியையும் பயின்றார். 1839 ஆம் ஆண்டில் வெஸ்லியன் மிஷன் தொடர்பாகத் தமிழ்நாட்டில் சமயத் தொண்டாற்ற வந்து சேர்ந்தார். இவர் எட்டுத் திங்கள் கப்பலில் பயணமாக வந்த போதே வடமொழியையும் தமிழ்மொழியையும் பயின்று தமிழ் மொழியில் சொற்பொழிவொன்றை எழுதி முடித்தார் என்பது குறிப்பிடத் தக்கது.

சென்னையில் செந்தோம் என்னுமிடத்தில் இவர் தமது சமயப் பணியைத் தொடங்கினார். அது காலை இவர் திருச்சபை வரலாற்றையும் திருச்சபை பற்றிய நூல்களையும் நன்கு ஆராய்ந்தார். தமிழ் மொழியுடன் கன்னடம், தெலுங்கு முதலிய மொழிகளையுங் கற்றார். திருச்சபை நூல்களை ஆராய்ந்த பிறகு இங்கிலாந்து திருச்சபையில் சேர முடிவு செய்தார். சென்னையில் அத்யட்சராயிருந்தவர் இவரை மகிழ்வுடன் ஏற்றுக் குருப்பட்டம் கொடுத்து திருநெல்வேலி மாவட்டம் சாயர்புரம் என்ற இடத்திற்கு தொண்டாற்ற அனுப்பி வைத்தார். இங்கு போப்பையர் கிறித்தவ மதத்தைப் பரப்பக் கல்வி நிலையம் ஒன்றை ஏற்படுத்தினார். இங்குப்பிள்ளைகள், பிற்காலத்தில் குருமார்கள் ஆவதற்குத் தக்கபடி பயிற்றுவிக்கப் பட்டனர்.

எட்டு ஆண்டுகள் சாயர்புரத்தில் பணியாற்றிய பிறகு உடல் நலத்தின் பொருட்டுத் தாயகம் திரும்பினார். பின்னர் மீண்டும் தஞ்சைக்கு வந்து தொண்டாற்றினார். இக்காலத்தில் ஆரியங்காவுப் பிள்ளை என்ற அறிஞரும், இராமாநுச கவிராயரும் இவருக்குப் பல தமிழ் நூல்களைக் கற்பித்தனர்.

இதனால் இவர் சிறந்த தமிழ்ப்புலவர் ஆனார். தமிழ்மொழி யினிடத்து ஆர்வம் ஏற்பட்டுச் சமயப்பணியுடன் நூல் எழுதும் பணியிலும் ஈடுபட்டார். மாணவர்கள் தமிழ் இலக்கண நூல்களை எளிதில் பயிலத் தொல்காப்பியம் நன்னூல் முதலான இலக்கண நூல்களைப் படித்து ஓர் உரைநடை இலக்கண நூலை இயற்றினார். இந்நூல் 'போப்பையர் இலக்கணம்' என்று பெயர் பெற்றது. தமிழ் கற்கும் ஆங்கிலேயர்களுக்கு உதவியாகத் 'தமிழ்க் கைப்புத்தகம்' என்னும் நூலையும், 'தமிழ் - ஆங்கிலம்', 'ஆங்கிலம் - தமிழ்' என்னும் அகரவரிசைகளையும் தொகுத்தார். மாணவர்கள் படிப்பதற்குத் தமிழில் வரலாற்று நூல்கள் சில எழுதினார். தமிழ்ச் செய்யுட்களைத் திரட்டி 'தனிச்செய்யுட் கலம்பகம்' என்னும் நூலினைத் தொகுத்தார். மாணவர்கள் கற்கத் தக்க உரைநடை நூல்கள் சிலவற்றையும் எழுதி வெளி யிட்டார்.

தஞ்சையில் பணியாற்றிய பிறகு அப்பணியை விடுத்து உதகமண்டலம் சென்று ஐரோப்பியக் குழந்தைகளுக்குப் பள்ளியொன்றை ஏற்படுத்தி ஆசிரியராகப் பணியாற்றினார். பல பொதுத் தொண்டுகளிலும் ஈடுபட்டார்.

இந்தியாவில் 45 ஆண்டுகள் பணியாற்றிய பிறகு 1882-ஆம் ஆண்டில் தாயகம் திரும்பினார். 1885-ஆம் ஆண்டில் ஆக்ஸ் பர்டு பல்கலைக்கழகத்தில் தமிழ், தெலுங்கு மொழிகள் கற்பிக்கும் பேராசிரியர் ஆனார். இப்பணியில் இவர் 23 ஆண்டுகள் பணியாற்றினார். இக்காலத்தில் தான் இவர் திருக்குறள், நாலடியார், சிவஞானபோதம், திருவாசகம், தாயுமானவர் பாடல்கள் சில ஆகிய நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தார். புறப்பொருள் வெண்பாமாலை, புற நானூற்றில் சில செய்யுட்கள் ஆகியவற்றையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இவர் 1908-ஆம் ஆண்டில் தமது 90-ஆவது வயதில் காலமானார். இவருடைய விருப்பப் படி இவருடைய கல்லறையில் இவர் ஒரு 'தமிழ் மாணவர்' என்று எழுதப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**நூல்:** 'தமிழ்ச் செய்யுட் கலம்பகம்', 'இந்து தேச சரித்திரம்', 'இலக்கண வினாவிடை', 'தமிழ்க் கைப்புத்தகம்', தமிழ் — ஆங்கிலம் அகரவரிசை, ஆங்கிலம் — தமிழ் அகரவரிசை.

திருக்குறள், நாலடியார், சிவஞானபோதம், புறப்பொருள் வெண்பாமாலை, திருவாசகம், தாயுமானவர் பாடல்களில் சில, புறநானூற்றுப் பாடல்கள் சில ஆகியவற்றின் ஆங்கில மொழிபெயர்ப்பு.

## போற்றி முத்துப் பிள்ளை (20-நூ)

**ஊர்:** திருநெல்வேலி.

இவர் புதுமையாகச் செய்யுள்கள் பாடுவதில் வல்லவர். பொன்னுச்சாமித் தேவர் மீது பல பாடல்களைப் பாடியுள்ளார்.

**நூல்:** தனிப்பாடல்கள்.

## பௌலர் துரை (       )

**நூல்:** உபாத்திமைத் தொழில் (1885).

இந்நூலில் ஆசிரியர் மாணாக்கரைச் சிட்சை செய்து அவர்களுக்குக் கல்வி கற்பிக்கும்படி அனுசரிக்க வேண்டிய ஆதார விதிகள் தரப்பட்டுள்ளன. ஆங்கில மூலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது.

